# எட்டுத்தொகை அகஇலக்கியங்களும் காதாசப்தசதியும்

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்குப்
பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு


**ஆய்வாளர்**

**லெ.பொ.பிரியா**
பதிவு எண் : 0551

**நெறியாளர்**

**பேராசிரியர். சே.செந்தமிழ்ப்பாவை**






**தமிழ்ப் பண்பாட்டு மையம்**

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தரநிர்ணயக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 'A+' (CGPA.3.64) தகுதி பெற்றது மற்றும்
மத்திய மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தரப் பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003

தமிழ்நாடு, இந்தியா


சூலை - 2019

**முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்., பிஎச்.டி**
**பேராசிரியர் & இயக்குநர்,**
**தமிழ்ப் பண்பாட்டு மையம்,**
**அழகப்பா பல்கலைக்கழகம்,**
**காரைக்குடி – 630 003.**

**நாள்:**

# நெறியாளர் சான்றிதழ்

**“எட்டுத்தொகை அகஇலக்கியங்களும் காதாசப்தசதியும்”** என்னும் தலைப்பில் **லெ.பொ.பிரியா** அவர்கள் முழுநேர முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காகச் செய்த இவ்ஆய்வு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப்பண்பாட்டு மையத்தில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

**(முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை)**
**நெறியாளர்**

**லெ.பொ.பிரியா, (பதிவுஎண்:0551)**
**முனைவர் பட்ட ஆய்வாளர் (முழுநேரம்)**
**தமிழ்ப் பண்பாட்டு மையம்,**
**அழகப்பா பல்கலைக்கழகம்,**
**காரைக்குடி – 630 003.**

**நாள்:**

# ஆய்வாளர் உறுதிமொழி

**“எட்டுத்தொகை அகஇலக்கியங்களும் காதாசப்தசதியும்”** என்னும் தலைப்பில் முழுநேர முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக எழுதப்பெற்ற இவ்ஆய்வு எனது சொந்த முயற்சியில் உருவானது என்றும் இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

**(லெ.பொ.பிரியா)**

**ஆய்வாளர்**

உறுதிக்கையொப்பம்

**முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்., பிஎச்.டி**
**பேராசிரியர் & இயக்குநர்,**
**தமிழ்ப் பண்பாட்டு மையம்,**
**அழகப்பா பல்கலைக்கழகம்,**
**காரைக்குடி – 630 003.**

## நன்றியுரை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்ப்பண்பாட்டு மையத்தில் **“எட்டுத்தொகை அகஇலக்கியங்களும் காதாசப்தசதியும்”** என்னும் தலைப்பிலான முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்த வாய்ப்பு நல்கிய அழகப்பா பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தர் அவர்களுக்கும் மதிப்பிற்குரிய பதிவாளர் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்ஆய்வினைச் செம்மையுற எழுதுவதற்கு, இன்முகத்துடன் ஊக்கப்படுத்தி அறிவுரைகள் வழங்கி நெறிப்படுத்திய எனது நெறியாளர் பெருந்தகை **பேராசிரியர் முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை** அம்மா அவர்களுக்கு என் உள்ளம் நிறைந்த நன்றியினைச் சமர்ப்பிக்கின்றேன்.

ஆய்வு தொடர்பான பல்வேறு அறிவுரைகளை நல்கிய **உதவிப்பேராசிரியர் முனைவர் கா.கணநாதன்** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

நான் நன்னிலை பெற்றுயர நாளும் உதவும் எனது தாய் **பொ.பரமேஸ்வரி**, தந்தை **லெ.பொன்னுசாமி** தங்கை **பொ.புஷ்பலதா** மற்றும் எனக்கு மற்றொரு தாய் தந்தையாக இருந்து ஆக்கமும் ஊக்கமும் நல்கிய எனது அத்தை **ஞா.தமிழ்ச்செல்வி** மாமா **ஞா.ஞானமூர்த்தி** ஆகியோருக்கும் எனது கணவர் **ஞா.ஞானரெத்தினம்** என் செல்லமகன் **ஞா.சாய்ஹர்ஷித்** ஆகிய அனைவருக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுப் பணியில் பல்வேறு உதவிகள் புரிந்த என் தோழி **மு.செண்பகவள்ளி** மற்றும் எனது உடன்பிறவா சகோதரர்களான **ஆ.அருள்சாமி, பெ.குபேந்திரன், மு.சிவசுப்பிரமணியன்** ஆகியோருக்கும் என்னுடன் பயிலும் சக ஆய்வாளர்கள் அனைவருக்கும் எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்விற்கு வேண்டிய தரவுகளைச் சேகரிக்க உதவிப்புரிந்த அழகப்பா பல்கலைக்கழக நூலகருக்கும் அலுவலர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

பண்பாட்டு மையத்தின் அலுவலகச் சகோதரிகளான **ப.லெட்சுமி, சே.விஜயா, மா.ஜெயந்தி, பா.ஜஸ்வர்யா** ஆகிய அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினை உரித்தாக்கின்றேன்.

அன்புடன்

லெ.பொ.பிரியா

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அ | - | அல்லது |
| அகநா | - | அகநானூறு |
| ஆந்.அகநா | - | ஆந்திர நாட்டு அகநானூறு |
| இறை.அகப் | - | இறையனார் அகப்பொருள் விளக்கம் |
| இளம்.உரை | - | இளம்பூரணர் உரை |
| உ.ஆ | - | உரையாசிரியர் |
| உ.வே.சா | - | உ.வே.சாமிநாதையர் |
| ஐங் | - | ஐங்குறுநூறு |
| க.ஆ | - | கட்டுரை ஆசிரியர் |
| கலித் | - | கலித்தொகை |
| காதா | - | காதாசப்தசதி |
| குறள் | - | திருக்குறள் |
| குறிஞ்சி.பா | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறுந் | - | குறுந்தொகை |
| சிலம்பு.காடு.காண் | - | சிலப்பதிகாரம் காடுகாண் காதை |
| திரு | - | திருக்குறள் |
| தி.தெ.சை.சி.நூ | - | திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் |
| தொல்.கள | - | தொல்காப்பிய களவியல் |
| தொல்.கற் | - | தொல்காப்பிய கற்பியல் |
| தொல்.செய் | - | தொல்காப்பியச் செய்யுளியல் |
| தொல்.சொல் | - | தொல்காப்பியம் சொல்லதிகாரம் |

| | | |
|---|---|---|
| தொல்.மர | - | தொல்காப்பிய மரபியல் |
| தொல்.பொருள் | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொல்.புறத் | - | தொல்காப்பிய புறத்திணையியல் |
| நச்.உரை | - | நச்சினார்க்கினியர் உரை |
| நற் | - | நற்றிணை |
| நம்பி.அகப் | - | நம்பி அகப்பொருள் |
| நூ | - | நூற்பா |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| ப.ஆ | - | பதிப்பாசிரியர் |
| பா | - | பாடல் |
| பேரா.உரை | - | பேராசிரியர் உரை |

# பொருளடக்கம்

## முன்னுரை

தமிழின் இலக்கியப் பராம்பரியத்தில் சங்க இலக்கியங்களுக்குத் தனித்த இடமுண்டு. இதில் சங்கத் தமிழர் தம் அகவாழ்க்கையின் சிறப்பினை விளக்குவது எட்டுத்தொகை நூல்களாகும். இதனைப்போன்று ஆந்திரப் பகுதியில் வழங்கிய அக இலக்கியங்களுள் ஒன்று காதாசப்தசதி. எட்டுத்தொகை இலக்கியங்களைப் போன்று காதாசப்தசதியும் தொகை இலக்கியமாகும்.எனவே இவ்விரு தொகை இலக்கியங்களையும் ஒப்பிடுவது இருவேறுபட்ட வரலாற்றை அறியப் பெரிதும் துணை நல்கும்.

**ஆய்வுத் தலைப்பு**

''எட்டுத்தொகை அகஇலக்கியங்களும் காதாசப்தசதியும்'' என்பது ஆய்வுத் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

எட்டுத்தொகை நூல்கள் தொகை இலக்கியங்களாகும். இதனைப் போன்றே இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் ஆந்திர நாட்டை ஆண்ட மன்னன் சாதவாகனனால் தொகுக்கப்பட்ட அகப்பொருள் இலக்கியம் காதாசப்தசதியாகும். எனவே தொகுப்பிலக்கியங்களாகிய இவ்விரண்டையும் ஒப்பிட்டு ஆய்வதன் வழி அரிய இரு பகுதி மக்களின் பண்பாட்டையும் வாழ்வியலையும் அறிய இயலும் என்பது ஆய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை**

எட்டுத்தொகை அகநூல்களாகிய நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு கலித்தொகை மற்றும் காதாசப்தசதி என்ற மொழிப்பெயர்ப்பு நூலும் இவ்வாய்விற்குரிய எல்லையாகும்.

**கருதுகோள்**

காதாசப்தசதியின் பாடல்கள் சங்க அகஇலக்கியப் பாடல்களை ஒத்து விளங்குகின்றன. இதனைக் காதாசப்தசதியின் 'ஆந்திர அகஇலக்கியம்' என்னும் பெயரும் விளக்கும். தமிழின் கிளை மொழியான தெலுங்கில் தோன்றிய அக இலக்கியத்தை, மூலமொழி அக இலக்கியத்தோடு ஒப்பிடுவதால் இரு மொழி

மக்களின் பண்பாட்டு ஒற்றுமையைக் காண இயலும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

**ஆய்வு அணுகுமுறைகள்**

இலக்கியங்களின் அமைப்புநிலையை விளக்கும் நிலையில் விளக்கவியல் அணுகுமுறையும் எட்டுத்தொகை அக இலக்கியங்களைக் காதாசப்தசதியுடன் ஒப்பிடும் நிலையில் ஒப்பியல் அணுகுமுறையும் இவ்வாய்வில் அணுகுமுறைகளாகப் பயன்படுத்தப்பெற்றுள.

**ஆய்வு ஆதாரங்கள்**

‘‘எட்டுத்தொகை அகஇலக்கியங்களும் காதாசப்தசதியும்’’ என்னும் தலைப்பில் மேற்கொள்ளப்பெறும் இவ்வாய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

இயல் 1 எட்டுத்தொகை அகஇலக்கியங்களும் காதாசப்தசதியும் அமைப்புமுறை

இயல் 2 முதற்பொருள் ஒப்பீடு

இயல் 3 கருப்பொருள் ஒப்பீடு

இயல் 4 உரிப்பொருள் ஒப்பீடு

இயல் 5 எட்டுத்தொகை அகஇலக்கியங்கள் காதாசப்தசதி - பண்பாட்டுக் கூறுகள்

என்பதாகும்.

## இயல்விளக்கங்கள்

**இயல்ஒன்று**

‘‘எட்டுத்தொகை அகஇலக்கியங்களும் காதாசப்தசதியும் அமைப்புமுறை’’ என்னும் முதலியலில் எட்டுத்தொகை அகஇலக்கியங்களின் அமைப்பு, சிறப்பு மற்றும் காதாசப்தசதியின் அமைப்பு சிறப்பு போன்ற கூறுகள் விளக்கப்பெற்றுள.

**இயல் இரண்டு**

''முதற்பொருள் ஒப்பீடு'' என்னும் இரண்டாவது இயலில் எட்டுத்தொகை அகஇலக்கியம் மற்றும் காதாசப்தசதி ஆகியவற்றில் இடம்பெற்றுள்ள முதற்பொருளாகிய நிலம், பொழுது ஆகியவை குறித்து ஆராயப்பெற்றுள்ளது.

**இயல் மூன்று**

''கருப்பொருள் ஒப்பீடு'' என்னும் மூன்றாம் இயலில் எட்டுத்தொகை அக இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள கருப்பொருள்கள் காதாசப்தசதியில் இடம்பெற்றுள்ள கருப்பொருள்கள் அவற்றின் சிறப்பு ஆகியவை குறித்து விளக்கப்பெற்றுள.

**இயல் நான்கு**

''உரிப்பொருள் ஒப்பீடு'' என்னும் நான்காம் இயலில் எட்டுத்தொகை அகஇலக்கியத்திலும் காதாசப்தசதியிலும் அமைந்துள்ள உரிப்பொருள் குறித்த செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

**இயல் ஐந்து**

''எட்டுத்தொகை அகஇலக்கியங்கள் காதாசப்தசதி - பண்பாட்டுக் கூறுகள்'' என்னும் ஐந்தாம் இயலில் குடும்ப வாழ்க்கை, மக்கட்பேறு, உடன்போக்கு, திருமணமுறை, பழக்கவழக்கங்கள் போன்ற பண்பாட்டுக் கூறுகள் இருமொழி இலக்கியங்களிலும் இடம்பெற்றுள்ள முறை குறித்து விளக்கப்பட்டுள்ளன.

இதனையடுத்து ஆய்வில் கண்டறிந்த செய்திகள் முடிவுரையில் இடம்பெற்றுள. இறுதியில் துணைநூற்பட்டியலும் பின்னிணைப்புகளும் இடம்பெற்றுள்ளன.

## இயல் - 1

## எட்டுத்தொகை அகஇலக்கியங்களும் காதாசப்தசதியும் அமைப்பு முறை

இலக்கியங்கள் காலந்தோறும் வளரும் இயல்புடையன. ஒரு சமுதாயத்தின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் கண்டறிய இலக்கியங்கள் துணைபுரிகின்றன. அவ்வகையில் தமிழில் தோன்றிய இலக்கிய வகைகள் முதன்மையானதாக விளங்குவன சங்க இலக்கியங்கள். இவை எட்டுத்தொகை, பத்துப்பாட்டு என இருவகைப்படும். எட்டுத்தொகை நூல்களில் அகம் பற்றிய நூல்கள் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகியவனாகும். இவ்வகஇலக்கியங்களின் அமைப்பினையும் பிராகிருத அகஇலக்கியமாகிய காதாசப்தசதியின் அமைப்பு முறையினையும் எடுத்துரைப்பது இவ்வியலின் நோக்கமாகும்.

**சங்க இலக்கியம்**

"இந்திய இலக்கியத்தின் தலைமையூற்று என்று சங்க இலக்கியங்கள் போற்றப்படுகின்றன. முச்சங்கங்கள் வைத்து முத்தமிழ் வளர்த்த முன்னோர், அச்சங்கங்களில் உருவாக்கித் தந்த அருந்தமிழ் நூல்களே சங்க இலக்கியங்கள் என்று போற்றப்படுகின்றன"[1]

அதாவது தலைச்சங்கமும் இடைச்சங்கமும் கடலால் அழிவுற்ற பின் கடைச்சங்கத்தில் கிடைத்த பெரும்பான்மையான இலக்கிய நூல்களைப் புரவலர்களும் புலவர்களும் ஒருங்கிணைந்து மேற்கொண்ட முயற்சியால் 2381 பாடல்களைத் தொகுத்து எட்டுத்தொகை, பத்துப்பாட்டு எனப் பெயரிட்டு அழைத்தனர். இத்தகைய பழந்தமிழர் தம் இலக்கியப் படைப்பினை அகம், புறம் என்னும் இருபெரும் பாடுபொருளாகக் கொண்டு, தலைமக்களின் காதல் வாழ்க்கையினைக் கூறுவனவற்றை அகப்பொருள் என்றும் போர் முதலான இன்னபிறவற்றைக் கூறுவனவற்றைப் புறப்பொருள் என்றும் அழைத்தனர்.

**அகப்பொருள்**

இளம்பூரணர் அகம் என்பதற்கு "அகப்பொருளாவது போகநுகர்ச்சி யாகலான் அதனான் ஆயபயன்தானே அறிதலின் அகம்" என்பர்.[2] நச்சினார்க்கினியர், "ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம். அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம்

என்பா். எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்றது ஓா் ஆகுபெயராம்"[3] என்றுரைப்பா்.

க.சுப்பிரமணியபிள்ளை அகம் என்பதற்கு, "உள்ளத்தின்கண் தோன்றுவதாய்ப் புறக்கண்ணிற்குப் புலனாகாத உணர்ச்சிகள் யாவும் அகம் என்ற சொல்லால் சுட்டப்படுவதற்கு உரியனவாகும். அவ்வுணர்ச்சிகளுள் சிறந்தது இன்பஉணர்ச்சி, தம்முள் பொருத்தமிக்க காதலன், காதலி என்பார் உடனுறைவால் உளதாய இன்பமே உலக இன்பங்களுள் தலைசிறந்ததாதலின் அதனையே அவ்வின்பம் காரணமாய் நிகழும் ஒழுக்கமுறை கூறுவான் போந்த இலக்கண நூலுள் சிறப்பாக அகப்பொருள் என்பர்"[4].

மேற்கூறிய செய்திகளின் வழி காதலன், காதலியின் கூட்டுறவால் உள்ளத்தில் தோன்றும் இன்பவுணர்ச்சி அகம் என்பதும் அது பிறா்க்குப் புலனாகாத தன்மையது என்பதும் புலனாகும்.

**அகத்திணை**

அகத்திணை என்பதில் திணை என்பது ஒழுக்கம் எனப்பொருள்படும். அதாவது, தலைவன், தலைவியரின் உள்ளத்தில் நிகழும் ஒழுக்க நிலையே அகத்திணையாகும். இதனை "அகப்பொருள் என்பது மனத்தால் சுவைத்து மகிழ்ச்சி அடைவது, சொற்களால் வெளிப்படையாக விளம்ப முடியாமல் உள்ளத்தால் சுவைத்து இன்புறுவது. ஆண், பெண் இருவரும் சேர்ந்து அடையும் இன்பத்தையே அகப்பொருள் என்று கூறினா். இத்தகைய இன்பத்திற்குக் காரணமான நிகழ்ச்சிகளைப் பற்றிச் சொல்வதே அகப்பொருளாகும்"[5] என்னும் கூற்றும் நன்கு விளக்கும். அகப்பொருளுக்குரிய திணையைத் தொல்காப்பியா்,

**கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப"[6]**

எனச் சுட்டுவா். குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல், கைக்கிளை, பெருந்திணை என்னும் ஏழும் அகத்திணை என்பது பெறப்படும்.

இதில் குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல், என்னும் இவ்வைந்திணையும் அன்பின் ஐந்திணை என்றும் அழைப்பா். கைக்கிளை என்பது ஒருதலைக் காமத்தையும் பெருந்திணை என்பது பொருந்தாக் காமத்தையும் குறிக்கும். இதனைக் கூடாஒழுக்கம் என்றும் அழைப்பா்.

**தொகுப்பு முறை**

“எட்டுத்தொகையும் பத்துப்பாட்டும் அடிவரையறை, பாடுபொருள், பாடல்வகை ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப்பட்டுள்ளன.”[7] பல்வேறு காலங்களில் வாழ்ந்த புலவர்கள் சில வரையறைகளை வகுத்துக்கொண்டும் மன்னர்களின் ஆதரவையும் ஒத்துழைப்பையும் பெற்றுக் கொண்டு தொகுக்கத் தொடங்கினர். அந்தவகையில் “தனிப்பாடல்களாக இருந்த இவற்றைத் தொகுக்கும் பணி கி.பி.5-ஆம் நூற்றாண்டில் செய்யப்பெற்றதாக வரலாற்று அறிஞர்கள் கூறுகின்றனர். எனினும் மிகப்பழைய சங்கப்பாடலுக்கும் அதாவது தொடக்க காலத்தே இயற்றப்பெற்ற சங்கப்பாடலுக்கும் அதைத் தொகுத்த காலத்திற்கும் இடையே ஏறக்குறைய 800-ஆண்டு இடைவெளியிருந்ததாக அ.அ.மணவாளன் உரைப்பர்.[8]

**தொகுப்புப்பணி**

எட்டுத்தொகைப் பாடல்கள் மன்னர்கள் மற்றும் புலவர்களின் கூட்டு முயற்சியால் தொகுக்கப்பட்டவை ஆகும். அகநானூற்றைத் தொகுப்பிக்கச் செய்த பாண்டியன் உக்கிரப்பெருவழுதி புலமைத்திறன் வாய்ந்தவனாக விளங்கினான் என்பதற்கு அவர் எழுதிய அகநானூறு 26-ஆம் பாடலும் நற்றிணை 98-ஆம் பாடலும் சான்றாகின்றன. அதுபோல் அகநானூற்றைத் தொகுத்த உப்பூரிகுடிகிழார் மகனார் உருத்திரசன்மன் என்பவரும் சிறந்த கவிஞராகவும் தொகுப்பாசிரியராகவும் இருந்தார் என்பதற்கு குறுந்தொகையின் 274 பாடல் சான்றாகின்றது.

யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறையின் வேண்டுகோளின்படி, புலத்துறை முற்றிய கூடலூர்கிழார் ஐங்குறுநூற்றினைத் தொகுத்தளித்தார். கூடலூர்கிழாரின் மூன்று பாடல்களும் குறுந்தொகை (166,167,214) புலத்துறை முற்றிய என்ற முன்னொட்டுப் பெயரும் அவரது புலமைக்குச் சான்றாக அமைகின்றது.

நற்றிணையில் தொகுத்தோர் பெயர் காணப்படவில்லை. ஆனால் தொகுப்பித்தோன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன்வழுதியாவார். இவர் எழுதிய பாடல்கள் குறுந்தொகை (270) நற்றிணை (97) ஆகியவற்றில் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. கலித்தொகையைத் தொகுத்தவர் நல்லந்துவனார், இவரே நெய்தற்கலியைப் பாடியவர். மேலும் அகநானூற்றுப் பாடல்களை 145 புலவர்களும் நற்றிணைப் பாடல்களை 175 புலவர்களும் குறுந்தொகைப் பாடல்களை 205 புலவர்களும் பாடியுள்ளனர்.

**தொகை நூல்களின் வரிசைமுறை**

எட்டுத்தொகை அகஇலக்கியங்கள் பல்வேறு வரிசைமுறையில் கூறப்படுகின்றன. இறையனார் அகப்பொருள் உரையில் இடம் பெற்றுள்ள கடைச்சங்க வரலாறு பற்றிய பகுதியில் நெடுந்தொகை (அகநானூறு) குறுந்தொகை, நற்றிணை, புறநானூறு, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, கலித்தொகை பரிபாடல் என்றதொரு நிரலமைப்பு காணப்படுகின்றது.

எட்டுத்தொகை நூல்கள் இவையிவை என்று குறிப்பிடும் பழம் பாடலில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்ற நிரலில் எட்டுத்தொகைநூல் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. இப்பாடலின் வரிசையமைப்பு குறித்துச் சுந்தரசண்முகனார், ‘‘நற்றிணை முதலாகப் புறநானூறு ஈறாக எட்டுநூல்களும் வரிசைப் படுத்தப்பட்டிருப்பினும் இந்த வரிசையமைப்பை ஏற்றுக்கொள்வதற்கில்லை. சீர்-தளை, எதுகை-மோனை பொருந்தப்பாடல் அமைக்க வேண்டும் என்பதற்கு ஏற்ப இந்த வரிசைமுறை பின்பற்றப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.[9] என்று குறிப்பிடுகின்றார். மேலும் இவர் இறையனார் களவியல் உரையில் குறிப்பிடப்பட்டுள்ள வைப்பு முறைக்கான காரணம் குறித்து ‘‘எட்டுத்தொகை நூல்களுள் ஆசிரியப்பாவால் ஆறும் கலிப்பாவால் ஒன்றும் பரிபாடலால் ஒன்றும் ஆக்கப்பட்டுள்ளன. எனவே ஆசிரியப்பாவால் ஆன ஆறுநூல்களையும் முதலிலும் கலியை ஏழாவதாகவும் பரிபாடலை எட்டாவதாகவும் இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் வரிசைப்படுத்தியிருப்பது முறைதானே. கலி, பரிபாடல் இரண்டனுள் கலி நால்வகைத் தலைமைப் பாக்களுள் ஒன்றாதலானும் பரிபாடல் துணைப்பா ஆதலானும் பரிபாடலுக்கு முன் கலியை அமைத்தது பொருத்தமுடையதாகும் என பா அடிப்படையில் வரிசைப்படுத்தப்பட்டுள்ளமையினைக் கூறுகின்றார். அதுபோல், இப்பாட்டுக்கள் ஒவ்வொன்றும் வரிசைப்படுத்தப்பட்டுள்ளதனைக் குறித்து. ‘ஆறு நூல்களுள் நானூறு பாடல்கள் கொண்டவை நான்கு ஐந்நூறு பாடல்கள் கொண்டது ஒன்று; நூறு பாடல்கொண்டது ஒன்று; நானூறு பாடல்கள் கொண்ட நூல்கள் பெரும்பான்மை பெற்றிருப்பதால், அவை நான்கும் முதலிலும் சிறிய ஐந்நூறு பாடல்கள் கொண்ட ஐங்குறுநூறு ஐந்தாவதாகவும் அளவால் மிகவும் குறைந்த நூறுபாடல்கள் கொண்ட சிறிய நூலாகிய பதிற்றுப்பத்து ஆறாவதாகவும் நிரல் செய்யப்பட்டுள்ளன’’[10] என எண்ணிக்கை அடிப்படையில் நிரல்படுத்தப்பட்டுள்ள முறையினைச் சுட்டுகிறார்.

எட்டுத்தொகை தொகுப்புமுறை குறித்து, அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை என்னும் மூன்றும் மேல் எல்லை, கீழ்எல்லை என்னும் அடியளவால் அமைந்த தொகுப்பாகும். அதாவது அதிக அடியளவு கொண்ட நூல் அகநானூறு என்றும் பதின்மூன்று அடி பேரெல்லையுடையது நற்றிணை என்றும் இவ்விரு நூல்களுக்கு இடைப்பட்ட அடியளவு கொண்டது குறுந்தொகை என்றும் வரையரை செய்யப்பட்டுள்ளது. அதனோடு எண்ணிக்கை இயைபு அடிப்படையில் (புறநானூறு 400 பாடல்கள்) ஐங்குறுநூறு (500 பாடல்கள்) அடுத்து அமைக்கப்பட்டுள்ளது.

**“நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்**
**பாடல் சான்ற புலனெறி வழக்கம்**
**கலியே பரிபாட்டாயிரு பாவினும்**
**உரியதாகும் என்மனார் புலவர்”[11]**

என்ற தொல்காப்பிய விதி அடிப்படையில் கலியின் பின்னே பரிபாடல் வைக்கப்பட்டுள்ளது என்பா் மு.இராணி[12].

“புலவா் பெயா்களைக் கொண்டு ஆராய்ந்தான் எட்டுத்தொகையின் முதலில் தொகுக்கப்பட்ட நூல் குறுந்தொகையாகும். காக்கைபாடினியாரென்பது ஒரு புலவா். விருந்து வரக்கரைந்த காக்கையைப் பாராட்டினமையால் காக்கைபாடினியாரென்ற சிறப்புப்பெயா் அவருக்கு உளதாயிற்று. குறுந்தொகையில் உள்ள சொற்றொடர் காரணமாகப் பெயா் பெற்றவா்கள் அப்பெயராலேயே பிற நூல்களில் வழங்கப்பெறுவது போல அந்நூல்களில் உள்ள செய்யுட்பகுதி காரணமாகப் பெயா் பெற்றவரது பெயா் ஒன்றும் குறுந்தொகையில் இடம்பெறவில்லை. ஆகவே குறுந்தொகை முதலில் தொகுக்கப்பட்டிருக்கலாம்”[13] என்பா்.

எஸ்.வையாபுரிப்பிள்ளை எட்டுத்தொகை நூல்கள் காலநிரல் அடிப்படையில் தொகுக்கப்பட்டுள்ளது என்னும் கருத்தினா். இதனை “நற்றிணையைத் தொகுப்பித்த பன்னாடுதந்த பாண்டியன் மாறன் வழுதியின் பாடல்கள் குறுந்தொகை (270) நற்றிணை (30,98) இரண்டிலும் காணப்படுகிறது. அதுபோல் அகநானூற்றைத் தொகுப்பித்த உக்கிரப்பெருவழுதியின் பாடல்கள் அகநானூறு (26) நற்றிணை ஆகியவற்றில் காணப்படுவதன் மூலம் குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு மூன்றும் சம காலத்தில் தொகுக்கப்பட்டிருக்கலாம். ஐங்குறுநூற்றைத் தொகுப்பித்த யானைகட்சேய்மாந்தரஞ் சேரலிரும்பொறை இறந்த செய்தியை புறநானூறு உரைப்பதால் புறநானூறு தொகுக்கப்படுவதற்கு முன்பாகப் பதிற்றுப்பத்து தொகுக்கப்பட்டது என்கிறார். இவ்வாறு குறுந்தொகை,

நற்றிணை, அகநானூறு, ஐங்குறுநூறு பதிற்றுப்பத்து, புறநானூறு கால நிரல்படி அமைக்கப்பட்டது. கலி, பரிபாடல் பிற்காலத்தவை என்பதால் பின்னே வைக்கப்பட்டுள்ளது.[14] என்னும் பகுதி விளக்கும்.

சுந்தரசண்முகனார், 'நெடுந்தொகையும் குறுந்தொகையும் நற்றிணையும் முதலில் தொகுக்கப்பட்டுவிட்டன. இந்நூறுபாடல்களுள் ஆசிரியர் பெயர் தெரியாதனவற்றிற்கு அவ்வப் பாடல்களிலுள்ள சிறப்புத் தொடர்களால் ஆசிரியர் பெயர்கள் உருவாக்கப்பட்டன. இம்மூன்று நூல்களும் தொகுக்கப்பட்ட பின்னர்ப் புறநானூறு தொகுக்கப்பட்டது. இந்நூலின் ஆசிரியர் பெயர் தெரியாத பாடல்களுக்கு முன்பே தொகுத்த குறுந்தொகையில் உள்ள தொடரால் பெயர் பெற்ற ஆசிரியர்கள் உரியவர்களாக்கப்பட்டனர்'[15] என்பர்.

**தொகைநூல்கள் தொகுக்கப்படட காலம்**

எட்டுத்தொகை நூல்கள் தொகுக்கப்பட்ட காலம் குறித்த அறிஞர்கள் கருத்து பின்வருமாறு: சுந்தரசண்முகம், ''உருத்திரசன்மா் கடைச்சங்கத்தைச் சார்ந்தவர். ஐங்குறுநூறு தொகுத்த கூடலூர்கிழாரின் பாடல்கள் மூன்றும் நற்றிணை தொகுப்பித்த பன்னாடு தந்த பாண்டியன் மாறன்வழுதியின் பாடல் ஒன்றும் குறுந்தொகையில் இருப்பதால், குறுந்தொகை தொகுத்த பூரிக்கோவும் அவர்கள் காலத்தவராகவே இருக்கக்கூடும். தொகுத்தவர், தொகுப்பித்தவர் பெயர் தெரியாத நூல்கள் தவிர பெயர் தெரிந்தவர்களின் காலம், பாடிய புலவர்களின் காலம் ஆகியன கடைச்சங்க காலம் என்பதால் தொகைநூல்கள் கி.பி. முதல் நூற்றாண்டில் தொகுக்கப்பட்டிருக்கலாம்''[16] என்று குறிப்பிடுகின்றார். மேலும், ''நந்தர் கங்கை நதியில் செல்வங்களை மறைத்தமைபற்றிய குறிப்பு அகநானூற்றுப் பாடலில் காணப்படுவதால் இம்மன்னரின் இச்செயல் அலெக்சாண்டரின் இந்தியப் படையெடுப்புப் காலத்தில் நடைபெற்றிருக்க வேண்டும். எனவே அலெக்சாண்டரின் காலமான கி.மு.4-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னரே தொகையாக்கப்பணி நடைபெற்றிருக்க வேண்டும்''[17] என்று குறிப்பிடுகிறார். உ.வே.சாமிநாதையர், ''கி.பி.2-ஆம் நூற்றாண்டில் இருந்த புலவர்களும் அரசர்களும் தமிழாராய்ச்சியில் ஊக்கங்கொண்டு, பழந்தமிழ்ச் செய்யுட்களைத் தொகுக்கத் தொடங்கினர். அங்ஙனம் தொகுத்தவை நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, நூற்றொகுதிகளாதல் வேண்டும் என்க கூறுகிறார்''[18] எனினும் அதற்கான காரணத்தைச் சுட்டவில்லை. கார்த்திகேசு சிவத்தம்பி ''சங்கத் தொகை நூல்களில் தொகுத்தார், தொகுப்பித்தார் பாடல்கள் காணப்படுவதைச் சுட்டிக்காட்டிச் சங்க காலத்தின் இறுதியில் கி.பி.3-ஆம்

நூற்றாண்டில் இவை தொகுக்கப் பட்டிருக்க வேண்டும்''[19] என்னும் கருத்தைத் தெரிவித்துள்ளார். லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார் ''எட்டுத்தொகை நூல்கள் கி.பி.2-ஆம் நூற்றாண்டுக்குப் பின் கி.பி.6-ஆம் நூற்றாண்டிற்கு உட்பட்ட காலத்தில் தொகுக்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்று கருதுவர்''[20] ஆ.வேலுப்பிள்ளை ''எட்டுத்தொகை நூல்களிலுள்ள செய்யுட்களுள் பெரும்பாலானவை களப்பிரா் படையெடுப்புக்கு முந்தியவை. எனவே அவா்கள் ஆட்சிக் காலமாகிய கி.பி.3-ஆம் நூற்றாண்டு முதல் இறுதிக்காலமான கி.பி.6-ஆம் நூற்றாண்டு வரையிலான கால கட்டத்தில் தொகையாக்கம் நடைபெற்றிருத்தல் வேண்டும்''[21] என்று கருதுகிறார்.

மேற்கூறிய உரையாசிரியர்களின் கருத்துப்படி எட்டுத்தொகை நூல்கள் கி.பி-1ஆம் நூற்றாண்டில் இருந்து கி.பி.6-ஆம் நூற்றாண்டு வரை தொகையாக்கம் நடைபெற்றிருக்கலாம் என்பதை அறியமுடிகின்றது.

**பாஅமைப்பு**

இயற்கைக்கும் மக்கள் வாழ்க்கைக்கும் இடையே மிகுந்த தொடா்புடையதாக விளங்கும் சங்க இலக்கியம் ஆசிரியப்பா, வஞ்சிப்பா, கலிப்பா, பரிபாடல் என்னும் நான்கு வகைப்பாக்களால் அமைந்தவையாகும். இதில் ஆசிரியப்பா அக இலக்கியமாகிய நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, ஐங்குறுநூறு என நான்கு நூல்களிலும் விரவிவருகிறது. இதற்கு ''ஆசிரியப்பா இயல்பான ஓசையுடையது. எக்கருத்தையும் முட்டுப்பாடில்லாமல் கூறுவதற்கு ஏற்றமுறையில் வளைந்து கொடுப்பது ஈரசைச் சொற்கள் மிகுதியாக உள்ள தமிழ்மொழிக்கு ஏற்ப ஈரசைச் சொற்களாலேயே அமையும் இயல்பு கொண்டது''[22] எனவே தான் இப்பாவினைச் சங்கப் புலவா்கள் கையாண்டுள்ளனா் என்பா்.

மேலும் கலித்தொகை கலிப்பாவாலும் பரிபாடல் பரிபாடல் என்னும் பாவாலும் அமைந்தமையினை, ''நாடகவழக்காலும் புனைந்துரை வகையானும் உலக வழக்கானும் அகத்திணைப் பாடல்கள் அமைப்பதற்குரிய செய்யுள் வடிவங்களே கலிப்பாவும் பரிபாடலும் ஆகும். அதுமட்டுமன்றி கலிப்பா ஆசிரியப்பாவைப் போல் சொல்லக்கருதிய பொருளை விளக்கமாகவும் தெளிவாகவும் கூறுவது இசையுடன் பாடக்கூடியது.''[23] எனவேதான் இவ்வகைப் பாக்களால் பாடப்பெற்றது எனத் தொல்காப்பியா் சுட்டுகிறார். அதுமட்டுமின்றி ஒரு செய்தியைத் தொகுத்தும் விரித்தும் சுருக்கியும் கூறுவதற்கேற்ற பகுதிகளைக் கொண்ட பாடல் கலிப்பாடல்''[24] என்பா்.

**தொல்காப்பியரின் அக இலக்கியக் கோட்பாடு**

முதல், கரு, உரி எனத் தொல்காப்பியர் அகஇலக்கியத்தைப் பாகுபடுத்துவர்.




கருப்பொருளில் மக்கள் முதலிய பிற செய்திகளும் உரிப்பொருளில் புணர்தல் முதலான ஐவகை உரிப்பொருள்களும் அடங்குகின்றன. மேலும் தொல்காப்பியம் அக ஒழுக்கத்தைக் களவு, கற்பு என இருவகையாகப் பிரிக்கின்றது. இத்தகைய வரைமுறைகள் யாவும் சங்க இலக்கியத்தில் அமைந்துள்ளன.

**அன்பின் ஐந்திணைகள்**

குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல் என்னும் இவ்வைந்திணையை அன்பின் ஐந்திணை என்றழைப்பர்.

**குறிஞ்சித் திணை**

மலையும் மலைசார்ந்த பகுதியும் குறிஞ்சித் திணையாகும். இந்நிலத்தெய்வம் முருகன் ஆவான். புணர்தலும் புணர்தல் நிமித்தமும் இந்நில உரிப்பொருளாகும்.

**முல்லைத் திணை**

காடும் காடு சார்ந்த பகுதியும் முல்லை நிலமாகும். இந்நிலத்தெய்வம் மாயோனாகிய திருமால் ஆவார். இருத்தலும் இருத்தல் நிமித்தமும் இந்நில உரிப்பொருளாகும்.

**பாலைத் திணை**

தொல்காப்பியர் பாலை நீங்கலாக ஏனைய நான்கு திணைக்கும் நிலத்தினைப் பாகுபடுத்தியுள்ளார். சிலப்பதிகாரமே முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்தால் பாலை என்னும் நிலப்பகுதி உண்டாகும் என்றுரைக்கின்றது. இந்நிலத் தெய்வம் கொற்றவை ஆகும். பிரிதலும் பிரிதல் நிமித்தமும் இந்நில உரிப்பொருளாகும்.

**மருதத் திணை**

வயலும் வயல் சார்ந்த பகுதியும் மருதத்திணையாகும். இந்நிலத் தெய்வம் இந்திரன் ஆவார். ஊடலும் ஊடல் நிமித்தமும் இந்நில உரிப்பொருளாகும்.

**நெய்தல் திணை**

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தல் திணையாகும். இந்நிலத் தெய்வம் வருணன் ஆவார். இரங்கலும் இரங்கல் நிமித்தமும் இந்நில உரிப்பொருளாகும்.

**அக இலக்கிய மாந்தர்கள்**

தொல்காப்பியர் களவிலும் கற்பிலும் கூற்று நிகழ்த்துபவர்களாக ‘‘தலைவன், தலைவி, பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, பாணன், கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் ஆகிய பன்னிருவரைக் குறிப்பிடுகிறார்.[25] இவர்தம் கூற்றுகளே எட்டுத்தொகை நூல்களில் காணப்பெறுகிறது.

**பெயர் சுட்டா மரபு**

அகப்பாடல்களில் தலையாய விதியாக அமைவது பாடலின் எந்த ஒரு இடத்திலும் மாந்தர்களின் பெயர்கள் சுட்டப்பெறாமல் அமைக்கப்படுதல் வேண்டும் என்பதாகும்.[26] சங்க இலக்கியங்கள் இந்த நெறியைப் பின்பற்றி உள்ளன.

**கடவுள் வாழ்த்து**

எட்டுத்தொகை நூல்கள் தொகுக்கப்பட்டு நூலாக்கம் செய்த பின்னர் ஒவ்வொரு நூலிற்கும் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் பாடிச்சேர்க்கப்பட்டுள்ளன. அகநானூறு, ஐங்குறுநூறு, நற்றிணை ஆகியவற்றின் கடவுள் வாழ்த்துப் பாடல்களைப் பாரதம் பாடிய பெருந்தேவனார் எழுதியுள்ளார். கலித்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலை நல்லந்துவனார் பாடியுள்ளார்.

**நற்றிணை நூல்வரலாறு**

நல்ல ஒழுக்கமாகிய அகத்திணையைப் பற்றிக் கூறும் நூல் நற்றிணையாகும். இது நல் + திணை நற்றிணை. திணை - ஒழுக்கம். நற்றிணை-நல்லொழுக்கம் எனப்பொருள்படும். திணை என்ற பெயரிலே தமிழிலே பல நூல்கள் உண்டு. அவைகள் திணைமாலை நூற்றைம்பது, திணை எழுபது, ஐந்திணை ஐம்பது, ஐந்திணை அறுபது, ஐந்திணை எழுபது என்பவை இந்த ஐந்தும் பதினெண்கீழ்க்கணக்கைச் சேந்தவையாகும். இவற்றிற்கு அடிப்படை நற்றிணையே.

நற்றிணை ஒரு தொகைநூல். இது குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல், ஆகிய ஐந்திணை ஒழுக்கங்களைப் பற்றிப் பலரால் பாடப்பட்ட பாடல்களின் தொகுப்பாகும். இந்நூலில் நானூறு பாடல்கள் இருப்பதால் நற்றிணை நானூறு என்றும் அழைப்பர். இந்த நானூறு பாடல்களையும் 175புலவர்கள் பாடியுள்ளனர். இதில் ஆசிரியர் பெயர் காணப்படாத பாடல்கள் ஐம்பத்தாறு ஆகும்.

**அடிவரையரை**

நற்றிணைப் பாடல்கள் ஒன்பதடி முதல் பன்னிரண்டடி வரை அமைந்துள்ளன. **9 அடியில் - 106 பாடல்கள்**

**10 அடியில் - 102 பாடல்கள்**

**11 அடியில் - 101 பாடல்கள்**

**12 அடியில் - 81 பாடல்கள்**

என மொத்தம் 390 பாடல்கள் காணப்படுகின்றன. எஞ்சியுள்ள 10 பாடல்களில் 8 அடியில் (283) ஒரு பாடலும் 13 அடியில் 8 பாடல்களும் (7, 64, 110, 181, 221, 372, 379, 393) இடம் பெற்றுள்ளன. எஞ்சிய இரண்டில் 234-ஆவது பாடல் பிரதிகளில் பின் இணைப்பாகத் தரப்பட்டுள்ளது. அதுபோல் 385-ஆவது பாடல் சிதைந்து 7 அடிகள் மட்டும் கொண்டு காணப்படுவதால் அதன் அடியளவு வரையறைப்படுத்தவில்லை. மேற்கூறிய செய்திகளின் வழி நற்றிணையின் 390-பாடல்கள் மட்டும் 9-12 என்னும் அடியளவு அடிப்படையில் தொகுக்கப்பட்டுள்ளது என்பதை அறியமுடிகின்றது.

**பாடல் அடியால் பெயர் பெற்ற புலவர்கள்**

நற்றிணைப் பாடலில் உள்ள சொற்றொடர்களால் பெயர் பெற்றவர்கள் வண்ணப்புறக் கந்தரத்தனார், மலையனார், தனிமகனார், விழிக்கண் பேதைப் பெருங்கண்ணனார், தும்பீசேர் கீரனார், தேய்புரி பழங்கயிற்றனார், மடல்பாடிய மாதங்கீரனார் என எழுவர் ஆவர்.

**நற்றிணைப் பதிப்புகள்**

நற்றிணைக்கு "அ.நாராயணசாமி ஐயர் (1914) முதல் உரையாசிரியர் ஆவர். இதனை தெ.பொ.மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் "நற்றிணை என்ற தமிழ்ச்சுவைப் பேழையை முதன் முதல் தம்உரையாம் திறவுகோல் கொண்டு திறந்தவர் அ.நாராயணசாமி ஐயர்"[27] எனக்குறிப்பிடுவதன் மூலம் அறிய இயலும். இவருக்குப் பின்னர் ஔவை.துரைசாமிப்பிள்ளை விரிவான உரையெழுதியுள்ளார்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் (1967) வெளியிட்டுள்ள நற்றிணைப் பதிப்பில், "இதன்கண் கடினமும் மயக்கமும் தரும் சந்திகள் பிரித்தும் அரிது முயன்று பாடவேறுபாடுகள் குறித்தும் இதுகாறும் காணப்பெறாத இருநூற்று முப்பத்து நான்காவது பாட்டினைக் கண்டிணைத்தும் ஆயிரத்துக்கு மேற்பட்ட அருஞ்சொற்பொருள் எடுத்துமைத்தும் பதிப்பித்துள்ளனர் எனப் பதிப்புரையில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது, பாடலாசிரியர் பெயரைத் தலைப்பாயிட்டுத் திணை, துறைவிளக்கம், பாடல், சொற்பொருள்விளக்கம், பொழிப்புரை என்ற முறையில் பதிப்பிக்கப்பட்டுள்ளன."[28] புலியூர்க்கேசிகன் நற்றிணைத் தெளிவுரையை இரண்டு பகுதிகளாக 1980-இல் (1-200) முதல் தொகுதியையும் 1983-இல் (201 : 400) இரண்டாம் தொகுதியையும் வெளியிட்டுள்ளார். இது தெளிவுரை, குறிப்புரையுடன் பாடுபொருள் அடிப்படையில் தலைப்பிட்டுப் பதிப்பித்துள்ளது.

மணிமேகலைப்பிரசுரம் லேனா.தமிழ்வாணனைப் பதிப்பாசிரியராகக் கொண்டு (1986) நற்றிணை மூலத்தையும் தெளிவுரையையும் இருபகுதிகாளக 1986-இல் பாடுபொருளடிப்படையில் தலைப்பிட்டு பதிப்பித்துள்ளது.

அதுபோல் எச்.வேங்கடராமனைப் பதிப்பாசிரியராகக் கொண்டு உ.வே.சாமிநாதையர் நூல் நிலையம் நற்றிணையை வெளியிட்டுள்ளது. "இப்பதிப்பு 'குறிஞ்சி' 'தலைவன் கூற்று' என்றவாறு திணை, கூற்று அடிப்படையில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. மேலும் ஒப்புமைப்பகுதியும் வே.சுப்பிரமணியனின் நூலாராய்ச்சிக் குறிப்பும் இப்பதிப்பின் சிறப்புகளாக உள்ளன."[29]

"நற்றிணை மூலமும்உரையும்" என்ற தலைப்பில் கு.வெ.பாலசுப்பிரமணியத்தை உரையாசிரியராகக் கொண்டு தி நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட் நிறுவனம் முதல் பதிப்பை ஏப்ரல் 2004 மற்றும் 2007-லும் வெளியிட்டது. இதில் பாடல்கள் திணை அடிப்படையில் பெயரிடப்பட்டு பதிப்பிக்கப்பட்டுள்ளன."[30]

**நற்றிணையில் ஐந்திணைப்பாடல்களின் எண்ணிக்கை**

| | | |
|---|---|---|
| குறிஞ்சித்திணை | - | 130 பாடல்கள் |
| முல்லைத்திணை | - | 28 பாடல்கள் |
| பாலைத்திணை | - | 107 பாடல்கள் |
| மருதத் திணை | - | 33 பாடல்கள் |
| நெய்தல் திணை | - | 101 பாடல்கள் |

"எந்த இலக்கியத்தில் குறிஞ்சிப்பாடல்களும் பாலைப் பாடல்களும் மிகுதியாக உள்ளனவோ, அதில் பரத்தையர் காரணமாக உள்ள ஊடல் குறைவாக உள்ளது என்பர்."[31] ச.வே.சுப்பிரமணியன். எனவே நற்றிணையில் குறிஞ்சியும் பாலையும் அதிகமாகத் காணப்படுவதன் மூலம் தலைவன், தலைவி சிறந்த இல்லறவாழ்க்கையினை மேற்கொண்டமை புலனாகும்.

**குறுந்தொகை நூல்வரலாறு**

எட்டுத்தொகை நூல்களுள் அடியளவால் மூன்று பிரிவாகி குறைந்த அளவை உடையது குறுந்தொகையாகும். குறுகிய அளவுடைய செய்யுட்களாலாயினமையின் குறுந்தொகை எனப்பட்டது. இதில் 401 பாடல்கள் உள்ளன. 205 புலவர்களால் பாடப்பெற்றது. சில பிரதிகளில் 206 புலவர்களின் பெயர் காணப்படுகிறது. கடவுள் வாழ்த்துப் பாடலைப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார் ஆவார். 1915-இல் சௌரிப்பெருமாள் அரங்கனார் இந்நூலை முதலில் வெளியிட்டார். இறையனார் களவியல் உரையால் குறுந்தொகை நானூறு என்றழைக்கப்பட்டது. "நல்ல" என்ற அடைமொழியே இந்நூலின் சிறப்பைச் சுட்டும். தொகுத்தவர் பூரிக்கோ. தொகுப்பித்தோன் பற்றிய குறிப்பு காணப்படவில்லை. இந்நூலை முதலில் பதிப்பித்தவர் சி.வை.தாமோதரம் பிள்ளை ஆவார்.

**நூலின் சிறப்புக்கள்**

- ❖ குறுகிய அடிகளை உடைய குறுந்தொகை பண்டையத் தமிழரின் வாழ்வியலைச் சுட்டுகின்றது.
- ❖ தொகை நூல்களுள் முதலில் தொகுக்கப்பெற்ற நூல் குறுந்தொகையாகும்.
- ❖ பரணர் பாடல்கள் வழி வரலாற்றுக் குறிப்புகள் காணப்படுகின்றன.
- ❖ இந்நூலின் 236 பாடல்கள் உரையாசிரியர்களால் மேற்கோள் காட்டப்பெற்றுள்ளன.
- ❖ திருவிளையாடல் புராணத்தில் தருமி வரலாற்றுக்கு ஊற்றாக விளங்குவது கொங்குதேர் வாழ்க்கை என்னும் குறுந்தொகைப்பாடலாகும்.

- ❖ அள்ளூர் நன்முல்லையார், அரிசில்கிழார், கூடலூர் கிழார், மதுரை நல்வெள்ளியார் முதலான புலவர் பெயர்கள் ஊர்ப்பெயரோடு சேர்ந்து விளங்குகின்றன. அதுபோல் ஆசிரியன் பெருங்கண்ணனார். கொல்லன் அழிசி, வள்ளுவன் பெருஞ்சாத்தனார் எனத் தொழிலால் பெயர் பெற்றவர்களும் காணப்படுகின்றனர்.

இலண்டன் மாநகரில் பூமிக்கு அடியில் ஓடும் சுரங்கத் தொடர்வண்டியில், உலகில் சிறந்த குறும்பாடல்களை அது தோன்றிய மொழியிலும் வடிவிலும் ஆங்கில மொழிபெயர்ப்புடன் அச்சடித்து வைக்கும் வழக்கம் உள்ளது. அப்பாடல்கள் மண்ணுக்கு அடியில் மலரும் பாக்கள் என நூல்களாகவும் அச்சிடப்படுகின்றன. அச்சுரங்கப்பாதையில் உள்ள பாடல்களுள் ஒன்றாக குறுந்தொகையின்

**“யாயும் ஞாயும் யாரோகியரோ?**
**எந்தையும் நுந்தையும் எம்முறைகேளிர்**
**யானும் நீயும் எவ்வழி அறிதும்**
**செம்புலப் பெயல்நீர் போல்**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே” (குறுந்.40:1-5)**

என்னும் பாடல்

**What he said**
**What Could My mother be to yours**
**What kin is My Father to yours any Way and**
**How did you and I Meet ever**
**But in Love**
**Our hearts have Mingled**
**like red earth and Pouring rain”** [32]

என ஏ.கே.இராமனுஜம் மொழிப்பெயர்ப்புடன் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. மேலும் “ Red earth and pouring rain” என்னும் பெயரால் அப்பாடலின் கருத்தை மையமாகக் கொண்டு விக்கிரம் சந்திரா ஓர் ஆங்கிலப் புதினத்தையும் எழுதியுள்ளமை குறுந்தொகையின் பெருமையினைப் புலப்படுத்தும்.[33]

**அடிவரையரை**

குறுந்தொகை நான்கடி முதல் எட்டடி வரையிலான அடிவரையறையினைக் கொண்டுள்ளது. எனினும் 307, 391 - ஆகிய இருபாடல்களும் ஒன்பதடி கொண்டு காணப்படுகிறது.

**4 அடி பாடல்கள் - 38**

**5 அடி பாடல்கள் - 90**

**6 அடி பாடல்கள் - 93**

**7 அடி பாடல்கள் - 103**

**8 அடி பாடல்கள் - 75**

**9 அடி பாடல்கள் - 2**

என மொத்தம் 401 பாடல்கள் காணப்படுகின்றன.

சங்க அக இலக்கியமாகிய குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு ஆகிய மூன்றின் அடிவரையறை குறித்து வ.சுப.மாணிக்கனார், "எட்டடி வரையுள்ள பாடல்களில் உரிப்பொருள் சிறந்தும் பன்னிரண்டடி வரையுள்ள பாடல்களில் முதல், கரு, உரி ஒத்தும், முப்பத்தோரடி வரையுள்ள பாடல்களில் முதல், கரு, உரி சிறந்தும் நிற்றல் மூவகை பொருளாட்சியே மூவகை அடிக்கணக்கிற்கு ஏதுவாயிற்று."[34] என்று முதல், கரு, உரிப்பொருள் அடிப்படையில் அடிவரையறைகள் அமைந்துள்ளமையைக் குறிப்பிடுகின்றார்.

சோ.ந.கந்தசாமி பாலி மொழியில் உள்ள சுத்தபிடகத்தில் பாடலின் வடிவத்தை அளந்து பார்த்துப் பெயரிடுவது போல், சங்க அகப்பாடல்களாகிய நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு பாடல்களின் தொகுப்புமுறை அமைந்துள்ளது எனவும் கருத்துரைக்கிறார்.[35]

குறுந்தொகை சொற்பொழிவிற்கான தலைமையுரையில் மு.கதிரேசன் செட்டியார் குறுந்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடலான 'தாமரை புரையுங் காமர் சேவடி' என்ற பாடல் சமயச்சிந்தனைக்கேற்பச் சுட்டப்படினும் குறுந்தொகையின் அடிவரையறைக்கு உட்பட்டுள்ளது என்பர்.[36]

நான்கு அடிக்குக் குறைவான பாடல் குறுந்தொகையில் இடம்பெறவில்லை. ஆசிரியர் பெயர்காணாப் பாடல்களாகப் பத்துப்பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

**உவமையால் பெயர் பெற்ற புலவோர்**

அணிலாடு முன்றிலார், கயமனார், செம்புலப் பெயன்நீரார், மீனெறி தூண்டிலார், விட்ட குதிரையார், ஓரேருழவனார், காலெறி கடிகையார், குப்பைக்கோழியார், கவைமகன், வில்லகவிரலினார், காக்கைபாடினியார், வெள்ளிவீதியார் போன்றோர் உவமையால் பெயர்பெற்ற புலவர்கள் ஆவர்.

**குறுந்தொகைப் பதிப்பு**

குறுந்தொகைக்குப் பேராசிரியர், நச்சினார்க்கினியர் ஆகிய இருவரும் உரை எழுதியுள்ளமை நச்சினார்க்கினியர் உரைப் பாயிரத்தாலும் தொல்காப்பிய சூத்திர உரையாலும் (பொருள்.அகத்.46) அறியப் பெற்றாலும் இவ்விரு உரையாசிரியர்களின் உரைகள் கிடைக்கவில்லை. மேலும் சௌரிப்பெருமாள்

அரங்கனார் (1915) நமச்சிவாயர், அருணாச்சல தேசிகர் (1933) ஆகிய நால்வரது பதிப்புகளும் இப்போது கிடைக்கவில்லை. இப்பதிப்புகள் இருந்தமைக்கான குறிப்புகள் மட்டும் பின்வந்த பதிப்பு முன்னுரைகளில் சுட்டப்பட்டுள்ளது.

‘‘சௌரிப்பெருமாள் அரங்கனார் பதிப்பு குறித்து எஸ்.வையாபுரிப்பிள்ளை (1989) அவர் பதிப்பில் பதிப்பாளருக்கு நேர்ந்த இடுக்கண்கள் கிடைத்த ஓலைச்சுவடிகளில் இருந்த அச்சுவடிகளோடு போராடிய போராட்டங்கள், நேரியவாயுள்ள செய்யுட்களிலும் தம் இளம் கண்ணுக்குத் தோன்றிய நூதன வடிவங்கள், உரைகாணுதற்கு முயன்ற பயனில் முயற்சிகள் முதலிய அனைத்தும் நன்கு வெளியாகின்றன என்னும் கருத்தைத் தெரிவித்துள்ளார்.’’[37]

உ.வே.சா (1937) பதிப்பில் ‘‘கடவுள்வாழ்த்து நீங்களாக உள்ள நானூற்றியொரு பாடல்களும் கூற்றுக்களின் பெயரில் தலைப்பிட்டுப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு கூற்றடிப்படையில் தலைப்பிட்டு பதிப்பித்தமை குறித்து ‘‘ஒவ்வொரு செய்யுளும் இன்னாருடைய கூற்றென்பதைத் தலையில் அமைத்திருக்கண்டதாயினும் பொருளின் கருத்துச் சொல்வதற்கு இம்முறை தக்கதென்று தோன்றியது. அன்றியும் தொல்காப்பியத்தின் கூற்றுவகையாகச் சூத்திரங்கள் வகுக்கப்பட்டிருத்தலும் இங்ஙனம் அமைக்கும் கருத்தை உண்டாக்கியது. சில செய்யுட்களில் இரண்டு பழைய கருத்துகள் இருக்கினறன. அவற்றில் முதல் கருத்தின்படியே கூற்று அமைக்கப்பட்டது’’[38] எனக் கூற்றமைக்கப்பட்டமைக்கான காரணத்தைக் குறிப்பிடுகிறார். அதுபோல் பெ.வே.சோமசுந்தரனார் (1955) குறுந்தொகையைக் கூற்று அடிப்படையில் பதிப்பித்துள்ளார். எஸ்.வையாபுரிபிள்ளை சங்க இலக்கியம் (1940) பதிப்பில் பொதுமுறைப்படி ஆசிரியப்பெயர்களின் கீழ்ப் பாடல்கள் தொகுத்துள்ளார். மேலும் மர்ரே எஸ்.ராஜம் (1957) குறுந்தொகையை திணைப் பெயர்களைத் தலைப்பிட்டுப் பதிப்பித்துள்ளார்.

மு.சண்முகம்பிள்ளை (1985) திணை மற்றும் கூற்று அடிப்படையில் பதிப்பித்துள்ளார். ‘‘குறுந்தொகையின் 112 பாடல்களைக் குறுந்தொகை விளக்கம்’’ என்ற பெயரில் உரையுடன் 1940-இல் அண்ணாமலைப் பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ளது.

**அகநானூறு நூல் வரலாறு**

அகம் பற்றிய நானூறுபாடல்களை உடையதால் அகநானூறு என்றழைக்கப்படுகின்றது. இதற்கு நெடுந்தொகை, அகம், அகப்பாட்டு என்று பல பெயர்கள் உண்டு. ஐந்திணையொழுக்கங்களை விரிவாக எடுத்து

விளம்புகின்றன. இச்சிறப்புக் கருதியே அகம் என்ற பெயரை அகப்பொருள் என்று பொருள்படும் அகப்பொருளாக அழைத்தனர்.

இறையனார் களவியல் உரையில் ‘நெடுந்தொகை நானூறு’ என இடம் பெற்றுள்ளதாலும் அகநானூறு நெடுந்தொகை நானூறு என்றும் அழைக்கப்பட்டது. இதில் பதின்மூன்று அடிகளுக்குக் குறையாமலும் முப்பத்தொரு அடிகளுக்கு மேற்படாமலும் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அகநானூற்றில் உள்ள நானூறு பாடல்களும் நூற்றுநாற்பத்தைந்து புலவர்களால் பாடப்பட்டவையாகும். மேலும் இதில் இருநூறு பாடல்கள் பாலைத்திணை பற்றியும் எண்பது பாடல்கள் மருதத்திணை பற்றியும் மற்றொரு நாற்பது பாடல்கள் முல்லைத்திணை பற்றியும் இன்னொரு நாற்பது பாடல்கள் நெய்தல் திணை பற்றியும் கூறுபவையாகும்.

**நூலின் அமைப்பு முறை**

சங்க இலக்கியத்தில் எங்கும் காணப்படாத ஓர் அமைப்பு முறை இந்நூலில் உள்ளதை

**“களித்த மும்மாதக் களிற்று யானை நிரை**
**மணியொடு மடைந்த அணிகிளர் பவளம்**
**மேவிய நித்திலக்கோவை யென்றாங்கு**
**அத்தகு பண்பின் முத்திறம் ஆக**
**முன்னினர் தொகுத்த நன்னெடுந் தொகை” (அகநா.பயிரப்பாடல்)**

என்ற அகநானூற்றின் இறுதியில் உள்ள பாயிரப் பாடல் சுட்டும். அதாவது களிற்றியானை நிரை என்பது பொருட்காரணமாக அமைந்த பெயரென்றும் மணிமிடைபவளம் என்பது செய்யுளும் பொருளும் ஒவ்வாமையால் பெற்ற பெயரென்றும் நித்திலக் கோவை என்பது செய்யுளும் பொருளும் ஒத்தமையால் அமைந்த பெயரென்றும் இப்பாயிரம் விளக்குகின்றது. பொ.வே.சோமசுந்தரனார் அகநானூறு பதிப்பு முன்னுரையில் இப்பகுப்பிற்கான காரணத்தினை, களித்தலையுடைய களிற்று யானைநிரை, மணியோடு சேர்த்துக் கோத்த அழகு ஒளிரும் மணிமிடைபவளம், சிறப்பான நித்திலக்கோவை என்ற விதமாக அத்தகைய பண்பினோடு முத்திறம் உடையனவாகத் தொகுத்தற்கு நினைந்து தொகுத்தது நல்ல நெடுந்தொகையாகும் என்கிறார்.[39]

**பாடல் வைப்பு முறை**

அகநானூற்றில் பாடல்வைப்புமுறையில் தனித்த சிறப்புக் காணப்படுகின்றது. அவை, ஒற்றைப்படை எண்ணாலான பாடல்கள் (1, 3, 5, 7, 9) என 200 பாடல்கள் பாலைப்பாடல்கள் என்றும் இரட்டைப்படை எண்ணாலான பாடல்கள் (2, 4, 8, 2) என 80 பாடல்கள் குறிஞ்சிப்பாடல்கள் என்றும் (4, 14,

24) நான்கு எண்ணாலான 40 பாடல்கள் முல்லைப் பாடல்கள் என்றும் 10, 20, 30 என்று பத்துகளால் ஆன பாடல்கள் (40) நெய்தல் திணைப்பாடல்கள் என்றும், (6, 16, 26) என ஆறு எண்களால் அமைந்த பாடல்கள் மருதப் பாடல்கள் என்றும் எண்ணிக்கை அடிப்படையில் திணைப்பாடல்களை உப்பூரிகுடிகிழார் மகனார் உருத்திரசன்மனார் தொகுத்துள்ளார்.

**இந்நூலின் சிறப்புகள்**

- அகநானூற்றில் மூவேந்தர்களின் வரலாறு அகத்திற்குரிய மணவாழ்க்கையின் சிறப்பு, திருமணமுறை போன்றவற்றை எடுத்துரைக்கின்றது.
- முதற்பொருளும் கருப்பொருளும் இந்நூலில் அமைந்திருத்தலைப் போலப் பிற நூல்களில் காணுதல் இயலாது. இவ்வாறாகத் தமிழரின் பண்பாட்டுக் கருவூலமாக இந்நூல் விளங்குகின்றது.
- எண் அடிப்படையில் அமைந்த திணைப்பாகுபாடு போன்றவை இதன் சிறப்பினை எடுத்துரைக்கும்.

**அடிவரையறை**

அகநானூற்றுப் பாடல்கள் 13 அடிச் சிற்றெல்லையும் 31 அடிப்பேரெல்லையும் கொண்டவை. 13 முதல் 31 வரையான பல்வேறு அடியளவுகளில் அமைந்த பாடல்களும் காணப்படுகின்றது.

| | | | |
|---|---|---|---|
| **13** | **அடிப்பாடல்கள்** | - | **22** |
| **14** | **அடிப்பாடல்கள்** | - | **59** |
| **15** | **அடிப்பாடல்கள்** | - | **59** |
| **16** | **அடிப்பாடல்கள்** | - | **33** |
| **17** | **அடிப்பாடல்கள்** | - | **41** |
| **18** | **அடிப்பாடல்கள்** | - | **46** |
| **19** | **அடிப்பாடல்கள்** | - | **35** |
| **20** | **அடிப்பாடல்கள்** | - | **14** |
| **21** | **அடிப்பாடல்கள்** | - | **18** |
| **22** | **அடிப்பாடல்கள்** | - | **21** |
| **23** | **அடிப்பாடல்கள்** | - | **12** |
| **24** | **அடிப்பாடல்கள்** | - | **11** |
| **25** | **அடிப்பாடல்கள்** | - | **6** |
| **26** | **அடிப்பாடல்கள்** | - | **15** |
| **27** | **அடிப்பாடல்கள்** | - | **3** |

| | | | |
|---|---|---|---|
| **28** | **ஞூஅடிப்பாடல்கள்** | - | 1 |
| **29** | **அடிப்பாடல்கள்** | - | 2 |
| **30** | **அடிப்பாடல்கள்** | - | 1 |
| **31** | **அடிப்பாடல்கள்** | - | 1 |

எனவே அகநானூற்றில் 13 அடிக்கும் குறைவான அடிகளைளோ அல்லது 31 அடிக்கும் அதிகமான அடிகளையோ கொண்ட பாடல்கள் இடம் பெறவில்லை.

**அகநானூறு பதிப்புகள்**

அகநானூற்றுக்குப் பல்வேறு பதிப்புகள் வெளிவந்துள்ளன. இரா.இராகவையங்கார் முதன் முதலாக மூன்று பதிப்புகள் (1920, 1923, 1935) வெளியிட்டுள்ளார். அடுத்து இராசகோபாலய்யங்கார் 1926-இல் அகநானூற்றைப் பதிப்பித்துள்ளார். இப்பதிப்புகள் கிடைக்காமையால் அவை பற்றி அறிய இயவில்லை. இப்பதிப்புகளில் ந.மு.வேங்கடசாமி நாட்டாரும் ரா.வேங்கடாசலம் பிள்ளையும் களிற்றியானை நிரையை 1943லும் மணிமிடைபவளம், நித்திலக்கோவை ஆகிய இரண்டையும் 1944லும் வெளியிட்டுள்ளனர். இது விரிவான விளக்கத்துடன் அமைந்துள்ளது. இதையடுத்து மாரே எஸ்.ராஜம் அகநானூறு மூலத்தை மட்டும் 1957-இல் வெளியிட்டார். இதன் மறுபதிப்பு 1981-இல் வெளிவந்துள்ளது. புலியூர்க்கேசிகன் களிற்றுயானை நிரை, மணிமிடை பவளம் இரண்டையும் 1960லும் நித்திலக் கோவையை 1962லும் எளிமையான உரையுடன் வெளியிட்டுள்ளார். பொ.வே.சோமசுந்தரனார் 1966யில் பதிப்பித்துள்ளார். மேலும் வே.சிவசுப்பிரமணியனைப் பதிப்பாசிரியராகக் கொண்டு உ.வே.சாமிநாதையர் நூல்நிலையத்தார் 1990-இல் களிற்றுயானை நிரை (1-120) மணிமிடை பவளம் (121-300) நித்திலக்கோவை (301-400) என்ற மூன்றையும் தனித்தனியே பதிப்பித்துள்ளனர். இப்பதிப்பு முறை குறித்து ‘‘இப்பதிப்பினுள் முதற்கண் திணைப்பெயரும் பின்னர் துறை விளக்கமும் செய்யுளும் உரையும் குறிப்புரையும் பிரதிபேதமும் மேற்கோள் ஆட்சியும் இறுதியாக ஒப்புமைப் பகுதியும் அமைந்து நூற்பொருளை இனிதுரைத்து படிப்பார்க்குப் பேருதவி செய்யும் முறையில் அமைந்துள்ளன. செய்யுள்களுக்குப் புதிதாக முன்னைய உரையாசிரியர்களைத் தழுவிப் பொழிப்புரையும் குறிப்புரையும் உள்ளுறை, இறைச்சி முதலிய பொருள் பகுதிகளும் எழுதிச் சேர்த்துள்ளேன்’’[40] என்று வே.சிவசுப்பிரமணியன் அகநானூற்றுப் பதிப்பு முன்னுரையில் குறிப்பிடுகின்றார்.

அகநானூறு தொடர்பாக வெளியான அனைத்துப் பதிப்புகளும் மூலப்பிரதிகளின் பாடல்வைப்பில் எவ்வித மாற்றமும் இன்றி மரபான திணை அடிப்படையிலான தொகுப்பியைபிலேயே அமைந்துள்ளன. இது ஒன்றே

அனைத்துப் பதிப்புகளிலும் காணப்படும் பொது இயைபு, மேலும் அகநானூறு பதிப்பித்தலில் மூலத்தை மட்டும் பதிப்பித்தல், உரையுடன் பதிப்பித்தல் என இருநிலைகள் காணப்பெறுகின்றது.

**ஐங்குறுநூறு பெயர்க்காரணம்**

நற்றிணை முதலியவற்றிலுள்ள பாக்களைக் காட்டிலும் அடிவரையறை குறைந்த நூறுநூறு பாக்களால் மருதம் முதலிய ஐந்திணையொழுக்கங்களைத் தனித்தனியே விளக்குகின்றமையின் இந்நூல் ஐங்குறுநூறு எனப் பெயர் பெற்றதாக உ.வே.சா. குறிப்பிடுகிறார்.[41]

**"மருதம் ஓரம்போகி, நெய்தல் அம்மூவன்**
**கருதும் குறிஞ்சி கபிலன் கருதிய**
**பாலை ஓதலாந்தை, பணிமுல்லை பேயனே**
**நூலை ஓது ஐங்குறுநூறு"**

என்ற பழம்பாடல் மூலம் மருதத்திணையை ஓரம்போகியாரும் நெய்தல் திணையை அம்மூவனாரும் குறிஞ்சித்திணையை கபிலரும் பாலைத்திணையை ஓதலாந்தையாரும் முல்லைத் திணையை பேயனாரும் பாடியுள்ளனர். மேலும் ஐந்து குறுகிய பாடல்களைக் கொண்டு திணைக்கு நூறுபாடலாக ஐந்நூறுபாடல்களை உடையதால் ஐங்குறுநூறு என்றழைக்கப்பட்டது.

**அடிவரையறை**

ஐங்குறுநூற்றுப் பாடல்களின் சிற்றெல்லை 3 அடியாகவும் பேரெல்லை 6 அடியாகவும் வரையறைப்படுத்தப்பட்டுள்ளது. அனைத்துப் பாடல்களும் இவ்வடிவரையறைக்குள்ளேயே உள்ளன. பாரதம்பாடிய பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடலும் இவ்வடிவரையறைக்குட்பட்டு மூன்று அடியாக உள்ளது. நெய்தல் திணையில் கிழவற்கு உரைத்த பத்து (121-128) பாணற்கு உரைத்த பத்து (131-140) ஞாழற் பத்து (141-150) ஆகிய மூன்று பத்துக்களும் பாலைத்திணையில் இளவேனிற் பத்தும் (341-350) முல்லைத்திணையில் புறவு அணிப்பத்தும் (431-440) 3 அடிப்பாடல்களின் தொகுப்புகளாக உள்ளன.

நெய்தல் திணையில் தொண்டிப்பத்தும் (171-180) முல்லைத் திணையில் விரவுப்பத்தும் (421-430) 4அடிப்பாடல்களாக உள்ளன. முல்லைத் திணையில் பாணன் பத்தின் (471-480) பத்துப் பாடல்களும் 5அடிப்பாடல்களாகவும் மருதத்திணையில் வேட்கைப் பத்தின் (1-10) 10பாடல்களும் 6அடிப்பாடல்களாக உள்ளன.

**மூன்றடிப்பாடல்கள்**

211, 212, 487, 491

**நான்கடிப் பாடல்கள்**

11-18, 21-23, 25-30, 31-35, 37-39, 41-46, 49, 50, 51-53, 55-60, 62-66, 68, 69, 73-80, 82, 83, 87-90, 91, 92, 95-100, 102 - 109, 112, 115-120, 154, 161-168, 170, 182, 184, 185, 188-190, 192-200, 201-203, 207, 217, 219, 221, 222, 228, 229, 231-237, 240, 241, 243-245, 247-249, 251, 253-257, 260, 261-266, 271, 273, 281, 287-290, 291, 296-300, 301-303, 305-308, 310-312, 315, 317, 319, 323, 325, 328, 336, 337, 339, 340, 353, 354, 356, 358, 363, 364, 370, 372, 374, 377, 379, 386, 390, 402, 404-409, 411-415, 417, 418, 419, 441, 446, 447, 449, 450, 451, 454, 457, 458, 464, 481-485, 488, 490, 493, 494

**ஐந்தடிப் பாடலகள்**

19, 20, 24, 36, 40, 47, 48, 61, 67, 70, 71, 72, 81, 84, 85, 93, 94, 101, 110, 111, 113, 114, 151, 152, 153, 155-160, 169, 181, 186, 187, 204-206, 208-210, 213, 215, 218, 220, 223-227, 230, 238, 239, 242, 250, 252, 258, 267-270, 272, 274, 275, 277-280, 282-286, 292-294, 299, 304, 309, 313, 314, 316, 318, 320, 321, 322, 351, 352, 355, 357, 359, 360, 361, 362, 365-369, 371, 373, 376, 378, 380, 381, 382, 384, 388, 389, 391-394, 401, 403, 410, 416, 420, 442-445, 452, 453, 455, 456, 460, 461-463, 465, 466-470, 486, 492, 495-500

**ஆறடிப் பாடல்கள்**

54, 129, 130, 216, 246, 259, 276, 295, 375, 383, 385, 387, 395, 400, 448, **பழைய உரை பதிப்பு**

ஐங்குறுநூற்றிற்கு உ.வே.சாமிநாதையர் பதிப்பித்த உரையுடனான மூலப்பதிப்பு (1903) மர்ரே எஸ்.ராஜம் பதிப்பு (மூலம் மட்டும் 1981) ஆகியவற்றுடன் ஔவை. துரைசாமிப்பிள்ளை (முதல் இரு பாகம் 1957, மூன்றாவது பாகம் 1958) பொ.வே.சோமசுந்தரனார் (1961), புலியூர்க்கேசிகன் (1983) ஆகிய மூவரும் தனித்தனியே உரையெழுதிப் பதிப்பித்த மூன்று பதிப்புகளுமான மொத்தம் 5 பதிப்புகள் இதுவரை வெளிவந்துள்ளன. ஐங்குறுநூற்றை முதன் முதலில் உ.வே.சாமிநாதையர் தான் கையெழுத்துப் பிரதியினின்று 1903-இல் பதிப்பித்துள்ளார். இப்பதிப்பு முன்னுரையில் (பக்.7-10) உ.வே.சாமிநாதையர் ஐங்குறுநூற்றுக்குப் பழைய உரை இருந்ததையும் தாம் மேற்கோளாய் ஆண்ட பாடல்களுக்கு நச்சினார்க்கினியர் கருத்துரை எழுதிய

நிலையையும் குறிப்பிடுவதுடன் பழைய உரையையும் கருத்துரையையும் எழுதியவர் இன்னார் என்பது புலப்படாத நிலைமையையும் எடுத்துக்காட்டுகிறார்.[42] அடுத்து மர்ரே எஸ்.ராஜம் 1957-இல் ஐங்குறுநூற்றின் மூலத்தை மட்டும் வெளியிட்டுள்ளார். ஔவை துரைசாமிப்பிள்ளை ஐந்திணைகளையும் மூன்று பிரிவுகளாகப் பிரித்துப் பதிப்பித்துள்ளார். பதிப்புரையில் (1957) இப்பதிப்பு குறித்து, முதல் தொகுதியுள் ஓரம்போகியார் பாடிய மருதத் திணைக்குரிய பாடல் நூறும் அம்மூவனார் பாடிய நெய்தற் பாட்டு நூறும் உள்ளன. இரண்டாம் தொகுதியுள் குறிஞ்சி, பாலை என்ற இரு திணைக்கும் உரிய இருநூறு பாட்டுக்கள் உள்ளன. மூன்றாம் தொகுதியில் பேயனார் பாடிய முல்லைத் திணைப் பாட்டுக்கள் நூறும் அரும்பொருநிரலும் அருஞ்சொல் அகரநிரலும் சேர்ந்துள்ளன. கைக்கு அடக்கமாக இருக்கும் பொருட்டு இவை மூன்று தொகுதிகளாகப் பிரிக்கப்பெற்றுள்ளன எனக் குறிப்பிட்டுள்ளார். இதில் முதலிரு பகுதிகள் இரண்டும் 1957-லும் மூன்றாவது பகுதி 1958லும் வெளிவந்துள்ளன. ஐங்குறுநூற்றிற்குப் பெ.வே.சோமசுந்தரனார் எழுதிய உரை 1961-இல் வெளிவந்துள்ளது. இதன் பதிப்புரையில் இந்நூலுக்கு முன்னுள்ளார் அமைத்த துறைக்குச் சிறந்த விளக்கமும் பழையவுரையின் கீழ்த் தெளிவான சொற்பொருளும் இவற்றை விளக்கும் விரிந்த விளக்கவுரையும் இலக்கணக் குறிப்புகளும் அமையக் கழகத்தார் விழைந்தாங்குச் சங்க நூற் பயிற்சியும் புலமை ஆர்வத்தால் பெற்ற விழுப்புலமையும் மிக்குள்ள பெருமழைப் புலவர் பொ.வே.சோமசுந்தரனார் அவர்கள் செவ்விதின் உரை எழுதி உதவினார்கள் என இப்பதிப்பின் உரை இயல்பு சுட்டப்பட்டுள்ளது. மேற்குறிப்பிட்ட ஔவை. துரைசாமிப்பிள்ளை பதிப்பில் பழைய உரைக்கான குறிப்பில் பண்டைச் சான்றோர் ஒருவரால் உள்ளுறைக் குறிப்பும் குறிப்புரையும் பல பாட்டுகளுக்கு எழுதப்பட்டுள்ளன என்ற குறிப்பு சுட்டப்பட்டுள்ளது. புலியூர்க்கேசிகன் மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லையென ஔவை. துரைசாமிப் பிள்ளையைப் போன்று மூன்று பகுதிகளாகப் பதிப்பித்துள்ளார். 1983-இல் இப்பதிப்புகள் வெளிவந்துள்ளன.

ஐங்குறுநூறு குறித்து வெளிவந்த இவ்வைந்து பதிப்புகளில் நான்கு உரையுடன் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. எஞ்சியுள்ள ஒரு பதிப்பு (மர்ரே எஸ்.ராஜம்) மூலத்துடன் மட்டும் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.[43]

**கலித்தொகை**

'கற்றறிந்தார் ஏத்தும் கலி' எனப் பாராட்டப்படும் சிறப்பினை உடையது கலித்தொகை. கலிப்பா என்பது நான்குவகைப்பாக்களுள் ஒன்று. இசையுடன்

பாடக் கூடியது. இது அமைப்பில் ஐங்குறுநூற்றைப் போன்று ஐந்து திணைகளாக, ஐந்து புலவர்களால் பாடப்பெற்ற நூலாகும்.

தொல்காப்பிய அகத்திணை கலித்தொகை குறித்து ஆராய்ந்துள்ள தி.ரா.செல்வம், "காமப் பொருளைக் கலிப்பாவால் பாடும் பொழுது பொருளுக்கேற்ற ஓசையும் சொல்லமைதிக்கேற்ற உணர்வும் மிளிர்கின்றன. இதனால். பாடும் புலவரின் படைப்புத் திறன் கற்போர் நெஞ்சினைக் கவர்கிறது. மூவகைச் சீர்கள் மிகுந்து தரவு, தாழிசை, அம்போதரங்கம், அராகம், தனிச்சொல், சுரிதகம் முதலிய உறுப்புகளைக் கொண்ட கலிப்பா காதல் நுட்பத்தின் திறத்தை எல்லாம் வெளிப்படுத்தும் கருவியாக உள்ளது."[44] என்று அகப்பொருளுக்கு ஏற்ற பாவாகக் கலிப்பா அமைந்துள்ளதெனக் குறிப்பிடுகின்றார்.

சங்க காலத்தில் தோன்றிய இலக்கிய நூல்கள் அனைத்தும் ஆசிரியப்பாலால் அமைந்திருக்க இந்நூல் மட்டும் கலிப்பாவால் அமைந்திருப்பது இது காலத்தால் பிறப்ட்டது என்பதைக் காட்டுகின்றது. தொகை நூல்காளகிய நற்றிணை, குறுந்தொகை அகநானூறு போன்றவற்றில் காணப்படும் காதல் நிலைகள் இதில் இல்லை. பொருளாதார நிலையில் பின்னடைந்தோர் காதலைப் பாடும் இலக்கியமாக உள்ளது. அகத்திற்கு மட்டுமே உரிய கலிப்பாவால் அமைந்த நூல் கலித்தொகை ஆகும்.

**அடிவரையறை**

சங்க இலக்கியங்கள் அனைத்தும் தொகுக்கப்பட்ட பாடலாயினும் தொகை என்ற பெயரைக் கொண்ட நூல்களுள் கலித்தொகையும் ஒன்று. இதன் கடவுள் வாழ்த்துப்பாடலைப் பாடிய நல்லந்துவனாரே நூல் முழுமையும் தொகுத்தார் என பலா் கூறியுள்ளனா். இந்நூல் 11 அடி முதல் 80 அடிவரை காணப்படுகின்றது.

| | | | |
|---|---|---|---|
| 11 | அடிப்பாடல் | - | 6 ஆவது பாடல் |
| 12 | அடிப்பாடல் | - | 18 ஆவது பாடல் |
| 13 | அடிப்பாடல் | - | 19 ஆவது பாடல் |
| 14 | அடிப்பாடல் | - | 20 ஆவது பாடல் |
| 15 | அடிப்பாடல் | - | 89, 117 |
| 16 | அடிப்பாடல் | - | 119, 149 |
| 17 | அடிப்பாடல் | - | 116 |
| 18 | அடிப்பாடல் | - | 5, 14 |
| 19 | அடிப்பாடல் | - | 12, 23, 32, 62, 123, 133 |
| 20 | அடிப்பாடல் | - | 54, 135 |

| | | | |
|---|---|---|---|
| 21 | அடிப்பாடல் | - | 7, 17,30,44,67,88,99,114,115,124,130,136 |
| 22 | அடிப்பாடல் | - | 3, 16, 22, 37, 73, 76, 126, 127 |
| 23 | அடிப்பாடல் | - | 8, 9, 20, 55, 58, 70, 79, 100, 110, 121, 150 |
| 24 | அடிப்பாடல் | - | 10, 28, 34, 45, 47, 48, 50, 53, 57, 69, 77, 91, 111, 122, 125, 132, 148 |
| 25 | அடிப்பாடல் | - | 4, 11, 26, 31, 35, 49, 52, 66, 68, 112, 118, 120, 129, 141 |
| 26 | அடிப்பாடல் | - | 15, 27, 29, 36, 38, 59, 71, 72, 80, 109, 128 |
| 27 | அடிப்பாடல் | - | 13, 46, 78, 134 |
| 28 | அடிப்பாடல் | - | 61, 137 |
| 29 | அடிப்பாடல் | - | 2, 25, 65, 90, 113 |
| 31 | அடிப்பாடல் | - | 33, 43, 64, 83, 97, 138 |
| 32 | அடிப்பாடல் | - | 42, 60 |
| 33 | அடிப்பாடல் | - | 75, 95 |
| 34 | அடிப்பாடல் | - | 40, 56, 86, 140 |
| 35 | அடிப்பாடல் | - | 82, 107 |
| 36 | அடிப்பாடல் | - | 85, 93 |
| 37 | அடிப்பாடல் | - | 81, 139 |
| 38 | அடிப்பாடல் | - | 98 |
| 39 | அடிப்பாடல் | - | 96, 102 |
| 41 | அடிப்பாடல் | - | 84 |
| 43 | அடிப்பாடல் | - | 94 |
| 44 | அடிப்பாடல் | - | 41 |
| 46 | அடிப்பாடல் | - | 131 |
| 50 | அடிப்பாடல் | - | 101, 106 |
| 51 | அடிப்பாடல் | - | 39 |
| 55 | அடிப்பாடல் | - | 146 |
| 60 | அடிப்பாடல் | - | 143 |
| 63 | அடிப்பாடல் | - | 108 |
| 66 | அடிப்பாடல் | - | 142, 145 |
| 68 | அடிப்பாடல் | - | 92 |
| 71 | அடிப்பாடல் | - | 147 |
| 73 | அடிப்பாடல் | - | 144 |

75 அடிப்பாடல் - 105

79 அடிப்பாடல் - 103

80 அடிப்பாடல் - 104

கலித்தொகை அடியளவு அடிப்படையில் நிரலமைப்பில் வைக்கப்பெறவில்லை.

**உரை, பதிப்புகள்**

கலித்தொகைக்கு முதலில் உரையெழுதியவர் நச்சினார்க்கினியர். ஏட்டுப்பிரதிகளில் இருந்த கலித்தொகையை நச்சினார்க்கினியர் உரையுடன் முதன்முதலில் 1887-இல் சி.வை.தாமோதரம்பிள்ளை பதிப்பித்துள்ளார்.[45]

இப்பதிப்பை அடுத்து இ.வை.அனந்தராமையர் “1925-இல் பல ஏட்டுச் சுவடிகளையும் ஒப்பிட்டு மூலநூல் உரையுடன் திருத்திப் பதிப்பித்துள்ளார். இதன் மறுபதிப்பு தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக 1984-இல் வெளிவந்துள்ளது.”[46]

காழி.சிவ.கண்ணுசாமியைப் பதிப்பாசிரியராகக் கொண்டு தனைவசிய இளைஞர் தமிழ்ச் சங்க வெளியீடாக நச்சினார்க்கினியர் உரையும் விளக்கமும் என்ற தலைப்பில் 1938-இல் முதல் பதிப்பு வெளியிடப்பட்டுள்ளது. இதன் மறுபதிப்புகளும் (1943, 1949, 1955, 1958, 1962, 1967 - ஆம் ஆண்டுகளில்) வெளிவந்துள்ளன.[47]

அதுபோல், “மர்ரே எஸ்.ராஜம் 1957-இல் மூலத்தை மட்டும் வெளியிட்டுள்ளார். இதன் மறுபதிப்பு 1981-இல் வெளிவந்துள்ளது.”[48]

மேலும் கலித்தொகைக்குப் “புலியூர்க்கேசிகன் பாடுபொருள் அடிப்படையில் தலைப்பிடப்பட்டு, துறை விளக்கம், பாடல், பாடற்பொருள் விளக்கம் என்ற நிரலமைப்பில் உரையெழுதிப் பதிப்பித்துள்ளார். இதன் முதல் பதிப்பு 1958-லும் மறு பதிப்புகள் 1965, 1971, 1978-ஆம் ஆண்டுகளிலும் வெளிவந்துள்ளன.”[49]

பொ.வே.சோமசுந்தரனார் உரையுடன் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் கலித்தொகையைப் பதிப்பித்துள்ளனர்.

மேற்குறிப்பிட்ட பதிப்புகள் தவிர, இ.வை.அனந்தராமையர் கலித்தொகை மூலத்தை மட்டும் 1930-இல் வெளியிட்டுள்ளார். கலித்தொகை முழுமையையும் சக்திதாசன் சுப்பிரமணியமும் மா.இராசமாணிக்கனாரும் (1958), பாலைக் கலியைத் தை.ஆ.கனகசபாபதி முதலியாரும் (1937) வெளியிட்டுள்ளனர்.

**கைக்கிளை, பெருந்திணைக்குறிப்பு**

சங்க அகப்பாடல்களுள் கைக்கிளைப் பெருந்திணையில் அமைந்த பாடல்கள் கலித்தொகையில் மட்டுமே இடம் பெற்றுள்ளது. தொல்காப்பிய அகத்திணையியலில்,

**"கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்**
**முற்படக் கிளந்த யெழுதிணை என்ப"[50]**

என்பதில் கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என்ற ஏழு திணைகள் காணப்படுகின்றன. இந்த ஏழு அகத்திணைகளுக்குப் புறனாகப் புறத்திணையியலில் வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்ற ஏழு புறத்திணைகள் கூறப்பட்டுள்ளன. எனவே பெருந்திணை, கைக்கிளை இரண்டும் தனித்திணைகள் ஆகும்.

அகத்திணையியலில் ஐந்திணைகளுக்குக் கூற்றுகள் வகுக்கப்பட்டுள்ளது போல் கைக்கிளை, பெருந்திணைக்கும் கூற்றுக்கள் வகுக்கப்பட்டுள்ளன. எனவே தொல்காப்பியர் முறைப்படி இவை தனித் திணைகளாகவே கருதப்பட வேண்டியன. இவற்றைப் பிற திணைகளுள் அடக்குவது பொருந்தாது.

தொல்காப்பியத்திற்குப் பின்னர் எழுதப்பட்ட புறப்பொருள் வெண்பாமாலையில் கைக்கிளை, பெருந்திணை இரண்டும் தனித்தனிப் படலங்களாகக் கொள்ளப்பட்டுக் கைக்கிளையில் ஆண்பாற் கூற்று, பெண்பாற் கூற்று எனவும் பெருந்திணையில் பெண்பாற் கூற்றுப் பெருந்திணை, இருபாற் பெருந்திணை எனவும் தனித்தனியாகக் காணப்படுகின்றன. இந்த இலக்கண நூல்கள் இரண்டும் இவ்விரு திணைகளையும் தனித் திணைகளாகவே கருதியிருப்பதைப் போன்று வ.சுப.மாணிக்கனார் இவற்றைத் தனித்திணைகளாகவே கருத வேண்டும் எனக் கூறியிருப்பதன் அடிப்படையிலும் கைக்கிளை, பெருந்திணைத் துறைகளில் கலித்தொகையில் காணப்படும் பாடல்களும் தனித் தனித்திணைகளாகப் கொள்ளப்பட்டு எழுதிணைப் பாடல்களின் தொகுப்பாய் இந்நூல் தொகுக்கப் பட்டிருக்க வேண்டும். உரிப்பொருள் இல்லாத இவற்றைத் தனித் திணைகளாய்க் கொள்ளும் மனப்பாங்கு தொகுத்தவர்க்கு இல்லாத காரணத்தால் ஐந்திணையுள்ளேயே அவை அடக்கப்பட்டுவிட்டன.[51]

**பிராகிருதம்**

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பாரதப் பண்பாட்டை உருவாக்கிய மொழிகளுள் வடமொழி என்னும் சமசுகிருதம், பாகதம் என்னும்

பிராகிருதம், திராவிடம் என்னும் தமிழ் ஆகிய மூன்றும் குறிப்பிடத்தக்கவையாகும்.

“சமஸ்க்ருதம் என்ற சொல்லுக்கே பண்படுத்தப்பட்டது. (செம்மைப்படுத்தப்பட்டது) என்றே பொருள். பிராகிருதம் என்றால் முன்பே செய்யப்பட்டது. இயல்பானது மக்கள் மொழி என்னும் பொருளை உடையது.”[52] என்பது பொருளாகும். ‘பிரகிரித்’ என்ற சமஸ்கிருதச் சொல்லிருந்து பெறப்பட்ட சொல்லே பிராகிருதம் ஆகும். மேலும் பிராகிருதம் குறித்து, “வடமொழிக்கே உரிய உபசர்க்கங்களைக் கையாள்வதாலும் வடமொழியின் வினைவிகுதிகளை எளிமையாக்கிப் பயன்படுத்துவதாலும் வடமொழியின் (சமஸ்கிருதத்தின்) திரிவு பிராகிருதம் என்பதே பொருந்தும் என்று மு.கு.ஜகந்நாத ராசா குறிப்பிடுகிறார்.”[53] அதுமட்டுமின்றித் தமிழ், பிராகிருதம் இவற்றின் ஒலிப்பு முறையை ஆராய்ந்து தூய ஆரியச்சார்புடைய மொழி சமஸ்கிருதம்’ என்றும் ‘தூய திராவிடச் சார்புடைய மொழி தமிழ்’ என்றும் ஆரியத் திராவிடக் கலப்பினால் விளைந்தது பிராகிருதம் என்றும் கூறப்படுகிறது. இவ்வாறு பிராகிருதம் குறித்து பல்வேறு கருத்துகள் நிலவினும் அதில் சமசுகிருத மொழிக் கூறுகளும் திராவிடமொழிக் கூறுகளும் அதிகமாகக் காணப்படுவதன் வழி இதனைத் தொன்மையான மொழி என்றும் கூறலாம்.

மேலும் சமசுகிருதம் வழங்கிய காலத்தில் பிராகிருதமும் இருந்தமையால், மக்கள் பிராகிருத மொழியை விரும்பினர். காரணம், சமசுகிருதம் இலக்கண இலக்கியத்தில் கையாளப்படும் செம்மையான மொழியாகும். ஆனால் பிராகிருதம் பேச்சுவழக்கிற்குரிய கொச்சை மொழி. ஆகையால் மக்கள் பிராகிருதத்தை விரும்பியமை அறியப்படுகின்றது. இத்தகைய “பிராகிருதத்திலிருந்து பல கிளைமொழிகள் தோன்றின. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை மாகதி, அர்த்தமாகதி, சௌரசேனி என்பன. மாகதி இந்தியாவின் கிழக்குப் பகுதியில் பீகாரில் பேசப்படுவதாகும். கௌதமபுத்தர் இம்மொழியில் தான் தம் சமயக்கொள்கைகளை மக்களிடையே பரப்பினார். அர்த்தமாகதி வாராணாசியிலும் அதன் சுற்றுப்பகுதிகளிலும் வழங்கி வந்தது. மகாவீரர் சமணசமயக் கருத்துகளை அர்த்தமாகதியில் தான் விளக்கினார். சௌரசேனி யமுனை ஆற்றங்கரையில் மதுராபகுதியில் செல்வாக்குப் பெற்றிருந்தது. மாகதியிலிருந்து மகாராஷ்டிரி மொழியும் வங்காளமொழியும் தோன்றின. சௌரசேனியில் இருந்து கிழக்குப் பஞ்சாபியும் இந்தியும்

குசராத்தியும் தோன்றின என்று பிராகிருத மொழியிலிருந்து கிளை மொழிகள் தோன்றி வளர்ந்ததை அறிஞர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்''[54]

**பிராகிருத இலக்கியங்கள்**

மௌரியர் ஆட்சியில் செல்வாக்குப் பெற்றிருந்த பாலி அல்லது அர்த்தமாகதியின் இடத்தை மகாராஷ்டிரி பிராகிருதம் கைப்பற்றிக் கொண்டது என்றும் அது சாதவாகனர்களின் ஆட்சி மொழியாகத் திகழ்ந்தது என்றும் வரலாற்றறிஞர்கள் பதிவு செய்துள்ளனர். ''கி.பி.7-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வடநாட்டு மன்னன் ராஜாதாரசேனன் கல்வெட்டொன்றில் அவனது தந்தை குகசேனன் சமசுகிருதம், பிராகிருதம் அபப்பிரம்சம் ஆகிய மும்மொழிகளிலும் கவிஞனாகத் திகழ்ந்தமையினைக் குறிப்பிட்டுள்ளார்.''[55] பிராகிருதம் சமண சமயக் கருத்துகளையும் பாலி பௌத்த சமய உண்மைகளையும் மக்களுக்கு உணர்த்தும் ஊடகமாக இருந்தன என்பர். ஆனால் பிராகிருத மொழியில் தோன்றிய காதாசப்தசதி சமய உண்மைகளை வெளிப்படுத்துவது மட்டுமின்றி மக்களின் காதல் வாழ்க்கையையும் அறநெறிச் சிந்தனைகளையும் வெளிப்படுத்தும் இலக்கியமாக விளங்குகின்றது.

**சாதவாகனர்**

சாதவாகனர் மௌரியருக்குப் பின்னர் தக்காணப் பகுதியில் ஒரு பேரரசை நிறுவி வட இந்தியாவையும் தென்னிந்தியாவையும் ஒரு குடையின் கீழ் கொண்டு வந்தவர்கள் ஆவர். அவர்களின் பேரரசு வடக்கில் காஞ்சி வரையும் தெற்கில் கொங்காணம் வரையும் கிழக்கும் மேற்கும் கடல்களை எல்லைகளாகக் கொண்டு பரவியிருந்தது.

மௌரியருக்குப் பின்னர் தக்காணத்தில் பேரரசை நிறுவியவர்கள் சாதவாகனர்கள் ஆவர். மேலும் ''இந்த சாதவாகனர்களின் நாணயங்கள் தென்னகத்தில் பெண்ணையாற்றின் கரையில் கிடைத்துள்ளமையால், அவர்களின் ஆட்சி தமிழகத்தின் வடபகுதி வரை இருந்தது என்பர்''[56] வே.ச.திருமாவளவன்.

**காலம்**

சாதவாகனர்கள் கி.மு.225 முதல் கி.பி.225 வரை 450 ஆண்டுகள் ஆட்சி புரிந்தனர். சாதவாகன மரபின் முதல் மன்னன் சிமுகன், இறுதி மன்னன் நான்காம் 'புலுமாயி'. இக்காலகட்டத்தில் முப்பதின்மர் ஆட்சி செய்தனர். இம்மன்னர்களில் பதினேழாவது அரசர் ஹாலன். இவர் ஐதராபாத்துக்குத் தென்மேற்கிலிருந்த குந்தள நாட்டை ஆட்சி செய்தவர் ஆவர்.

“கி.பி.மூன்றாம் நூற்றாண்டில் அரசு புரிந்த சாதவாகனா் காலத்தில் அவா்தம் நாடு கிழக்கில் வங்காள விரிகுடா முதற்கொண்டு மேற்கில் அரபிக்கடல் வரை பரவியிருந்தது. முதலில் கிருஷ்ணா நதிக்கரையில் உள்ள ஸ்ரீகாகுளம் பின்னா் தான்யகடகமும் இவா் தம் தலைநகா்களாகத் திகழ்ந்தன.”[57] “இறுதியில் பிரதிஸ்தானம் தலைநகராக இருந்தது. இது கோதாவரியின் வடகரையில் மகாராஷ்டிர மாநிலத்தில் ஔரங்காபாத்தில் உள்ளது. தற்போது இது ‘பைதன்’ என்றும் அழைக்கப்படுகிறது. சாதவாகனா்கள் ஆட்சி செய்த பகுதி தற்பொழுது ஆந்திரப்பிரதேசம், தெலுங்கானா என்னும் இரு மாநிலங்களாக உள்ளது.

**ஹாலன்**

பிராகிருத மொழியைப் பேணிய பெருமன்னா் ஹால சாதவாஹனா் ஆவா். இவரது காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டாகும். “கி.பி.20-24க்கு இடைப்பட்ட நான்காண்டுகள் இவா் ஆட்சி செய்தார்”[58]

சாதவானனைச் சாலிவாஹனன் என்றும் அழைப்பா். அவன் பெயரிலிருந்து ஆண்டுத் தொடக்கம் கணக்கிடப்பட்டு ‘சாலிவாஹன சகாப்தம்’ என்று நம் நாட்டில் வழங்கப்படுவது அம்மன்னனின் பெருமையை உணா்த்தும். சிலப்பதிகாரத்தில் சேரன் செங்குட்டுவனின் நட்பு மன்னா்களாகப் பாராட்டப்பெறும் ‘நூற்றுவா் கன்னா்’ இம்மன்னனின் மரபினா் ஆவா். இவரை ‘சதகா்ணி’ என்றும் அழைப்பா்.[59]

இந்த மன்னா்களுடைய நாணயங்களில் ஒரு பக்கம் பிராகிருத மொழியும் ஒரு பக்கம் தமிழும் அமைந்துள்ளதாகச் சிறந்த தமிழறிஞரும் கல்வெட்டாய்வு நிபுணருமான கம்பன் அடிப்பொடி சா.கணேசன் கூறியுள்ளாா். இந்த மன்னா்கள் காலத்தில் தமிழகமும் தெலுங்கு நாடும் நெருங்கிய பிணைப்புடன் இருந்தமைக்கு மேற்கூறியவை சான்றாகும்.

மேலும் இம்மன்னன் பிராகிருத மொழியைப் பேணி வளா்த்தான், கவிஞா்களைத் தாய்போல் பேணியமையினால் ‘கவிவத்சலன்’ என்று பாராட்டப்பெற்றான். இம்மன்னனின் அவையில் குணாட்டியா் இருந்தார் என்றும் அவரின் பெருங்கதையின் எரிந்தது போக மீதியை இவா் காத்தார் என்றும் செவிவழியான கதையும் கூறப்படுகிறது.[60]

**சிறப்பியல்புகள்**

ஹால மன்னன் பெரும் கொடைவள்ளல். கவிஞர்களை ஆதரித்துப் போற்றியதோடு தானும் கவிஞனாக விளங்கினான். அவனுடைய நாற்பத்து நான்கு கவிதைகளும் காதாசப்தசதி தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. மேலும் அவர் காலத்தில் வழங்கிய பிராகிருதக் கவிதைகளைத் தொகுத்த பெருமையும் இவருக்கு உண்டு. ‘‘நான்கு பிராகிருதக் கவிதைகளைப் பெறுவதற்காக நான்குகோடி தங்க நாணயத்தைத் தந்தான் என்று ஒரு வரலாறும் கூறப்பெறுகிறது.’’[61]

**காலம்**

‘‘ஹாலன் வாழ்ந்த காலம் கி.பி.2-ஆம் நூற்றாண்டு என்பர் சிலர். கி.மு.5-ஆம் நூற்றாண்டு என்பர் சிலர், எனினும் நூலின் அமைப்பு, மொழி முதலியவற்றை நோக்கும் போது இந்நூல் கி.பி.2-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என அறிஞர்கள் கருத்து தெரிவித்துள்ளனர். மேலும் ஹாலனின் அவைக்களப்புலவராக விளங்கிய பாலிதன் மன்னனின் தொகுப்புப்பணிக்கு உதவி புரிந்ததாகவும் சான்றுகள் தெரிவிக்கின்றன.’’[62]

**காதாசப்தசதி**

கி.பி. முதல் நூற்றாண்டில் ஆந்திர நாட்டைச் சார்ந்த சாதவாகன மன்னன் ஹாலனால் தொகுக்கப்பட்ட அகப்பொருள் இலக்கியம் காதாசப்தசதியாகும். இது மிகுந்த சொற்சுவையும் பொருட்சுவையும் நிரம்பிய நூலாகும். ‘‘காதாசப்தசதிக்குப் புகழ்மாலை சூட்டிய பிராகிருதப் புலவர் ஒருவர், காதாசப்தசதியைப் படிக்காதவர்கள் காதலின் இயல்பையும் காமத்தின் நலனையும் பற்றிப் பேசுவது நாணம் தருவதாகும். என்கிறார்’’[63]

காதாசப்தசதியின் பாடல்கள் யதார்த்த பூர்வமான கிராமிய வாழ்வின் நடப்பினை அடித்தளமாகக் கொண்ட கவிதைகளாக, மக்கள் வாழ்வினைப் பிரதிபலிக்கும் சித்திரங்களாக விளங்குகின்றன. ஆகையால் அதில் பிறன்மனைப் பெண்டிரும் தம் காதல் உணர்வால் மற்றொரு காதலனை நேசிக்கும் கவிதைகளைக் காண முடிகின்றது.

அகப்பொருளுக்குரிய திணை, துறை கோட்பாடுகள் இவ்விலக்கியத்தில் இடம்பெறவில்லை. புணர்தல், பிரிதல், இரங்கல் எனும் உரிப்பொருள் மட்டும் காணப்படுகின்றது.

மேலும் இவ்விலக்கியத்தில் முல்லையும் மருத நில வருணனைகள் மிகுதியாக உள்ளன. காதாசப்தசதி உருவாகிய இடம் கோதாவரி நதிக்கரையாகும். ஆகவே கால இடச்சூழலுக்கேற்ப இவ்விலக்கியம்

தோன்றியுள்ளது. ஆந்திர, மகாராட்டிர மாநிலப் பரப்பின் நடுவில் திகழ்ந்த கிராம மக்களது இலக்கியமாக காதாசப்தசதி அமைந்துள்ளதால் இங்கு மருத வருணனைகள் அதிகமாகும். குழந்தைகளை அன்புடன் வளர்த்தல், மகப்பேறு, வயாவிருப்பம், விருந்து புறந்தருதல், திலகமிடல் முதலிய பல செய்திகள் காணப்படுகின்றன. அவற்றோடு உள்ளுறை உவமத்தோடு ஒத்த தொனிப்பொருள் ஒவ்வொரு கவிதையிலும் கூறப்பெற்றுள்ளது,

இந்நூலில் தலைவன், தலைவி, பாங்கன், தோழி, பரத்தை ஆகியோரின் கூற்றுகளோடு, மாமன், மாமி, சிற்றன்னை, சக்களத்தி, போன்ற உறவினர்களின் கூற்றுகளும் காணப்படுகிறது.

மேலும் காதாசப்தசதியின் பாடல்கள் சமயச் சார்பற்ற பாடல்களின் தொகுப்பாக உள்ளது. எனினும் இதில் காணப்படும் சிவபார்வதி வழிபாடு, திருமால், இலக்குமி, கண்ணன் பற்றிய குறிப்புகள் சமய உணர்வு மற்றும் தொன்மம் ஆகியவற்றைப் பிரதிபலிக்கும் வகையில் அமைந்துள்ளது.

காதாசப்தசதி போன்ற தனிப்பாடல்கள் சமஸ்கிருதத்தில் இல்லை. ‘‘காதாசப்தசதி வட்டாரப் பேச்சு மொழிகளில் தோன்றின என்றும் இப்பாடல்களில் நாட்டுப்புறச் சாயல்கள் காணப்படுகின்றன என்றும் விண்டர்நீட்ஸ் கூறுகிறார்.[64]

**தொகுப்பு முறை**

**‘‘கோடிப் பாடலிற் தேடி எழுநூ**
**றணி கொள் காதை அடையத் தொகுத்தான்**
**‘கவிவத் சலனாம்’ ஹால மன்னனே’’ (காதா 1:1-3)**

என்ற பாடல் ஆந்திர நாட்டு மன்னன் ஹாலனால் காதாசப்தசதி தொகுக்கப்பட்டது என்பதைச் சுட்டுகிறது. அதாவது இம்மன்னன் காலத்தில் ஓரிலக்கம் பாடல்கள் கிடைத்தன என்றும் அவற்றுக்குக் காதாகோடி என்று பெயரிருந்தது என்றும் அவற்றுள் மிகவும் சுவையான எழுநூறு பாடல்களை மட்டும் இவர் தொகுத்தார் என்றும் கூறப்படுகிறது.

மேலும் இந்நூலில் நாற்பத்து நான்கு பாடல்கள் இம்மன்னனால் இயற்றப் பெற்றவையாகும். ‘‘ஹர்ஷவர்த்தனின் அவைக்களப் புலவனான பாணன், ஹர்ஷசரிதத்தில் இம்மன்னன் அகப்பாடல்களைத் தொகுப்பித்த செயலை, அரசர்கள் ஒளிமிக்க மணிகளையும் விலைமிகுந்த அணிகலன்களையும் கருவூலகத்தில் விரும்பிச் சேர்த்து வைப்பது போல, சாதவாகன மன்னன் ஆளன் என்றும் அழியாத அகப்பாடல்களைத் தொகுத்து வைத்திருக்கிறான் என்று பாராட்டுகிறார்.’’[65]

அவ்வாறு தொகுக்கும்போது நூறு நூறு பாடல்களாக ஏழுநூறு பாடல்கள் தொகுத்தளிக்கப்பட்டது. ஒவ்வொரு நூறு பாடல்களின் முடிவிலும் பாட்டின் தொகை எண்ணிக்கை ஹாலன் தொகுத்த விபரம் காதாசப்தசதியின் பெருமை இடம்பெற்றுளது.

**பிறபெயர்கள்**

காதாசப்தசதி பிராகிருதத்தில் 'ஸத்தஸஇ' என்றழைக்கப்படும். சமஸ்கிருத மொழியில் காதாசப்தசதி என்று சுட்டப்படும். மேலும் இதற்கு 'காதா கோசா' சப்தசதக, காதாசப்தசதி, சாலிவாகனசப்தி எனப் பல பெயர்களும் உண்டு.

**புலவர்கள்**

'ஹாலனுக்கு முன்பு வாழ்ந்த பெரும்புலவர்கள் 261 பேர். இவர்களில் எழுவர் மகளிர். எழுநூறு பாடல்களில் 348 பாடல்களுக்கு மட்டும் ஆசிரியர் பெயர் குறிக்கப்பட்டுள்ளது.

மு.கு.ஜகந்நாதராஜா மொழிபெயர்த்த காதாசப்தசதி நூலில் 503 பாடல்கள் காணப்படுகின்றது. அதில் ஆண்பாற் புலவர்கள் 285 பேர். பெண்பாற் புலவர்கள் 10 பேர் இடம் பெற்றுள்ளனர்.

**பாடல் அடியால் பெயர்பெற்ற புலவர்கள்**

சங்க அகஇலக்கியத்தில் உள்ளது போல் காதாசப்தசதியிலும் பாடல்களில் பெயர் தெரியாதப் புலவர்களின் பெயர்கள் அப்புலவர்களின் பாடலின் சிறந்த அடி அல்லது உவமையால் பெயர் இட்டு அழைக்கப்பட்டுள்ளது. அந்த வகையில்,

**"பெரும்பசி யுழந்தும் பிடிமுகம் நினைந்து**
**இருங்களிற் றொருத்தல் ஏங்கி நைந்து**
**தாமரைத் தண்டுறு தூமலர்க் கவளம்**
**நீடிய துதிக்கையில் வாட விடுமே" (காதா.309:1-4 )**

என்ற பாடலில் மதகஜத்தைப் (இருங்களிற் ஒருத்தலைப்) பற்றிப் பாடலைப் பாடியதால் இப்புலவர் 'மத்த கஜேந்திரன்' என்றழைக்கப்பட்டார் அதுபோல்

**"கடும்புயல் விரைந்து கழுத்தைப் பிடித்து**
**மலைமுகட் டிருந்து நிலைகெடத் தள்ள**
**கீழ்வீழ்ந் துடலம் கேடுற் றிடுமுகில்**
**உயிர்பிரிந் ததனை ஒத்தது மின்னல்"(காதா.445:1-4 )**

என உயிர் பிரிதலுக்கு மின்னல் உவமையாகக் கூறப்பட்டுள்ளதால் ஜீவ என்ற சொல்லின் அடிப்படையில் இப்புலவர்க்கு ஜீவதேவன் எனப்பெயர் சூட்டப்பட்டுள்ளது.

**பா அமைப்பு**

பொதுவாக யாப்பு என்பது ஒலிநயத்தை உள்ளீடாகக் கொண்டது என்றும் தொடை என்னும் உத்தியாலும் அசை, சீர் போன்ற உறுப்புக்களாலும் ஆக்கப்படும் அமைப்பாகும். ஒவ்வொரு மொழியிலும் பொருள் வேறுபாட்டைத் தரும் ஒலிக்கூறுகள் யாப்பிற்கு அல்லது அசைக்கு அடிப்படையாக அமைகின்றன. அந்த ஒலிக்கூறுகளின் தன்மையை வைத்து யாப்பினை வகைப்படுத்தலாம். ஆனால் காதா என்னும் யாப்பு பிராகிருதத்தில் இருந்து பெறப்பட்டது என்பர். அத்தகைய காதா யாப்பினால் செய்யப்பட்ட பாக்களின் தொகுப்பாக காதாசப்தசதி விளங்குகிறது.

காதா என்னும் யாப்பு வடமொழிக்குரியதாகும். இது முதலடி பன்னிரண்டு மாத்திரையும் இரண்டாம் அடி பதினெட்டு மாத்திரையும் மூன்றாம் அடி பன்னிரண்டு மாத்திரையும் நான்காம் அடி பதினைந்து மாத்திரையும் அமையப் பாடப்படுவதாகும். இதற்கு எதுகை, மோனை நியமங்கள் இல்லை. ‘காதாச்செய்யுள் வடமொழி ஆர்யா விருத்தத்தையும் தெலுங்கு கந்தபத்தியத்தையும் இந்தி தோஹாவையும் தெலுங்கில் உள்ள ‘தீவிபத’யையும் ஒத்துள்ளது என்றும் கூறுவர். மேலும் இந்நூலின் பெயர் யாப்பினால் அமைந்தது என்பதை இவற்றால் அறியலாம்.[66]

**தொகுக்கப்பட்ட காலம்**

காதாசப்தசதி தொகுக்கப்பட்ட காலம் பற்றிக் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி. எட்டாம் நூற்றாண்டு வரையிலான காலகட்டத்தில் இந்நூல் தொகுக்கப்பட்டிருக்கலாம் என்பது பொதுவான கருத்தாகும். “ஹாலனுடைய காலத்திலும் அவன் காலத்திற்கு முன்னரும் தோன்றிய பாடல்களின் தொகுப்பாக காதாசப்தசதி விளங்குவதால் இது ஹாலன் காலமாகிய கி.பி முதல் அல்லது 2-ஆம் நூற்றாண்டில் தொகுக்கப்பட்டிருக்க வாய்ப்பு உள்ளது.”[67]

இவ்வாறு காதாசப்தசதியின் காலம் குறித்துப் பல்வேறு கருத்துக்கள் இருப்பினும் சாதவாகன மன்னன் ஹாலனால் தொகுக்கப்பட்டது என்பது மரபு வழிச் செய்தியாக உள்ளதாலும் சாதவாகனப் பேரரசு கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் முடிவுற்றது என்பதாலும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டிற்குப் பின்னர்

காதாசப்தசதி தோன்றியிருக்க முடியாது என்பதாலும் இந்நூல் ஹாலனுடைய காலத்திலேயே முழுவடிவம் பெற்றுவிட்டது என்பதை அறிய முடிகின்றது.

**உரையாசிரியர்கள்:-**

“காதாசப்தசதிக்கு முதன் முதல் குலபாலதேவன் என்பவர் உரையெழுதினார். அவருக்குப் பின் கங்காதரர், மதுரநாதசாஸ்திரி, பீதாம்பரர், புவன பாலர், சாதாரண தேவர்”[68] எனப் பலர் உரையெழுதியுள்ளனர்.

**பதிப்புகள் மொழிபெயர்ப்பு:-**

காதாசப்தசதி இன்று வழக்கிலுள்ள முன்னணி மொழிகள் பலவற்றிலும் மொழிப்பெயர்க்கப்பட்டுள்ளது. இப்பதிப்பு குறித்து, “ஆல்பிரட் வேபர் என்பவர் செர்மானிய மொழியில் ‘டேஸ்சப்த சதகம்’ டேஸ்ஹால’ என்ற பெயரில், வடமொழி அணியிலக்கண நூல்களில் உரைகாரர்களால் மேற்கோளாகக் காட்டப்பட்ட பாடல்களைக் காதாசப்தசதியின் எழுநூறு பாடல்களோடு சேர்த்து ஆயிரம் பாடல்களாக முதன் முதலில் மொழிபெயர்த்தார். இந்நூலானது 1870, 1881, 1889 என மும்முறை, கங்காதரரின் உரையைப் பின்பற்றி பதிப்பிக்கப்பட்டது.[69]

காதாசப்தசதியின் எழுநூறு பாடல்களும் முதன் முதலில் ஆங்கிலத்தில் இராதா கோவிந்தபாசக் என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டு வெளிவந்தது. இது செர்மானிய மொழிப்பெயர்ப்பு வெளிவந்த 101-வது ஆண்டில் வெளிவந்தது. இவர் வங்காள மொழியிலும் காதாசப்தசதியை மொழிபெயர்த்துள்ளார்.[70]

அரவிந் கிருஷ்ண மெஹ்ரோத்ரா காதாசப்தசதியின் 207-பாடல்களைத் தேர்ந்தெடுத்து ‘The Absent Traveller’ என்ற பெயரில் வெளியிட்டனர்.[71]

இச் செர்மானிய மொழிபெயர்ப்பை அடிப்படையாகக் கொண்டு ஜோகலேகர் என்பவர் மராத்திய மொழியில் காதாசப்தசதியை விளக்க உரையுடன் பதிப்பித்தார்.[72]

பண்டிட்துர்க்க பிராசாத்தும் பண்டிட் பணசீகர் சாஸ்திரியும் காங்காதரப்பட்டரின் உரையுடன் காதாசப்தசதியை வடமொழியில் வெளியிட்டுள்ளனர்.[73]

டாக்டர் ஜகநாதபாடக் இந்தியில் மொழிப்பெயர்த்துள்ளார். அதுபோல ஜகதீஸ்லால் சாஸ்திரி இதன் பல கைப்படிகளை ஆராய்ந்து பஞ்சாப் பல்கலைக்கழக வெளியீடாக இதனை வெளியிட்டுள்ளார்.[74] ஆந்திரர் காதாசப்தசதியைத் தங்கள் இலக்கியச் செல்வமாகக் கருதுகின்றனர்.

திருமலை ராமச்சந்திரர் காதாசப்தசதியின் பாடல்களைத் தெலுங்கில் மொழியாக்கம் செய்துள்ளார். வள்ளத்தோள் ‘கிராம சௌபாக்கியம்’ என்னும்

பெயரில் இதனை மலையாளத்தில் மொழியாக்கம் செய்துள்ளனர். எஸ்.வி.பரமேஸ்வரபட்டர் கன்னடத்தில் இந்நூலை மொழிபெயர்த்துள்ளார்.[75]

த.நா.குமாரசுவாமி காதாசப்தசதியின் சில பாடல்களைத் தமிழில் மொழிபெயர்த்து ‘சாதவாகனம்’ என்னும் தலைப்பில் ‘அமுதசுரபியில்’ வெளியிட்டதை அறியமுடிகிறது[76] இரா.மதிவாணன் காதாசப்தசதியின் 412 பாடல்களை உரைநடை வடிவில், திணை, துறை கோட்பாட்டுடன் ‘ஆந்திரநாட்டு அகநானூறு’ என்ற பெயரில் நூலாக்கி உள்ளார்.[77] மு.கு.ஜகந்நாத ராஜா காதாசப்த சதியின் 503 பாடல்களைத் தமிழாக்கம் செய்து கவிதை வடிவில் வெளியிட்டுள்ளார்.[78] காதாசப்தசதியின் எழுநூறு பாடல்களும் முழுமையான மொழிபெயர்ப்புடன் தமிழில் இதுகாறும் வெளிவரவில்லை 503 பாடல்களே வெளிவந்துள்ளன என்பது சுட்டத்தக்கது.

## தொகுப்புரை

தமிழில் பல்வேறு காலங்களில் வாழ்ந்த பல்வேறு புலவர்களால் பாடப்பட்ட தனிப்பாடல்கள் மன்னர்களின் ஆதரவால் தொகுக்கப்பெற்று சங்க இலக்கியம் எனத் தொகையாக்கம் செய்யப்பெற்றது. இதில் அகநானூறு, குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறுநூறு, கலித்தொகை ஆகிய எட்டுத்தொகை அகநூல்களில் கலித்தொகை கலிப்பாவால் அமைந்தது. மற்றவை ஆசிரிப்பாவால் பாடப்பெற்றுள்ளன.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை போன்ற திணைகளின் அடிப்படையில் தலைவன் தலைவி, பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி ஆகிய அறுவரும் களவில் கூற்று நிகழ்த்துபவர்களாகவும் பாணன், கூத்தர், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் ஆகிய அனைவரும் கற்பில் கூற்று நிகழ்த்துபவராகவும் கொண்டு பாடல்கள் புணையப்பெற்றுள்ளன. மேலும் சங்க அகஇலக்கியங்களில் ஐந்து நூல்களுக்குரிய வரலாறு, அடிவரையறை பற்றிய செய்தி, புலவர்களின் பெயர், பாடல்களின் எண்ணிக்கை, ஆசிரியர் பெயர் காணாப் பாடல்கள், பாடலடியால் பெயர்பெற்ற புலவர்கள் தொகுத்தோன், தொகுப்பித்தோன் பற்றிய குறிப்புகள், நூல்களின் பதிப்பு வரலாறு போன்றன இவ்வியலில் விளக்கப்பட்டுள்ளன.

காதாசப்தசதியில் சாதவாகனர்களின் ஆட்சி மொழியாகத் திகழும் பிராகிருத மொழியின் சிறப்பு, சாதவாகனர்களின் சிறப்பு, அவர்களின் காலம், ஹாலனின் சிறப்பியல்புகள், காதாசப்தசதியின் சிறப்பு, தொகுப்புமுறை, புலவர்களின் பெயர்கள், பாஅமைப்பு, தொகுக்கப்பட்ட காலம், உரையெழுதிய உரையாசிரியர்கள் பதிப்பு மொழிபெயர்ப்பு நூல்களின் குறிப்பு என்பன போன்ற பல்வேறு கூறுகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

மேலும் காதாசப்தசதியில் கதைமாந்தர்களாகத் தலைவன், தலைவி, தோழி, நற்றாய், பாங்கன் மற்றும் சிற்றன்னை மாமி, அத்தை என உறவுமுறை கூற்றுகள் காணப்படுகின்றன. சங்க அகஇலக்கியம் போல் கதைமாந்தர்களின் பெயர்சுட்டா மரபு இந்நூலிலும் இடம்பெற்றுள்ளமை சுட்டத்தக்கது.

## சான்றெண் விளக்கம்

1. சா.நசிமாபானு, இலக்கியத்தென்றல், ப.9
2. இளம்(உரை) தொல்.பொருள்.ப.3
3. நச்(உரை) தொல்.பொருள். ப.16
4. கா.சுப்பிரமணியப்பிள்ளை, பழந்தமிழர் நாகரிகம் அல்லது தொல்காப்பியப் பொருளதிகாரம், ப.31
5. சாமி.சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.7
6. இளம்(உரை) தொல்.பொருள்.அகத்.நூ.947
7. அ.அ.மணவாளன், இலக்கிய ஒப்பாய்வு சங்க இலக்கியம், ப.190
8. மேலது ப.189
9. ந.இராணி,சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.29
10. மேலது ப.29
11. இளம் (உரை) தொல்.பொருள்.அகத்.நூ.999
12. ந.இராணி,சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.30
13. உ.வே,சா.குறுந்தொகை (முகவுரை), பக்.3.4
14. ந.இராணி, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.31
15. மேலது ப.34
16. மேலது ப.18
17. மேலது ப.18
18. மேலது ப.18
19. மேலது ப.19
20. மேலது பக் 19-20
21. மேலது ப.20
22. சோம.இளவரசு,இலக்கிய வரலாறு, ப.35
23. இளம்(உரை), தொல்.பொருள்.நூ.999
24. சாமி.சிதம்பரனார்,எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.109
25. இளம்(உரை), தொல்.பொருள்.அகத்.நூ.490-491
26. இளம்(உரை), தொல்.பொருள்.அகத்.நூ.1000
27. ந.இராணி,சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.87
28. மேலது ப.87
29. மேலது ப.87
30. கு.வெ.பாலசுப்பிரமணியன், நற்றிணை மூலமும் உரையும் ப.1
31. ச.வே.சுப்பிரமணியன், சங்க இலக்கியம் அறிமுகம், ப.14

32. மேலது ப.26
33. மேலது ப.26
34. ந.இராணி,சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், பக் 65-66
35. மேலது ப.67
36. மேலது ப.66
37. மேலது ப.63
38. உ.வே.சா,குறுந்தொகை மூலமும் உரையும் ப.12
39. ந.இராணி,சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், ப.66
40. மேலது ப.128
41. மேலது ப.128
42. மேலது ப.127
43. மேலது ப.128
44. மேலது ப.164
45. மேலது ப.161
46. மேலது ப.161
47. மேலது ப.162
48. மேலது ப.162
49. மேலது ப.162
50. இளம் (உரை),தொல்.பொருள்.அகத்.நூற்.947
51. மேலது ப.163
52. மு.கு.ஜகந்நாதராசா,(மொழி) காதாசப்தசதி, ப.40
53. மு.கு.ஜகந்நாதராசா, இந்திய மொழிகளில் ஒப்பிலக்கியம், ப.26
54. வே.ச.திருமாவளவன், அகநானூறும் காதாசப்தசதியும் ஓர் ஒப்பாய்வு, ப.146
55. மு.கு.ஜகந்நாதராசா, இந்திய மொழிகளில் ஒப்பிலக்கியம், ப.52
56. வே.ச.திருமாவளவன், அகநானூறும் காதாசப்தசதியும் ஓர் ஒப்பாய்வு, ப.47
57. சி.ஆர்.சர்மா,தெலுங்கு இலக்கியப் பலகணி, ப.53
58. வே.ச.திருமாவளவன், அகநானூறும் காதாசப்தசதியும் ஓர் ஒப்பாய்வு, ப.49
59. மு.கு.ஜகந்நாதராசா,இந்திய மொழிகளில் ஒப்பிலக்கியம்,ப.54
60. மேலது.ப.54
61. மு.கு.ஜகந்நாதராசா, (மொழி)காதாசப்தசதி, ப.20
62. மேலது ப.31
63. வே.ச.திருமாவளவன், அகநானூறும் காதாசப்தசதியும் ஓர் ஒப்பாய்வு, ப.54

64. அ.அ.மணவாளன், இலக்கிய ஒப்பாய்வுகள், ப.18
65. வே.ச.திருமாவளவன், அகநானூறும் காதாசப்தசதியும் ஓர் ஒப்பாய்வு, ப.52
66. அ.அ.மணவாளன், இலக்கிய ஒப்பாய்வுகள், ப.20
67. மு.கு.ஜகந்நாதராசா, (மொழி) காதாசப்தசதி, ப.23
68. வே.ச.திருமாவளவன், அகநானூறும் காதாசப்தசதியும் ஓர் ஒப்பாய்வு, ப.54
69. இரா.மதிவாணன், ஆந்திரநாட்டு அகநானூறு, ப.3
70. மு.கு.ஜகந்நாதராசா, (மொழி) காதாசப்தசதி, ப.17
71. மேலது.ப.17
72. வே.ச.திருமாவளவன், அகநானூறும் காதாசப்தசதியும் ஓர் ஒப்பாய்வு, பக்.54-55
73. வே.ச.திருமாவளவன், அகநானூறும் காதாசப்தசதியும் ஓர் ஒப்பாய்வு, ப.55
74. மு.கு.ஜகந்நாதராசா, (மொழி) காதாசப்தசதி, பக்.19-20
75. மேலது ப.18
76. மேலது ப.18
77. மேலது பக் 19-20
78. மேலது ப.20

## இயல் - 2

## முதற்பொருள் ஒப்பீடு

பண்டைத் தமிழர் பண்பட்ட வளமார்ந்த வாழ்வைப் பெற்றிருந்தனர். அவ்வளமார்ந்த வாழ்வில் வளங்கொழித்த சிறந்த இலக்கியமாக சங்க இலக்கியம் விளங்குகின்றது. சங்க இலக்கியங்களில் திணைக்குரிய பொருளான முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியன அமைதல் வேண்டும். திணை, துறை ஆகியன நேரடியாகவோ, குறிப்பாகவோ உணரக்கூடிய முறையில் பாடல் புனைய வேண்டும் என்பது கோட்பாடாகும். அவ்வாறு புனையப்படும் போது மேற்சொன்ன முப்பொருள்களில் ஒன்றோ, பலவோ அப்பாடலில் அமைந்து திணையை உணர்த்தும். அவ்வகையில் எட்டுத்தொகை இலக்கியம், காதாசப்தசதி ஆகியவற்றில் காணலாகும் முதற்பொருள் குறித்துக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

### முப்பொருள் மரபு

பண்டைத் தமிழருடைய இலக்கிய மரபுகளையும் கோட்பாடுகளையும் அறிந்து, திணை உணர்ந்து தெளிவதற்கு முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியன இடம்பெற வேண்டுமென்பதைத் தொல்காப்பியர்,

**“முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே**
**நுவலுங் காலை முறைசிறந்தனவே**
**பாடலுள் பயின்றவை நாடுங்காலை”**[1]

என்றுரைப்பர். “ஓர் அகப்பாடலில் மூன்று பொருளும் வந்திருந்தால் நில அடிப்படையில் திணை பகுக்க வேண்டும். கருவும் உரியும் வந்திருந்தால் கருப்பொருள் அடிப்படையில் திணை சொல்ல வேண்டும். உரி மட்டும் வந்திருந்தால் அதன்படி திணை குறிக்க வேண்டும்”[2] என இளம்பூரணர் அகப்பாடலை இன்ன திணை எனக் கண்டு கொள்ள வழிகாட்டுகிறார்.

### நிலம்

மனித ஒழுகலாறுகள் நிகழ்வதற்கு நிலமும் காலமும் இன்றியமையாத ஒன்றாகும். இதனை முதற்பொருள் என்பர். இதனை,

**“முதல் எனப்படுவது நிலம்பொழுதி ரண்டின்**
**இயல்பென மொழிப இயல்புணர்ந்தோரே”**[3]

என்னும் நூற்பா சுட்டும்.

**குறிஞ்சி நிலப்புனைவு**

மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி நிலமாகும். வானுயர்ந்த மலையும் ஓங்கி வளர்ந்த மரங்களும் சருச்சரைமிக்க பாறைகளும் செடிகொடிகள் நெருங்கி வளர்ந்த சோலைகளும் சுனைகளும் அருவிகளும் கொண்ட நில அமைப்பை உடையது குறிஞ்சி நிலம். குறிஞ்சித்திணை குறித்து நற்றிணை (131 பாடல்) குறுந்தொகை (147 பாடல்கள்) ஐங்குறுநூறு (100 பாடல்கள்) அகநானூறு (80 பாடல்கள்) கலித்தொகை (29 பாடல்கள்) ஆகிய நூல்களில் மொத்தம் நானூற்று எண்பத்தேழு பாடல்கள் காணப்படுகின்றன.

இப்பாடல்களில் குறிஞ்சிநிலம், குன்று, குன்றம், அடுக்கம், வரை, விடரகம், விடர்அளை, மலை, கவாஅன், சிலம்பு, பெருவரைச்சிறுநெறி, நெடுங்கோடு, விடர்முகை, துடவை, வெற்பில், சோலைநாடு, துறுக்கல், பிறங்கல், இறும்பு, சிறுகுடி, பெருங்கல்வேலி, சிமையம் எனப் பல பெயர்களால் சுட்டப்பெற்றுள்ளது.

**குன்று**

குறிஞ்சி நிலத்திற்குரிய குன்று என்ற சொல் ஐந்து[4] இடங்களில் காணப்படுகின்றது. தலைவன் குன்றின் மேல் மழைமுகில் சூழ்ந்திருத்தலைக் காட்டி இனி நாம் தினைப்புனம் காக்கச் செல்லுதல் உறுதி என்றுரைத்ததை,

**“மழை தலை வைத்து அவர் மணிநெடுங்குன்றே” (ஐங்.207:4)**

என்னும் அடி விளக்குகிறது. அதுபோல் தலைவனை நினைத்தலின் அவன் மலையும் அம்மலையைக் காண்டலின் அவனும் தலைவி மனத்தில் தோன்றித் தோன்றி அலைக்கழிக்கும் பொழுது சிறிது போதும் அவனை மறத்திருத்தல் தனக்குக் கூடாதது எனத் தலைவி தன் இயலாமையைப் புலப்படுத்தும் பாங்கினைக் (ஐங்.209:3-4) கபிலர் குறிப்பிடுகிறார்.

**குன்றம்**

குன்றம் என்ற மலையைக் குறிக்கும் சொல் இருபத்தெட்டு[5] இடங்களில் காணப்படுகிறது. விண்ணிலுயர்ந்த குன்றங்களைச் சூழ்ந்து கடுமையான மழைத்துளிகளைப் பெய்து (நற்.347:4-5) அம்மழையால் குன்றத்திலிருந்து கரிய கடலின் அலைபோல் அருவி இறங்கும் (நற்.17:1-2). அத்தகைய குன்றத்தின் உச்சியில் நெருங்குதற்கரிய மிகுதியான இருள் வருவார் வழி தெரியாது தடுமாறுமாறு செறிந்திருக்கும் (அகநா.138:15-16). ஆறலைகள்வராகிய கொடியோரும் நிறைந்திருப்பர் (அகநா.288:9).

இவ்வாறு குன்றங்களை வேலியாக உடைய சிறிய ஊரிடத்தே, வேங்கை மரங்கள் மணநாளை அறிவிப்பது போல் பூத்து நிற்பது (அகநா.232:6-7)

தலைவிக்கு ஆற்றாமை மிகும்போது தலைவன் குன்றம் கண்டு சிறிது தணித்துக் கொள்வது (நற்.222:10) போன்றவை குன்றத்தின் சிறப்பினை விளக்குவனவாகும்.

**வரை**

வரை என்பது மலையைக் குறிக்கும். இச்சொல் அகஇலக்கியங்களில் அறுபத்திரண்டு[6] இடங்களில் சுட்டப்பெற்றுளது.

வேலன் வெறியாடும் பெரிய களத்தினைப் போன்று காட்சி தரும் பெரிய மலையின், (அகநா.182:16-18) உச்சி அதிருமாறு மேகமானது வாள்போல் ஒளிமயமாக மின்னி, இடியுடன் மழைத்துளிகளைச் சிதறும் (அகநா.218:3-5). இதனால் மலையினின்று ஓடிவரும் அருவியின் ஒலியுடன் வண்டின் ஒலி சேர்ந்து, முழவின் ஒலியுடன் யாழ்ஒலி சேர்ந்து ஒலிப்பது போல் இம்மென்று ஒலிக்கும் (அகநா.318:5-6). இவ்விடம் தினையின் கதிரெல்லாம் பெரிய பிடி யானையின் துதிக்கையைப் போல வளைந்து தோன்றுதல் (நற்.344:1-3) கொடிச்சி தன் தந்தையின் மலையைப் பாடிக்கொண்டே ஐவனமாகிய வெண்ணெல்லைக் குத்துதல் (நற்.373:3-4) போன்றவை காணப்படுகிறது.

மேலும் வருடைமானின் குட்டி தன் தாயின் மடிபொழிந்த இனிய பாலை, வயிறு நிறையக் குடித்து பெரிய மலைப்பக்கத்தில் உள்ள நிழலில் துள்ளி விளையாடுதல் (குறுந்.187:1-3) கணவன் இல்லாமல் வருந்தும் கைம்மை வாழ்வினைப் பெறாத பெண் குரங்கு தன் குட்டியைச் சுற்றத்தாரிடம் அடைக்கலப்படுத்தி ஓங்கிய வரைகளையுடைய மலைப்பக்கத்தில் உச்சியினின்று கீழே வீழ்ந்து உயிரை மாய்த்துக் கொள்ளுதல் (குறுந்.69:1-4) அக்குன்றத்தின் கண் வாழும் குறவன் சந்தனமரத்தை வெட்டிச் சுடுதலால் எழும் நறும்புகை தேன்மணம் கமழும் பக்கமலைகளைக் கொண்ட மலைச்சாரல் முழுவதும் பரவி மணத்தல் (ஐங்.253:1-2) அவ்விடம் வருகின்ற யானையின் காலடி ஓசையைக் கேட்டு கானவன், மலையிடத்தே அமைந்திருந்த பரண் மீது ஏறி கடிய வேகம் கொண்ட கவணையில் சிறிய கல்லை வைத்து எறிதல் (அகநா.292:9-12) போன்றவையும் அத்தகைய மலைப்பக்கத்தே கொடிச்சியானவள் குறிஞ்சிப் பாடலைப் பாடிய வண்ணம் நிற்றல் (அகநா.102:5-6) வரைப்பகுதி முழுவதும் அச்சம் தரும் சிறுபுதர்களையும் ஆறலைக் கள்வராகிய கொடியோரையும் கொண்டது (அகநா.288:9-11) என்று குறிக்கப்பெறுகிறது.

**அடுக்கம்**

அடுக்கம் என்பது மலைப்பக்கம் ஆகும். இவ்வடுக்கம் குறித்து முப்பத்து மூன்று[7] இடங்களில் காணப்படுகிறது.

பெரிய மலையின் பக்கங்கள் எல்லாம் பொலிவு பெற அருவி விழுதல் (நற்.34:4-5) மூங்கில்கள் அடர்ந்து காணப்படுதல் (ஐங்.220:2) வேங்கை மரமும் (நற்.112:2-3) காந்தள் மலரும் (கலித்.59:3) செறிந்துள்ள பக்கமலையில் மயில்கள் உலவி ஆடுகின்ற காட்சி, ஆடுகளத்தில் புகுந்தாடும் விறலி போலத் தோற்றம் தருதல் (அகநா.82:9-10) பக்க மலையில் தமையன்மார்கள் உழுத தினைப் புனத்தின் தினைக்கதிர்களைப் பன்றி முதலிய விலங்குகள் தீண்டாத வண்ணம் கொடிச்சி காத்தல் (நற்.22:1-2)

மேலும் பலாப்பழத்தின் சுளைகளையிட்டுத் தேன் கலந்து கூட்டியாக்கிய கள்ளினை நீண்ட மூங்கில் குழாயுள் ஊற்றி அடைத்து, நாட்பட்டு முதிர்ந்தமையால் கடிய வேகங்கொண்ட பாம்பினது சீற்றத்தை ஒத்த வெறியுடைய அந்தக்கள்ளை முதலில் ஓங்கி உயர்ந்த உச்சியையுடைய தெய்வம் வாழும் மலைக்குப் படைத்துப் பின்னர் தளிரால், ஆய தழையாடையை அணிந்த மகளிர் உண்பித்து, அதன்பின் புனங்காக்கும் குறவர்கள் வயிராற உண்டு மயங்குதல் (அகநா.348:1-10) போன்றவை மலைப் பக்கத்தின் சிறப்பினை எடுத்துரைப்பதாகும்.

**விடரகம், விடர்அளை**

விடகரம், விடர்அளை என்பது குறிஞ்சிக்குரிய மலைப்பிளவுகளைக் குறிக்கும். இது மலைமுழைஞ்சு என்றும் அழைக்கப்படும். இவை குறித்து பதினான்கு[8] இடங்களில் குறிப்புளது.

உயர்ந்த மலைச்சிகரம் பொருந்திய மலையின் பிளவுகள் எதிரொலிக்குமாறு கரிய புலி களிற்று யானையைக் கொன்று முழங்கும். இந்தப் பெரிய முழக்கத்தைக் கேட்டு இது மேகத்தின் முழக்கமோ என்று எண்ணிக் காய வைத்த சிவந்த தினையை விரைவில் கூட்டிக்குவித்தலை,

> **“...................................... உயர் வரைப்**
> **பெருங் கல் விடரகம் சிலம்ப, இரும் புலி**
> **களிறு தொலைத்து உரறும் கடி இடி மழை செத்து**
> **செந் தினை உணங்கல் தொகுக்கும்” (நற்.344:8-11)**

என்னும் பாடல் சுட்டும். அதுபோல் சுரபுன்னையோடு வாழை ஓங்கி வளர்ந்துள்ள தாழ்ந்த இடத்தையுடைய நீர் வற்றாத குழியில் அகப்பட்டுக் கொண்ட களிற்று யானையின் வருத்தம் நீங்க அதன் பெண் யானை அக்களிறு ஏறுவதற்கு ஏற்ற படியாகப் பெரிய மரத்தினை முறித்துப் போட்டது. அப்போது எழுந்த மரம் முறிபடும் பேரொலி விண்ணைத் தழுவி நிற்கும். மலைக் குகைகளில் சென்று எதிரொலித்தலும் (அகநா.8:9-12) சிவபெருமான் உமையம்மையோடு இருந்த

கயிலை மலையை இராவணன் எடுக்க முயன்று முடியாமல் கதறியது போல, மதயானை வேங்கை மரத்தைப் புலியெனத் தவறாக நினைத்து தன் கோட்டாற் குத்தி அதனை எடுக்கமாட்டாது பெரிய முழைஞ்சிடம் எல்லாம் எதிரொலிக்கும்படி கூப்பிடுதலும் (கலித்.38:7-8) மலைப்பிளவில் எதிரொலிக்கும் போன்றவை பாடல்களில் சிறப்புறப் பயின்றுள்ளது.

**மலை**

மலை பற்றிய புனைவு நாற்பத்தி நான்கு[9] இடங்களில் காணப்படுகிறது. தன் பழைய பகையான வீரன் படைத்த பெரிய புலியைக் கொன்ற முறம் போலும் காதுகளைக் கொண்ட காட்டுயானை, தன் முன்னர்க் கிடந்த இலையாகிய உணவைத் தின்றது. பின் ஒலிக்கின்ற வெள்ளிய அருவி நீரைப்பருகி அயர்ந்து வளம் நிறைந்து விளங்கும் கரிய சோலையிடத்தே உறங்கியது. அத்தகைய வளம் பொருந்திய மலைநாடு (கலித்.42:1-4) குறவர் மலைச்சாரலில் அகலமாகவும் வளையவும் அமைத்தும் மழை பெய்யப் பதமானதுமான கொல்லையாகிய காட்டினை உழுவர். அக்காட்டில் விதைகளைப் பரவலாக விதைக்கவும் அவை ஒரு சேரப் பலவாக விளைந்து, தலை சாய்ந்து விளங்கும் கதிர்களை உடையதாய்ச் செழித்து நிற்கும் (நற்.209:1-3) அத்தகைய தினைக்கதிரைக் கொய்ய வரும் பறவைகளை வேங்கை மரத்தின் கவையிடத்தே கட்டிய பரணிடத்தே அமர்ந்து மூங்கிலால் ஆன தட்டை என்னும் கருவிக் கொண்டு விரட்டுவர் (நற்.388:1-6) மரல் நாரினாலே பின்னிய உடையினை மலையில் வாழும் குறவர் (நற்.64:4) அணிந்திருப்பர். மேகங்கள் மழை பெய்த பின்னர் தேனடை தொங்குகின்ற உயர்ந்த மலைகளில் அருவி ஆரவாரிக்கும். அவ்விடம் வேங்கை மரங்கள் செழித்து மலை அழகுறுமாறு மலர்கள் மலரும் (நற்.396:1-3) கானவன் மலைத் தெய்வத்தின் வீறு தணியுமாகலின் மலையை மழைவந்து சூழ்வதாக என்று மலை மேலதாகிய கடவுளை வழிபடும் பொருட்டுத் தன் சுற்றத்தோடு விரும்பி எழுந்து மலைக்குப் பலியை இட்டு நீர் வளாவுதலை மேற்கொள்ளுதல் (நற்.165:2-4) போன்றவை மலையின் சிறப்பைக் காட்டுகிறது. அதுபோல் நடுயாமத்தில் யானையின் காலடியோசையைக் கேட்ட கானவன் பரண்மீதேறி எறிந்த கவண்கல் வேங்கைப் பூக்களைச் சிதறி ஆசினிப்பழத்தை உதிர்த்துத் தேனிறாலை உருவி மாவின் பைந்துணர்களை உழக்கி வாழை மடலைக் கிழித்துப் பலவின் பழத்துள் தங்கும் (கலித்.45:5-17) என்னும் வருணனை மலைவளத்தின் செழுமையைக் காட்டும்.

**கவாஅன்**

கவாஅன் என்பது மலைப்பக்கத்தைக் குறிக்கும். இது எட்டு[10] இடங்களில் குறிப்பிடப்பெற்றுள்ளது. குளிர்ச்சி மிக்க மலையினது உயர்ந்த வளம் பொருந்தியது பக்க மலை (அகநா.98:1) அவ்விடம் மூங்கில்கள் ஒலிக்கும் தெய்வங்களையுடையது (அகநா.72:11) வானுயற உயர்ந்த பெரியமலைப் பக்கத்தில் மிக்க இடியுடன் மேகம் மழை பெய்யத் தொடங்கியதால், நள்ளிரவில் காட்டு வழியே பெருகி ஓடும் ஆற்றிலே மரங்களிலிருந்து உதிர்ந்த சருகுகளும் பூக்களும் அடித்துக் கொண்டு வரப்பெறும் (அகநா.53:4-7). மேலும் ஒலிக்கும் வெண்ணிற அருவிகள் விளங்கும் பக்க மலையில் தேன்மணம் கமழுகின்ற கொத்துக்களையுடைய வேங்கைப் பூக்களைச் சூடி, தொண்டகப்பறையின் தாளத்திற்கு ஏற்ப சிறுகுடிப்பாக்கத்தில் உள்ள ஆடவர் பெண்களுடன் கலந்து தெருக்களில் கூத்தாடுதலை,

**"கறங்குவெள் அருவி பிறங்குமலைக் கவாஅன்,**
**தேம் கமழ் இரை வேங்கை சூடி**
**தொண்டகப் பறைச்சூர் பெண்டிரொடு விரைஇ,**
**மறுகில் தூங்கும் சிறுகுடிப்பாக்கத்து" (அகநா.118:1-4)**

என்னும் பாடல் சுட்டும். இவை அனைத்தும் பக்க மலையின் சிறப்பினை விளக்குவனவாகும்.

**சிலம்பு அல்லது வெற்பு**

சிலம்பு (அ) வெற்பு என்பதும் மலையைக் குறிக்கும் சொல்லாகும். சிலம்பு முப்பத்தேழு இடங்களிலும் வெற்பு மூவிடங்களிலும்[11] காணப்படுகிறது.

மழைபெய்து குளிர்ச்சி நிறைந்த பக்கமலை முழுவதும் மணம் வீசுகின்ற காந்தள் மலரின் மணம் கமழும் தேனை நாடி ஊதுகின்ற, குறுகிய சிறகினை உடைய, தும்பி என்னும் ஒருவகை வண்டு அதனின்று வெளிப்படும் போது பாம்பினால் உமிழப்பட்ட மாணிக்க மணிபோலத் தோன்றுதல் (குறுந்.239:3-5) வாழையும் சுரபுன்னையும் செறிந்திருந்தல் (நற்.222:7) அழகிய கோடுகளையும் அகன்ற வாயினையும் உடைய புலியினது ஏறு, இடமகன்ற மலைப்பகுதியில் களிறொடு மாறுபட்டுப் போர் புரிதல் (நற்.104:1-2) மலைச்சாரலிடத்திலே வாழுகின்ற கிளிகள் அனைத்தும் தம் இனத்தோடு ஒன்று கூடி மணம் நிரம்பிய மெல்லிய தினையின் கதிரைக் கொள்ளையிட்டுத் தின்னும் அவை காற்றினால் ஓசை எழுப்பக் கூடிய கொம்பு வாத்தியம் போல ஒன்றை ஒன்று அழைத்துக் கொள்ளுதலும் (நற்.304:3-4) உண்டு. அத்தகைய கிளிகளை ஓட்டும் குறமகளிர் தம் கையால் புடைக்கும் குளிர் என்னும் கருவி ஒலித்த வழி அவ்வொலி பக்க

மலைகளில் பட்டு எதிரொலிக்கும் (குறுந்.360:5-7). குன்றத்தின்கண் வாழும் குறவன் சந்தனமரத்தை வெட்டிச் சுடுதலால் எழும் நறும்புகை தேன் மணம் கமழும் பக்க மலைகளைக் கொண்ட மலைச்சாரல் முழுவதும் பரவி மணத்தலும் (ஐங்.253:1-2) புள்ளிகளைக் கொண்ட முகத்தினையுடைய யானை வேங்கைப் பூக்களின் தோற்றத்தைப் புலியெனக் கருதி அஞ்சி படிந்த மலைப்பக்கத்தில் மூங்கில்கள் முறிந்து விழும்படி பெயர்ந்து ஓடுதலும் (அகநா.12:1-2) உண்டு. அருவிகளோடு அழகுடன் விளங்கும் பக்கமலையின் மலைஅடுக்குகள் தன்முன் கூறுவனவற்றை அப்படியே கூறும் இயல்பினது எனப் பல சிறப்பியல்பு நிறைந்ததாக வெற்பு சுட்டப்பெறுகிறது. (கலித்.46:25-26)

**பெருவரைச்சிறுநெறி கல்அடர்ச் சிறுநெறி**

மலையில் அமைந்த சிறிய வழி பெருவரைச்சிறுநெறி (நற்.261:9-10) என்றும் கடக்க விரும்புவோர் அஞ்சும் கற்செறிவையும் வாள்முனையில் நடப்பதைப் போன்று துன்பம் தரும் கூர்ங்கற்களை உடையது; கல் சுடர்ச் சிறுநெறி (அகநா.72:17) என்றும் மலைப் பாதையின் இயல்பு பாடப்பெற்றுள்ளது.

**நெடுங்கோடு**

அச்சம் தரும் நெடிய மலைப்பக்கம் நெடுங்கோடு என்று அழைக்கப்பட்டுள்ளது. (நற்.288:1)

**விடர்முகை**

இது மலைப்பிளவு அல்லது முழைஞ்சு விடர்முகை என்றுரைக்கப்பட்டுள்ளது.

**“..............................விடர் முகை**

**ஈன் பிணவு ஒடுக்கிய இருங் கேழ் வயப் புலி” (நற்.332:5-6)**

என்பதில் துறுகலை அடுத்த மலைப்பிளவில் பெண்புலி குட்டிகளை ஈனும் செய்தியும் பிளவுகளையும் முழைஞ்சுகளையும் உடைய மலைப்பகுதி முழுவதும் காந்தள் மலர் மணம் கமழுதலும் (குறுந்.239:2-3) புலவர்களால் பாடப்பெற்றுள்ளது.

**கானம்**

கானம் என்பது காட்டைக் குறிக்கும் சொல்லாகும். இது அகஇலக்கியத்தில் ஒன்பது[12] இடங்களில் காணப்படுகிறது. நீலமணியை ஒத்த மலைகளிடையே உள்ள இளமயில்கள் ஆடி மகிழும் வள்ளிக் கொடிகள் படர்ந்த விரிந்த காட்டில் (ஐங்.250:2-3) களிறு தன் இனத்தோடு சூழ்ந்து திரியும். அதுமட்டுமின்றி, மேகக் கூட்டம் கல்லென்னும் ஒலியுடன் மழையைப் பொழிந்தது. காட்டிலுள்ள உயிரினங்கள் யாவும் ஒடுங்கிக் கிடக்கின்ற நள்ளிரவின்கண்,

தினைப்பயிரை மேய்கின்ற யானைக் கூட்டம் அஞ்சி நிலைகெட்டு ஓடும்படி மலையிடத்தே உயர்ந்த பரணிலிருந்து குறவன் கவண் கல்லை வீசி எறிதல் (அகநா.392:1-3) எனக் கானம் புகழ்ந்துரைக்கப்படுகின்றது.

**இறும்பின்**

இறும்பின் என்பது குறுங்காட்டைக் (அகநா.92:8-9,238:1) குறிக்கும். அதாவது மரம் ஏறும் தொழிலில் சிறந்த மந்திகளும் மரங்களின் நீட்டத்தால் ஏறியறியாத மரங்கள் நெருங்கியது குறுங்காடு என அகநானூறு சுட்டுகின்றது

**துடவை**

துடவை என்பது தோட்டத்தைக் குறிக்கும். இதனை,

> **“புனவன் துடவைப் பொன்போல் சிறுதினைக்**
> **கடிஉண் கடவுட்டு இட்ட செழுங்குரல்**
> **அறியாது உண்ட மஞ்ஞை ஆடுமகள்**
> **வெறிஉறு வனப்பின் வெய்துற்று நடுங்கும்” (குறுந்.105:1-4)**

என்ற பாடல் சுட்டும்.

**துறுக்கல்**

துறுக்கல் என்பது குண்டுக்கல்[13] அல்லது சிறுகுன்று எனவும் உருண்டைக்கல் (அகநா.8:13-14) எனவும் பொருள்படும்.

குறவர் தம் முற்றத்திடத்தே விலங்குகள் உராய்ந்து தம் உடற்றினவைப் போக்கிக் கொள்ள உதவுமாறு கிடக்கும் கல் குண்டுக்கல் (ஐங்.277:1) எனப்படும். அவ்விடம் சிறிய கண்களையும் கடுஞ்சினத்தையும் உடைய ஆண்பன்றி வில்லையேந்திப் புனம் காக்கும் மலைவாழ்நரை ஏமாற்றி அவர்கள் விளைவிக்கும் மலைநெல்லைக் கவரும் (ஐங்.267:1-2) என துறுக்கலின் சிறப்பு சுட்டப்பெற்றுள்ளது.

**சிமையம், அழுவம், பெருங்கல் வேலி, பிறங்கல்**

சிமையம் என்பது மலையுச்சியையும் (குறுந்.372:3) அழுவம் என்பது மூங்கில் செறிந்த காட்டையும் (அகநா.318:4) பெருங்கல் வேலி என்பது பெரிய மலையை வேலியாக கொண்ட இடத்தையும் (அகநா.132:9-14) பிறங்கல் என்பது மலை முழைஞ்சுகளையும் (அகநா.373:3-4) குறிக்கும்.

**கல்முகை**

கல்முகை என்பது மலைக்குகை (அகநா.172:3-4) எனப்படும். யானை முழங்குவதற்கு இடனான பக்கமலையில் மூங்கில் நெருக்கமாக உயர்ந்து வளர்ந்துள்ள மலைச் சாரலில், தேனொடு கலந்து விளங்குகின்ற வெண்ணிற அருவி இன்னொலி எழுப்பும் வாத்தியத்தைப் போன்று, ‘‘இம்’’ என்ற ஓசையுடன்

மலைக்குகைகளும் மலைப்பிளவிடங்களும் எதிரொலிக்குமாறு வந்து விழும் இடம் கல்முகையாகும்.

மேலும் மருதத்திற்குரிய செறு (ஐங்.269:2) பாலைக்குரிய பாலை (ஐங்.213:2) முல்லைக்குரிய காடு (ஐங்.82:5) புனம்[14] நெய்தலுக்குரிய சிறுகுடிப்பாக்கம் (அகநா.118:1-6) போன்ற சொற்களும் குறிஞ்சித் திணைப் பாடல்களில் காணப்படுகின்றது.

**முல்லை நிலப்புனைவு**

காடும் காடு சார்ந்த இடமும் முல்லை நிலமாகும். இது மலைப்பகுதியை ஒட்டி அமைந்திருக்கும். மலையை விட்டு நீங்கியதும் மரஞ்செடி கொடிகள் நிறைந்ததுமான காடுகளைக் கொண்ட நிலப்பகுதியே முல்லை நிலம் எனப்படும். முல்லைத்திணை குறித்து நற்றிணை(30பாடல்கள்) குறுந்தொகை(45பாடல்கள்) ஐங்குறுநூறு(100பாடல்கள்) அகநானூறு(40பாடல்கள்) கலித்தொகை(17பாடல்கள்) ஆகிய நூல்களில் மொத்தம் இருநூற்று முப்பத்திரண்டு பாடல்கள் காணப்படுகின்றன.

இப்பாடல்களில் முல்லைநிலம் புறவு, வன்புலக்காடு முதையல் (அ) பழங்கொல்லை, கானம் (அ) காடு, குறும்புனம், குறும்பொறை, களரி, இறும்பு, புலம் (தண்புலம், புன்புலம், வியன்புலம், மென்புலம்) செந்நிலம், செஞ்சுவல், பூவல், முல்லை, தண்பொழில், பட்டங்கால், திணைக்கால் எனப் பல பெயர்களால் சுட்டப்பெற்றுள்ளது.

**புறவு**

அக இலக்கியங்களில் முல்லை நிலமாகிய ‘புறவு’ நாற்பத்தி ஒன்பது[15] பாடல்களில் இடம் பெற்றுள்ளது. இப்புறவின் தன்மைகள், செந்நிலம் கொண்ட காடாகத் திகழ்தல் (நற்.321:1) ஆண்மான் தன் பிணைமானைத் தழுவித் திரிதல் (நற்.69:3-4) மரல் வித்துக்கள் உதிர்ந்து கிடத்தல் (நற்.121:3-5) புறவில் மிகுதியான மழை பொழிந்தமையால் நறுமணம் கமழ்ந்திருத்தல் (நற்.361:1-4) அவ்விடத்தில் நீலமணியால் செய்தது போன்ற கரிய நிறமுடைய காக்கணங்கொடியும் காந்தளும் பொற்காசினைத் தொங்க விட்டாற் போன்ற சரக் கொன்றையும் பூத்து கிளைகள் தோறும் தொங்குதல் (நற்.221:1-4) முல்லையும் (நற்.59:9) வேங்கை மரமும் (நற்.161:3) வளர்ந்திருத்தல் மலர்கள் மலர்ந்துள்ள முல்லை நிலத்தில் வண்டுகள் தேனுண்பதற்காக அம்மலர்களைச் சுற்றி வருதல் (குறுந்.220:5) வண்டுகள் அரும்புகளை மலரச் செய்யும் குளிர்ச்சி பொருந்திய மணம் கமழும் முல்லை நிலம் குளிர்ந்த மழை பெய்தமையால் யாண்டும் பசுமையுடன் காணப்படுதல் (அகநா.74:8) காயாவும் கொன்றையும்

நெய்தலும் முல்லையும் செம்முல்லையும் பிடவமும் மலா்ந்து புறவம் அழகுறக் காட்சியளித்தல் (ஐங்.412:1-3) புனைந்துரைக்கப்பெற்றுள்ளது.

**வன்புலக்காடு**

பண்டைத் தமிழா் ஐந்திணைகளுள் மருதத்தையும் நெய்தலையும் மென்புலமென்றும் குறிஞ்சியையும் முல்லையையும் வன்புலமென்றும் வகுத்திருந்தனா் அத்தகைய வன்புலக்காடு குறித்து நற்றிணை அகநானூறு ஆகிய இருநூல்களில்[16] செய்தி இடம் பெற்றுள்ளது.

தலைவி வாழும் ஊா் காட்டின் உள்ளமைந்த வன்புலத்ததாகிய காடு சூழ்ந்த நாட்டின் கண்ணதாய் விளங்கியதை,

**"பல் வேறு பண்டத் தொடை மறந்து, இல்லத்து**
**இரு மடைக் கள்ளின் இன் களி செருக்கும்**
**வன் புலக் காட்டு நாட்டதுவே" (நற்.59:4-6)**

என்னும் பாடல் விளக்கும். மேலும் "சிறிய கண்களையுடைய பன்றியின் பெருங்கூட்டத்தை ஓட்டுவதற்கு முற்றிய தினைப்புனத்தைக் காவல் செய்வார் அனைவரும் காலத்தை எண்ணியிருந்து பெரிய ஊது கொம்பினை ஊதி ஒலி எழுப்புவா். இவ்வோசை ஒருசேர வந்தொலிக்கும் வலிய நிலமாகிய நாட்டின் உள்ளே உள்ளது தலைவியின் ஊா்" என அகநானூறு (94:9-12) விளக்கும்.

**முதையல் அல்லது பழங்கொல்லை**

முல்லையிலுள்ள விளைநிலங்கள் கொல்லை அல்லது முதையல்[17] என்றழைக்கப்படும். விதை விதைக்கும் ஆயா் பலமுறை உழுது பண்பட்ட பழங்கொல்லையில் வரகினை விதைத்ததை,

**"விதையா் கொன்ற முதையல் பூழி,**
**இடு முறை நிரப்பிய ஈா் இலை வரகின்" (நற்.121:1-2)**

என்னும் அடிகள் விளக்கும்.

**கானம், காடு**

முல்லை நிலமாகிய காட்டினைக் குறிக்கும் கானம் என்ற சொல் பதினெழு இடங்களிலும் காடு என்ற சொல் ஐந்து[18] இடங்களிலும் காணப்படுகிறது.

கோடை வறட்சியால் பட்டுப்போன மரங்கள் நெருங்கிப் பரந்த இடமகன்றது காடாகும். இக்காட்டில் பொலிவில்லாத புறச்சிறகினைக் கொண்ட பேடை தன் அன்பிற்குரிய சேவல் மகிழுமாறு மன்னா்களின் வாச்சியக்காரா் எழுப்பும் இசையொலி போல் இன்னொலி எழுப்புவதை,

**“புன்புறப் பேடை சேவல் இன்புற**

**மன்னர் இயவரின் இரங்கும் கானம்” (ஐங்.425:1-2)**

என்ற பாடலடி விளக்கும். அதுமட்டுமின்றி நீருண்ட மேகம் நீலமணி போலும் கருக்கொண்டு கரிய வானிலே இடியினை முழக்கி மழையினைப் பெய்தது. அதனால் நிலம் குளிரக்காடு தழைத்ததை,

**“நீலத்து அன்ன நீர்பொதி கருவின்**

**மாவிசும்பு அதிரமுழங்கி ஆலியின்**

**நிலம் தண்ணென்று கானம் குழைப்ப” (அகநா.314:1-3)**

என அகநானூறும் சுட்டும்.

கொன்றை மரங்கள் புதிய பூக்களுடன் பொலிந்து காடு திகழ்ந்தமை (ஐங்.499:2) நற்றாயும் தந்தை முதலியோரும் இல்லின் கண் இருக்க, செவிலி தலைவியின் கூந்தலில் வெண்ணெய் தடவினாள். அப்போது விரிந்த கதுப்பினின்று தலைவன் கொடுத்த பூ செவிலி முன்னர் வீழ்ந்தது. உடனே தலைவி தாழ உடுத்திய நீல ஆடையைக் கையாலே சிறிது பற்றிக் கொண்டு, அச்சத்தால் தளர்ந்து மெல்ல நடந்து பக்கத்திலுள்ள கானத்திடத்தே சென்று ஒளிந்து கொண்டாள் (கலித்.115:15) என்பர். இதில் காடு இல்லத்திற்கு அருகில் உள்ளமை புலனாகும்.

**புனம், புலம்**

முல்லை நிலமாகிய காட்டைக் குறிக்கப்பயன்படும் மற்றொரு சொல் புனம், புலம் என்பதாகும். இது பல்வேறு பெயர்களாலும் அழைக்கப்படுகின்றது. அவை, சிறிய புனம் குறும்புனம் என்றும் தரிசாகக் கிடக்கும் பழைய கொல்லை முதைப்புனம் (குறுந்.155:1) என்றும் தினைப்புனம் (அகநா.94:9-10) என்றும் அழைக்கப்படும். மேலும் அகன்ற முல்லை நிலங்கள் வியன்புனம் (கலித்.108:31) என்றும் கூறுவர். அதுபோல் மலைபெய்த புறவு வியன்புலம்[19] என்றும் மென்புலம் (ஐங்.489:1-2) என்றும் தண்புலம் (கலித்.101:1) என்றும் இலக்கியங்கள் சுட்டுகின்றன.

மேலும் மழை பெய்தமையால் முல்லைநிலம் குளிர்ந்து உலர்ந்த சிறுசெடிகளிடத்தே அரும்புகள் தோன்றுதல் (கலித்.101:1) ஆனிரை மேய்க்கும் இடையனின் கொல்லையில் உள்ள சிறிய புனத்தில் குராமரத்தின் குவிந்த கொத்தில் வெள்ளிய பூக்கள் மலர அதனை அவர்கள் தங்கள் தலையில் சூடிக்கொள்ளுதல் (நற்.266:1-3) பின் தங்கள் பசுக்களை கார் காலத்தில் அவ்வப்பொழுது பெய்த மழையால் நனைந்த அகன்ற நிலத்திடத்தே ஓட்டிச் சென்று, மேயவிட்டுச் சிறிய குன்றுகளிடத்தே மணம் நாறும் பூக்களை

மாலையாகக் கட்டி மார்பிலே அணிந்து மகிழ்ந்திருத்தல் (அகநா.14:1) தலைவி புனத்தின்கண் வேலை செய்து கொண்டிருக்கின்ற தமையனுக்கு உணவு எடுத்துச் செல்லுதல் (கலித்.108:31) போன்றவை முல்லைநிலத்தின் சிறப்பினைக் காட்டுவனவாகும்.

**முல்லைநிலம்**

இறும்பு (குறுந்.155:5) செந்நிலம் (அகநா.14:1) ஈர்நிலம் (அகநா.334:13-14) தண்பொழில் (கலித்.108:43) பொங்கர் (அகநா.4:10) என்ற ஐந்தும் முல்லைநிலத்தைக் குறிக்கும் சொல்லாகும். அதாவது மரங்கள் செறிந்து வளர்ந்த குறுங்காட்டை இறும்பு என்றும் சிவந்த நிறமுடையதாக முல்லைநிலம் காட்சியளித்தலை செந்நிலம் என்றும் கார்காலத்தின் தன்மை கொண்ட ஈரமான முல்லை நிலத்தை ஈர்நிலம் என்றும் அழைப்பர். மேலும் இந்நிலம் தண்ணிய பொழில் பொங்கர் (அ) சோலை (நற்.321:9,அகநா.14:8) என்ற பெயர்களாலும் சிறப்பிக்கப்பெற்றுள்ளது.

**பாட்டங்கால், தினைக்கால்**

பாட்டங்கால் என்பது பயிர்செய்யும் தோட்டத்தையும் (கலித்.116:1) தினைக்கால் என்பது வயலையும் (கலித்.108:33) குறிக்கும்.

மேலும் குறிஞ்சிக்குரிய குன்று (நற்.139:2) குன்றம் (குறுந்.279:7) பொறை (நற்.161:1) இறும்பி (குறுந்.155:5) மலை (அகநா.84:1) கோடு (நற்.139:2) அடுக்கம் (நற்.66:8) விடரகம் (நற்.371:1) வரை (நற்.69:2) போன்றவை முல்லையில் குறிஞ்சி நிகழ்ந்தமையைக் காட்டுகிறது. அது மட்டுமின்றி பாலைக்குரிய அத்தம், சுரன், களர், களரி, போன்றவையும் நெய்தலுக்குரிய பாக்கம், திரை, கடல், புணரி, மணல், அடைகரை, பௌவம், போன்றவையும் சுட்டப்பெற்றுள்ளது.

**குறும்பொறை**

பூக்கள் மிகுந்த காடு குறும்பொறை என்றழைக்கப்படும்.[20]

**பாலை நிலப்புனைவு**

குறிஞ்சியும் முல்லையும் வேனிற் கொடுமையால் தம்மியல்பு திரிந்து உண்டாகுவதே பாலைநிலமாகும் என்பர் இளங்கோவடிகள் இதனை

**“வேனலங் கிழவனொடு வெங்கதிர் வேந்தன்**
**தானலந் திருகத் தன்மையிற் குன்றி**
**முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**
**நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவங்கொள்ளும்”[21]**

என்னும் அடிகள் சுட்டும். அதுபோல்

**“நானிலம் வாய்க்கொண்டு நன்னீர்**

**அறமென்று கோது கொண்ட**

**வேனிலஞ் செல்வன் சுவைத்து உமிழ் பாலை”[22]**

என்று நம்மாழ்வாரும் விளக்கிக் காட்டுவர். இதனால் காடும் மலையும் கோடை வெப்பத்தினால் தத்தம் பசுமைத்தன்மை இழந்து திரிந்த நிலமே பாலைநிலம் எனப்படும்.

முல்லையும் குறிஞ்சியும் திரிந்து உருவான பாலை நிலத்தில் இவ்விரு நிலங்களில் பெயர்களே பெரும்பான்மையாகக் குறிக்கப்பட்டுள்ளன. இருப்பினும் பாலை நிலத்தை வெளிப்படையாக உணர்த்த வல்ல அத்தம், அழுவம், அருஞ்சுரம், சுரன், வேனிற்குன்றம், பெருங்காடு, கடத்திடை, அழல் அவிர்நீளிடை, அதர்ச்சிறுநெறி, வெந்துக்கல், பரல்முரம்பு போன்றவையும் காணப்படுகிறது.

மேலும் குறிஞ்சி நிலத்திற்குரிய பல்வேறு பெயர்களால் பாலைநிலம் குறிக்கப்பெற்றுள்ளது. அவையாவன மலை, வெற்பு, வரை, பொறை, சிலம்பு, அடுக்கம், பிறங்கல், குன்று, குன்றம், குறும்பொறை, விடரகம், விடர்முகை, விடர்அளை போன்றவை.

அதுபோல் முல்லைநிலத்திற்குரிய காடு, கானம், கான், கடம், கடறு, அழுவம், இறும்பு, அரிலம், புறவு, சுவல் ஆகிய பெயர்களும் பாலைத்திணைப்பாடல்களில் பயின்றுள.

மருத நிலத்திற்குரிய பெயர்களும் பாலைத்திணைப் பாடல்களில் விரவி வந்துள்ளன. வயல், கழனி, செய், புலம், செதும்பல், கொல்லை, புதல், சோலை, தண்ணிலம், தண்பனை, பொழில், கா, படப்பை மற்றும் நெய்தல் நிலத்திற்குரிய கடல், முந்நீர், புணரி, துறை, கழி, செறு, பெரு நீர்க்கானல், நெய்தல்படு, களர், களரி ஆகிய சொற்கள் பாலைத்திணைப் பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

மேலும் பாலைத்திணைப் பாடல்களில் நான்கு நிலங்களின் பெயர்கள் பல இடங்களில் பாலைநிலத்தைக் குறித்தும் சில இடங்களில் அவ்வந்நிலத்தைக் குறித்தும் நின்றுள.

இவ்வாறு பாலை நிலத்தில் மட்டுமே பிற நான்கு நிலங்களும் பேசப்பட்டிருக்கின்றன. நால்வகை நிலங்களில் முல்லைக்கும் குறிஞ்சிக்கும் பாலையாகத் திரிய மிகுதியான வாய்ப்பு இருக்கிறது. எனினும் பிற இருநிலமும் கோடை காலத்துக் கடுவெயிலில் பாலையாக மாற வாய்ப்பு இருக்கிறது என்பதன் அடிப்படையிலேயே பாலைத்திணையில் சொல்லப் பெற்றிருக்கின்றன[23]

ஆகவே மேற்கூறிய கூற்றால் பாலைநிலம் நான்கு திணைக்கும் பொது என்பதை அறியமுடிகின்றது.

பாலைத் திணை குறித்து அகஇலக்கியத்துள் (நற்றிணை-104பாடல்கள்) (குறுந்தொகை-90பாடல்கள்) (ஐங்குறுநூறு-100பாடல்கள்) (அகநானூறு-200பாடல்கள்) (கலித்தொகை-35 பாடல்கள்) மொத்தம் ஐந்நூற்றுஇருபத்தொன்பது பாடல்கள் காணப்படுகின்றன.

**அத்தம்**

பாலைநில வழி அத்தம் என்றழைக்கப்படும். இது அகஇலக்கியத்தில் அறுபத்தைந்து[24] இடங்களில் சுட்டப்பட்டுள்ளது.

குமிழ மரங்கள் நிரம்பிய குறுகிய பலவாய வழிகளையுடையது பாலைநிலம் (நற்.274:5) அங்கு வளையாத கோலின் வடிவாகிய அம்பினால், வளைந்த வில்லையடைய ஆறலைக் கள்வர் வழியிடையில் ‘செல்லும்’ ஏதிலாளரைக் கொன்று உயிரைப் போக்குவர். பின் இறந்த உடல்கள் கொடிய மலை வழியில் ஒரு பக்கத்தே இலைகளால் மூடப்பட்டு முடை நாற்றம் வீசும், அவ்வுடல்களைத் தின்னவரும் குறியநரி முடைநாற்றம் தாங்காது அவ்விடத்தின் அருகே செல்லாது பெயர்ந்து போகும். (நற்.164:8-10) இவ்விடத்தில் உள்ள கள்ளிச்செடியின் முற்றிய காய்கள் வெடிப்பதால் கடிய ஓசை பிறக்கும். அவ்வோசைக்கு அஞ்சிய மெல்லிய சிறகுகளையுடைய ஆணும் பெண்ணுமாய் இணைந்து வாழும் புறாக்கள் பிரிந்து ஓடும் (குறுந்.174:4).

மேலும் அங்கு வெண்பாலை மரமும் ஓமை மரமும் நிறைந்திருப்பதோடு (நற்.107:1-6) நீர் வற்றிய வாகையின் முதிர்ந்த நெற்றுக்களைக் கொண்ட கொத்து, கூத்தர் ஆடும் களத்தில் கொட்டும் பறையைப் போல் விட்டு விட்டு ஒலிக்கும் (அகநா.45:1-6). இவ்வாறு அன்பும் அருளும் இல்லாத வழியைக் கொண்டது அத்தம் எனச் சுட்டப்பெற்றுளது.

**அழுவம்**

மூங்கில்களும் வாகையும் செறிந்த பாலைநிலப்பரப்பாகிய (குறுந்.7:4-6) அழுவம் என்னும் சொல் குறித்து பத்து[25] இடங்களில் குறிப்புளது.

**அருஞ்சுரம், சுரன், வெஞ்சுரம்**

செம்மையான மலையின்கண் நீரின்றி அமைந்த அரிய பாலைநில வழி அருஞ்சுரம் எனப்படும். இது குறித்த செய்தி நூற்றிஅறுபத்திரண்டு[26] இடங்களில் காணப்படுகிறது.

**“வெந்திறல் கடுவளி பொங்கர்ப் போந்தென**

**நெற்றி விளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்**

**மலையுடை அருஞ்சுரம் என்ப" (குறுந்.39:1-3)**

என்று சுட்டப்படும். அதாவது வெம்மையான வலிமையுடைய விரைவான காற்று மரக்கிளைகளில் வீசுவதால், வாகை மரத்தின் நெற்றுக்களின் ஒலித்தற்கு இடனாக உள்ள மலைகளையுடைய அருஞ்சுரம் பாலைநிலம் எனப்படும்.

மேலும் இவ்விடத்தில் கோடை வெயில் தாக்குதலின் பாறைகளும் பரல்களும் வெம்மையேறி நடத்தற்கருமை தோற்றதலாலும் நீரும் நிழலும் அருகுவதனாலும் புலி முதலிய கொடிய விலங்குகள் அலைவதனாலும் ஆறலை கள்வரின் இடையூறுகளானும் துன்பம் நிறைந்தமையின் அருஞ்சுரம் ஆயிற்று என்பர்.

**வேனில் குன்றம்**

வெப்பமிக்க சிறுகுன்றாகிய (நற்.171:2) வேனில் குன்றம் முப்பத்து மூன்று[27] இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**பெருங்காடு**

மழை பெய்யாமல் வறண்ட வெண்மையான வறிய காற்று சுழன்று வீசும் வெப்பம் மிகுந்த, நீரும் நிழலும் இன்றி, இன்புறுத்தும் நலன்கள் யாவும் ஒருங்கே சிதைவுற்ற இவ்விடம் குறித்து எழுபது[28] இடங்களில் குறிப்புளது.

நீர் வற்றிய வாகையின் முதிர்ந்த நெற்றுக்களைக் கொண்ட கொத்து கூத்தர் ஆடும் களத்தில் கொட்டும் பறையைப் போல் விட்டுவிட்டு ஒலிக்கும். கோடைக்காலம் நீடித்து நின்ற அகன்ற பெரிய குன்றினிடத்தே நீரற்றுப் போதற்கரிய சுரவழியில் உயரமான களிற்றினைக் கொன்று ஆள் வழக்கற்ற அருஞ்சுரத்தே புலி அலைந்து திரியும் ˙தன்மையது காடு (அகநா.45:1-6) எனக் காட்டின் இயல்பு எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**கடத்திடை**

பாலையின் வறட்சியுற்ற கல்பரந்த நெடிய வழி கடத்திடை (அகநா.53:7) எனப் புலவர்களால் ஒன்பது[29] இடங்களில் சுட்டப்பெற்றுளது.

**அழல் அவிர் நீளிடை**

வெப்பக்காற்று வீசுகின்ற, நீரின்றி அமைந்த நீண்ட வழி அழல் அவிர் நீளிடை எனப்படும். இது குறித்து முப்பத்தாறு[30] இடங்களில் குறிப்புளது.

**"நெடுங்கழை திரங்கிய நீர்இல் ஆர்இடை" (குறுந்.331:1)**

என மூங்கில் கோல் உலர்ந்து வாடி பெய்யும் நீரற்ற கடத்தற்கரிய காட்டுவழியே அழல் அவிர் நீளிடை என்பர்.

**அதர்ச் சிறுநெறி**

புன்மை மிக்க சிறிய வழி அதர்ச்சிறுநெறி எனப்படும். இதனை,

**"புலி பார்த்து உறையும் புல் அதர்ச் சிறு நெறி" (நற்.29:5)**

என்னும் அடி சுட்டும்.

**வெந்துக்கல்**

வெள்ளிய ஆடையை விரித்தாற் போன்ற வெயில் விளங்கிய வெப்பம் மிக்க கோடை நீடிய மலைப்பக்கம் வெந்துக்கல் எனப்படும். இச்சொல் இருபத்தைந்து[31] இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது,

வெப்பம் நீங்காத எரிபரந்த பாழிடத்தே, பெருமை ஒழிந்த வழிச் செல்லும் யானை நீருள்ள இடம் காணாது பேய்த்தேர் தோன்றும் இடமெல்லாம் ஓடி நீரற்ற ஆற்றில் கிடக்கும் ஓடம் போல வழியிடத்தே வருந்திக் கிடக்கும் (அகநா.29:15-17) என வெந்துக்கலின் கொடுமை சுட்டப்பட்டுள்ளது.

**பரல்முரம்பு**

பரற்கற்களைக் கொண்ட வன்னிலமாகிய காட்டினை பரல்முரம்பு என்பர். இதனை

**"பரல் முரம்பு ஆகிய பயம் இல் கானம்" (அகநா.5:15)**

என்ற அடிசுட்டும். இது பத்தொன்பது[32] இடங்களில் பயின்றுவந்துள்ளது.

**கானம்**

வறட்சி மிகுந்த காட்டுப்பகுதியான பாலை நிலம் கானம் கடம், கடற்று, களரி என வேறுபெயர்களாலும்[33] அழைக்கப்படும்.

**நனந்தலை, பறந்தலை**

பாலை நிலம் நனைந்தலை, பறந்தலை என்றும் கூறப்படும்.[34] அதுமட்டுமின்றி வறட்சியின் காரணமாக இடம் பாழடைந்தமையினால் பாழ்நாடு என்றும் வன்புலம் (அகநா.309:3) என்றும் வாடுபுலம் (அகநா.377:1) என்றும் விளக்கப்படுகின்றது. பாலை நிலத்தில் பாறைகள் நிறைந்து காணப்படும்.[35]

**பிற நிலங்கள்**

குறிஞ்சிக்குரிய சிலம்பு, பிறங்கல், சிமையம், குன்று, நெடுவரை, விடர்முகை, அடுக்கம், கவாஅன் விடர்அகம், குறும்பொறை, ஓங்குமலைச்சாரல், கல்அளை, மலைமுதல் சிறுநெறி, வெற்பின், கல்மிசை, துறுகல் (அகநா.147:5) விடர்அளை (அகநா.147:5) கல்பிறங்கு ஆரிடை, (கலித்.20:21) போன்ற பெயர்களும்[36] முல்லைக்குரிய புறவு, இரும்பின், புனம், படப்பை, செஞ்சுவல், பொழில், பொங்கர், பொதும்பில், முதையல், செந்நிலம், வன்புலம், முதைச்சுவல், புலம் போன்ற பெயர்களும்[37] நெய்தலுக்குரிய திரை, கடல், கழி, முந்நீர், புணரி, ஏக்கர், சேரி, இருங்கழிப்படப்பை, போன்ற சொற்களும்[38], மருதத்திற்குரிய செறு

வயல் போன்ற பெயர்களும்[39] இடம்பெறுவதால் பாலைநிலம் எல்லா நிலத்திற்கும் பொதுவானது என்பது புலனாகின்றது.

**மருதநிலப் புனைவு**

மருத நிலம் என்பது வயலும் வயல் சார்ந்த இடமும் ஆகும். வளமார்ந்த கழனிசூழ் நிலப்பரப்பு மருதத்துக்கான பின்புலமாகும். அது விளைந்த நெற்கதிர்களையும் நீர்நிறைந்த குளங்களையும் கொண்டது. மருத நிலத்தைக் குறிக்கும் சொற்களாக செறு, கழனி, சேரி, பழனம், வயல், பொழில், கழனியம் படப்பை, தண்பழனம், அள்ளல், படப்பை, பரப்பு, பொய்கை, காவு போன்றவை விளக்குகின்றன.

மருதத்திணை குறித்து நற்றிணை (32 பாடல்கள்) குறுந்தொகை (48 பாடல்கள்) ஐங்குறுநூறு (100 பாடல்கள்) அகநானூறு (40 பாடல்கள்) கலித்தொகை (35 பாடல்கள்) என்பன போன்ற ஐந்து நூல்களிலும் மொத்தம் இருநூற்றிஐம்பத்தைந்து பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

**செறு**

வயலைக் குறிக்கும் செறு என்னும் சொல் பன்னிரண்டு[40] இடங்களில் காணப்படுகிறது. இதனை,

**“மலை கண்டன்ன நிலை புணர் நிவப்பின்**
**பெரு நெற் பல் கூட்டு எருமை உழவ!**
**கண்படை பெறாஅது, தண் புலர் விடியல்**
**கருங் கண் வராஅல் பெருந் தடி மிளிர்வையொடு**
**புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ் சோறு**
**கவர் படு கையை கழும, மாந்தி**
**நீர் உறு செறுவின் நாறு முடி அழுத்த, நின்**
**நடுநரொடு சேறிஆயின்” (நற்.60:1-8)**

என்ற பாடல் விளக்கும். மேலும் நெல்லறுத்து நீங்கப் பெற்ற பின் மீண்டும் உழுத ஈரமான சேற்றில் விதைக்கும் பொருட்டு விதைகளைக் கடகப்பெட்டியில் இட்டுச் செல்லுதல் (நற்.210:1-2) அழகிய தழையாடையினையும் சிறிய வளையல்களையும் அணிந்த பெண்கள், புனல் விளையாட்டை வெறுக்கும் பொழுது வயலில் வெண்ணிற நாரைகளை ஓட்டி விளையாடுதல் (அகநா.226:4-6) புலவர்களால் பாடப்பெற்றுள்ளது.

**வயல் (அ) செய்**

வயல் என்ற சொல் எட்டு இடங்களிலும் செய் என்ற சொல் ஈரிடங்களிலும்[41] காணப்படுகின்றன. பரந்தகன்ற நீர்வளம் உடைய வயலில்

நெல்லறுத்த பின் மீண்டும் விதைத்தல் (நற்.210:1-2) அவ்விடம் காணப்படும் ஆம்பல் மலர்களைப் பசுக்கள் உண்ணுதல் (நற்.290:1-2) வயலுக்கு அண்மையிலுள்ள மரங்களில் நாரைகள் வாழ்தல் (ஐங்.86:1-2) அங்கு காணப்படும் கருங்குவளை மலர்களைப் பறித்து விற்றல் (கலித்.66:1) வளைந்த முட்களையுடைய நீர்முள்ளிச் செடியின் குவிந்த குலைகளினின்றும் கழன்று உதிர்ந்த மீனினது முள்ளினைப் போன்ற வெண்மையான காம்புகளையுடைய கருமையான மலர்களை விளையாடும் மகளிர் தாம் கொண்டாடும் விழாவிற்கு அழகு காட்டும் பொருட்டுப் பொறுக்கிச் சேர்த்தல் (அகநா.26:1-4) போன்றவை வயலின் சிறப்பினைச் சுட்டுவனவாகும்.

**கழனி**

கழனி என்பது வயலினைக் குறிக்கப் பயன்படும் சொல்லாகும். அகஇலக்கியத்தில் பதினெட்டு[42] இடங்களில் காணப்படுகிறது. புள் இமிழும் அகன்ற வயலின் செந்நெல்லிடைப் பூத்த தாமரையை நெல் சாய்க்கையினாலே அத்தாமரையின் இதழோடு கிடந்து விளங்கின. ஒரு கதிர், அரங்கின் மேல் ஆடுவாள் அணிநுதலில் செருகி வைத்த வயந்தகம் என்னும் அணிபோல் தோன்றும் தகைபெறு கழனி என்று மருதன் இளநாகனார் சுட்டுவர் (கலித்.79:1-6)

மேலும் வயலில் உள்ள பலாமரத்தின் இலைகளைக் கூடாக்கிக் கொண்டு முயிறுகள் முட்டையிட்டு உறையும் அக்கூடுகளைக் கழனியின்கண் இரை தேடுவதற்கு வந்த நாரை சென்று உரிஞ்சுதல் (நற்.180:1-2) அவ்விடம் உள்ள மாமரத்தின் முற்றி வீழ்ந்த இனிய பழத்தைப் பொய்கையிலுள்ள வாளைமீன்கள் கவ்வி உண்ணுதல் (குறுந்.8:1-2) வெண்ணெல்லை அரிகின்ற உழவர்கள் முழக்கும் தண்ணுமைக்கு அஞ்சி வயலில் உள்ள பறவை மருத மரத்தில் சென்று தங்குதல் (நற்.350:1-3) கழனி உழவர்கள் நெய்தல் நிலமக்களுடன் கைகலப்பில் ஈடுபடுதல் (அகநா.366:1-11) போன்றவை கழனியின் சிறப்பை எடுத்துரைப்பனவாகும்.

**பழனம்**

பழனத்திற்கு மருதநிலம் எனப் பொதுவாகவே உரை காண்கிறார் நச்சினார்க்கினியர்[43] பழனம் இருபத்தேழு[44] இடங்களில் காணப்படுகிறது. பூத்த கரும்பையும் காய்த்த நெல்லையும் மிகுதியாய்க் கொண்டது பழனம் (ஐங்.4:4-6) நெருப்பு எழுந்தாற் போன்ற தாமரைப் பூக்கள் பூத்திருக்கும் (அகநா.6:16). மேலும் மிக்க பெருவலியையும் தலைமையையும் உடைய எருமைக்கடா, குளிர்ந்த மலர்களையுடைய பொய்கையின்கண் பகற்பொழுது முழுதும் கழியும் வரை சுழன்று உழக்கிக் கிடந்தது. பின்னர் மடப்பம் பொருந்திய கண்களையுடைய

மாட்சிமைப்பட்ட பெண் எருமையினைத் தழுவிய வண்ணம் தோட்டங்களைச் சென்றடைந்து பழனங்களில் தங்கியது (அகநா:146:1-4) என மருதநிலம் வருணிக்கப்பெற்றள்ளது.

**பொய்கை**

பொய்கை முப்பத்து மூன்று[45] இடங்களில் காணப்படுகிறது. சருச்சரை பொருந்திய உடலினையும் பெரிய வாயினையும் உடைய ஆண்சங்கு, கதிர்நுனை போலும் மூக்கையுடைய ஆரல்மீன் காட்சியாக ஆழமான நீரையுடைய பொய்கையில் பெண் சங்கினொடு மணம் கொள்ளும் (அகநா.306:2-5) வேதம் ஓதுதலை உடைய அந்தணன் எரிவலம் வருவான் போலப் பூக்கள் அலர்ந்த குளிர்ச்சியினையுடைய பொய்கையிடத்தே தாமரை பூத்திருந்த புதுமலர்களிடையே தாது சூழ்ந்து தனித்திருந்த ஒரு மலரின் பக்கம், மெல்லிய சூட்டுமயிரினை உடைய அன்னம் தன்னுடைய அழகிய நடையினையுடைய பெடையொடு அம்மலரின் புறத்தே சேர்ந்து பெருமை தரும்படி வலம் வந்து திரிதரும் (கலித்69:1-7) என்று வருணிக்கப்பட்டுள்ளது.

**பொழில் (அ) காவு**

பொழில் என்பது ஆற்றங்கரையின் அருகில் உள்ள சோலையினைக் குறிக்கும். இது ஐந்து[46] இடங்களில் பாடப்பெற்றுள்ளது. இதனை,

**“ஊர்க்கும் அணித்தே பொய்கை; பொய்கைக்குச்**
**சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே;**
**இரைதேர் வெண்குருகு அல்லது யாவதும்**
**துன்னல் போகின்றால், பொழிலே” (குறுந்.113:1-4)**

என்ற பாடல் சுட்டும். அதாவது ஊர்க்கு அணிய இடத்தில் பொய்கையும் அதன் அண்மையில் சிறிய காட்டாறும் உள்ளது. அவ்வாற்றங்கரையில் உள்ள சோலை தலைவன், தலைவியின் குறியிடமாக அமையும்.

மேலும் இடையறாது பெருகும் புனலையுடைய வையை ஆற்றின் மணல் மிக்க அகன்ற துறையின்கண் அழகிய மருதமரம் உயர்ந்து வளர்ந்து நிற்கின்ற விரிந்த மலர்களையுடைய சோலை காவு (அகநா.36:10) என்றழைக்கப்படும்.

**படப்பை**

படப்பை என்பது மருதநிலத்தில் உள்ள தோட்டத்தினைக் குறிக்கும். இச்சொல் ஆறு[47] இடங்களில் புலவர்களால் பாடப்பெற்றுள்ளது.

**“நறவு உண் மண்டை நுடக்கலின், இறவுக் கலித்து,**
**பூட்டு அறு வில்லின் கூட்டுமுதல் தெறிக்கும்**
**பழனப் பொய்கை அடைகரைப் பிரம்பின்**

**அர வாய் அன்ன அம் முள் நெடுங் கொடி**
**அருவி ஆம்பல் அகல் அடை துடக்கி,**
**அசைவரல் வாடை தூக்கலின் ஊது உலை**
**விசை வாங்கு தோலின், வீங்குபு ஞெகிழும்**
**கழனிஅம் படப்பைக் காஞ்சி ஊர" (அகநா.96:1-8)**

என்ற பாடல் விளக்கும்.

அதுபோல் மிக்க பெருவலியையும் தலைமையையும் உடைய எருமைக்கடா, குளிர்ந்த மலர்களையுடைய பொய்கையின்கண் பகற்பொழுது முழுதும் கழியும் வரை கழன்று உழக்கிக் கிடந்தது. பின்னர் மடப்பம் பொருந்திய கண்களையுடைய மாட்சியமைப்பட்ட பெண் எருமையினைத் தழுவிய வண்ணம் தோட்டங்களைச் சென்றடைந்து வயல்களில் தங்கும் (அகநா.146:4). இவை மருத நிலத்தின் வளத்தைச் சுட்டுவனவாகும்.

**நெய்தல் நிலப்புனைவு**

கடலும் கடல் சார்ந்த இடமும் நெய்தல் எனப்படும். கடல் பரப்பினையொட்டி அமைந்துள்ள கழிகளும் சோலைகளும் நெய்தல் நிலப்பரப்புள் அடங்குவனவாகும். விரிந்து அகன்ற நெய்தல் பரப்பைப் போலவே, இதற்கென அமைந்த பெயர்களும் விரிந்துள்ளன. அவையாவன குட்டம், மென்புலம், அழுவம், பரவை, ஓதம், புணரி, நீர், முந்நீர், திரைபௌவம், மெல்லம்புலம்பு, பரப்பு, கடல், சேர்ப்பு எனப் பல பெயர்களால் குறிப்பிடப்படும்.[48]

நெய்தல்திணை குறித்து அகஇலக்கியங்களில் மொத்தம் முந்நூற்று நாற்பத்தி ஆறு பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களில் நெய்தல்நிலம் குறித்து கடல், புணரி, முந்நீர், அழுவம், திரை, பௌவம், மெல்லம், புலம்பு, பரப்பு, மென்புலம், பரவை, நெய்தல் நிலம் என்றும் பொழில், பொதும்பர், பொய்கை, கானல், படப்பை என்றும் கடல் சார்ந்த நீரிடம் கழி, துறை, ஓதம் என்றும் அடைகரை, பாக்கம், எக்கர், மணல், மணல் படப்பை என்பன போன்ற பெயர்களால் குறிக்கப்பெற்றுள்ளது.

**கடல் அல்லது பௌவம்**

நெய்தல் நிலத்தில் கடலென்னும் விரிந்த நீரிடமே பெரிய இயற்கைப் பகுதியாக அமைகிறது. கடல் குறித்து எழுபது இடங்களிலும் பௌவம் குறித்து ஏழு[49] இடங்களிலும் குறிப்புகள் காணப்படுகிறது.

ஞாயிறு மறைய கடற்பரப்பில் அலையை நீக்கிக் கொண்டு அணிநிலா ஒளிவீச புள்ளினம் இரைமாந்தி புகலிடம் சேர ஒலி அவிந்து நீலமலர்கள்

நிரம்பிய கழிதுயில் கொள்ளும் இடம் கடல் (கலித்.121:1-6) என வருணிக்கப்பட்டுள்ளது.

மேலும் கடலுக்குச் செல்லும் மீனவர்கள் நீலநிறப் புன்னை மர நிழலிலே தங்குதல் (நற்.4:1) மீனைப்பிடிப்பதற்காக வலையை வீசுதல் (நற்.303:8-9) கொழுமீன் என்னும் மீனைப் பிடித்தல் (நற்.175:1-2) தோணியில் விளக்குகளைக் கொளுத்திக் கொண்டு செல்லுதல் (அகநா.100:6-7) சங்கினை அறுத்து அழகிய வளையல்களை உருவாக்குதல் (ஐங்.194:1) போன்றவை கடலின் சிறப்பினைச் சுட்டுவனவாகும்.

**புணரி**

கடல்நீர், அலைகள் இவற்றைக் குறிக்க புணரி என்னும் சொல் பதினெட்டு[50] இடங்களில் காணப்படுகிறது.

முள்ளைப் போன்ற கால்களையுடைய இறாமீனின் வளைந்த முதுகினையுடைய பெரிய இனத்தை, கடலில் தாழும் அலைகொண்டு வந்து தருதற்கு இடனாகிய துறை (குறுந்.109:1-9) என்று அலையும் வெண்மையான தலை பொருந்திய திரையையுடைய கடல்நீரில் மகளிர் நீராடுதல் (அகநா.20:8,நற்.395:5-6) என்பன புணரி குறித்த செய்திகளாகும்.

**அழுவம்**

கடற்பரப்பு அழுவம் என்று மூவிடங்களில்[51] சுட்டப்படுகிறது. ஒள்ளிய ஞாயிறு மலைவாயிலிற் சென்று மறைந்தது, உலகெலாம் தன் ஒளியைப் பரப்பும் தன்மையதாகிய தண்ணிய கதிர்களையுடைய மதி தெளிந்த கடற்பரப்பினின்றும் அலைகளை நீக்கிக் கொண்டு மேலே எழுந்தது (கலித்.121:2) என்பதில் அழுவம் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**திரை**

திரை எனும் சொல் அறுபத்தெட்டு[52] இடங்களில் காணப்படுகிறது. உலகம் மூன்றையும் தன் திருவடியினால் அளந்த முதல்வனாய திருமாலுக்கு, மூத்தவன் என்ற முறைமை உடையவன் பால் போன்ற மேனியனாய பலராமன். அவன் அழகுபெற அணிந்த நீலநிற ஆடையைப் போல் அழகு பெற்ற வெண்திரையினை உடையது கடல் (கலித்.124:1-3) என்றும் திரை ஒளியினையுடைய முத்துக்களைக் கொண்டு வந்து தருதல் (அகநா.130:9) புலவு நாற்றம் கமழும் மணல்களைக் கொண்டு வந்து குவித்தல் (நற்.106:1-2) போன்ற பணிகளைச் செய்கிறது.

**“ஓங்குதிரைப் பரப்பின் வாங்குவிசைக் கொளீஇ,**
**திமிலோன் தந்த கடுங்கண் வயமீன்,**

**தழைஅணி அல்குல் செல்வத் தங்கையர்,**

**விழவுஅயர் மறுகின் விலைஎனப் பகரும்**

**கானல்அம் சிறுகுடி, பெருநீர்ச் சேர்ப்ப'' (அகநா.320:1-5)**

என்ற பாடலில் உயர்ந்தெழுந்து வருதலையுடைய திரை ஒலிக்கும் கடற்பரப்பில் மீன் பிடிக்கும் படகினைக் கொண்ட தமையன்மார்கள் வலைவிரித்து மீன்களைப் பிடித்துக் கொண்டு வருதலும் அதைத் தங்கைமார் திருவிழாக்கள் நடைபெறும் தெருக்களில் விற்று வருதலும் சுட்டப்பெற்றுள்ளது.

**பரப்பு**

கடல் பரப்பைக் குறிக்க ''வளைமேய்பரப்பு'' (அகநா.200:7) என்ற சொல் பத்தொன்பது[53] இடங்களில் காணப்படுகிறது.

நீலமணி களங்கமின்றித் தெளிந்திருப்பது போல் கரிய பெரிய கடற்பரப்புத் தெளிந்திருத்தல் (நற்.159:1) அவ்விடம் செல்லும் மீனவர் புன்னை மர நிழலில் தங்கி, செவ்வி பார்த்து முறுக்குண்ட வலையைப் பிரித்துக் காய விடுதல் (நற்.4:1-3) மற்றும் பெரிய படகினையுடைய பரதவர்கள் கடற்பரப்பில் தம்மைத் தாக்காதவாறு கொல்லும் தன்மைவாய்ந்த சுறாமீனை ஒதுக்கி விட்டு நீருள் மூழ்கி வலம்புரிச் சங்கினை எடுப்பர். இதனை,

**''இலங்குஇரும் பரப்பின் எறிசுறா நீக்கி,**

**வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்'' (அகநா..350:10-11)**

என்னும் அடிகள் குறிப்பிடும்.

**மென்புலம்பு, மென்புலம், நெய்தல் நிலம்**

மருதமும் நெய்தலும் மென்புலமாதலின், ஈண்டு நெய்தல் எனக் கொள்ளப்பட்டது. கடல் நிலம் மென்பால் எனவும் கூறப்படும். மென்புலம்பு நான்கு இடங்களிலும் மென்புலம் மூன்று[54] இடங்களிலும் நெய்தல்நிலம் ஓரிடத்திலும் (ஐங்.184:1) சுட்டப்பெற்றுள்ளது.

மருத நிலத்தின்கண் உள்ள உப்பு வாணிகர் தம் நாட்டில் விளைந்த வெண்ணெல்லை வண்டிகளிலே ஏற்றிக் கொண்டு போய் விற்று, அதற்கு விலையாகப் பிற நாடாகிய நெய்தல் நிலப்பகுதியில் விளைந்த உப்பைப் பெற்று வந்து விலை கூறுவதும் (நற்.183:1-4) பரதவர்கள் உப்பங்கழியில் மலர்ந்திருக்கும் நீலப்பூக்களைப் புலிநகக் கொன்றைப் பூக்களுடன் சூடிக்கொள்ளுவது (அகநா.270:1-4) என மென்புலமாகிய நெய்தல் நிலம் சிறப்பிக்கபட்பட்டுள்ளது.

**பரவை**

கடலைக் குறிக்கப் பயன்படும் மற்றொரு சொல் பரவை என்பதாகும். இதனை,

"----------------------------- தெண்கடல்

**முழங்கு திரை, முழவின் பாணியின், பைபய**

**பழம் புண் உறுநரின், பரவையின் ஆலும்" (நற்.378:2-4)**

என்னும் அடிகள் சுட்டும்.

**கடல் சார்ந்த இடம்**

கடல் சார்ந்த நெய்தல் நிலம் "பொழில், பொதும்பர், படப்பை என்ற பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளது.

**பொழில்**

பொழில் என்ற சோலையைக் குறிக்கும் சொல் எட்டு[55] இடங்களில் காணப்படுகிறது. இருள் செறிந்தாற் போன்ற ஈரமும் குளிர்ச்சியும் கொழுவிய நிழலும் உடைய நிலவினைத் தொகுத்து வைத்தாற் போன்ற வெண்மையான மணற்பரப்பின் ஒரு பக்கத்தில், கரிய கிளைகளையுடைய புன்னைமரங்கள் அடர்ந்த அழகிய சோலையினை,

**"இருள் திணிந்தன்ன ஈர்ந்தண் கொழுநிழல்**

**நிலவுக் குவித்தன்ன வெண்மணல் ஒருசிறை**

**கருங்கோட்டுப் புன்னைப் பூம்பொழில் புலம்ப" (குறுந்.123:1-3)**

என்னும் பாடல் சுட்டும்.

**பொதும்பர்**

பொதும்பர் பொழில் என அழைக்கப்படும். அகஇலக்கியத்தில் ஏழு[56] இடங்களில் இச்சொல் இடம்பெற்றுள்ளது.

**படப்பை**

உப்பங்கழி சூழ்ந்த தோட்டம் அல்லது கொல்லை படப்பை என்றழைக்கப்படுவதுண்டு. அகஇலக்கியத்தில் எட்டிடங்களில்[57] படப்பை சுட்டப்பெறுகிறது. இது பனைமரங்கள் ஓங்கி வளர்ந்துள்ள வெண்மையான மணல் பரந்த தோட்டங்கள் படப்பை (அகநா.120:14-15) என அழைக்கப்படும்.

**கடல் சார்ந்த பிற நீரிடங்கள்**

நீர் ததும்பும் அலைகள் ஆர்ப்பரிக்கும் கடற்கரையை ஓதம், அடைகரை, துறை, கழி என்ற பெயர்களால் அழைப்பது உண்டு. ஊர்ந்து பரக்கும் இயல்புடைய கடலினுடைய நீர் ஓதம் அல்லது அலை என்னும் பொருண்மையில் பதினான்கு[58] இடங்களில் காணப்படுகிறது.

**அடைகரை**

பொங்கி எழுகின்ற அலை மோதிய நேரிதாகிய மணலை அடுத்த கடற்கரை அடைகரை என்ற பெயரால் அழைக்கப்படும். இது பதினாறு[59]

இடங்களில் காணப்படுகிறது. அதாவது, மலர்ந்த பருவத்துத் தேனை விரும்பி உண்ணும் வண்டின் கூட்டம் வலிமை வாய்ந்த அலைகளால் மோதப்பெற்று செறிந்த மணல் அடைகின்ற கரையின்கண் உள்ள அலைத்திவலைகளால் நனைந்த, புன்னை மரத்தின் நனையாத கரிய கிளைகளில் வந்துகூடும். அத்தகைய மரங்களில் மலர்ந்த பூக்களையும் பெரிய நீரினையும் உடைய கடற்கரை (குறுந்.175:1-4) அடைகரை என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**துறை**

பெரிய நீர்ப்பரப்பினை உடைய அகன்ற இடம் துறை என்றழைக்கப்படும். இது முப்பத்தெட்டு[60] இடங்களில் காணப்படுகிறது.

**கழி**

ஊர்ந்து பரக்கும் இயல்புடைய கடலினுடைய நீர் ஓடிப் பரந்ததால் உப்புப்படுதலையுடைய சேற்றுடன் விளங்கும் வளைந்த கழி (நற்.211:2-3) உப்பங்கழி எனப்படும். இது எண்பத்தேழு[61] இடங்களில் விளக்கப்பட்டுள்ளது.

பெரிய கடலிடத்து மீன் பிடிக்கும் தொழிலையுடைய சிறிய குடிசையில் வாழும் பரதவ மக்கள், பெரிய உப்பங்கழியாகிய வயலிலே வெண்ணிறக் கல் உப்பினை உழாமலேயே விளைவிப்பர்(அகநா.140:1-2). பரதவர் உப்பங்கழியில் மலர்ந்திருக்கும் கொழுவிய இதழ்களையுடைய நீலப் பூக்களைப் புலிநகக் கொன்றைக் பூக்களுடன் சூடிக் கொள்ளுதல் (அகநா.270:1-4) சிறுவெண்காக்கை அவ்விடத்தே உள்ள அயிரை மீனை விரும்பியுண்ணுதல் (ஐங்.164:1-2) நீர் நாயின் இளங்குட்டி கொழுமீனைத் தின்று மரப்பொந்துகளில் உறங்குதல் (நற்.195:1-3) உப்பங்கழி நீரில் சுறாமீன்தன் துணையோடு இயங்குதல் (நற்.67:5-7) போன்றவை உப்பங்கழியின் சிறப்பினைப் புலப்படுத்துவனவாகும்.

**கானல்**

கடங்கரையை ஒட்டிய அழகிய சோலையிடத்தையே 'கானல்' என்று குறிப்பர். நெய்தல் நிலத்தில் எழில் கொண்ட பகுதியிது[62] என்பர். இக்கானல் நூற்றிஒரு[63] பாடல்களில் சுட்டப்பெற்றுள்ளது

**"கருங்கோட்டு நறும் புன்னை மலர் சினை மிசைதொறும்**
**சுரும்பு ஆர்க்கும் குரலினோடு, இருந்தும்பி இயைபு ஊத**
**ஒருங்குடன் இம்மென இமிர்தலின், பாடலோடு**
**அரும் பொருள் மரபின் மால்யாழ் கேளாக் கிடந்தான் போல்**
**பெருங்கடல் துயில் கொள்ளும் வண்டு இமிர் நறுங்கானல்"**

**(கலித்.123:1-5)**

என்ற பாடல் கானலைச் சிறப்பிக்கின்றது.

மேலும் கடற்கரைச் சோலையில் உள்ள அழகிய சிறுகுடியில் பரதவர் வாழ்தல் (நற்.45:1-3) அவ்விடத்தில் புன்னையும் தாழையும் (நற்.78:3-4) பனைமரங்களும் (நற்.123:3-5) நிறைந்திருத்தல், காற்றாலசைக்கப்பட்டு வீழும் பனை மரங்களை வேலியாக அமைத்துக் கொள்ளுதல் (நற்.354:1-4) பரதவ மக்கள் கடலிலிருந்து பெற்ற மீன்களை கடற்கரைச் சோலையின் நிழலில் (நற்.388:3-6) குவித்து, தேன்மணம் வீசும் கள்ளினைத் தம் சுற்றத்தாருடன் உண்ணுதல், முத்தினைப் பகிர்ந்துக் கொடுத்தல் (அகநா.280:14) புலால் மணம் பொருந்திய மீனை உப்பிட்டு வற்றலாய்ப் புலர்த்துதல் மற்றும் உவர் நிலத்து விளைந்த உப்பினை உப்பு வணிகர் வருகின்ற காலம் நோக்கிக் கடற்கரைச் சோலையில் காவலையுடையதாயக் குவித்தல் (நற்.331:1-3) எனக் கானல் பல நிலைகளில் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

**எக்கர்**

மணல் மேட்டினை எக்கர் என்று குறிப்பிடுவர். கானலுக்கு அடுத்துப் பரந்து விரிந்த மணல் பரப்பிலே பெருந்திடர்கள், காற்றியக்கத்தாலும் நீரியக்கத்தாலும் குவிக்கப் பெற்று எக்கர் என்று அழைக்கப்பெறும் மணற் குவியல்கள் தோன்றுவதுண்டு. இந்த இயற்கையழகு செறிந்த எக்கர் குறித்து இருபத்திரண்டு[64] இடங்களில் குறிப்புளது.

கடற்கரையின்கண் குவிந்துள்ள மணல் திட்டுக்களில் ஞாழல் மலர்களும் செருந்தி மலர்களும் நிறைந்திருத்தல் (ஐங்.141:1) மீன் உலர்ந்து வற்றலாய்க் காயும் போது வந்து விழுகின்ற பறவைகளைக் கடற்பரப்பில் மணல் மேட்டிலுள்ள புன்னை மரங்களில் இனிய நிழலில் தங்கி மகளிர் விரட்டுதல் (அகநா.20:1-3) செக்கர் வானத்தைக் கொண்ட அந்திப்பொழுதின்கண் முக்கோவை உடைய அந்தணர் முதிய மந்திர மொழியினை நினைவு கொள்வது போல் கடற்கரை எக்கர் மேல் இன நாரை மாலைப்பொழுதில் இறை கொள்ளும் (கலித்.126:3-5) எனப் பல செய்திகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**மணற்பரப்பு**

நெய்தல் நிலத்திற்குரிய இயற்கை இடங்களுள் ஒன்றாகிய மணல் பரப்பு நாற்பத்திரண்டு[65] இடங்களில் காணப்படுகிறது.

பரதவர் நுண்மணல் செறிந்த நீர் அடைகரையிடத்தே ஆரவாரித்து, வலைகளை இழுத்து மீன்களைத் தொகுப்பர். பெரிய களத்திலே நெல்லைத் தொகுத்த உழவர்களைப் போலத் தொகுத்த மீன்களைத் தம்மிடம் வந்து இரந்தோரின் பெறுகலன்கள் நிறையுமாறு வழங்குவர். பின் எஞ்சியவற்றைப் பல

கூறுகளாகப் பகுத்து விலை கூறி விற்றுக் கரையுயர்ந்த செறிந்த மணற்பரப்பில் படுத்து உறங்குவதை,

**“நெருங் கயிறு வலந்த குறுங் கண் அவ்வலை**

**……………………………………………….**

**கோடு உயர் திணி மணல் துஞ்சும் துறைவ” (அகநா.30:1-11)**

என்னும் அடிகள் சுட்டும்.

**செயற்கை இடங்கள்**

நெய்தல் நிலச் செயற்கை இடங்கள் குடம்பை, குரம்பை, சேரி, பாக்கம், பட்டினம், குடி, சிறுகுடி, சீறூர் என்ற பெயர்களால் அழைக்கப்பெறும்.

**குடம்பை**

குடம்பை என்பது கூடு எனப் பொருள்படும். இது ஒன்பது[66] இடங்களில் பயின்று வந்துளது. உயர்ந்த மணல் மேடுகள் சூழ்ந்த நீண்ட கரிய பனையின் வளர்ந்த மடலில் கட்டிய கூட்டின்கண் உள்ள வெண்ணிறம் கொண்ட நாரை தன் துணையைப் பிரிந்து இரவு நடுயாமத்தில் ஓசை உண்டாக்கும். (நற்.199:1-3)

**குரம்பை**

குரம்பை என்பது சிறுகுடில் (அ) குடிசைப் பகுதிகளைக் குறிக்கும். இது மூவிடங்களில்[67] காணப்படுகிறது.

**“கண்டல் வேலிக் கழி சூழ் படப்பை**

**முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்” (நற்.207:1-2)**

என்றும்

**“குறியிறைக் குரம்பைக் கொலைவெம் பரதவர்” (அகநா.210:1)**

என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

**சிறுகுடி**

மக்கள் கூடி வாழும் இடங்கள் சிறுகுடி என்று பதினேழு[68] இடங்களில் இடம்பெற்றுள்ளது.

**பாக்கம் (அ) சேரி**

சிறுகுடியைச் சார்ந்து பரதவர்கள் வாழ்கின்ற இடம் பாக்கம் என்று அழைக்கப்பட்டதை,

**“கண்டல் வேலிக் கழி சூழ் படப்பை**

**முண்டகம் வேய்ந்த குறியிறைக் குரம்பைக்**

**கொழு மீன் கொள்பவர் பாக்கம்” (நற்.207:1-3)**

என்னும் அடிகள் விளக்கும்.

**பொழுது**

பூமி தன்னைத் தானே சுற்றிக் கொள்வதாலும் சூரியனைச் சுற்றிக் கொள்வதாலும் பகல், இரவு என்னும் பொழுதுகளும் ஆண்டு பருவம் என்னும் பொழுதுகளும் தோன்றுகின்றன. இதனையே பெரும்பொழுது என்றும் சிறுபொழுது என்றும் இலக்கியங்கள் சுட்டுகின்றன. ஒரு பாடலின்கண் அமைந்துள்ள திணையை உணர்வதற்கு நிலம் மட்டுமின்றி பொழுதும் பெருந்துணை புரிகின்றது. முதற்பொருள் நிலமுதற்பொருள், கால முதற்பொருள் என இருவகையினை உடையது. அதுபோல் ஒரு செயல் இயல்பாக நடைபெறுவதற்கு இடமும் காலமும் இன்றியமையாதவையாகும். இவ்வின்றியமையாமை கருதியே நிலமும் காலமும் முதற்பொருள் எனத் தொல்காப்பியரால் வழங்கப்பட்டன என்பது கருதத்தக்கதாகும்.

**தொல்காப்பியர் கூறும்பொழுது**

தொல்காப்பியர் ஒரு குறிப்பிட்ட நிலத்தோடு ஒரு குறிப்பிட்ட பொழுதினையும் இணைத்துக் கூறியுள்ள பொருத்தப்பாட்டை இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் ஆராய்ந்துள்ளனர். அதாவது முல்லை நிலத்திற்கு பெரும் பொழுதாக கார்காலமும் சிறுபொழுதாக மாலையும் இணைத்துள்ளார்.[69] அவ்வாறே குறிஞ்சி நிலத்திற்குக் கூதிர்காலமும் பனிஎதிர்பருவமும் பெரும்பொழுதாகவும் யாமம் சிறுபொழுதாகவும் சுட்டப்பட்டுள்ளது.[70] மருத நிலத்திற்கு வைகறை விடியல் என்னும் சிறுபொழுதைக் கூறி பெரும்பொழுதாக எல்லாப் பெரும்பொழுதினையும் மருதநிலத்தோடு சார்புபடுத்தலாம்.[71] அதுபோல நெய்தல் நிலத்திற்கு எற்பாடு சிறுபொழுதாகக் கூறப்படினும், எல்லாப் பெரும் பொழுதினையும் இவற்றோடு சார்புபடுத்தலாம் என்கிறார்.[72] பாலை நிலத்திற்கு நண்பகல் ஆகிய சிறுபொழுதையும், வேனில் பின்பனி ஆகிய பெரும்பொழுதினையும் இயைபுபடுத்திக் கூறியுள்ளார்.[73]

**“காரே கூதிர் முன்பனி பின்பனி**
**சீர்இள வேனில் வேனில் என்றாங்கு**
**இருமூன்று திறத்தது தெரிபெரும் பொழுதே”[74]**

என்பதில் அதன் வகையைச் சுட்டுகின்றார். மேலும் ஆண்டின் கூறாகக் கணக்கிடப்பெறும் பெரும்பொழுதினை,

**சித்திரை, வைகாசி - இளவேனில்**
**ஆனி, ஆடி - முதுவேனில்**
**ஆவணி, புராட்சி - கார்காலம்**
**ஐப்பசி, கார்த்திகை - கூதிர்காலம்**

**மார்கழி, தை - முன்பனிக்காலம்**

**மாசி, பங்குனி - பின்பனிக்காலம்**

என்று அறுவகைப்பருவமாகவும் நாளின் கூறாகக் கணக்கிடப்பெறும். சிறுபொழுதினை

**வைகறை - இராப்பொழுதின் பிற்கூறு**

**விடியல் - பகற்பொழுதின் முற்கூறு**

**எற்பாடு - பகற்பொழுதின் பின்கூறு**

**நண்பகல் - பகற்பொழுதின் நடுக்கூறு**

**மாலை - இராப்பொழுதின் முற்கூறு**

**யாமம் - இராப்பொழுதின் நடுக்கூறு**

என்று அறுவகைப் பொழுதாகவும் பகுத்து மொழிவர் செகதீசன்.[75]

பெரும்பொழுது ஆறு என்பதில் நூலாசிரியர்களுக்கோ, உரையாசிரியர்களுக்கோ எவ்வித வேறுபாடும் இல்லை. ஆனால் சிறுபொழுதுகள் ஆறு என்பதில் நூலாசிரியர்களிடையேயும் உரையாசிரியர்களிடையேயும் வேறுபாடு காணமுடிகின்றது. இறையனார் களவியல் உரையாசிரியர்,

**“யாமம், எற்பாடு நண்பகல் மாலை வைகறை”[76]**

எனச் சிறுபொழுதினை ஐந்தாகக் கொண்டார். நாற்கவிராசநம்பி,

**“மாலை யாமம் வைகறை எற்பாடு**

**காலை வெங்கதிர் காயும் நண்பகல் எனக்**

**கை வகைச் சிறுபொழுது ஐவகைத்து ஆகும்”[77]**

என ஐந்துவகையாகக் கொண்டார்.

சிவஞானமுனிவர் தமது தொல்காப்பியச் சூத்திரவிருத்தியுள் ‘‘வைகுறுவிடியல் என்னும் வினைத் தொகையை வைகுறுவும் விடியலும் என உம்மைத் தொகை ஆக்கி, வைகறையை வைகுறு எனவும் வெயிற்காலையை விடியல் எனவும் கொண்டு இவ்விரண்டும் மருதத்திணைக்குரியன என்றும் பிற்பகலை எற்பாடு எனக் கொண்டு அது நெய்தற்குரித்து என்றும் இங்ஙனம் சிறுபொழுது அறுவகைப்படும் என்றும் உரைப்பாரும் உளர்’’[78] என்று கூறிப் பின்வரும் பாடலைச் சான்றுகாட்டி விளக்குவர்.

**“காலையும் பகலும் கையறு மாலையும்**

**ஊர்துஞ் சியாமமும் விடியலுமென்றிப்**

**பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்” (குறுந்.32:1-3)**

என்னும் பாட்டினுள் சிறுபொழுது ஐந்தே கொண்டமையானும் பகல் எனவே பின்பகலும் அடங்கும். எனின் அதுபற்றி முன்பகலும் அடங்கும் என்றொழியாது, காலையை வேறுகூறினமையின், அது கருத்து அன்று ஆகலானும் ஆண்டும் வைகறையினையே விடியல் என்றமையிற் காலையை விடியல் என்றல் பொருந்தாமையானும் இதனானே "விடியல் வெங்கதிர் யாயும்" (கலித்.45) என்புழி விடியற் பின்னர்த்து ஆகிய வெங்கதிர் என்பதே பொருள் ஆம் ஆகலானும், விடிதல் இருள் புலர்தல் என்னும் பொருட்டு ஆகலின் விடியல், புலரி, வைகறை என்பன ஒருபொருள் கிளவி என்று விளக்கிச் சிறுபொழுதினை ஐந்தென்று நிலைநாட்டியுள்ளார்.[79]

மேலும் சிறுபொழுது ஐந்து என்பதற்கு மாறான கருத்தும் அறிஞர்களிடையே காணப்படுகிறது. சிறுபொழுது ஆறு என்பதற்கு, "வைகறை என்பது இரவின் கடைக்கூறு விடியல் என்பது பகற்பொழுதின் முற்கூறு எற்பாடு பகலின் கடைக் கூறாகும். இதனால் சிறுபொழுது ஆறென்பதே தேற்றம்"[80] என்பர் மு.அருணாசலம் பிள்ளை. எனினும் பிற்கால நூல்வழக்கில் பெரும்பொழுது ஆறென்பதற்கு ஏற்பச் சிறுபொழுதும் ஆறு எனக் கருதும் நிலை ஏற்பட்டுள்ளது.

காதாசப்தசதியில் முதற்பொருளாகிய நிலம் குறிப்பிடப்படவில்லையெனினும், காலமாகிய பொழுதினை உரிப்பொருள் அடிப்படையில் காணமுடிகின்றது. பெரும்பொழுதாகிய கார்காலம், மழைக்காலம், முன்பனிக்காலம் இளவேனில்காலம், முதுவேனில்காலம் என்னும் பொழுதுகள் மட்டும் சுட்டப்பெற்றுள்ளது. சிறுபொழுதுகள் இடம்பெறவில்லை.

**குறிஞ்சித் திணையின் பொழுது புனைவு**

குறிஞ்சிக்குரிய பெரும்பொழுது கூதிர்காலம் சிறுபொழுது யாமம் ஆகும்.

**"பனி எதிர் பருவமும் உரித்தென மொழிப"[81]**

என்னும் நூற்பாவின் வழி முன்பனிக்காலமும் குறிஞ்சிக்குப் பொருந்துவனவாகும்.

கூதிர் - ஐப்பசித் திங்களும் கார்த்திகைத் திங்களும் சேர்ந்த காலமாகும். முன்பனி மார்கழித் திங்களும் தைத்திங்களும் சேர்ந்த காலமாகும். யாமம் என்பது நள்ளிரவாகும்.

இப்பெரும்பொழுது, சிறுபொழுது குறித்து "குறிஞ்சிக்குப் பெரும்பான்மை களவுப்புணர்ச்சி பொருளாதலால் அப்புணர்ச்சிக்குத் தனி இடம் வேண்டப்படுதலின் கூதிர்காலத்திற்குப் பகலும் இரவும் நுண்துளி சிதறி இயங்குவார் இல்லை. ஆதலால் என்றும் அவ்விடத்தில் தனிப்பாடல் எளிதாதல் பற்றி அதற்கு அது சிறந்தது என்றும் நடுநாள் யாமம் அவ்வாறாதலின் அதுவும் சிறந்தது[82] என்றுரைப்பார் இளம்பூரணர். நச்சினார்க்கினியர், "குறிஞ்சி ஆவது புணர்தற்

பொருட்டு என்றும் அஃது இயற்கைப் புணர்ச்சி முதலியனவாகும் என்றும் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த பின் களவை நீட்டிப்பிக்கக் கருதும் தலைவனுக்குக் களவினைச் சிறப்பிக்கும் போது தலைவி அரியளாக வேண்டுமாகவே அவ்வருமையை ஏற்படுத்துவது ஐப்பசியும் கார்த்திகையுமாகிய கூதிர்காலமும் அதன் இடையாமமும் ஆகும் என்றும் இருள் செறிந்து மழை நிரம்பப் பெய்தலின் தலைவன் தலைவியைச் சேர்தல் அரிதாதலாலும் யாமம் ஆகிய நள்ளிருள் பொழுதில் விலங்குகளும் பறவைகளும் எவ்விடத்தும் இயங்காது துணையுடன் இன்புற்று இருத்தலின் காமக்குறிப்பு மிகவும் பெருகுதலாலும் காவல் மிகுதியைக் கருதாது தலைவியைக் காணவரும் தலைவனைக் குறியிடத்து எதிர்ப்பட்டுப் புணருங்கால் இன்பம் பெருகுதலின் இந்நிலத்திற்குக் கூதிர்காலம் சிறந்ததெனப்படும்"[83] என்று விளக்கியுள்ளார்.

**கூதிர்காலம்**

குறிஞ்சிக்குரிய கூதிர்காலம் குளிர் (அ) வாடை என்ற பெயரால் அழைக்கப்படும். இச்சொல் அகஇலக்கியத்தில் பதினாறு[84] இடங்களில் பயின்று வந்துள்ளது.

**"வாங்கா வரிப் பறைச் சிறு பாடு முணையின்**

**………………………………………….**

**நீர் இரங்கு அரை நாள் மயங்கி கூதிரொடு**

**வேறு புல வாடை அலைப்ப**

**துணை இலேம்; தமியேம், பாசறையேமே" (நற்.341:1-10)**

என்ற பாடல் கூதிர்காலத்தில் பாசறையில் தங்கியிருந்து வருந்தும் தலைவன் நிலையைச் சுட்டுகின்றது. அதுபோல் தலைவியும் அக்காலத்தில் தலைவனைப் பிரிந்து வருந்தும் கொடுமையினைக் குறுந்தொகை (76:1-6) எடுத்துரைக்கின்றது

**அற்சிரம் அல்லது முன்பனிக்காலம்**

மழைக்காலத்தைத் தொடர்ந்து வருவது அற்சிரம் அல்லது முன்பனிக்காலம் எனப்படும். இது பதினாறு[85] இடங்களில் காணப்படுகின்றது. குளிர்ந்த பனியையுடைய முன்பனிக்காலம் தனித்திருப்போர்க்குத் தாங்குவதற்கு அரிதாகும். அவ்வருத்தத்தால் தோன்றிய தலைவியின் கண்ணீர் தலைமகனின் செயலைத் தடுக்கும் (நற்.5:1-9) எனப் பெருங்குன்றூர்கிழார் கூறுகிறார். அவரையின் முதல் பூப்பூக்கும் முன்பனியின் தொடக்கத்தில் வருவதாய்க் கூறிச் சென்ற தலைவன் தினையின் மறுதாளில் மறுமுறை பூக்கும் பின்பனியிலும் வரவில்லை எனக்கலங்கிய தலைவியின் நிலையினை,

**“வார் உறு வணர் கதுப்பு உளரி, புறஞ் சேர்பு**

**…………………………………………….**

**பெரும்புனக் குறவன் சிறுதினை மறுகால்**

**கொழுங்கொடி அவரை பூக்கும்**

**அரும்பனி அற்சிரம் வாரா தோரே” (குறுந்.82:1-6)**

என்னும் பாடல் சுட்டும்.

**யாமம்**

குறிஞ்சித்திணையின் சிறுபொழுதாகிய யாமம், யாமம், நடுநாள், கங்குல், இரவு (இருள்), எல்லி, அரைநாள், பானாள், அல்கல், என பல்வேறு பெயர்களில் வழங்கப்படினும் அவை அனைத்தும் நடுஇரவையே குறிக்கின்றன.[86]

**“நீர் நிறம் கரப்ப, ஊழுறுபு உதிர்ந்து**

**பூமலர் கஞலிய கடு வரற் கான் யாற்று**

**கராஅம் துஞ்சும் கல் உயர் மறி சுழி,**

**மராஅ யானை மதம் தப ஒற்றி**

**உராஅ ஈர்க்கும் உட்குவரு நீத்தம்**

**கடுங்கண் பன்றியின் நடுங்காது துணிந்து,**

**நாம அருந் துறைப் பேர்தந்து, யாமத்து**

**ஈங்கும் வருபவோ? ஓங்கல் வெற்ப!**

**ஒரு நாள் விழுமம் உறினும் வழி நாள்**

**வாழ்குவள் அல்லள், என் தோழி” (அகநா.18:1-10)**

என்பதில் தலைவன் வரும் யாமப் பொழுதின் ஏதங்கள் குறித்துக் கபிலர் விளக்குவர். மேலும் இடி இடித்து நெருப்பை உமிழ்ந்து எவ்விடத்தும் சென்று கலக்கும் மழைபெய்த இருண்ட நடுஇரவுக் காலத்தே ஒழுங்கு விட்டு மின்னல் உண்டாக்கிய ஒளியிலே ஆண்யானை, பெண்யானையுடன் வந்து புன்செய் நிலத்திலே புகுந்து பயிரைத் தின்னா நிற்கும். அவற்றின் காலடிச் சத்தம் கேட்டு கானவன் உயர்ந்த மலையில் ஆசினிப்பலாவின் மேலிட்ட பரணிலே ஏறுவதைக் கலித்தொகை உரைக்கும் (கலித்.41:5-9).

நீ தலைமகள்பாற் காதல் உடையை என்பதோ இனிது; ஆனால் இடியென்றும், மழையென்றும் பாராமல் அஞ்சத்தக்க இரவில் வருதல் இன்னாது; நீ அன்பிலை என்பதோ இனிது; ஆனால் மஞ்சு படியும் மலைக்கணவாய் வழியே இரவில் வருதல் இன்னாது; நீ அருவினை என்பதோ இனிது; ஆனால் ஒளிறுவேல் வலனேந்தி களிறு உலவும் அரிய வழியில் வருதல் இன்னாது. (கலித்.49:10-21) என இரவு வருவானைத் தோழி பகல் வருக எனக் கூறுமிடத்தும் தலைமகள்

செய்த இரவுக்குறியில் நீவரின் மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறும் அணங்கென இவ்வூரார் அஞ்சுவார். நீ இரவில் குறியிடத்து வருவதால் ஏற்படும் ஓசையைக் கேட்டு களிறு என்றும் புலியென்றும் இவ்வூர் எண்ணும் (கலித்.52:7-18) என்னும் இவ்விடங்களில் யாமம் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

மேலும் முல்லைக்குரிய பெரும்பொழுதிற்குரிய காரும் சிறுபொழுதாகிய மாலை அந்தியும், மருதத்திற்குரிய சிறுபொழுதாகிய வைகறை, விடியல் பகல், காலை, பாலைக்குரிய முதுவேனில் போன்றவையும் குறிஞ்சித்திணையில் இடம்பெற்றுள்ளது[87].

காதாசப்தசதியில் முன்பனிக் காலம் குறித்து மூவிடங்களிலும்[88] யாமம் நடுநிசி குறித்து ஈரிடங்களிலும் (காதா.334:1-4,194:1-4) புனைவு நோக்கில் கூறப்பட்டுள்ளது.

முன்பனிக்காலத்தில் பெரிய குளத்தின் நீரின் மேலே சுடும். ஆனால் உள்ளே குளிர்ந்து இருக்கும் சான்றோர் மனமும் மேலே சுடுவது போலச் சினந்தாலும் உள்ளே அன்பினால் குளிர்ந்து தானிருக்கும் எனக் கவிக்கூற்றாக முன்பனிக்காலம் சுட்டப்பெற்றுளது. (காதா.157:1-4) அதுபோல,

**“மூன்றாம் யாமமும் முடிந்தது துயில்கென” (காதா.333:1)**

**“பெருமழை யிரவின் நடுநிசி யறியும்” (காதா.194:4)**

என்னும் பாடல்களில் யாமம் சுட்டப்பெற்றுளது. ஆந்திர நாட்டு இலக்கியமாகிய காதாசப்தசதியில் சங்க அகஇலக்கியத்தில் உள்ளதுபோல் முதற்பொருள் சுட்டப்படவில்லை. உரிப்பொருள் அடிப்படையிலே உணரமுடிகின்றது.

**முல்லைத் திணையின் பொழுது புனைவு**

முல்லைக்குரிய பெரும்பொழுது கார்காலம் சிறுபொழுது மாலையாகும்.[89] கார்காலமானது வினைவயிற்பிரிந்து சென்றுள்ள தலைமகனுக்கும் வீட்டில் வாழ்ந்து கொண்டிருக்கும் தலைமகளுக்கும் தனிமைத் துயரினை ஏற்படுத்தும் காலமாகும். மழை பொழியும் மாலைக்காலத்து உயிர்கள் தத்தம் துணையோடு வாழ விரும்புவதும் இயற்கை. அதனால் பிரிந்திருப்போர் சேரத்துடிப்பர். பிரிந்தோரைச் சேர்த்து வைக்கும் காலமாகவே முல்லைக்குரிய பொழுதுகள் சித்திரிக்கப்பெற்றுள்ளன.

**உரையாசிரியர் கருத்து**

முல்லை ஆகிய நிலம் வேனிற்காலத்து வெப்பத்தால் மரம், புதர் கொடி ஆகிய அழகிழந்து கிடந்தபின் கார்காலத்தில் மேகங்கள் முழங்க அழகுபெறும். ஆதலின் முல்லை நிலத்திற்குக் கார்காலமாகிய பொழுது சிறந்தது என்பர்[90] இளம்பூரணர்.

“பிரிந்துள்ள விடும் தலைவன் திறம் எல்லாம் பிரிந்திருந்த தலைவி கூறுதலே முல்லைப் பொருளாகவும் பிரிந்து போகின்ற தலைவன் திறம் கூறுவன எல்லாம் பாலைப்பொருளாக வருதலின் அம்முல்லை மீட்சிக்கும் தலைவி இருத்தற்கும் துணையாக வருவது கார்காலமாகும் என்று உரிப்பொருளோடு இணைந்து நச்சினார்க்கினியர் விளக்கியுள்ளார்”[91]

**பெரும்பொழுது**

முல்லைக்குரிய பெரும்பொழுது சங்கப்பாடல்களில் கார்காலம், மாரிக்காலம் என்ற சொற்கள்வழிச் சுட்டப்பெற்றுள்ளது[92]. காதாசப்தசதியில் கார்காலம்[93] மழைக்காலம்[94] வசந்தகாலம் (காதா.123:1-4,320:1-4) என்ற பெயர்களில் கூறப்பட்டுள்ளது.

**கார்காலம்**

நீருண்ட மேகம் நீலமணி போலும் கருக்கொண்டு கரிய வானிலே இடியினை முழக்கி மழையினைப் பெய்தது. அதனால் நிலம் குளிரக் காடு தழைத்தது. உழுதொழிலுக்கு இனமாவரையும் எருதினங்களையும் ஆராயும் உழவர்கள் இனிய குரல் கொண்டு ஒலி எழுப்புவர். குட்டியினையுடைய இளைய பெண்மானைத் தழுவிக்கொண்டு முல்லைக்காட்டில், முறுக்குண்ட கொம்பினையுடைய ஆண்மான் பசிய பயிரிடையே துள்ளித்திரியும் இவ்வாறாக மேகம் பெருமழைபொழியக் கார்ப்பருவம் வந்தது. (அகநா.314:107)

கார்ப்பருவத்தே காயாம்பூவின் அழகிய மலர்களின் இடையிடையே சிவந்த முதுகினை உடைய இந்திரகோபப்பூச்சிகள் பரவி ஊர்ந்து திரிந்தன. முல்லைக் கொடிகளினின்றும் உதிர்ந்து வீழும் நல்ல பல முல்லைப்பூக்கள் பரந்து கிடந்தன. ஆதலால், சிறந்த நிலமாகிய முல்லை நிலப்பரப்பு ஓவியம் வல்லோனால் தீட்டப்பட்ட எழில் ஓவியம் போல் காட்சி தந்தது என்பதை,

**“வானம் வாய்ப்பக் கவினி, கானம்**
**கமஞ்சூல் மாமழை கார்பயந்து இறுத்தென**
**மணிமருள் பூவை அணிமலர் இடையிடை**
**செம்புற மூதாய் பரத்தலின், நன்பல**
**முல்லை வீகழல் தாஅய் வல்லோன்**
**செய்கை அன்ன செந்நிலம் புறவின்” (அகநா.134:1-6)**

என்னும் பாடல் சுட்டும்.

கார்ப்பருவம் வினைமுற்றி மீளும் தலைவனை, துணையொடு வதியப்பெறாமையால் முல்லை எள்ளி நகைப்பதாகவும் (குறுந்161:1-6) தனித்திருக்கும் தலைவியை நகுவதாகவும் (குறுந்.186:1-4) பாடல்கள் உள.

முல்லைக்கலியில் பிரிந்து மீளும் தலைமகன் திறத்தையெல்லாம் பிரிந்திருந்த கிழத்தி கூறும் வாய்ப்பே சுட்டப்படவில்லை. மாறாக, ஏறுகோள்விழாவும் கோவலர் வாழ்க்கையுமே விளக்கப்படுகின்றன. ஆகவே கார்காலமும் மாலையும் பிற அகப்பாடல்களில் வருணிக்கப்படுவதைப் போல இங்கு வருணிக்கப்படவில்லை. கருப்பொருள்களைச் சிறப்பாக வருணிப்பதிலேயே முல்லைக்கலி முதலிடம் பெறுகின்றது. முல்லைநிலத்தில் கார்காலத்தில் மலரும் மலர்களின் வருணனையை மிகுதியாகக்கூறி அம்மலர்களைச் சூடும் ஆயர் என்று குறிக்கப்படுவதிலேயே முதற்பொருளாகிய நிலமும் பொழுதும் விளக்கப்படுகின்றன.

காதாசப்தசதியில், முன்பொருநாள் கார்காலத்தில் இடிமுழக்கம் கேட்டஞ்சிய தலைவியைத் தலைவன் அணைத்துக் கொண்டான். அ∴து அவளுக்கு இன்பம் பயந்தது. ஆனால் இன்றோ தலைவன் பிரிந்து சென்றதனால் துன்பம் தந்தது (காதா.27:1-4) தலைவன் கார்காலத்தில் வயல்உழுது சேற்றில் சிக்குண்ட ஏர்முனையை இழுத்துக் களைத்து அதன்பின் வீடுவந்ததும் உழைப்பின் களைப்பால் தூங்கிவிட்டான், கார்காலத்தில் பிரிவுத்துயர் அதிகம். தலைவி தலைவன் அருகிருந்தும் தழுவக்கிடக்காமல் தனித்து இருப்பதைக்கண்டு தன் மன வேட்கைகளை அடக்கித் கொண்டாள் (காதா.270:1-4) என்று கார்காலம் மனஉணர்வுகளோடு தொடர்புபடுத்திக் கூறப்பட்டுள்ளது.

**மாலைப்பொழுது**

இப்பொழுது குறித்து, ‘‘மாலைப்பொழுது முல்லை நிலத்திற்கு இன்றியமையாத முல்லைப்பூ மலரும் காலமாதலால் அந்நிலத்திற்குக் கருப்பொருளாகிய ஆநிரை வரும் காலம் ஆதலாலும் அவ்வேளையில் தனித்திருப்பாற்கு இவற்றைக் காணும்பொழுது வருத்தம் மிகுதலின் முல்லைக்கு மாலைப்பொழுது சிறந்ததாயிற்று’’[95] என்றுரைப்பர் இளம்பூரணர்.

நச்சினார்க்கினியர், ‘‘வினைவயிற் பிரிந்து மீளும் தலைவன் தேர் ஊர்ந்து பாசறையிலிருந்து மாலைக்காலத்தில் ஊரிடத்து வரும் காலம் ஆவணியும் புரட்டாசியும் ஆதலால் அவை வெப்பமும் குளிர்ச்சியும் மிகாது இடைநிகர்த்த நிலைபெற்று ஏவல் செய்யும் இளையோர்க்கு நீரும் நிழலும் பெறுதலின் மகிழ்ச்சியடைந்து விலங்குகளும் பறவைகளும் தம் துணையோடு இன்புற்று விளையாடுவன கண்டு தலைவனுக்கும் தலைவிக்கும் காமக்குறிப்பு மிகுதலாலும் முல்லை நிலத்திற்குக் கார்காலம் சிறந்தது என்று கூறுவார். மேலும் புல்லைமேய்ந்து ஏற்றோடு கன்றை ஈன்ற பசுக்கள் கன்றுகளை நினைந்து

மன்றின்கண் புகவும் ஆயர்கள் தீங்குழல் இசைப்பதும் பந்தரில் படர்ந்து முல்லைக்கொடிகள் மலர்ந்து மணம் வீசுவதும் வருகின்ற தலைவனுக்கும் தலைவிக்கும் காமக்குறிப்புச் சிறத்தலின் அக்காலத்து மாலைப்பொழுது முல்லைநிலத்திற்கு உரியதாயிற்று''[96] என்று விளக்குவார்.

முல்லைக்குரிய சிறுபொழுது மாலை,[97] அந்தி[98] ஆகிய சொற்கள் வழி அறியப்படுகிறது. மாலை என்ற சொல் முன்னிரவுப் பொழுதையும் அந்தி என்ற சொல் மாலைப்பொழுதின் தொடக்கத்திற்கு அண்மையில் உள்ள நேரம் எனவும் கொள்ளஇயலும். காதாசப்தசதியில் மாலை என்ற சொல் ஈரிடங்களில் (காதா.112:1-4,268:1-5) பயின்றுவந்துள்ளது.

**"............................ மதவு நடைத்''**
**தாம்பு அசை குழவி வீங்குசுரை மடிய**
**கனை அல் ஆம் குரல காற் பரி பயிற்றி**
**படு மணி மிடற்ற பய நிரை ஆயம்**
**கொடு மடி உடையர் கோற் கைக் கோவலர்**
**கொன்றை அம் குழலர் பின்றைத் தூங்க**
**மனைமனைப் படரும் நனை நகு மாலை'' (அகநா..54:6-12)**

என்னும் பாடலில் மாலைபொழுது, செருக்கிய நடையினையுடைய இளங்கன்றுகள் தாமணிக்கயிறுகளால் கட்டப்பட்டிருந்தது. அக்கன்றுகளிடத்தே பெருத்த தம் பால்மடிகள் கரைந்து சுருங்குவதை விரும்பியனவாய்க் கனைக்கின்ற குரலினையும் ஒலிக்கும் மணிகட்டிய கழுத்தினையும் உடைய பால் தரும் பசுக்கூட்டங்கள் தம் கன்றுகளை நினைந்து தத்தம் வீடுகளை நோக்கித் தம் கால்களை விரைவாகப் பெயர்த்து எடுத்து வைத்துக் சென்று கொண்டிருக்கும். கோலைக் கையிலே கொண்டவரும் வளைந்த மடிகோலிய உடையை உடுத்தியவருமான கோவலர்கள் கொன்றைப் பழத்தினால் இயன்ற அழகிய குழலினை இசைத்த வண்ணம் அவற்றின் பின்னே மெத்தென நடந்து சென்றனர். என்று வருணிக்கப்பட்டுள்ளது.

மேலும் குறிஞ்சிக்குரிய பெரும்பொழுதாகிய வாடை, கூதிர், முன்பனி சிறுபொழுதாகிய இரவு, நடுநாள், கங்குல், யாமம், பானாள், அரைநாள், மருதத்திற்குரிய வைகறை, பாலைக்குரிய வெயில் (முதுவேனில்), எல் (பகல்), போன்றவையும் முல்லைத்திணையில் திணை மயக்கமாகக் காணப்படுகின்றது.[99]

**பாலைத் திணையில் பொழுது புனைவு**

பாலைத்திணைக்கு நிலம் இல்லை. பொழுது உண்டு.

**“நடுவு நிலைத் திணையே நண்பகல் வேனிலோடு**

**முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே”**[100]

எனப் பாலைக்கு இளவேனில், முதுவேனில் பெரும் பொழுதாகவும் நண்பகல் சிறுபொழுதாகவும் சுட்டப்பெற்றுள்ளது. மேலும் பின்பனிப் பருவமும் உரியதாகும்.[101]

**வேனிலும் நண்பகலும்**

இளம்பூரணர் இப்பொழுது குறித்து “பிரிவின்பொழுது தலைவனுக்கு வருத்தம் ஏற்படும் என்று தலைவி வருந்துங்கால் நிழலும் நீரும் இல்லாத வழி ஏகினார் எனவும் வருந்துமாதலின் பாலைக்கு வேனிலும் நண்பகலும் சிறந்தன என்றுரைப்பர்.”[102] நச்சினார்க்கினியர் “காலையும் மாலையும் நண்பகலை ஒத்த கடுமை உண்டாகிச் சோலை தேம்பிக் கூவன் மாறி, நீரும் நிழலும் இல்லாமல் நிலம் விளைச்சலைத் துறந்து பறவைகளும் விலங்குகளும் தனிமையுற்று இன்பம் இல்லாமல் துன்பம் பெருகுவதொரு காலம் ஆதலின் இன்பத்திற்கு இடையூறாகிய பிரிவிற்கு நண்பகலும் வேனிலும் சிறந்தவாயின என்று கூறியுள்ளார்.”[103]

**முதுவேனில்**

பாலைத் திணையின் பெரும்பொழுதாகிய முதுவேனில் என்றூழ் எனவும் கோடை வெயில் எனவும் இலக்கியங்கள் சுட்டுகின்றன. இது குறித்து தொண்ணூற்று மூன்று[104] பாடல்கள் காணப்படுகின்றன. காதாசப்தசதியில் இளவேனில் (காதா6:1-3) முதுவேனில் (காதா183:1-4, 241:1-4, 371:1-4, 379:1-4, 323:1-4, 473:1-4, 480:1-4) நடுப்பகல் (காதா323:1-4) ஆகிய பொழுதுகள் இடம் பெற்றுள்ளன.

பாலை நிலமானது ஏனைய பருவம் ஒன்றும் எய்தாமல் வேனிற்பருவம் ஒன்றனையே எய்துகின்ற காய்ந்து வாடிய காந்தளை உடைய அழல் வீசுகின்ற நீண்ட சுரத்தை உடையது. (நற்.29:1-2) செந்நாயால் கொல்லப்பட்ட மரை ஆவே பாலைநிலத்தின்கண் செல்லும் மாந்தருக்கு உணவாக அமையும் (நற்.43:1-5) கோடைக் காற்றானது யானை வருந்திப் பெருமூச்சு விடுவது போலிருக்கும். (நற்.62:1-4)

களிறு யாமரத்தின் பட்டைகளை உரித்துத் தன் சுற்றத்தாருக்கு வழங்கும் அன்புறு காட்சிகளும் (குறுந்.255:1-8) கோடைக்காலத்தில் செம்முருக்க மரத்தின் பூங்கொத்தில் காய்த்துப் பழுத்து முற்றிய நெற்றுப் போன்ற மாட்சிமை அற்ற விரல்களைக் கொண்ட உரிய வாயையுடைய பேய் வளமைமிக்க பழமையான ஊரிடத்தே தெய்வத்திற்கு வழிபாட்டோடு இடப்படும் ஊன் விரவிய பலிச்சோற்றை

உண்ணுதற்காகத் தான் வாழும் பாழான மன்றத்தை இடித்துக் கொண்டு எழும் (நற்.73:1-3) என்ற நம்பிக்கைகளும் நிலவின.

மழவர்கள் பகைவரின் ஆநிரைகளை கவர்ந்து செல்லுதல் (அகநா.101:5-16) ஆண்மான் நீர்பருகும் வேட்கையுடன் தழை உண்பதைக் கைவிட்டு நீரற்ற குளம் நோக்கிச் சென்று உண்ணும் நீர் பெறாது வருந்துதல் (அகநா.353:7-15) எனத் துன்புறும் காட்சிகளும் முதுவேனில் காலத்தில் நிகழும் என அக இலக்கியங்கள் சுட்டுகின்றன.

காதாசப்தசதியில் தலைவி பிரிவில் நொந்தபோது கோடையின் வெம்மையைக் குளிர்விக்கச் சந்தனக் குழம்பு கொணர்ந்த தோழியை நோக்கி தலைவி, தாங்க முடியாத கோடை வெயில் கொளுத்தினும்கூட காதலர்கட்கு அரவணைத்து மகிழ்வதால் ஏற்படும் தண்மையின்பம், உடலுக்கும் மட்டும் குளிர்தரும் சந்தனச்சாறு தருவதன்று என்று கூறி சந்தனத்தை வெறுத்தாள் (காதா.241:1-4) அதுபோல்

**"வாவிகள் வற்றிட வளர்த்தனை புதரிலை**
**எளிதில் குறியிடம் எய்தச் செய்தனை!**
**களிநலக் கனகக் கட்டளைக் கல்லாம்**
**வேனில் நீயே விளங்குக வளர்ந்தே" (காதா.473:1-4)**

எனத் தலைவி பிற பருவங்களை விட வேனிற் பருவமே காதலர் கலந்துறவாடச் சிறந்த பருவம் என்று கூறுகிறாள். ஊரார் நீர் எடுக்க வாவிகட்கு வருவர். வேனிலில் நீர் வற்றி விடுவதால் அங்கு வரமாட்டார் அவ்விடம் குறியிடமாக அமையும். மேலும் இலையுதிர் காலம் நீங்கி, புதர்களில் இலைகள் செழித்திருக்கும் காலம் வேனிலாகும். ஆதலின் மறைவிடங்கள் அமையும். ஆகையால் வேனிற்காலம் காதலுணர்வைத் தூண்டும் காலம் மட்டுமல்ல. காதலர்கட்கு அனுகூலமான காலமும் ஆகும். எனவே காலம் நீடு வளர்ந்து விளங்க வாழ்த்துகின்றாள். மேலும் இந்த வேனிற்காலம் கட்டளைக்கல் போன்றது. தங்கத்தை உரசி அதன் மதிப்பறிவது போல வேனிற்காலம் எனும் கட்டளைக் கல்லில் நமது களி நலம் என்னும் தங்கத்தை உரசிப்பார்க்க வேண்டும். தான் வாழ்நாளின் இன்பப்பேறு பெற்றோமோ என்பதை இந்த வேனில் பருவக் கட்டளைக் கல்லில் உரசித்தான் தெரிந்து கொள்ள வேண்டும் என்று காதாசப்தசதி உரைக்கின்றது. இவ்வாறு காதல் இன்பத்தை மட்டுமே காதாசப்தசதி பாடல்கள் கூறுகின்றது. மற்றபடி முதற் பொருளுக்குரிய மரபுகள் இந்நூலில் காணப்படவில்லை.

**இளவேனில்**

இளவேனில் முதிரவேனில் எனவும் முற்றா வேனில் எனவும் இன்ப வேனில் எனவும் அழைக்கப்படும். அகஇலக்கியங்களில் அறுபத்திமூன்று[105] இடங்களில் இப்பருவம் சுட்டப்பெற்றுள்ளது.

**“வைகு புலர் விடியல், மை புலம் பரப்ப**
**கரு நனை அவிழ்ந்த ஊழுறு முறுக்கின்**
**எரி மருள் பூஞ் சினை இனச் சிதர் ஆர்ப்ப**
**நெடு நெல் அடைச்சிய கழனி ஏர் புகுத்து**
**குடுமிக் கட்டிய படப்பையொடு மிளிர**
**அரிகால் போழ்ந்த தெரி பகட்டு உழவர்**
**ஓதைத் தெள்விளி புலம்தொறும் பரப்ப**
**கோழிணர் எதிரிய மரத்த கவினி**
**காடு அணி கொண்ட காண்தகு பொழுதில் (அகநா.41:1-9)**

என்ற பாடலில் இளவேனில் காலத்தின் அழகுறும் காட்சிகள் சுட்டப்பட்டுள்ளன. அதுபோல் நீர் பெருகின்ற கரையிடத்தே அழகுற நின்ற ஒரு பூங்குழையை உடைய பல பலதேவனைப் போலப் பூங்கொத்துக்கள் உடைய வெண்கடம்பும் பருதியஞ் செல்வனான கதிரவனைப் போல அரும்பு மலர்ந்து இதழ் விரிந்த வாய் இருக்கும் செருந்தியும் சுறாமீனைக் கொடியாகக் கொண்ட மன்மதனைப் போலக் கரிய வண்டுக் ஆர்த்துக் கொண்டிருக்கும் காஞ்சியும் காமனின் தம்பியான சாமனைப் போல் நிறம் மாறுபட்டு விளங்கிய பூக்களை உடைய ஞாழலும் இடபத்தினைக் கொடியாக உடைய இறைவனைப் போல், பூக்கள் காலத்தை எதிர்கொண்ட இலவமும் குற்றமற்ற சிறப்பினை உடைய ஐவர்களின் நிறத்தின் தன்மை போல, கரையிடத்துப் பூக்கள் விரிந்து பிற மரங்களோடே அழகுபெற நின்றன. பிரிந்தர்க்கு வருத்தமும் கூடியிருந்தார்க்குப் பெருமையும் தந்தது என இளவேனில் காலத்தின் சிறப்பு எடுத்துரைக்கப்படுகிறது. (கலித்.26:1-8). மேலும் அறிவில்லாத அமைச்சனின் திறனற்ற செயலால் பெருமை அழிந்த அரசனது நாட்டிலே பகையரசனது படைகள் வந்துவிடுதல் போல் இளவேனில் தங்குதலைச் செய்தது (கலித்.27:7-8) எனவும் போதவிழ் மரத்தில் இருந்தும்பிகள் இன்னிசை பாடுவது (கலித்30:1-4) தலைவின் நெஞ்சத்தைப் போதுறச் செய்தல் (கலித்.33:22-25) ஆடும் மயிலும் ஆலும் குயிலும் இவளை எள்ளி நகைக்கின்றது (கலித்.33:22-25) எனவும் இளவேனிலின் சிறப்புக் கூறப்படுகின்றது.

காதாசப்தசதியில் தலைவன் இளவேனிற் காலத்தே பிரிவிடைச் செல்ல முனைந்தான். பிரிவாற்றாது தலைவி மெலிந்தாள். மன்மதனின் மலரம்புகளில்

ஒன்றான அசோகமரம் பூக்கத் தொடங்கியது. இது கண்ட தலைவி ஆற்றியிருந்தல் அரிதாயிற்று. அசோகம் அவளைச் சோகமுறச் செய்தது. அசோகம் பெண்கள் உதைத்தலால் மலரும் என்பது கவிமரபு. தலைவனுடன் கூடியிருந்த காலத்தில் தலைவி அசோகமரத்தைப் பூக்கச் செய்வதற்காக உதைத்தாள். அசோகமரம் தன்னை உதைத்து அவமானப் படுத்தியதற்காகப் பழிவாங்கச் சமயம் பார்த்திருந்தது. காலம் வந்தது. தலைவனைப்பிரிந்த தையலை வாட்டுகிறது. இதனைத் தோழி தலைவனுக்குக் கூறி செவவழுங்குவித்தாள் (காதா.6:1-3)

**"மாந்தோப் பினிலே வண்டின மிவ்விதம்**
**செயல்முனைப் பின்றித் திரிதர மாட்டா!**
**எங்கே யாயினும் எரிதழ லின்றிப்**
**புகைதோன் றிடுமோ? பொற்கொடி! புகலாய்" (காதா.414:1-4)**

என்பதில் இளவேனிற்காலம் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**பின்பனிப் பருவம்**

''முன்பனிப் பருவத்தையும் பின்பனிப்பருவத்தையும் தனித்தனியே பிரிந்துணர முடிவதில்லையென்றாலும் வாடை, மழையும் முன்பனிக்காலத்தைக் குறிக்கும் என்றும் கடும்பனி பின்பனிக் காலத்தைக் குறிக்கும் என்றும் நச்சினார்க்கினியர் கூறுகிறார்.''[106]

மேலும் ''நிலனொருங்கு மயங்குத லின்று'' (தொல்.அகத்.12) எனவே காலம் இரண்டும் மயங்குமென்றலின் முன்பனியும் பின்பனியும் மயங்கிற்று என்று கருதுகிறார்[107] அகஇலக்கியத்தில் கடும்பனி அற்சிரமாகிய பின்பனி குறித்து எட்டிடங்களில்[108] பயின்றுவந்துள்ளது.

**''கோழிலை அவரைக் கொழுமுகை அவிழ,**
**ஊழ்உறு தோன்றி ஒண்பூத் தளைவிட**
**புலம்தொறும் குறுகினம் நரல, கல்லென**
**அகன்றுஉறை மகளிர் அணிதுறந்து நடுங்க**
**அற்சிரம் வந்தன்று'' (அகநா.217:9-13)**

எனப் பனிக்காலம் சுட்டப்பெற்றுள்ளது. அதுமட்டுமின்றி அணிந்துள்ள அணிகள் தண்ணெனும்படி இரவில் வாடைக்காற்று வீசும் பனிக்காலம் என்றும் தோள்கள் குளிரால் நடுங்கி ஆகத்தைச் சேரும்படி சின்மழை தூற்றும் பனிக்காலம் என்றும் முல்லையரும்புகள் போன்ற முளைகள் தம்முள் பொரும்படி முற்றிய

கடும்பனிக்காலம் என்னும் பனிக்காலத்தின் இயல்பு கலித்தொகையில் பேசப்படுகிறது (கலித்.31:11-20)

**சிறுபொழுது**

பாலைக்குரிய சிறுபொழுதாகிய நண்பகல் பகல் எல் என அகப்பாடல்களில் குறிப்பிடப்படுகின்றது.[109]

ஞாயிற்றின் வெம்மை கொஞ்சும் தணிந்த மாலையின் முற்படுபொழுது (நற்.305:6) நண்பகல் என விளக்கப்பட்டுள்ளது.

**“........................................பாம்பின்**

**உரி நிமிர்த்தன்ன உருப்பு அவிர் அமையத்து” (குறுந்.154:1-2)**

என்ற பாடலில் பாம்பின் தோள்கள் மேல் நிமிர்ந்து நின்றாள் போல வெம்மையான கானலுடன் கோடையின் நண்பகற்பொழுது விளங்கியதாகக் கூறப்படுகின்றது. மேலும் வானில் இயங்குகின்ற விளங்கும் ஒளியினைக் கொண்ட ஞாயிற்று மண்டிலம் நெருப்பைக் போன்று செந்நிறங் கொண்டு சுட்டெரிக்கும் வெப்பம் மிகுந்த காடு என நண்பகல் அகநானூற்றில் (அகநா.11:1-2) குறிப்பிடப்பெற்றுள்ளது.

**ஒண்கதிர் தெறுதலின் (கலித்.2:5)**
**வேனிலுழந்த (கலித்.7:1)**
**அழலன்ன வெம்மை (கலித்.11:6)**

ஆகிய சொற்றொடர்களின் மூலம் நண்பகலை உய்த்துணர முடிகிறதே தவிர நண்பகல் என்று தெளிவாகக் குறிப்பில்லை (அகநா.37:15). மேலும் குறிஞ்சிக்குரிய கூதிர், வாடை, மழை, முன்பனிப் பருவமாகிய அற்சிரம் சிறுபொழுதாகிய யாமம், இரவு, பானாள், நடுநாள், கங்குல், அரைநாள் முல்லைக்குரிய கார் மாலை, அந்தி[110] போன்றவையும் மருதத்திற்குரிய வைகறை விடியல், நாள், காலை, ஆகியனவும் இடம்பெற்றுள்ளது.[111] நெய்தலுக்குரிய பொழுதுகள் வெளிப்படையாகக் காணவில்லை எனினும்,

“------------------------------------------- **ஓங்கிய,**

**பருதி அம் குப்பை சுற்றி பகல்செல்” (அகநா.37:14-15)**

என்ற தொடர்மட்டும் குறிப்பாக எற்பாட்டினைச் சுட்டுகின்றது.

தலைவனைச் செலவழுங்குவிக்கத் தலைவி கோடைக் கால நடுப்பகலில் சூரிய கிரணங்களின் வெம்மை சுடுதலால் ஆற்றாது காட்டுமரங்கள் அழுவது போலச் சிலவண்டு இரைச்சல் கேட்கிறது. இத்தகைய கோடையில் என்னை பிரிந்து போக நினைப்பது தகுமா? எனறு தலைவி கூறுகிறாள். (காதா.379:1-4) இவ்வாறு உரிப்பொருள் அடிப்படையில் பொழுது புனையப்பட்டுள்ளது.

**மருதத் திணையின் பொழுது புனைவு**

மருத நிலத்திற்குரிய பெரும்பொழுதினைத் தொல்காப்பியர் சுட்டிக் கூறாமையால், அறுவகைப் பெரும்பொழுதும் மருதத்திற்கு உரியன என்பர் உரையாசிரியர்கள். வைகறையும் விடியற்காலமும் மருதத்திற்குரிய சிறுபொழுதுகளாகும்.[112]

மருதத்திற்கும் நெய்தலுக்கும் பெரும் பொழுது கூறப்படவில்லை. ஆதலின் பெரும் பொழுது யாவும் அவற்றிற்குரிய என்பது கருதப்படும் என்பதன்றிக் காரும் இளவேனிலும் வேனிலும் பெரும்பொழுதாகவும் கொள்ப[113] வைகறை மட்டுமே சிறுபொழுது என்போரும் உளர்.[114]

‘‘மருதத்தின் உரிப்பொருள் ஊடலும் ஊடல் நிமித்தமும் எனும் பொழுது அவ்வூடலும் தலைவன், தலைவியை விட்டு பரத்தையரை நாடிச் செல்வதனால் ஏற்படுவதாகும். இதற்கு மிகவும் ஏற்றகாலம் முன்பனிக்காலமும் பின்பனிக்காலமும் ஆகும்.’’[115] என்ற இராசகோபால் கருத்துப்படி அறுவகைப் பெரும்பொழுதில் முன்பனிக்காலமும் பின்பனிக்காலமுமே ஊடலுக்கு ஏற்புடையன எனக் கருதுவோரும் உளர் என்பது புலனாகிறது.

எனவே ஊடல் எக்காலத்தும் நிகழ்தற்குரிய ஒழுக்கமாதலால் அவ்வூடல் திணைக்குரிய பெரும் பொழுதாக எதனையும் அகஇலக்கியம் சுட்டாததால் உரையாசிரியர்களின் கருத்தே ஏற்புடையதாகக் கொள்ளலாம்.

**சிறுபொழுது**

மருதத்திற்கரிய சிறுபொழுது வைகறையாகும். இதன் பொருத்தப்பாட்டினை இளம்பூரணர் ‘‘மருதத்திற்கு நிலம் வயல் சார்ந்த இடமாதலின் அவ்விடத்தில் உறைவார் மேன் மக்களாதலின் அவர் பரத்தையைப் பிரிகின்ற பொழுது அம்மனையகத்தில் தங்கியமை பிறர் அறியாமல் மறைத்தல் வேண்டும். வைகறைக்கண் தம் இல்லத்தை விட்டுப்பெயரும் போது இவ்விடத்தில் மனைவி ஊடலுற்றுச் சார்கிலளாதலால் அவை அந்நிலத்திற்குச் சிறந்தன’’[114] என்பர்.

நச்சினார்க்கினியர், ‘‘பரத்தையிற் பிரிந்த தலைவன் ஆடலும் பாடலும் கண்டும் கேட்டும் பொழுது கழித்துப் பிறருக்குப் புலனாகாமல் மீளும் காலம் வைகறை ஆதலால் தலைவிக்கு நள்ளிருள் பொழுது கழியாது நெஞ்சழிந்து ஆற்றாமை மிகுதலால் ஊடல் உணர்த்தற்கு எளிதாவதோர் பயன்பாடு உடையதாதலால் வைகறை கூறினார் என்றும் இனித் தலைவி விடியற்காலம் சிறுபொழுது ஆதலின் இதனால் பெறும்பயன் இல்லை என முனிந்து வாயில் அடைத்து ஊடல் நீட்டிக்கவே அவ்வைகறை வழித்தோன்றிய விடியல் கண்ணும்

அவன் மெய்வேறுபாடு விளங்கக் கண்டு வாயில் புகுதல் ஆகிய பயனைச் செய்த்தனால் விடியல் கூறினார்”[117] என்று விளக்குவர்.

அக இலக்கியத்தில் மருத்திற்குரிய சிறுபொழுது, வைகறை, விடியல், நாள், காலை, என்னும் சொற்களால் சுட்டப்பெறுகின்றது[118]. வைகறை என்பது இருள் செறிந்த இரவின் பிற்கூற்றைக் குறிக்கவும் விடியல், நாள், காலை என்பன இருள்களையும் பகற்பொழுதின் முற்கூற்றைக் குறிக்கவும் வழங்கப்பட்டுள்ளன எனலாம். காதாசப்தசதியில் விடியற்காலை ஓரிடத்தில் (காதா17:19) சுட்டப்பெற்றுள்ளது.

மேலும் குறிஞ்சிக்குரிய வாடை, கூதிர், யாமம், எல்(இரவு), கங்குல், இரவு, நடுநாள், முல்லைக்குரிய கார், மழை, மாரி, மாலை, அந்தி, பாலைக்குரிய வேனில், கோடை, பகல், போன்றவையும் மருதத்திணையில் விரவி வந்துள.[119]

**வைகறை**

‘‘கவ்வையிற் பொலிந்த பொதுக் கொண்ட பூவணி வதுவையில் உண்டான நன்னுடைய அழகான நாறுகின்ற மணத்தினை விடியற்காலையில் பெற்றோம்’’ (கலித்.66:11-12). என்கிறாள் தலைவி.

**“நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி பாக்கத்து**
**நாள்துறைப் பட்ட மோட்டு இரு வராஅல்**
**துடிக்கண் கொழுங்குறை நொடுத்து உண்டு ஆடி**
**வேட்டம்மறந்து, துஞ்சும் கொழுநர்க்குப் பாட்டி**
**ஆம்பல் அகல்இலை, அமலை வெஞ்சோறு**
**தீம்புளிப் பிரம்பின் திரள்கனி பெய்து**
**விடியல் வைகறை இடூஉம் ஊர”                (அகநா.196:1-7)**

என்ற பாடலில் கள் மிகுந்த பாக்கத்து நீண்ட கொடிகள் அசைந்தாடிக் கொண்டிருந்தன. பாணர்கள் வைகறை வேட்டையில் துறையிடத்து அகப்பட்ட பெரிய வயிற்றினையுடைய வரால் மீனின் துடியின்கண் போன்ற கொழுவிய துண்டத்தினை விற்று, அப்பொருள் கொண்டு கள்ளுண்டு களித்து ஆடினர். மீண்டும் வேட்டைக்குச் செல்லுதலை மறந்து உறங்கினர். உறங்கிய கணவன்மார்க்கு அவரவர் மனைவியராகிய பாண் மகளிர் இருள் புலரும் விடியற்காலத்தே, ஆம்பலது அகன்ற இலையில் சுடுகின்ற சோற்றுத் திரளோடு பிரம்பின் புளிப்பும் இனிப்பும் கலந்த திரட்சியான பழத்தினைக் கொண்டு ஆக்கிய புளியங்கறியை இட்டு உண்பிப்பர் என வைகறையின் சிறப்பு சுட்டப் பெற்றுள்ளது.

எருமை மாடுகளைக் கொண்ட உழவன், இரவின் கண் தூங்காமல், குளிர்ந்த இருள் அகலும் விடியற்காலத்தே கரிய கண்களைக் கொண்ட வரால்மீனின் பெரிய துண்டங்களை அவை மிளிரும் வண்ணம் குழம்பிலே பிறழவிட்டு உணவுக்குரிய அரிசியாற் சமைத்த சோற்றுத்திரளை விரும்பி உண்ணும் கையை உடையவன். அவ்வுணவை நிறை மயக்கம் உண்டாக உண்டு உழத்தியரோடு நீர்மிக்க சேற்றிலே நாற்றுகளை நடுவதற்குச் செல்வான் இதனை,

**"மலை கண்டன்ன நிலை புணர் நிவப்பின்**
**பெரு நெற் பல் கூட்டு எருமை உழவ**
**கண்படை பெறாஅது, தண் புலர் விடியல்**
**கருங் கண் வராஅல் பெருந் தடி மிளிர்வையொடு**
**புகர்வை அரிசிப் பொம்மற் பெருஞ் சோறு**
**கவர் படு கையை கழும மாந்தி**
**நீர் உறு செறுவின் நாறு முடி அழுத்த நின்**
**நடுநரொடு சேறிஆயின்" (நற்.60:1-8)**

என்று நற்றிணை குறிப்பிடும். விரிந்த கதிர்களை உடைய இளஞாயிறு, அகன்ற விசும்பின் கண் தன் கதிர்களைப் பரப்பி வந்தனன். விடியற்காலத்தே, முறுக்குண்ட தலைகளை உடைய முகைகள் முறுக்கவிழ்ந்து மலரத் தொடங்கின. நெகிழ்ந்த செவ்விப்பூவிடத்தே அழகிய தேனை வரியினை உடைய வண்டுகள் அனைத்தும் கூடி நுகர்ந்தன. அதனினும் அமையாது பின்னும் நுகர்தற்கு அவ்விடத்தைச் சூழ்ந்து திரிந்தன என்று விடியலின் விந்தை மிகு அழகைப் படம்பிடித்துக் காட்டுகின்றார் மருதனிளநாகனார். (கலித்.73:1-3)

**காலை**

தலைவன் பரத்தையருடன் இரவு முழுவதும் இன்புற்று விடியற் காலையில் துயிலெழுந்து தம் இல்லம் வந்தான். அதனைக் கண்ட தலைவி உள்ளம் கலங்கினாள். இதனை,

**"காலை எழுந்து, கடுந்தேர் பண்ணி**
**…………………………………..**
**தெறுவது அம்ம, இத்திணைப் பிறத்தல்லே" (குறுந்.45:1-5)**

என்னும் அடிகள் விளக்கும். அதாவது தலைவி கற்புநெறியில் நிற்பவளாதலின் அவள் தலைவன் பிழையை மறந்து ஏற்றுக் கொள்ளுவாள் என்பது இப்பாடலால் உணர்த்தப்படும்.

**நாள்**

வளைந்த கொம்பையும் சொரசொரப்பான பிடரியையும் உடைய கரிய எருமைக்கிடா, அஃது இளநடையையுடைய நாரையின் இனம் பலவும் குலைத்து விலகுமாறு அழகான நீர் நிரம்பிய குளிர்ச்சி பொருந்திய குளத்தில் துடுமெனப் பாயும். அங்ஙனம் பாய்ந்த எருமை, காலைப்பொழுதில் உழுதொழில் புரிந்த வருத்தம் நீங்குமாறு, உயர்ந்த கிளையுடையதும் இருள் புனைந்தது போன்று இனிய நிழலுடையதுமான மருதமரத்தின் நிழலில் தங்கியிருத்தல் இயற்கையாய் அமைந்த நீர்நிலையை வாழிடமாய்க் கொண்ட புலால் நாற்றம் வீசும் நீர்நாய், வாளைமீனை நாட்காலத்தே இறையாகக் கொள்ளுதல் போன்றவை விடியலின் சிறப்பை எடுத்துரைப்பனவாகும்.

**நெய்தல் திணையில் பொழுது புனைவு**

கதிரவன் மறைகின்ற 'எற்பாடு' நெய்தலுக்குரிய சிறுபொழுதாகும் (தொல்.அகம்.8). நெய்தலுக்குரிய பெரும் பொழுதினைத் தொல்காப்பியர் வரைந்தோதவில்லை. எனினும் உரையாசிரியர்கள் பெரும்பொழுதுகள் ஆறனையும் உரித்தென மொழிவர்[120]

**எற்பாடு மாலை**

சங்க நூல்களில் "எற்படுதல்" என்பது கதிரவன் மறைதல் என்ற பொழுதையே உணர்த்தி வந்துள்ளது.[121]

இளம்பூரணர் "நெய்தலுக்குப் பெரும்பாலும் இரக்கம் பொருள் ஆதலின் தனிமையற்று இரங்குவார் பகற்பொழுதைக் காட்டிலும் இரவுப்பொழுது மிகுமாதலின் அப்பொழுது வருவதற்கு ஏதுவாகிய எற்பாடு கண்டார் இனி வருவது மாலைப்பொழுதென்று வருத்தமுறுதலின் அதற்கு எற்பாடு சிறந்தது என்று கூறியுள்ளார்."[122]

நச்சினார்க்கினியர் "வெவ்விய ஞாயிற்றின் வெப்பம் தீரத் தண்ணிய நறிய சோலைகள் செழித்து நிழல் செய்யவும் குளிர்ந்த தன்மைப்பட்ட கழிகளில் மேய்ந்து பல்வேறு வகைப்பட்ட பறவைகள் எல்லாம் தம் கூட்டை நோக்கி ஒரு சேரப்பெயர்ந்து வரவும் புன்னை முதலிய பூக்களின் நறுமணம் பரப்பவும் நெடும்திரை எழும் கடற்பரப்பில் நிலவு ஒளி பரப்பவும் காதல் பெருகுதலின் கடலை நோக்கியாயினும் கானலை நோக்கியாயினும் நிறை கடந்து வேட்கை புலப்பட உரைத்தலின் அவ்விடத்துக் காமக்குறிப்பு வெளிப்பட்டு இரங்கற்பொருள் சிறத்தலின் எற்பாடு நெய்தலுக்கு வந்தது என்று கூறியுள்ளார்."[123]

இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் இரவுக்கு முந்திய பொழுதை அல்லது மாலைப் பொழுதை எற்பாடு என்று கூறியுள்ளனர் எனலாம். நம்பி

அகப்பொருள் ஆசிரியர் காலத்தில் எற்பாடு என்பது மாலைப்பொழுதா, காலைப்பொழுதா என்னும் சிக்கல் ஏற்பட்டுள்ளது. அவர் எற்பாடு என்பது மாலைப்பொழுதா, காலைப்பொழுதா என்றும் கூறாமல் எற்பாடு காலை (நம்பி.அகப்12:1-2) என்றும் வெய்யோன்பாடு (நம்பி.அகப்.17) என்றும் பொதுவாகவே கூறியுள்ளார். ஆனால் சங்க இலக்கியப் பாடல்களை ஆராய்ச்சி செய்கின்ற பொழுது எற்பாடு என்பது மாலைப்பொழுதை மட்டும் குறிப்பதாகப் புலப்படவில்லை. சங்க இலக்கிய நெய்தல் திணைப்பாடல்களில் மாலை, இரவு, யாமம், வைகறை ஆகிய நான்கு சிறுபொழுதுகள் பெரிதும் புனைந்து கூறப்பட்டுள்ளன. எனவே கதிரவன் மறைந்து நேராகக்காட்சி தராத பொழுதுகள் எல்லாம் எற்பாடு என்று கொள்ளப்பட்டதாகல் வேண்டும். எற்பாடு என்ற சொல்லும் எல்கதிரவன், பாடு-வீழ்ச்சி பெறுதல் ஒளி குன்றுதல் என்று புலப்படுக் கதிரவன் மறைந்திருக்கும் பொழுதை உணர்த்துவதை அறியலாம்.[124] இக்கருத்து ஏற்புடையதாகையால் எற்பாடு என்பது மாலை, இரவு, யாமம், வைகறை ஆகிய நான்கு சிறுபொழுதுகளையும் உணர்த்தக் கூடியது எனலாம்.

மேலும் ‘‘மாலை எற்பாட்டின் பின் நிகழுங் காலமாதலின் அதற்கியைபுபட்டு நெய்தற்கும் உரித்தாயிற்று அது ‘‘திணை மயக்குறுதலும்’’ (தொல்.அகம்.6) என்னும் சூத்திரத்து, ‘‘நிலனொருங்கு மயங்குதலின்று’’ என்றதனால் காலமொருங்கு மயங்குமென்றது கொண்டு சான்றோர் பலரும் செய்யுள் செய்தார். நெய்தல் நிலத்து மாலை வந்த பாட்டுக்கள் பலவுமுள என்னும் நச்சினார்க்கினியருடைய விளக்கம்’’[125] இங்கே உணர்தற்குரியது. ‘‘கொல்லும் இயல்புடைய சுறாமீன்கள் இயங்கும் பெரிய கழியிடத்து நீலமணி போன்று மலர்ந்த நெய்தல் மலர் நிறையுமாறு புன்னையின் பொன் போன்ற நுண்ணியதாது உதிரும். விழுது தாழ்ந்து விளங்கும். இங்ஙனம் புன்னையும் தாழையும் நிறைந்த கடற்கரைச் சோலையிடத்தே காதல் துன்பம் மேலும் மேலும் பெருகிவருத்துமாறு கதிரவன் காயும் மாலைப்பொழுது வரும் (நற்.78:1-6) அதுபோல் கதிரவன் கல்சேர, நேமியான் நிறம் போல் இருள் இவர, நிலவுக் காண்பது போல் மதி தோன்றக் கண்பாயல் பெற்றது போல் தாமரை முதலியன குவியத் தம்புகழ், கேட்ட சான்றோர் போல் தலைசாய்த்து மரம் துஞ்ச, முறுவல் கொள்பவைபோல் புதல்களில் முகைகள் அவிழ்ந்து விளங்கச், சிறுகுழல் போல் சுரும்புகள் இமிரப், பறவை தம் பார்ப்புள்ளக் கறவைகள் கன்றமர் விருப்பொரு மன்று நிறை புகுதர, மாக்கள் தங்குமிடத்துச் சென்று தங்க அந்தணர் கடமைகளைச் செய்து அந்திக் காலத்தை எதிர்கொள மகளிர் செந்தீச் செவ்வழல் தொடங்க மாலை வந்தது (கலித்.119:1-19) என்றும் கதிரவன்

மறையக் கல்லாது முதிர்ந்தவன் கண்ணில்லா நெஞ்சம் போல் இருள் பரவும் மாலை என்றும் கெட்டுப் போன என் அழகுபோல் பகற்காலத்தின் ஒளி மழுங்கிற்று. கலக்கத்தோடு வந்த காலனைப் போல மாலை வந்தது. (கலித்.130:5-7) எனவும் கலித்தொகையில் மாலைப்பொழுது வருணிக்கப்பெற்றுள்ளது. இம்மாலைப் பொழுதினை விளக்கும் வளையணிந்த மகளிர் தத்தம் மாளிகையின்கண் இருந்து மீன் கொழுப்பைச் சேர்த்து உருவாக்கிய நெய்யினை வார்த்து விளக்கேற்றுவர் என நற்றிணை சுட்டும். (நற்.215:1-5)

மேலும் கதிரவன் மறைந்த மாலைப்பொழுதில் பறவைகள் தம் கூட்டில் இருக்கும் குஞ்சுகளுக்கு இரையை எடுத்து செல்லுதல் கண்ட தலைவி தானும் தலைவனை மணம் முடித்து, மகப்பேறு எய்தி, அதனை இனிது பாதுகாத்து மகிழ்தல் வேண்டும் என விரும்பினாள் இதனை,

**"ஞாயிறு பட்ட அகல்வாய் வானத்து**
**அளியதாமே - கொடுஞ்சிறைப் பறவை**
**இறைஉற ஓங்கிய நெறிஅயல் மராஅத்த**
**பிள்ளை உள்வாய்ச் செரீஇய**
**இரை கொண்டமையின் விரையுமால் செலவே" (குறுந்.92:1-5)**

என்னும் பாடல் விளக்கும்.

**நெய்தல் பொழுதுகள்**

சங்க அக இலக்கியத்தில் நெய்தல் திணையின் பெரும்பொழுதாகக் கூதிர், ஊதை, பனி, கார், முதுவேனில், இளவேனில், வந்துள்ளன[126]. "பைதலஞ் சிறுகுழலே, பனியோடு கூடிய இருள் சூழ்ந்து வருகையினாலே தனியவர் இடும்பை கண்டு இனைதியோ அன்றி இனிய செய்து அகன்றாரை எம்மைப்போலே நீயும் உடையையோ" (கலித்:129:16-19) என்று இரங்கும் தலைமகளின் குறிப்பில் கங்குலும் முன்பனியும் பயின்று வந்துள்ளமையைக் காணலாம். சிறுபொழுதாக யாமம், இரவு, கங்குல், நடுநாள், பானாள், அரைநாள், வைகறை, நாள், பகல், காலை, ஏற்பாடு, அந்தி, மாலை, கூறப்பட்டுள்ளது.[127]

இவ்வாறு சங்க அகஇலக்கியத்தில் திணையை அறிவதற்கு முதற்பொருள் பயின்றுவந்துள்ள நிலையில், காதாசப்தசதியில் முதற்பொருள் அமைப்பு இல்லை. எனினும் உரிப்பொருள் அடிப்படையில் பொழுது புனையப்பட்டுள்ள செய்தி எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**தொகுப்புரை**

சங்க இலக்கியங்களில் திணைக்குரிய பொருளாக முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியன அமைதல் வேண்டும். திணை, துறை ஆகியன நேரடியாகவோ, குறிப்பாகவோ உணரக்கூடிய முறையில் பாடல் புனைய வேண்டும் என்பது கோட்பாடாகும். அந்த வகையில் காடும் காடு சார்ந்த இடம் முல்லைநிலத்தையும் மலையும் மலைசார்ந்த இடம் குறிஞ்சி நிலத்தையும் வயலும் வயல் சார்ந்த பகுதி மருத நிலத்தையும் கடலும் கடல்சார்ந்த இடம் நெய்தல் நிலத்தையும் குறிக்கும்.

குறிஞ்சியும் முல்லையும் வேனிற் கொடுமையால் தம்மியல்பு திரிந்து உண்டாகுவதே பாலைநிலமாகும். மேலும் பாலை நிலத்தை வெளிப்படையாக உணர்த்த வல்ல அத்தம், அழுவம். அருஞ்சுரம், சுரன், வேனிற்குன்றம், பெருங்காடு, கடத்திடை, அழல் அவிர் நீளிடை, அதர்ச்சிறுநெறி, வெந்துக்கல், பரல்முரம்பு போன்றவை அக இலக்கியத்தில் பயின்றுவந்துள்ளன. அதுமட்டுமின்றி குறிஞ்சிக்குரிய பல்வேறு பெயர்களும் முல்லைக்குரிய பெயர்களும் மருதத்திற்குரிய பெயர்களும் நெய்தற்குரிய பெயர்களும் விரவி வந்துள்ளன.

மேலும் பாலைத்திணைப் பாடல்களில் நான்கு நிலங்களில் பெயர்கள் வந்த போது அவை பல இடங்களில் பாலைநிலத்தைக் குறித்தும் சில இடங்களில் அவ்வந்நிலத்தைக் குறித்தும் நின்றன. அவைகளை பாடலின் பொருள் கொண்டு உயத்துணரலாம்.

இவ்வாறு பாலைநிலத்தில் மட்டுமே பிற நான்கு நிலங்களும் பேசப்பட்டிருக்கின்றன. நால்வகை நிலங்களில் முல்லைக்கும் குறிஞ்சிக்கும் பாலையாகத் திரிய மிகுதியான வாய்ப்பு இருக்கிறது. எனினும் பிற இருநிலமும் கோடைக்காலத்துக் கடுவெயிலில் பாலையாக மாற வாய்ப்பு இருக்கிறது என்பதன் அடிப்படையிலேயே பாலைத்திணையில் சொல்லப்பெற்றிருக்கின்றன. ஆகவே மேற்கூறிய கூற்றால் பாலைநிலம் நான்கு திணைக்கும் பொது என்பதை அறியமுடிகின்றது. காதாசப்தசதியில் நிலம் பற்றிய குறிப்பில்லை.

எட்டுத்தொகை அகஇலக்கியத்தில் முல்லைக்குரிய பெரும்பொழுது பெயல், மழை, முளி என்ற பெயராலும் சிறுபொழுது மாலை, அந்தி என்ற சொற்களின் வழி அறியப்படுகின்றது. அதுபோல் குறிஞ்சிக்குரிய பெரும்பொழுது கூதிர், குளிர் (அ) வாடை என்ற பெயராலும் சிறுபொழுது யாமம், நடுநாள், கங்குல், இரவு (இருள்), எல்லி, அரைநாள், பானாள், அல்கல் எனப் பல்வேறு பெயர்களாலும் வழங்கப்பட்டுள.

மருதத்திற்கும் நெய்தலுக்கும் பெரும்பொழுதினைத் தொல்காப்பியர் சுட்டிக் கூறாமையால் அறுவகைப் பெரும்பொழுதும் இவற்றிற்கு உரியதாகும். அகஇலக்கியத்தில் மருதத்திற்குரிய சிறுபொழுதினை வைகறை, விடியல், நாள், காலை என்ற பெயராலும் நெய்தலுக்குரிய சிறுபொழுது எற்பாடு என்னும் கதிரவன் மறையும் பொழுதினையும் உணர்த்தி வந்துள்ளது.

பாலைத்திணைக்கு நிலம் இல்லையெனினும் பொழுது உண்டு. அக இலக்கியத்தில் முதுவேனில், என்றூழ் எனவும் கோடை, வெயில், எனவும் சுட்டப்படுவதோடு இளவேனில், முதிரா வேனில் என்றும் முற்றாவேனில் இன்பவேனில் என்றும் அழைக்கப்பட்டுள்ளது.

மேலும் முன்பனிப்பருவத்தையும் பின்பனிப்பருவத்தையும் தனித்தனியே பிரித்துணர முடியாதெனினும் வாடை, மழை முன்பனிக்காலத்தையும் கடும்பனி பின்பனிக் காலத்தையும் குறித்து வந்ததை முடிகின்றது. மேலும் பாலைக்குரிய சிறுபொழுதாகிய நண்பகல், பகல், எல் போன்றவை அகப்பாடல்களில் பயின்றுவந்துள்ளது.

காதாசப்தசதியில் பெரும்பொழுதாகிய கார்காலம், மழைக்காலம், முன்பனிக்காலம், இளவேனிற்காலம், முதுவேனிற்காலம் போன்றவையும் சிறுபொழுதாகிய மாலை, வைகறை, விடியல் ஆகியன உரிப்பொருள் அடிப்படையில் பயின்று வந்துள்ளமையை அறிய முடிகின்றது.

## சான்றெண்விளக்கம்

1. இளம் (உரை),தொல்.பொருள்.அகத்.நூ.949
2. மேலது நூ 5
3. மேலது நூ 950
4. அட்டவணை 1.
5. மேலது 1
6. மேலது 1
7. மேலது 1
8. மேலது 1
9. மேலது 1
10. மேலது 1
11. மேலது 1
12. மேலது 1
13. மேலது 1
14. நற்.57:8-9, 351:8, 265:1, 328:7, 306:10-11, 344:3, 368:1, 376:11; ஐங்.284:1
15. அட்டவணை 2.
16. மேலது 2
17. மேலது 2
18. மேலது 2
19. மேலது 2
20. நற்.379:1-2; ஐங்.207:2-4, 209:4-5, 291:1-2; கலித்.42:22-24
21. இளங்கோவடிகள், சிலம்பு.(காடுகாண்காதை), 61 – 62
22. இரா.செகதீசன்,தொல்காப்பியப் பொருளதிகாரவழி அகநானூறு – ஓர் ஆய்வு, ப.124
23. மேலது ப.130
24. அட்டவணை 3
25. மேலது 3
26. மேலது 3
27. மேலது 3
28. மேலது 3
29. மேலது 3
30. மேலது 3

31. மேலது 3
32. மேலது 3
33. மேலது 3
34. மேலது 3
35. மேலது 3
36. அட்டவணை 4
37. அட்டவணை 5
38. அட்டவணை 7
39. அட்டவணை 6
40. அட்டவணை 8
41. மேலது 8
42. மேலது 8
43. ந.ஆறுமுகம்,கலித்தொகை ஓர் ஆழ்வாய்வு, ப.55
44. அட்டவணை 8
45. மேலது 8
46. மேலது 8
47. மேலது 8
48. வா.சா.பானுநூர்மைதீன், பழந்தமிழ் அகப்பாடல்களில் நிலமும் பொழுதும், ப.50
49. அட்டவணை 9
50. மேலது 9
51. மேலது 9
52. மேலது 9
53. மேலது 9
54. மேலது 9
55. மேலது 9
56. மேலது 9
57. மேலது 9
58. மேலது 9
59. மேலது 9
60. மேலது 9
61. மேலது 9

62. வா.சா.பானுநூர்மைதீன், பழந்தமிழ் அகப்பாடல்களில் நிலமும் பொழுதும்,ப.135
63. அட்டவணை 9
64. மேலது 9
65. மேலது 9
66. மேலது 9
67. நற்.207:2; அகநா.200:2,210:1
68. அட்டவணை 9
69. இளம் (உரை), தொல்.பொருள் அகத். நூ.952
70. மேலது நூ.953
71. மேலது நூ.954
72. மேலது நூ.955
73. மேலது நூ.956
74. நாற்கவிராசநம்பி, அகப்பொருள் விளக்கம், 11
75. இரா.செகதீசன், தொல்காப்பிய பொருளதிகாரம் வழி அகநானூறு ஓர் ஆய்வு, பக்.26-127
76. நக்கீரன் (உரை), இறை. அகப், 1
77. நாற்கவிராசம்பி, அகப்பொருள்விளக்கம், 12
78. சிவஞான முனிவர், தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தம், ப.52
79. மேலது பக்.52-53
80. மு.அருணாசலம்பிள்ளை, அகத்திணையியல் உரைவளம், பக்.107-108
81. இளம் (உரை), தொல்.பொருள். அகத்.நூ.953
82. மேலது ப.7
83. நச் (உரை), தொல். பொருள். அகத். ப.7
84. அட்டவணை 10
85. மேலது 10
86. அட்டவணை 11
87. மேலது 11
88. இளம் (உரை), தொல்.பொருள். அகத்.நூ. 952
89. மேலது நூ. 952
90. நச் (உரை), தொல். பொருள் அகத்.நூ. 952
91. அட்டவணை 15

92. காதா. 27:1-4, 62:1-4, 104:1-3, 262:1-4, 270:1-4, 312:1-4, 347:1-4, 429:1-4, 468:1-5

93. காதா. 148:1-4, 194:1-4, 349:1-4, 356:1-4, 430:1-4, 440:1-4, 445:1-4, 498:1-4

94. இளம் (உரை), தொல்.பொருள். அகத்.நூ. 952

95. நச் (உரை), தொல்.பொருள் அகத்.நூ. 952

96. அட்டவணை 16

97. நற்.238:4; அகநா.247:14, கலித்.103:13

98. அட்டவணை 17,18,19

99. இளம்(உரை) தொல்,பொருள் அகத்.நூ. 955

100. மேலது நூ. 956

101. மேலது ப.11

102. மேலது ப.9

103. அட்டவணை 20

104. மேலது 20

105. மு.வரதராசன், பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை, பக்.223

106. நச் (உரை), கலித். 31

107. அட்டவணை – 20

108. அட்டவணை – 21

109. அட்டவணை – 23

110. அட்டவணை – 24

111. இளம்(உரை), தொல்,பொருள் அகத்.நூ. 954

112. நச் (உரை), தொல்.பொருள்.அகத்.நூ. 954

113. கா.சுப்பிரமணியபிள்ளை, இலக்கிய வரலாறு (முதற்பாகம்), பக்.75

114. கோவி.இராசகோபால், முதல்,கரு, உரிப்பொருள் அமைப்பும் உணர்த்தும் முறையும் - ஓர் ஆய்வு, ப.160

115. இளம்(உரை), தொல்,பொருள் அகத். ப.9

116. நச் (உரை), தொல்,பொருள் அகத்.ப.9

117. அட்டவணை 25

118. அட்டவணை 26, 27, 28

119. நச் (உரை), தொல்,பொருள் அகத். ப.8

120. நற்.187:1; அகநா.190:17; கலித்.130:7

121. இளம்(உரை), தொல்,பொருள் அகத்.ப.10

122. நச் (உரை), தொல், பொருள் அகத்.ப.8

123. தி.செல்வம், சங்க இலக்கியத்தில் எற்பாடு (கையெழுத்துப்படி), ப.28

124. நச். (உரை), கலித்.118

125. அட்டவணை – 29

126. மேலது 29

127. அட்டவணை – 30

## இயல் - 3

## கருப்பொருள் ஒப்பீடு

முதலும் உரியுமல்லாத அகப்பொருள்களுள் அகத்திணைக்குக் கருவாய் அமைவனவற்றைக் 'கருப்பொருள்' என்பர் அகநூலார். முதற்பொருளால் திணை உணரப்படுவது போன்று கருப்பொருளாலும் திணையை உணரமுடியும். அவ்வகையில் எட்டுதொகை அகஇலக்கியம் மற்றும் காதாசப்தசதியில் கருப்பொருள் இடம்பெற்றிருக்கும் முறை குறித்து விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

**தொல்காப்பியம் கூறும் கருப்பொருள்**

தொல்காப்பியம் தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, தொழில், யாழ் ஆகிய எண்வகைக் கருப்பொருள்களை மட்டுமமே குறிப்பிடுகின்றார். இதனை,

**"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவுங் கருவென மொழிப"[1]**

என்னும் நூற்பா உணர்த்தும். இந்நூற்பாவிற்கு உரைவரைந்த இளம்பூரணர் 'பிறவும்' என்றதனால் பூவையும் நீரையும் கொள்வர்[2]. நச்சினார்க்கினியர் 'பூவையும் நீரையும் ஊரையும் கொள்வதோடு தலைமக்கள் பெயர்களையும் மக்கள் பெயர்களையும் கொள்வர்[3] இறையனார் அகப்பொருள் உரையாசிரியர் பூவையும் நீரையும் ஊரையும் தலைமகள் பெயரையும் தலைமகன் பெயரையும் மக்கள் பெயரையும் தனித்தனியே குறிப்பிடுவர்[4]. தொல்காப்பியர் மொழிந்த எண்வகைக் கருப்பொருளோடு இளம்பூரணர் கூறிய பூவையும் நீரையும் சேர்த்து பத்துவகைக் கருப்பொருள்கள் அக இலக்கியத்திலும் காதாசப்தசதியிலும் பயின்று வந்துள்ளமை பின்வருமாறு எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**தெய்வம்**

தொல்காப்பியர் காலத்திலேயே பல தெய்வ வழிபாடுகள் இருந்தன என்பதற்கு

**"தெய்வம் சுட்டிய பெயர்நிலைக்கிளவி"[5]**

என்பது சான்றாகும். தொல்காப்பியம் முதற்பொருளாகிய நிலத்தைச் சுட்டுங்கால் அவ்வந் நிலத்திற்குரிய தெய்வத்தையும் சுட்டுகின்றது.

**"மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**

**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**

**வருணன் மேய பெருமணல் உலகமும்**

**முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச்**

**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"[6]**

என்பதால் பண்டைத் தமிழரின் தெய்வ வழிபாட்டை அறியமுடிகின்றது. அதுபோல் அக இலக்கியங்களில் தெய்வம் திணை உணர்த்தும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன. காதாசப்தசதிப் பாடல்களில் புராணத் தெய்வங்களின் காதல் நிகழ்ச்சிகளும் இதிகாச மாந்தர் குறித்த மனவுணர்வுகளும் இடம் பெற்றுள்ளன. மானிடக் காதல் உணர்வுகளை அவர்களின் மீது ஏற்றிப் போற்றி இன்புறும் பாங்கு அப்பாடல்களில் காணப்படுகிறது.

**குறிஞ்சி நிலக் கடவுள்**

அக இலக்கியத்தில் சேயோன் குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வமாகக் காணப்படுகின்றது. நச்சினார்க்கினியர் "குறிஞ்சி நிலத்திற்குக் குறவர் முதலியோர் குழீஇ, வெறி அயர்தற்கு வேண்டும் பொருள் கொண்டு வெறிஅயர்ப ஆகலின் ஆண்டு, முருகன் வெளிப்படும்"[7] என்பர்.

அக இலக்கியத்தில் முருகக்கடவுள் முருகன், வேலன், சேஎய், நெடுவேள், முருகு, செவ்வேள், அலைவாய் ஆல்அமர் செல்வன் மகன் எனப் பல பெயர்களால் அறுபத்தொன்பது[8] இடங்களில் சுட்டப்பெற்றுள்ளது.

**"கூற்றம் வரினுஞ் தொலையான்றன் நட்டார்க்குத்**

**தோற்றலை நாணாதோன் குன்று" (கலித்.43:10-11)**

**"மாறுகொண் டாற்றா ரெனினும் பிறர்குன்றங்**

**கூறுதல் தேற்றாதோன் குன்று" (கலித்.43:18-19)**

**"இன்மை யுரைத்தார்க் கதுநிறைக்க லாற்றாக்கால்**

**தன்மெய் துறப்பான் மலை" (கலித். 43:26-27)**

எனக் குறத்தியர் தலைமகனுக்கும் முருகனுக்குமாக ஏற்பப் பாடுகின்ற வள்ளைப்பாட்டில் முருகனின் பெருமை புலப்படுகின்றது. முருக வணக்கம் பற்றிய குறிப்பும் கலித்தொகையில் (40:11-12) காணப்படுகின்றது. அதுபோல் தலைவி காதலால் வருந்தும் நிலைமையினை அறியாத அவள் அன்னை முருகனால் தான் அவளுக்குப் பிணிநேர்ந்ததாகக் கருதி முருகனுக்கு விழா எடுத்தமையினை,

**"முருகு அயர்ந்து வந்த முதுவாய் வேல!**

**சினவல் ஓம்புமதி; வினவுவது உடையேன்;**

**பல்வேறு உருவின் சில்அவிழ் மடையொடு,**
**சிறுமறி கொன்று, இவள் நறுநுதல் நீவி**
**வணங்கினை கொடுத்தி ஆயின் அணங்கிய**
**விண்தோய் மாமலைச் சிலம்பன்**
**ஒண்தார் அகலமும் உண்ணுமோ பலியே''**      **(குறுந்.362:1-7)**

என்னும் பாடலடிகள் சுட்டும். மேற்கூறிய பாடலின்வழி முருகன் தமிழ்மக்களால் உயிர்ப்பலியிட்டு வணங்கப்பட்ட தெய்வம் என்பதை அறியமுடிகின்றது. மேலும்

**''அணங்கொடு நின்றது மலை, வான் கொள்க, எனக்**
**கடவுள் ஓங்கு வரை பேண்மாக்''**      **(நற்.165:3-4)**
**''பலி பெறு கடவுட் பேணி''**      **(நற்.251:8)**
**''அஞ்சுவம் தமியம் என்னாது, மஞ்சு சுமந்து,**
**ஆடுகழை நரலும் அணங்குடைக் கவாஅன்''**      **(அகநா.72:10-11)**
**''எம் இறை அணங்கலின் வந்தன்று, இந்நோய்''**      **(அகநா.388:20)**
**''............................................. வான் கோட்டுக்**
**கடவுள் ஓங்குவரைக்கு ஓக்கி, குறவர்''**      **(அகநா.348:7-8)**
**''அருந்தெறல் மரபின் கடவுள் காப்ப''**      **(அகநா.372:1)**
**''குன்றக் குறவன் கடவுள்''**      **(ஐங்.257:1)**

என்னும் அடிகளில் முருகனை ''அணங்கு'' எனவும் ''கடவுள் எனவும்'' வழங்கப்படுவதை அறியமுடிகின்றது. அதுமட்டுமின்றி திருச்சீர் அலைவாய் எனப்படும் திருச்செந்தூரில் முருகன் ஆறுமுகனாகக் காட்சி அளிப்பதை அகநானூறு (266:20) சுட்டுகின்றது. காதாசப்தசதி பாடல்களில் முருகக் கடவுள் பற்றிய குறிப்பில்லை.

**திருமால்**

முல்லை நிலத்தில் தொல்பழங்காலம் முதல் வாழ்ந்துவந்த தமிழர்கள் தங்கள் வழிபடு தெய்வத்தை ''மாயோன்'' என்று போற்றி வந்தனர். ''மாநிறம் உடையவன் மாயோன் எனப்பட்டான்'' (கலித்.38:1) மாநிறம் என்பதற்குக் கரிய நிறம் என்பது பொருள். இதனால் கண்ணனைக் கரிய நிறமுடையவன் என்னும் பொருளாலேயே 'மாயோன்' என்று சுட்டினர். திருமாலும் கரிய நிறமுடையவராகவே போற்றப்படுகிறார்.

இத்தெய்வத்தை மாயோன், நேமியான், தெய்வமால், நேமிஅம் செல்வன், நெடியோன், திருமால், வாலியோன் (பலராமன்) பால்நிறவண்ணன் (பலராமன்) ஒரு குழையவன் (பலராமன்) இராமன், எனப் பலபெயர்களால் அகஇலக்கியம்

இருபது[9] இடங்களில் சுட்டுகிறது. திருமகள் பற்றிய குறிப்பு ஓரிடத்தில் (கலித்104:10) இடம்பெற்றுளது.

அக இலக்கியத்தில் முல்லைத் திணைப்பாடல்கள் (நற்றிணை.30 பாடல்கள், குறுந்தொகை 45 பாடல்கள், அகநானூறு 40 பாடல்கள், ஐங்குறுநூறு 100 பாடல்கள், கலித்தொகை 17 பாடல்கள்) இருநூற்று அறுபத்திரண்டு பாடல்களாகும். அவற்றுள் முல்லைக்குரிய தெய்வம் பற்றிய குறிப்பு எதுவும் சுட்டப்பெறவில்லை. அதாவது ‘‘இல்லிருக்கும் மகளிர்க்குத் தம் கணவரே தெய்வமாகி விட்டதால் திணைக்குரிய தெய்வம் கருப்பொருளாகச் சுட்டவில்லை போலும்’’[10] என்பர். இரா.செகதீசன். எனினும் கலித்தொகையில் மாயோன் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. இதனை

**‘‘பாடிமிழ் பரப்பகத் தரவணை யசைஇய**
**ஆடுகொள் நேமியாற் பரவுதும்’’ (கலித்.105:71-72)**
**‘‘மலையொடு மார்பமைந்த செல்வ னடியைத்**
**தலையினால் தொட்டுற்றேன் சூள்’’ (கலித்.108:55-56)**
**‘‘தெய்வமால் காட்டிற் றிவட்கென நின்னையைப்**
**பொய்யில் பொதுவற் கடைசூழ்ந்தார் தந்தையொ**
**டையன்மா செல்லா மொருங்கு’’ (கலித்.107:33-35)**

என வருகின்ற பாடலடிகள் விளக்கும். அதாவது மாயோனுக்கும் முல்லைநில மக்களுக்கும் உள்ள தொடர்பினை இது கூறுகின்றது. மேலும் வாழ்த்தி வணங்கும்போது குரவைக்கூத்தாடுவதும் உண்டு(கலித்.103:75-76). மாயோன், மேய காடுறை உலகம் என்பதற்கு நச்சினார்க்கினியர் ‘‘முல்லை நிலத்துக் கோவலர் பல்லா (பல்+ஆ) பயன்தருதற்கு, மாயோன் ஆகுதி பயக்கும். ஆ பல காக்க எனக் குரவைதழீஇ மடை பல கொடுத்தலின், ஆண்டு அவன் வெளிப்படும் என்றார்.’’[11] காதாசப்தசதியில் திணைத்தெய்வமாகக் கண்ணன் குறிப்பிடப்படாமல் வழிபடும் தெய்வமாக மானிடக்காதல் உணர்வுகளை கண்ணன்மீது ஏற்றிப்போற்றி இன்புறும் பாங்கு நான்கிடங்களில்[12] பயின்று வந்துள்ளது.

கண்ணனிடம் மையல் கொண்ட ஒருத்தி குரவைக் கூத்தாடிய ஆய்ச்சியின் கன்னத்தில் தெரிந்த கண்ணனின் உருவத்தை அவள் ஆட்டத்தைப் பாராட்டுவதுபோல் முத்தமிட்டாள் (காதா.103:1-4)

**‘‘பசுவின் குளம்பாற் பரவிய பூழ்தி**
**படிந்த இராதையின் கனிக்கண் களினை**

**வாயால் ஊதி வருத்தம் நீக்கும்**

**கண்ண! பிறர்தம் கருவம் அழித்தாய்" (காதா.79:1-4)**

என்பதில் புழுதி படிந்த இராதையின் கண்களை வாயால் ஊதுவது போலக் கண்ணன் அவள் கன்னத்தில் முத்தமிட்டான் என்று ஒருத்தி தன் தலைவனிடம் கூறக் காரணம் அவனும் தன்னிடம் கண்ணன் போல் அன்புடையவனாக இருக்க வேண்டும் என எண்ணுவதற்காகும். மேலும் கண்ணன் மணவயதை அடைந்த நிலையிலும் கண்ணனிடம் காதல் கொண்ட ஆய்ச்சியர் தங்கள் காதலுறவை யசோதைக்குச் சொல்லாமல் மறைத்துவிட்டனர் (காதா.390:1-4) என்று கூறப்படும் நிகழ்ச்சிகளிலிருந்து ஆய்ச்சியர் கண்ணனிடம் கொண்ட காதலையும், கண்ணன் இராதையிடம் கொண்ட காதலையும் அறிய முடிகின்றது. கண்ணன் ஆய்ச்சியர்களைத் தன் இளமைக் குறும்புகளால் இன்புறுத்தியதையும் ஆய்ச்சியர் அவன் இளமைக் குறும்புகளை யசோதைக்குத் தெரிவிக்காமல் மறைத்ததையும் நோக்கக் கண்ணனிடம் ஆய்ச்சியர் கொண்டிருந்த மிகுந்த ஈடுபாடு புலனாகிறது. (காதா.101:1-4) இவ்வாறு கண்ணனின் காதல் விளையாட்டுகளையும் ஆய்ச்சியர்களின் அகவுணர்வுகளையும் வெளிப்படுத்துவதன் மூலம் காதலர்களின் அகவுணர்ச்சி எடுத்துரைக்கப்படுகின்றது.

**திருமால், திருமகள்**

கலித்தொகையில் ஓரிடத்தில் (கலித்104:10) திருமகள் பற்றிய குறிப்பு காணப்படுகின்றது. அது போல் காதாசப்தசதியில் திருமால், திருமகள் பற்றிய குறிப்புகள் மூவிடங்களில் இடம்பெற்றுளது. திருமகள் திருமாலின் மார்பில் உள்ளாள் என்பதோடு (காதா.130:1-4) திருமகளை அழகான பெண்ணுக்கு ஒப்பிடுவதும் (காதா.314:1-4) அவளுடைய நகில்களை விந்திய மலையில் படிந்துள்ள மேகத்திற்கு ஒப்பிடுவதும் (காதா.440:1-4) திருமகள் குறித்த செய்தியாக உள்ளது.

**காமன்**

"தமிழர்களின் காதற்கடவுள் காமன். இவன் உருவிலாளன், மன்மதன், அநங்கன், அங்கசன், மாரன், எனப் பல்வேறு பெயர்களாலும் அறியப்படுகிறான். காமன் விஷ்ணுவின் மனதிற் தோன்றியவன் என்று புராணம் கூறுகிறது. இவனது காதலி ரதிதேவி. கரும்புவில்லைக் கொண்ட காமன் அசோகம், குவளை, தாமரை, மாம்பூ, முல்லை என்னும் ஐந்து மலர் அம்புகளால் காதலர்களைத் தாக்கி காதலின்பத்தை மிகுவிக்கச் செய்து வருத்தமுறச் செய்கிறான் என்றும் காதல் தெய்வமாக வணங்கப்பட்டான் என்றும் இலக்கியங்கள் தெரிவிக்கின்றன."[13] சங்க அகஇலக்கியத்தில் கலித்தொகையில் மட்டும் காமன்

பற்றிய குறிப்பு ஈரிடங்களில்[14] காணப்படுகின்றது. காமன்விழா இன்றும் கொண்டாடப்பெறும் நிலையில் ‘‘காமனாகிய மன்மதனை அரிவதாக அமையும் விழா காமதகனம், இந்திர விழா, வசந்தவிழா, காமன் பண்டிகை எனப்பல பெயர்களால் அழைக்கப்படுகிறது. என்றாலும் பேச்சுவழக்கில் ‘காமேன்டி’ என்றழைப்பதே பெருவழக்காகும்[15] என்பர் பா.ஆனந்தகுமார்.

‘‘காமன் மாயோன் மகனாதலின் அவனும் அந்நிலத்திற்குத் தெய்வமாதல் ‘அவ்வகை பிறவும் (தொல்.அகத்.18) என்ற வழி ‘வகை’ என்றதனால் கொள்ளப்பட்டது என்பர் நச்சினார்க்கினியர்[16]’’

காமன் பற்றிய குறிப்பினை, ஆயமகள் தெய்வத்திற்குப் பலியாகச் சமைக்கும் பாலோடே காமன் கோயிலுக்குச் சென்றால், அக்காமனும் நெஞ்சழிந்து தம் கை படையை விட்டுவிடுவான் (கலித்.109:19-20) என்றும்

**‘‘நோய்மலி நெஞ்சமோடு இனையல் தோழி**
**நாமில்லாப் புலம்பாயின் நடுக்கஞ்செய் பொழுதாயின்**
**காமவேள் விழவாயின் கலங்குவள் பெரிதென**
**ஏமுறு கடுந் திண்டேர் கடவி**
**நாமமர் காதலர் துணை தந்தார் விரைந்தே’’ (கலித்.27:21-25)**

எனவும் சுட்டும். காதாசப்தசதியில் மன்மதன் காமன், காமதேவன், மாரன், மீன் கொடியோன் எனப் பல பெயர்களால் ஐந்திடங்களில்[17] சுட்டப்பெறுகின்றான்.

கார்காலத்தில் மலரும் கடப்ப மலர்களை உண்டைவில்லில் வைத்து மன்மதன் எய்வதால் தலைவனைப் பிரிந்த தலைவி வருந்துகிறாள் (காதா.148:1-4) பிரிந்து வாடும் காதலர்களுக்கு மன்மதனின் கையிலுள்ள அம்பு குருதி தோய்ந்த கொலைவாளாக உள்ளது (காதா.447:1-4) தலைவியின் அருள் பெறாது மீளும் தலைவனின் பார்வை மன்மதனின் கொடிய கணையாக கொள்ளப்பெறுகிறது (காதா.175:1-4) என்றும் காதாசப்தசதி கூறுகின்றது. மேலும் கணவனும் மனைவியும் சேர்ந்து காமனை வழிபடுவதால் அவர்களுக்கு இன்பவாழ்வு அமையும் என காதாசப்தசதி எடுத்துரைக்கின்றது (காதா.37:1-4,258:1-4). இவ்வாறு மன்மதன் மக்களின் காதல் உணர்ச்சியினைத் தூண்டுபவனாகவும் மலரம்புகளை உடையவனாகவும் வழிபடுவார்க்கு இன்ப வாழ்வை நல்குபவனாகவும் விளங்கினமை மேற்கூறிய செய்திகளின் வழி புலனாகும்.

**இந்திரன்**

மருத நிலத்துத் தெய்வம் இந்திரன். இந்திரனைப் பற்றிய குறிப்பு நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு என்னும் அக இலக்கியங்களில்

சுட்டப்பெறவில்லை. கலித்தொகை **(91:7-8,98:31-32),** ஐங்குறுநூறு (62:1) ஆகியவற்றில் மற்றும் குறிப்புளது. இந்திர விழாவின் பல்வேறு கூறுகளையும் மிக விரிவாக முதலில் கூறிய நூல் சிலப்பதிகாரமாகும். எனினும் அவ்விழாப் பற்றி முதலில் கூறிய சங்க அகஇலக்கிய நூல் ஐங்குறுநூலாகும். இந்திரனைக் கடவுளாகக் கொண்டமையினை, கலித்தொகையில் இந்திரன் வச்சிரத்தோன் (105:15) என ஓரிடத்தில் குறிக்கப்பெற்றுள்ளான். காதாசப்தசதியில் இந்திரன் பற்றிய குறிப்பில்லை.

**சிவன்**

தொல்காப்பியர் காலத்தில் சிவ வழிபாடு இருந்தமைக்கான சான்றில்லை. எனினும் சங்ககாலத்தே ‘‘சிவனை ஆலமர்ச் செல்வன், ஆலமர்க்கடவுள், முக்கண் செல்வன், மாற்றரும் கணிச்சி, மணிமிடற்றோன், முழுவாள் தொடியோன், தாவி உண்டிக் கடவுள், நீள்நிமிர்நடை, முதுமுதல்வன், பிறவா யாக்கைப் பெரியோன்’’[18] என பலவாறாகப் போற்றி வழிப்பட்டுள்ளனர்.

அகஇலக்கியமான கலித்தொகையில் சிவன் சிவபெருமான், முக்கட் செல்வன், கூற்றுவன், காலன் உருத்திரன் அருந்தவ முதல்வன் (தென்முகக்கடவுள்) எனப் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றார். உமைபற்றி ஓரிடத்தில்[19] குறிப்புளது.

‘‘இருக்கு வேதத்தில் அழித்தல் கடவுளாக விளங்கும் உருத்திரன் வேறு, அன்பின் உளற்றாய், அழகின் உறைவிடமாய், அறிவுக் களஞ்சியமாய், அருளே வடிவாய் விளங்கும் தமிழருடைய முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான் வேறாவர். ஆரியரும் திராவிடரும் காலப்போக்கில் கொண்ட நெருங்கிய தொடர்பின் விளைவாகவும் நாகரிகப் பண்பாட்டுக் கூறுகளிடையே கலப்பின் காரணமாகவும் தோன்றியதே பரமசிவன் (பரமேசுவரன்) எனும் பெருந்தெய்வமாகும். சங்க காலத் தமிழர்கள் முதல் காலகட்டத்தில் சிவனை ஆலமர் செல்வனாக தட்சிணாமூர்த்தி என்று பிற்காலத்தவரால் போற்றப்பட்ட அறிவுத் தெய்வமாகவே கருதியுள்ளனர்’’[20].

கலித்தொகை மற்றும் கடவுள் வாழ்த்துப் பாடல்களில் இமயத்தை வில்லாக வளைத்த இறைவனாக (கலித்.38:1) நீலமேனி வாலிழைப் பாகத்து ஒருவனாக, உமையவள் ஒரு திறனாக ஓங்கிய இமையவனாக (கலித்.38:2) முப்புரங்களை எரித்த முதலோனாக, கடம்பமர் காளையின் தந்தையாக (கலித்.2:4) சிவன் சுட்டப்பெற்றுள்ளான். காதாசப்தசதியில் சிவன் பற்றிய குறிப்பு கடவுள் வாழ்த்தாக இடம் பெற்றுள்ளது.

சிவன் காலையில் நீரைக் கையிலேந்திக் கொண்டு தியானிப்பதைக் கண்ட உமை அவன் கங்கையைத் தியானிப்பதாகக் கருதிப் புலந்தாள் (காதா.1:1-5) என்றும் அதுபோல் அந்தி மாலையில் சிவன் காயத்திரி மந்திரத்தை மறந்துவிட உதடுகள் மட்டும் முணுமுணுத்துக் கொண்டிருந்தன (காதா.503:1-4) என்று கூறுவதன் மூலம் காலையிலும், அந்தி மாலையிலும் சிவன் சந்தியாவந்தனம் செய்யும் நிகழ்ச்சி புனையப்பட்டுள்ளது. இப்பாடல்களில் வழி தலைமக்களின் பலதாரமணத்தால் ஏற்படும் ஊடல் புலனாகிறது. இவ்விலக்கியத்தில் சிவபெருமான் சிவன், மகேசன், செஞ்சுடர் கடவுள் எனவும் அழைக்கப்பட்டுள்ளார்.

**உமை**

உமையும் கங்கையும் சிவனுக்கு மனைவியர் ஆயினும் உமையே காதாசப்தசதியில் சிறப்பிடம் பெறுகிறாள். சிவன் உமையின் திருமண நிகழ்ச்சியின்போது அவள் அச்சத்தைப் போக்கத் தன் பாம்பணிகளை ஒதுக்கி வைத்தமையினை,

> **“பாந்தள் வளையைப் பைய ஒதுக்கி**
> **சிவன்தன் கரத்தால் உமைகரம் பற்ற**
> **அப்பொழு தேயே அறிய லானார்**
> **மலைமகள் பெற்ற மாபெரும் பேறே” (காதா.61:1-4)**

என்று குறிப்பிடுகின்றது. அதுபோல் சிவன் உமையோடு கூடுவதற்காக அவளுடைய ஆடைகளைக் களைய அதனால் நாணமுற்ற உமை அவன் தன் மேனியைக் காணாதவாறு தன் இரு கைகளாலும் அவன் இருவிழிகளையும் மூடினாள். அவனது மூன்றாவது கண்ணாகிய நெற்றிக் கண்ணை முத்தமிட்டு மறைத்தாள் (காதா361:1-4) என்பதில் சிவன், உமையைக் காதல் மாந்தர்களாகப் படைப்பதோடு சிவனைக் காலையிலும் மாலையிலும் வணங்க வேண்டும் என்ற கருத்தையும் காதாசப்தசதி முன்வைக்கிறது.

**நான்முகன்**

நான்முகனாகிய பிரம்மன் பற்றி கலித்தொகையில் (106:18) ஓரிடத்தில் மட்டும் குறிப்புளது. ‘‘கொழுத்த திமிலுடன் கூடிய ஏற்றினங்கள் ஒன்றோடு ஒன்று தாக்கின. மீண்டும் அடிபறித்துக் கூரிய தம் கொம்புகளினால் மாறாமல் எவ்விடத்தும் குத்தின. அவற்றின் உடம்பினின்றும் செங்குருதி வடிந்தது. ஏறுகள் எல்லாம் மழைக் காலத்துக் காலைப் பொழுதில் பெய்யும் மேகத்திரளை ஒத்திருந்தன. அவ்வேறுகளைப் பிரித்து இடையிலே பிற எருதுகளைப் போக்கி, விலக்கி பின்னர்ப் பசுத் திரளுடன் மேயும்படி செலுத்தித் தத்தம் இனங்களைப்

பிரித்தனர் பொதுவர், இது ஒளி நிறைந்த உலகைப் படைத்த முதல்வன், ஆதிநாளில் நிலத்தை மறைத்துக் கிடந்த கடலைப் பிரிக்கும் செயலை ஒத்திருந்தது'' (கலித்.106:18) என்று எடுத்துரைக்கப்படுகின்றது.

காதாசப்தசதியில் நான்முகன் பற்றிய குறிப்பு ஈரிடங்களில்[21] காணப்படுகின்றது. இது தலைவியின் நலம்புனைந்துரைப்பதன் மூலம் வெளிப்படுகிறது. அதாவது நான்முகன் முழுநிலவைப் படைத்தான். அந்த நிலா தலைவியின் முகத்துக்கு ஈடாகவில்லை. நான்முகன் எப்படியும் அவள் முகம் போன்று படைக்க வேண்டும் என்று கருதி படைத்ததை உடைத்துடைத்து மீண்டும் படைத்தான். ஆனாலும் முகத்திற்கு ஒப்புமை ஆகவில்லை. மீண்டும் உடைத்தான் ஆகையால் தான் முழுமதி உடைந்து தேய்ந்து மீண்டும் உருமாறுகின்றது எனத் தலைவன் இவ்விதம் தலைவியின் நலம் புனைந்துரைத்தான். (காதா.172:1-4) அதுபோல் தலைவன் பிரிந்தவிடத்து தலைவி நஞ்சாய்த் துன்புறுவதும் இணைந்த போது வானமுதாக இன்புறுவதும் கண்டு தலைவன் இந்த நஞ்சும் அமுதும் சமமாகக் கலந்து பிரமன் இவளைப் படைத்தானோ என்று வியப்புறும் (காதா.198:1-4) வகையில் பிரமன் படைப்புக் கடவுளாகச் சுட்டப்பட்டுள்ளான்.

**ஞாயிற்றுப்புத்தேள்**

ஞாயிற்றுப்புத்தேள் என்பது கர்ணனைக் குறிப்பிடும் பெயராகும். (கலித்.108:13) இவ்வோரிடத்தில் மட்டும் இடம் பெறுகின்றது. காதாசப்தசதியில் இடம் பெறவில்லை.

**கொற்றவை**

வீரர்கள் வெற்றியின் பொருட்டுக் கொற்றவை என்னும் தெய்வத்தை வணங்கி வந்தனர். (தொல்.புற.59) நச்சினார்க்கினியர் ''போரிலே வெற்றி பெற உதவும் தெய்வம் கொற்றவை என்பதை அறியலாம். வெற்றி பெற்றோரும் மேலும் வெற்றி வேண்டிக் கொற்றவையைப் போற்றுவர். தோற்றோரும் வெற்றி வேண்டிக் கொற்றவையை வழிபடுவர்''[22] என்பதன் மூலம் கொற்றவையை பாலைக்குரிய தெய்வமாகப் போற்றியமை புலனாகும்.

''விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக் கடனும் பூணாம்'' (குறுந்.218:1-2) என்ற பாடலில் கொற்றவைக்கு பலிக்கடன் நேர்ந்தமை விளக்கப்படுகின்றது. அதுபோல் ''தெறல் அருங்கடவுள்'' (நற்.189:3) என வருத்துகின்ற தெய்வம் பற்றிய குறிப்பும் கொற்றவையைச் சுட்டுவதாகவே உள்ளது. மேலும்

“பலிக் கள் ஆர் கைப் பார் முது குயவன்
இடு பலி நுவலும் அகன்றதலை மன்றத்து” (நற்.293:2-3)

என்பதில் குயவன் காளி கோயிற் பூசாரியாக இருப்பது பற்றிக் கூறப்பட்டுள்ளது. காதாசப்தசதியில் கொற்றவை பற்றிய குறிப்பில்லை.

**அமரர்**

தேவர்களைக் குறிக்கும் பெயராக அமரர் சுட்டப்பெறுகின்றது. (கலித்.108:12) காதலியின் கனிவாய் ஊறலாகிய அமுதத்தைத் துய்க்கும் பேறின்மையால் தேவர்கள் கடலைக் கடைந்து துன்புற்றார்கள் என்ற காதலியின் முத்தச் சிறப்பைப் பாராட்டும் வகையில் தேவர்கள் இடம்பெற்றுள்ளனர் (காதா.452:1-4)

**கதிரவன்**

கதிரவனை வணங்கும் பாவனையில் கடைக்கண் வீச்சும் குறுநகையும் புரிந்து காதலியை நோக்கும் காதலனையும் (காதா.276:1-4) கதிரவன் இரவில் வேற்றிடம் செல்வது போலக் காதலனும் பரத்தையை நாடிச் செல்கிறான் எனக் கதிரவன் காதலனுக்கு உவமைப் படுத்தும் போது கதிரவன் வழிபாடு அக்கால மக்களிடம் இருந்தமை புலனாகிறது. (காதா.476:1-4) இவ்வாறு புராணச் செய்திகளும் நவகோள்களில் ஒன்றாகிய கதிரவனும் மாந்தர்களின் அகஉணர்ச்சிகளைப் புலப்படுத்த வாயிலாக அமைந்து உள்ளமையை அறியலாம்.

**வருணன்**

நெய்தல் நிலத்திற்குரிய தெய்வம் வருணன். இது புகாஅர்த்தெய்வம் என்றும் கடல்பெருந் தெய்வம், என மூவிடங்களில்[23] சுட்டப்பெற்றுள்ளது.

**உணவு**

மக்கள் உயிர்வாழ இன்றியமையாதது உணவாகும். உணவு இன்றி உயிர்வாழார். எனவே இயற்கையாக அமைந்த நிலப்பாகுபாடுகளில் ஆங்காங்குக் கிடைத்த பொருள்களையும் தங்கள் முயற்சியால் தட்பவெப்ப நிலைகேற்ப உற்பத்தி செய்து கொண்டு வாழ்ந்து வந்தனர். அந்த வகையில் சங்ககாலமக்கள் தங்கள் நிலத்திற்கு ஏற்ப உணவுப் பொருட்களை உண்டு வாழ்ந்தனர். காதாசப்தசதியில் உணவு முறை குறித்து குறிப்பிடப்படவில்லை.

**தினை**

குறிஞ்சி நில மக்கள் தினை, செந்தினை, சிறுதினை, மென்தினை, பெருந்தினை, ஏனல் எனப் பல பெயர்களால் தினையை அழைத்தனர். உழுது விளைவித்த தினையை உணவாகக் கொண்டனர் இத்தினை குறித்து

எண்பத்துநான்கு[24] இடங்களில் குறிப்பளது. தினை உணவுப் பொருளாய் பயன்பட்டதாக ஒருபாடலும் சுட்டவில்லை. மாறாகத் தினைப்புனம் காத்தலும் அங்கு நிகழும் களவு நிகழ்ச்சிகளுமே சுட்டிக் கூறப்பட்டுள்ளதைக் காண முடிகிறது.

**“சுடுபுன மருங்கில் கலித்த ஏனற்**

**-----------------------------------------------------**

**வண்டுபயில் பல்இதழ் கலைஇ**

**தண்துளிக்கு ஏற்ற மலர் போன்றவ்வே” (குறுந்.291:1-8)**

என்ற பாடலில் தலைவி தினையில் படியும் கிளிகளை ஓட்டுவதற்கு இசைத்தலும் விளித்தலும் குளிர் என்னும் கருவியால் ஒலி எழுப்புதலும் சுட்டப்பெற்றுள்ளது. மேலும் வேங்கை மரத்தின் வெண்பூ பூக்கும் பருவம் அறுவடைசெய்யும் பருவமாகும் எனக் குறிப்பதால் தலைவி தினைகதிர்விடும் பருவம் தொடங்கி, அறுவடைப் பருவம் வரை அங்கு காவல் செய்வர் என்பதை உணர்த்துகின்றது (நற்.813:1-11)

“சங்க அக இலக்கியத்தைப் படைத்த புலவர்கள் தலைவியைச் சுற்றியே பாடல்கள் புனைய ஆர்வம் கொண்டிருந்தனர். தலைவன் தலைவி களவுக் காதலைப் புனைந்துரைக்க வேண்டிய புலவர்கள் தினைப்புனத்தைக் கற்பித்தனர். எனவே தலைவி தினைப்புனத்தை விட்டுவந்த பிறகு அதனை மீண்டும் விளக்க ஆர்வம் காட்டவில்லை. அதனால் தினைவிளைந்து அது உணவுப் பொருளாகும். நிலையை விளக்காது விட்டனர் என அமைதி கூறலாம்”[25] என்பர் இரா.ஜெகதீசன்.

**வரகு**

அக்கால மக்களின் உணவு முறைகளில் ஒன்று வரகு ஆகும். இது ஒன்பது[26] இடங்களில் காணப்படுகின்றது. ஆயர் சுனைநீரில் வரகரியைப் பெய்து சோறாக்கிப் பசுவின் பாலோடு பகுத்து உண்டனர். பின் செம்மறியாட்டின் பழுப்புநிறம் வாய்ந்த முதிர்ந்த தயிரில் வரகரிசியையும் ஈயலையும் பெய்து சமைத்த புளிச்சுவை மிக்க சோற்றில் வெண்ணெயை இட்டு உண்டனர் என அகநானூறு (அகநா.394:2-6) சுட்டுகின்றது.

**தயிர், பால்**

முல்லை நில மக்களின் உணவுப் பொருட்களில் பால், தயிர் முதலிடம் பெற்றது. இது பத்திடங்களில்[27] பயின்றுவந்துள்ளது,

**“பாலொடு வந்து கூழொடு பெயரும்,**

**யாடுடை யிடைமகன்” (குறுந்.221:3-4)**

என ஆயர் பாலில் அரிசியைப் பெய்து பாற்சோறு ஆக்கி உண்டமைப் புலனாகின்றது. அதுபோல் பாலைக் காய்ச்சாமலே மருந்தையிட்டு நெய்யைக் கடைந்து வாங்கின பாலால் நுகர்வோர்க்குச் சிறிதும் பயனில்லை என்னும் கருத்தைக் கலித்தொகை எடுத்துரைக்கின்றது. மேலும் நன்றாகக் காய்ச்சிய பாலை உறை ஊற்றிப் பெற்ற முற்றிய தயிரை விரல்களால் பிசைந்து புளிக்குழம்பு வைப்பதை குறுந்தொகை (குறுந்.167:1-6) விளக்குகின்றது.

**நெற்சோறு**

நெற்சோறு உணவு பற்றி அறுபது[28] இடங்களில் குறிப்புளது. உழவன் இரவின்கண் தூங்காமல் குளிர்ந்த இருள் அகலும் விடியற்காலத்தே கரிய கண்களைக் கொண்ட வரால் மீனின் பெரிய துண்டங்களை அவை மிளிரும் வண்ணம் குழம்பிலே பிறழவிட்டு உணவுக்குரிய அரிசியால் சமைத்த சோற்றுத்திரளை விரும்பி உண்டு, உழத்தியதோடு நீர்மிக்க சேற்றிலே நாற்றுகளை நடுவதற்கு செல்வதும் (நற்.60:1-9) கருணைக்கிழங்கு பொரியலோடு செந்நெல்லாள் சமைத்த வெண்மையான சோற்றுப்பலியைத் தெய்வத்திற்கு இடும் நிலையிலும் நெற்சோறு சுட்டப்பட்டுள்ளது. (நற்.367:3-4)

திருமண நிகழ்ச்சிகளில் உழுந்தம் பருப்புடன் கூட்டிக் சமைத்த குழைவான வெந்த பொங்கலோடு பெருஞ்சோற்றுத் திரளை உண்டமை (அகநா.136:1). அதுபோல் புழுக்கின் நெய்கனி வெண்சோறு (அகநா:136:1). என்பதில் நெய்மிக்க வெண்மையான சோற்றினை இறைச்சியுடன் ஆக்கி உண்டமை ஐந்திடங்களில்[29] காணப்படுகின்றது.

**உணவில் உப்பு பயன்படுத்துதல்**

சங்க மக்கள் உப்பை உணவிற்குப் பயன்படுத்தியுள்ளமை குறித்து பதினாறு[30] இடங்களில் குறிப்புளது.

உப்பில்லாப் பண்டம் குப்பையிலே என்பதற்கேற்ப அக்கால மக்கள் புலால் மணம் பொருந்திய மீனை வற்றலாய்ப் புலத்துவதற்கும் (நற்.33:1:1-4) பிறநாடுகளில் உப்பிற்கு வெண்ணைல்லைப் பெற்று வாழ்க்கை நடத்துவதற்கும் உப்பினைப் (நற்.183:1-5) பயன்படுத்தினமை சிறப்பிற்குரிய ஒன்றாகும். இவ்வாறு வாங்கி வந்த நெல்லை இடித்து ஆக்கிய மாவின்கண் தயிரிட்டுப் பிசைந்த உணவினைக் குதிரைக்கும் கொடுப்பதும் உண்டு (அகநா.340:14-15) மாங்காயை நசுக்கிப் சாறெடுத்துப் பருகினர் என்பதனை,

**“வளியொடு சினைஇய வண்டளிர் மாஅத்துக்**
**கிளிபோல் காய கிளைத் துணர் வடித்துப்**
**புளிப்பதன் அமைத்த புதுக் குட மலிர் நிறை**

**வெயில் வெரிந் நிறுத்த பயிலிதழ்ப் பசுங் குடைக்**

**கயம் மண்டு பகட்டிற் பருகி" (அகநா.37:7-11)**

அறியலாம் மேலும் கொள், பயறுவகைகள், கிழங்குவகைகள், மாவடுகள், நெய், வெண்ணெய் போன்ற உணவுப்பொருட்கள் குறித்து அக இலக்கியம் புலப்படுத்துகிறது[31].

**மீன் வகைகள்**

வாளை மீன், கொண்டைமீன், பசுமீன், அயிரைமீன், வாராஅல்மீன், கெளிற்றுமீன், இனமீன், பெருமீன், சிறுமீன், செங்கண்சிறுமீன், சேயிறா, வயமீன், கொழுமீன், வெண்இறாள்மீன், கயல்மீன், கோட்டுமீன், கெடிறு போன்ற பல்வேறு மீன்வகையினை அக்கால மக்கள் உணவாகப் பயன்படுத்தி உள்ளனர்[32]. இதனை,

**"உப்பு நொடை நெல்லின் மூரல் வெண் சோறு**

**அயிலை துழந்த அம் புளிச் சொரிந்து**

**கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்" (அகநா.60:4-6)**

என்றும் பாடலடி சுட்டும்.

**கள்**

இது தேறல், நறவு, கள், பிழி, அரியல், தேக்கட்தேறல், தோப்பி, பனந்தீம்பிழி என பல பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளது.[33] பரதவர் ஒளி பொருந்திய விளக்குகளைக் கொளுத்திக் கொண்டு இரவு நடுயாமத்தில் மீன்வேட்டைக்குச் செல்வதும் வேட்டையில் கடலிலிருந்து பெற்ற மீன்களை விடியற்காலையில் கொண்டு வருவதும் அந்த மீன்களைக் கடற்கரைச் சோலையின் வரியமைந்த நிழலில் குவித்து மீனுடன் தேன்மணம் கமழும் கள்ளினைத் தம் சுற்றத்தாருடன் சோந்து உண்பதும் உண்டுள்ளனா். (அகநா.388:4-9).

மேலும் பாலை நிலத்தில் வாழும் மக்களோ விளைநிலப் பகுதிகளில் வாழாததால் ஆறலைத்தலால் வரும் பொருள்களையும் அயலூர்களில் சென்று கவா்ந்துவந்த பொருள்களையும் உண்பா். அவற்றோடு தாம்வாழும் வறண்ட நிலத்தில் விளைந்த உணவுப் பொருள்களையும் உண்பா்.

கோடை நீண்டமையால் வெப்பமிக வறண்ட நிலத்து உதிா்ந்த புல்லரிசியை வில்லினை உடைய கள்வா் உணவாகக் கொள்வா். (அகநா.337:2) பின் பசுக்களை கவா்ந்து வந்தமையால் நறவினையும் நிணச்சோற்றினையும் தெய்வத்திற்குப் பலியாகக் கொடுப்பா். (அகநா.213:7)

அதுமட்டுமின்றி ஆறலைக் கள்வர்கள் எருதினைக் கொன்று அதன் தசையை நெருப்பிலிட்டுச் சுட்டு எடுத்துக் கண்டாரை வருத்தும் இயல்புடைய பேய்களைப் போல் அதன் பொன்னிறமான ஊனைத்தின்பர். பின் நெல்லால் சமைந்த தோப்பிக் கள்ளினைக் குடிப்பர். (அகநா.265:16-17) என அகநானூறு பாலைநிலமக்களின் உணவுப்பொருள்களை எடுத்துரைக்கின்றது.

**தேன்**

குறிஞ்சி நில மக்களின் முக்கியமான உணவு தேனாகும். இது உயரமான மலைகளிலும் மரங்களில் கிளைகளிலும் காணப்படும். இதனை பிரசம், இறால், தேன், தேம் எனப் பலபெயர்களாலும் அழைப்பர். இது நாற்பத்தேழு[34] இடங்களில் காணப்படுகிறது.

**விலங்குகள்**

சங்க கால மக்களின் காதலின் ஆழத்தையும் வீரத்தின் சிறப்பையும் காட்ட அக்கால புலவர்கள் அஃறிணை உயிரினங்களான விலங்குகளையும் பறவைகளையும் கருப்பொருள்களில் பயன்படுத்தினர். அஃறிணை உயிரினங்களைத் தொல்காப்பியர்,

**“மாவும் புள்ளும் ஐயறிவினவே**
**பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே”[35]**

என்கிறார். அதாவது விலங்கும் பறவையும் ஐந்தறிவும் உடையன. அதில் சில ஆறறிவுவுடையன[36] என்கிறார். இவற்றை “இளம்பூரணர் குரங்கு, யானை என விளக்கம் தருகிறார்.”[37] இச்சூத்திரத்தின் மூலம் விலங்குகளில் ஐந்தறிவு உடையனவும் ஆறறிவு உடைய விலங்குகளும் இருந்தமை புலனாகிறது. அதுபோல் காதாசப்தசதியிலும் விலங்கு, பறவை குறித்துப் பரவலாகப் பேசப்படுகின்றது.

**விலங்கு பெயர்க்காரணம்**

குறுக்காக வளரும் உடலமைப்பைக் கொண்டமையினால் விலங்கு என பெயர்பெற்றது. அக இலக்கியத்தில் யானை, புலி, சிங்கம், மான், பன்றி, குரங்கு, வருடை, முளவு, மரையா, செந்நாய், எண்கின், வெளில், வெருகு, ஆளி, முயல், ஒட்டகம், உடும்பு, கீரி, ஓதி, குதிரை, பசு, எருமை, ஆடு, கழுதை என பலவகையான விலங்குகள் காணப்படுகின்றது. அவற்றை பற்றியும் அவற்றின் செயல்பாடுகள் பற்றியும் பின்வருமாறு எடுத்துரைக்கப்படுகின்றது.

**யானை**

யா-பெரிய, ஐ-வியப்புப்பொருள் யானையின் உருவத்தைக் கண்டு வியப்பும் அச்சமும் கொண்ட வழி இப்பெயர் ஏற்பட்டிருக்கலாம். “நெடுநல்யானை”

(குறுந்.77:4) அகஇலக்கியத்தில் யானையினைக் குறிக்க யானை, களிறு, வேழம், பிடி, கைவல்மான், வாரணம், குஞ்சரம், நாகம், கோட்டுமா, மா, மலையமா, இரும்பிணம், ஒருத்தல் எனப் பல பெயர்கள் இடம் பெற்றுள்ளன. இதில் யானை என்னும் சொல் நூற்றி எண்பத்தாறு[38] இடங்களில் காணப்படுகின்றது.

யானையானது சிறிய கண்ணினையும் பெரிய துதிக்கையினையும் உடையது. (கலித்.43:20-21) உணவினைக் கவளமாக்கி உண்ணும். (குறுந்.170:3) அதன் முகத்தில் புள்ளிகள் பரவிக் கிடக்கும். (அகநா.108:3) மூங்கில் நெல்லை விரும்பி உண்ணும். (அகநா.232:2-3) நள்ளிரவில் தினைப் பயிரை அழிக்கும் செயலில் ஈடுபடும். (அகநா.392:2) அதன் வெண்ணிற கொம்புகளைக் கானவர் கருவியாகப் பயன்படுத்துவர். (அகநா.282:3)

**களிறு**

ஆண் யானையினைக் களிறு என்பர். இக்களிறு என்ற சொல் நூற்றிஇருபத்திரண்டு[39] இடங்களில் காணப்படுகின்றது.

யானைக் கூட்டத் தலைவனாகிய களிறானது மிக்க வலிமை கொண்டதும் தன்னிடத்தே அழைத்துச் சூழ்ந்து கொள்ளுமாறு செய்யும் இயல்பினது. மேலும் இக்களிறு அகலிய இடத்தையுடைய கானத்து ஆளியை நினைத்து, முதற்சூலை உடைய தன் இளையபிடி அஞ்சி நடுங்க, கரிய நிறத்தையும் சுரசுரப்பையும் உடைய தன் பெரிய துதிக்கையால் அணைத்துக் காத்து நிற்கும்.(அகநா.78:1-6)

அதுபோல் தலைவியின் குறிஞ்சிப்பாடலைக் கேட்டு இளங்களிறு தான் உண்ணவிரும்பிய தினைக்கதிரை உண்ணாமல், நின்ற நிலையிலே உறங்கியது (அகநா.102:6-9) தன் இனத்தைப் பேணிப்பாதுகாத்துப் போற்றும் விரைந்த நடை உடைய களிறானது முதலில் மூங்கில் முளைகளையும் பின்னர் தன் இனம் விரும்பும் தழைகளையும் கொண்டு வந்து கொடுத்து அவற்றை உண்பிக்கும் சிறப்பினை உடையது. (அகநா.218:1-2)

**“பெருந் தண் குளவி குழைத்த பா அடி,**
**இருஞ் சேறு ஆடிய நுதல, கொல்களிறு**
**பேதை ஆசினி, ஒசித்த**
**வீ ததர் வேங்கைய மலை கிழவோற்கே” (நற்.51:8-11)**

என யானை தன் அறியாமையால், ஆசினிப்பலாவை முறித்து மலர்கள் பல செறிந்த வேங்கையின் நிழலிலே தங்கிருந்தலை எடுத்துரைக்கின்றது. மேலும் களிற்றின் செவிக்கு சோம்பின் இலையும் அவற்றின் அசைவிற்கு வாடையும் உவமையாகக் கூறுவர் கிள்ளிமங்கலம்கிழார். (குறுந்.76:4-6)

**வேழம்**

யானையின் வெண்மையான தந்தங்களால் அமைந்த பெயர் வேழம் என்பதாகும். இச்சொல் இருபத்தைந்து[40] இடங்களில் சுட்டப்பெற்றுள்ளது. யானையின் கொம்பினைக் குறித்து

**"-----------------------------------சிறுகுடி பசித்தென,**

**கடுங்கண் வேழத்துக் கோடு நொடுத்து உண்ணும்" (குறுந்.100:3-4)**

என மலைவாழ்மக்கள் தம் உணவின் பொருட்டு யானைக் கொம்புகளை விற்பதும் உண்டு. அதுமட்டுமின்றி புலியை வேழமானது தன்னுடைய வெண்மையான கொம்பால் குத்திக் கொள்வதும் உண்டு. (நற்.39:5) அதுபோல்,

**"மறம் மிகு வேழம், தன் மாறு கொள் மைந்தினான்,**

**புகர் நுதல் புண் செய்த புய்கோடு போல" (கலித்.53:3-4)**

என்ற பாடலிலும் வீரமிக்க களிறு தனக்கு மாறாகிய மற்றொரு யானையை தனது கொம்பால் குத்தியது என்பதன் மூலம் வேழம் என்பதற்கு வெண்மையான கொம்பு என்று அறியப்படுகின்றது.

**பிடி**

பிடி என்பது பெண் யானையினைக் குறிக்கும். பிடி - அடங்குதல் என்று பொருள்படும். இச்சொல் எழுபத்தெட்டு[41] இடங்களில் பயின்று வந்துள்ளது.

**"பிடியென் பெண்பெயர் யானை மேற்றே"[42]**

எனத் தொல்காப்பியர் யானையின் பெண்பாற் பெயரைப் பிடி என்கிறார்.

**"இரும் பிணர்த் துறுகல் பிடிசெத்துத் தழூஉம் நின்" (ஐங்.239:2)**

என்னும் அடி பிடியினைச் சுட்டும்.

மேலும் மலையகத்து விளைவிப்பார் இன்றித் தானே விளைந்த வளைந்து நின்ற மூங்கில் நெற்கதிர்களை வளைத்துத் தின்றது முழந்தாளை உடைய கரியபெண்யானை, செறிந்த இலைகளையுடைய வாழைகள் நிறைந்த இடத்தே புகுந்து சென்றது. அங்கு வருடைமானின் குட்டிகள் இயங்கா நின்ற இடத்தே ஞாயிறு தோன்றும் விடியற் காலத்தே துயில் கொண்டது (கலித்.50:2-5) சுரபுன்னையோடு வாழை ஓங்கி வளர்ந்துள்ள தாழ்ந்த இடத்தையுடைய நீர்வற்றாத குழியில் அகப்பட்டுக் கொண்ட கடுமையான இயல்புடைய களிற்றியானையின் வருத்தம் நீங்க அதன் பெண்யானை அக்களிறு ஏறுவதற்கு ஏற்ற படியாகப் பெரிய மரத்தினை முறித்துப் போட்டது. அப்போது எழுந்த மரம் முறிபடும் பேரொலி விண்ணைத் தழுவி நிற்கும் மலைகுகைகளில் சென்று எதிரொலிக்கும் (அகநா.8:8-12) என்பதும் பிடியின் சிறப்பினை உணர்த்தும்.

**வாரணம்**

யானையின் மற்றொரு பெயர் வாரணம் என்பதாகும். இது நான்கிடங்களில்[43] காணப்படுகின்றது. வாரணம் என்பதற்கு ஞா.தேவநேயன் ‘‘வாரணம் சங்கு போன்ற அமைப்பை உடையது (அ) புல்லை வாரிப் போடுவது என்பர்’’[44] இத்தகைய வாரணம் குறித்து

**‘‘மறம் கொள் இரும்புலித் தொல் முரண் தொலைத்த**

**முறம் செவி வாரணம் முன்குளகு அருந்தி’’ (கலித்.42:1-2)**

எனத் தன் பழைய பகையான வீரம் படைத்த பெரிய புலியைக் கொன்ற முறம் போலும் காதுகளைக் கொண்ட காட்டுயானை, தன் முன்னர்க் கிடந்த இலையாகிய உணவைத் தின்று பின் ஒலிக்கின்ற வெள்ளிய அருவி நீரைப் பருகி அயர்ந்து வளம் நிறைந்து விளங்கும் கரிய சோலையிடத்தே விளங்கியது என்பதைச் சுட்டுகின்றது.

**கைவல்மான்**

விலங்குகளில் யானைக்கு மட்டும் கை இருப்பதால் கைவல்மான் என்றழைக்கப் பட்டிருக்கலாம். இது ஈரிடங்களில்[45] காணப்படுகின்றது.

**குஞ்சரம்**

குஞ்சரம் என்பதற்கு அழகு என்ற பொருளுண்டு.

**‘‘குஞ்சம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை’’[46]**

என்கிறார் தொல்காப்பியர்.

**‘‘குஞ்சரம் நடுங்கத் தாக்கி, கொடுவரி’’ (அகநா.92:3)**

என அகநானூறு ஓரிடத்தில் குஞ்சரம் பற்றி விளக்கியுள்ளது.

**நாகம்**

நாகம் என்பது நல்ல பாம்பினைக் குறிக்கும்.

**‘‘கொடி பிணங்கு அரில இருள் கொள் நாகம்’’ (அகநா.73:12)**

என்பதில் வரும் நாகம் என்பதற்கு யானை என உரைவிளக்கம் தந்துள்ளனர். எனவே யானையின் முக அமைப்பு பாம்பு படமெடுப்பது போல் அமைந்திருப்பதால் இப்பெயர் இட்டு வழங்கப்பட்டிருக்கலாம் என்பது புலனாகிறது.

**மா**

மா என்பது விலங்குகளைக் குறிக்கும் பொதுப்பெயர். இங்கு யானையினைக் குறிக்க கோட்டுமா, கோட்டுயானை எனப் பல்வேறு அடைகொடுத்து கூறப்பட்டுள்ளது.

**கோட்டுமா**

**"கோட்டு மா வழங்கும் காட்டக நெறியே" (ஐங்.282:5)**

**வெண்கோட்டு யானை**

வெள்ளிய தந்தங்களை உடைய யானை வெண்கோட்டு யானை என்று அழைக்கப்பட்டது. (அகநா.68:19)

**கையுடைநல்மா**

கைவல்மான் என்பது வலிமையான கையை உடைய யானையினைக் குறிக்கும் பெயராகும். இது ஈரிடங்களில்[47] காணப்படுகின்றது.

**மலைமா**

யானை மலை போன்ற பெரிய உருவத்தைக் கொண்டமையினால் மலைமா (நற்.77:1)

என்றழைக்கப்பட்டது.

**இரும்பிணத் தெயிறு**

இரும் - கருமை, பிணர் - சொரசொரப்பு (குறுந்.13:2) எயிறு – தந்தங்கள் யானை கருமை நிறத்தில் சொரசொரப்புடன், தந்தங்களைக் கொண்டு இருப்பதால் இரும்பிணத்தெயிறு என அழைக்கப்பட்டது. இது ஓரிடத்தில் (ஐங்.239:2) மட்டும் காணப்படுகின்றது.

**ஒருத்தல்**

ஆண் யானையை ஒருத்தல் என்றழைப்பர். இச்சொல் பத்திடங்களில்[48] இடம் பெற்றுள்ளது.

காதாசப்தசதியில் களிற்றினம் பற்றி ஆறிடங்களிலும்[49] பிடி பற்றி மூவிடங்களிலும்[50] சுட்டப்பெற்றுள்ளது.

**"பெரும்பசி யுழந்தும் பிடிமுகம் நினைந்து**
**இருங்களிற் றொருத்தல் ஏங்கி நைந்து**
**தாமரைத் தண்டுறு தூமலர்க் கவளம்**
**நீடிய துதிக்கையில் வாட விடுமே" (காதா.309:1-4)**

என்ற பாடலில் யானையின் அன்புறுகாட்சி எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அதுபோல் சேற்றில் சிக்கிய ஆண்யானையினைப் பிரியாது பெண்யானை துதிக்கையால் பற்றிக் கொண்டு வெளிவர உதவும் அன்புறுகாட்சியையும் காதாசப்தசதி படம்பிடித்துக் காட்டுகின்றது. (காதா.360:1-4)

**புலி**

சங்க இலக்கியத்தில் புலியைக் குறிக்க வயப்புலி, வயமா, வல்லியம், கொடுவரி, வாள்வரி, வேங்கை, உழுவை போன்ற பெயர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**வயப்புலி**

வலிமை நிறைந்தது வயப்புலியாகும். (தொல்.849) வேங்கை மலர்களைக் கண்ட புள்ளிகளைக் கொண்ட முகத்தினையுடைய யானை, அப்பூக்களின் தோற்றத்தைப் புலியெனக் கருதி அஞ்சி மேகம் படிந்த மலைப்பக்கத்தில் மூங்கில் முறிந்து விழும்படி பெயர்ந்தொடுவதன் மூலம் புலி மஞ்சள் நிறமுடையதால் வேங்கை மலருடன் ஒப்பிட்டுக் கூறப்பட்டுள்ளது. அதுபோல் ‘‘வேங்கைப்பூ புலிபோல் மலரும் (குறுந்.237:6) என்பதன் மூலமும் புலியினது வடிவை ஒத்த வேங்கைப்பூ மிகுதியாக மலர்ந்துள்ள மரம் (கலித்.38:6-8) என்ற கூறுவதன் மூலமும் புலி என்பது நிறத்தால் அமைந்த பெயர் என்பது புலனாகிறது. புலி என்ற சொல் தொண்ணூற்றொரு[51] இடங்களில் காணப்படுகின்றது.

**புலியின் சிறப்பு**

புலியேறு தான் தொடங்கிய வினையைக் கைவிடாதது. தளர்ச்சியற்ற வலிய முயற்சியினை உடையது. அறப்பசித்து உயிர் வருந்துவதாயினும் தான் வீழ்த்திய களிறு இடப்பக்கம் வீழ்ந்தால் அதனை உண்ணாது என்பதனை,

**‘‘தொடங்கு வினை தவிரா, அசைவு இல் நோன் தாள்**
**கிடந்து உயிர் மறுகுவது ஆயினும், இடம் படின்**
**வீழ் களிறு மிசையாப் புலியினும் சிறந்த**
**தாழ்வு இல் உள்ளம் தலைத்தலைச் சிறப்ப’’ (அகநா.29:1-4)**

என்னும் பாடல் சுட்டும். மேலும் புலியானது கொன்று உண்டு கைவிட்டுப்போன பெரிய யானையினது ஊனை, ஆரவாரமிக்க ஆறலைக்கும் வீரர்கள் தம் கோலிற்கோத்துக் கொண்டு செல்வர். எஞ்சிய ஊனை, ஒலிக்கும் ஒலி பொருந்திய கடலில் விளையும் உப்பினைக் கொண்டு வரும் உமணர் கூட்டம் தீக்கடை கோலால் உண்டாக்கிய சிறுதீயில் வாட்டி சுனையினின்றும் கொண்டு வந்த நீர் கொண்டு ஏற்றிய உலையிற்போட்டு ஒன்று கூட்டி ஊன்சோறு ஆக்கி உண்ணுவர். (அகநா.169:3-7) இவை புலியின் சிறப்பினைச் சுட்டுவனவாகும்.

**புலியின் அன்புடைமை**

குட்டியை ஈன்ற அணிமையை உடைமையால் வயா வருத்தத்துடன் இருக்கின்ற பெண்புலி பசித்ததென்று வலிமை வாய்ந்த ஆண்புலி ஒளிரும்.

மேலுயர்ந்த கொம்பினையுடைய ஆண்யானையைக் கொன்று முழக்கமிடுவது அவற்றின் அன்புடைமையினைப் புலப்படுத்துவதாகும். (அகநா.112:5-6)

**புலியின் வீரம்**

குறுமையான முன்னங்கால்களையுடைய, கொல்வல்ல பெரிய ஆண்புலி பொலிவுமிக்க நெற்றியையுடைய கரிய பெண்யானை புலம்புமாறு நீரற்ற அகன்ற காட்டின்கண் பெரிய களிற்றைக் கொல்லும். (நற்.36:1-2)

**"கல் அதர் மன்னும் கால் கொல்லும்மே**
**கனை இருள் மன்னும் கண் கொள்ளும்மே**
**விடர் முகைச் செறிந்த வெஞ் சின இரும்புலி**
**புகர் முக வேழம் புலம்பத் தாக்கி,**
**குருதி பருகிய கொழுங் கவுட் கய வாய்**
**வேங்கை முதலொடு துடைக்கும்" (நற்.158:3-8)**

என்ற பாடலும் புலியின் சிறப்பினை எடுத்துரைக்கும். மேலும் கானவன் மகளாகிய தலைவி பொன்னால் செய்த புலிப்பல்லோடு கோத்த மணித்தாலியினை அணிதலும் உண்டு (அகநா.7:18-19) அதுபோல்,

**"களிற்று இரை தெரீஇய பார்வல் ஒதுக்கின்**
**ஒளித்து இயங்கும் மரபின் வயப் புலி போல,**
**நல் மனை நெடு நகர்க் காவலர் அறியாமை**
**தன் நசை உள்ளத்து நம் நசை வாய்ப்ப" (அகநா.22.14-17)**

என்ற பாடலும் வலிமையான ஆண்புலியின் சிறப்பினை விளக்குகின்றது. அதன் மூலம் தலைவனின் வீரத்தினைத் தலைவி உணர்த்துகின்றாள்.

**கோட்புலி**

உயிர்களைக் கொள்ளும் கோட்புலி (குறுந்.237:6) ஓரிடத்தில் மட்டும் கூறப்பட்டுள்ளது.

**கொடுவரி**

வளைந்த கோடுகளை உடைய உள்ளுக்கிடந்து புலி கொடுவரி இருப்புலி எனப்படும். (அகநா.27:1) இதனை

**"கொடுவரி தாக்கி" (கலித்.49:1)**

**"குறையார் கொடுவரி குழுமும் சாரல்" (அகநா.322:11)**

என்ற அடிகளும் சுட்டும். இது அகஇலக்கியத்தில் மூவிடங்களில் குறிக்கப்பெற்றுள்ளது.

**வயமா**

வலிமையான விலங்கு என்னும் அடிப்படையில் புலி ‘‘வயமா’’ எனவும் வல்லியம் எனவும் அழைக்கப்பட்டது. இது அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[52] பயின்றுவந்துள்ளது.

**வாள்வரி**

புலியின் உடம்பில் உள்ள வரிகள் பட்டையாக வாள்போல் காணப்படுவதால் வாள்வரி என்பர் (அகநா.145:7) இது ஓரிடத்தில் சுட்டப்பட்டுள்ளது.

**வேங்கை**

விலங்குகளில் மிகவும் வேகமாக ஓடக் கூடியது புலி என்பதால் வேகம் என்ற அடிப்படையில் வேங்கை எனப் பெயரிடப்பெற்றுள்ளது. புலியின் முன்னங்கால்களை விட முன்னங்கால்கள் குறுகியதாக இருப்பதால் வேகமாக ஓடுவதற்கும் நீண்டதூரம் தாண்டுவதற்கும் வாய்ப்பாக இவை அமைந்தள்ளன. தனது கைகளைக் கொண்டு வேகமாக ஓடுவதால் வேகம்+கை - வேங்கை என அழைக்கப்பட்டுள்ளது. மேலும் வரிகள் பொருந்தியது வேங்கைப்புலியின் கருந்தோல் (அகநா.285:8) என அகநானூறு விளக்குகின்றது. வேங்கை என்ற பெயர் அகஇலக்கியத்தில் எட்டிடங்களில்[53] காணப்படுகின்றது.

**வரிவயங்கு இரும்புலி**

வரிகள் விளங்கும் வலிமைமிக்க புலி வரிவயங்கு இரும்புலி (அகநா.218:11) என்றழைக்கப்படும். இது அகஇலக்கியத்தில் ஓரிடத்தில் மட்டும் குறிக்கப்பட்டுள்ளது.

**உழுவை**

உழுவைப் புலியானது வாள் போன்ற அழகிய கோடுகளையும் (நற்.255:4) அகன்ற வாயினையும் (நற்.104:1) கொல்லவல்ல நகத்தினையும் (நற்.205:3) உடையது. அக இலக்கியத்தில் உழுவை என்ற சொல் பதினொரு[54] இடங்களில் காணப்படுகின்றது.

வளைந்த முள்ளினையுடைய இண்டஞ்செடியானது பிரப்பங்கொடியுடன் பின்னிக்கிடக்கும் வெண்ணிற அரும்புகளையுடைய குறுங்காட்டில், வயா வேட்கையுடன் உண்ணாது கிடந்த பெண்புலியின் துன்பத்தைத் துடைக்கும் பொருட்டு ஆண்புலி பெரிய கொம்பினை உடைய களிற்றினைத் தன் வலப்பக்கம் விழுமாறு, கொன்று பாறைகள் குருதியால் சிவக்கும்படி இழுத்து வந்த செய்தியின் (அகநா.357:1-6) மூலம் நிலத்தை உழப்பயன்படும் கலப்பையின் செயல்போல், புலியினது செயல் இருந்தமையினால் உழுவை

எனப்பெயர்பெற்றுள்ளது. இவ்வாறு புலியின் பல்வேறு செயல்கள் புலவர்களைக் கவர்ந்ததால் சங்க அகஇலக்கியத்தில் புலி பற்றிய செய்தி அதிக இடங்களில் பாடப்பட்டுள்ளது என அறியலாம்.

**மான்**

மான் என்றால் மாட்சிமை, மென்மைத்தன்மை, மருண்டநோக்கு அழகு, பெண்களுடன் ஒப்பிடப்படுவது எனப்பல பொருள்படும். சங்க அகஇலக்கியத்தில் இச்சொல் நாற்பது[55] இடங்களில் காணப்படுகின்றது.

**மானின் வகைகள்**

சங்க அகஇலக்கியத்தில் இரலை, புல்வாய், நவ்வி, கலைமான், உழைமான், கடமான், வருடைமான் என ஐந்து வகை மானின் பெயர்கள் இடம்பெற்றுள்ளன.

**கலைமான்**

கலை என்றால் அழகு என்று பொருள்படும். இம்மானின் கொம்புகள் கிளைப்போல் வளரும் இயல்பினது (குறுந்.213:2) முற்றியவுடன் உதிர்ந்துவிடுவது (நற்.265:3) எனவும் வறண்ட மரம்போல் காணப்படுவது (அகநா.395:7-8) அகஇலக்கியம் கலைமானின் கொம்பின் தன்மையினைச் சித்திரிக்கின்றது.

**“கவைமருப்பு எழிற்கலை” (அகநா.395:8)**

என்னும் பாடலடி கலைமானின் கொம்பினைச் சிறப்பிக்கின்றது. மேலும்

**“மறி இடைப் படுத்த மான் பிணை போல**
**புதல்வன் நடுவணன் ஆக, நன்றும்**
**இனிதுமன்ற அவர் கிடக்கை” (ஐங்.401:1-3)**

என்ற பாடல் கணவனும் மனைவியும் கருத்தொருமித்தும் ஒத்த அன்பு கொண்டு வாழ்வதற்கும் மானின் அன்புறு காட்சிகள் உவமையாகக் கூறப்பட்டுள்ளன.

**உழைமான்**

உழைமான் என்பது ஒருவகையான ஆண்மானாகும். இதனை,

**“கலையென் காட்சி உழைக்கும் உரித்தே”[56]**

என்பர் தொல்காப்பியர்.

**“அறுகோட்டு உழைமான் ஆண்குரல் ஓர்க்கும்” (அகநா.147:7)**

என்ற அடியின் மூலம் உழை என்பது கலைமானின் மற்றொரு வகை என்பது புலனாகிறது. உழைமான் குறித்து அகஇலக்கியத்தில் ஒன்பது[57] இடங்களில் பயின்று வந்துள்ளது,

**“கனைஎரி நிகழ்ந்த இலைஇல் அம்காட்டு**
**உழைப்புறத்து அன்ன புள்ளி நீழல்” (அகநா.379:19-20)**

எனக் காட்டுத்தீ பரவி அழித்தமையால் இலையற்ற மரநிழல் உழைமானின் முதுகிலுள்ள புள்ளிகள் போன்று காணப்படும் என உவமிக்கப்படுவதன் மூலம் உழைமான் புள்ளிமான் என்றும் உடைமான் என்றும் அழைக்கப்படும் செய்தி புலனாகிறது.

**இரலைமான்**

இரும்பை முறுக்கி விட்டாற் போன்ற கரிய பெரிய கொம்புகளைக் கொண்ட கலைமான்கள் பரற்கற்களைக் கொண்ட பள்ளங்களில் எல்லாம் துள்ளிக் குதித்தன என்பதன் மூலம் இரலைமான் கொம்பினை உடையது (அகநா.4:4-5) அதன் கொம்புகள் அலை அலையாக முறுக்கிக் காணப்படுவதால் இர்+அலை-இரலை என்றும் அழைக்கப்பட்டது. அகஇலக்கியத்தில் இரலை குறித்து இருபத்திரண்டு[58] இடங்களில் காணப்படுகின்றது.

**“எருத்து வலிய எறுழ்நோக்கு இரலை**
**மருப்பின் திரிந்து” (கலித்.15:5-6)**

என்ற அடியின் மூலம் இரலை என்பது அதன் கொம்பினால் அமைந்த பெயர் என்பது புலனாகிறது.

**புல்வாய்**

காடும் காடு சார்ந்த முல்லைநிலத்துப் புல்வெளிகளில் மிகுதியாகக் காணப்படும் மான் புல்வாய் எனப்படும்.

**“இரலையும் கலையும் புல்வாய்க்குரிய”[59]**

எனத் தொல்காப்பியர் சுட்டுவர். அதாவது இரலையும் கலையும் புல்வாய் போன்றவை என்றும் ஆண்மானைக் குறிக்கும் என்றும் குறிப்பிடுகிறார். அகஇலக்கியத்தில் இச்சொல் ஓரிடத்தில் மட்டும் காணப்படுகின்றது.

**“விசைத்த வில்லர், வேட்டம் போகி,**
**முல்லைப் படப்பைப் புல்வாய் கொண்டும்” (அகநா.284:9-10)**

என்ற பாடல் வேட்டைக்குச் செல்லும் மறவர்கள் முல்லைநிலத் தோட்டத்தில் புல்வாயினைக் கொன்று தின்றதனை எடுத்துரைக்கின்றது.

**நவ்விமான்**

மான்களில் மிகவும் அழகானது நவ்வியாகும். இது “இரலையை விடச் சிறியதாகவும் மென்மையானதும் அழகியதாகவும் காணப்படும் என்பர்”[60] பி.எல்.சாமி. தமிழ் அகராதி “நவ்வி என்பதற்கு அழகு என்று பொருள் கூறுகின்றது”[61] நவ்வி என்னும் பெண்மான் நான்கிடங்களில்[62] காணப்படுகின்றது.

**“ ---------------------------------------------- இன்சிலை**

**ஏறுடை இனத்த, நாறு உயிர் நவ்வி”** **(அகநா.7:9-10)**

என்னும் அடி நவ்விமானின் குரல் இனிமை உடையது என்பதை உணர்த்துகின்றது.

**கடமா**

‘‘கலைமானினத்தில் மிகவும் பெரியது கடமாவாகும் என்பர்’’[63] பி.எல்.சாமி. எனவே பெரிய வடிவமுடைய மான் கடமா எனலாம். அகஇலக்கியத்தில் இம்மான் ஈரிடங்களில் பயின்று வந்துள்ளது. கடமாவை வேட்டையாட முடியாமல் வேடுவர்கள் ஓடி இளைத்ததை

**‘‘கல்லென் கானத்துக் கடமா ஆட்டி**

**எல்லும் எல்லின்று; ஞமலியும் இளைத்தன;’’** (குறுந்179:1-2)

என்ற பாடல் சுட்டும்.

**புகரி**

புள்ளிகளை உடைய மான் புகரி எனப்படும். ‘‘புகரி புழுங்கிய புயனீங்கு புறவு’’ (குறுந்.391:2) என ஓரிடத்தில் மட்டும் புகரிமான் குறிப்பிடப்பட்டுள்ளது.

**வருடைமான்**

மலைப் பகுதியில் வாழும் ஆடு போன்ற தோற்றமுடைய மான் வருடைமானாகும். இவ்வருடை மான் குறித்து அகஇலக்கியத்தில் எட்டிடங்களில்[64] சுட்டப்பெற்றுள்ளது. வருடையின் கன்று பாலைநிறையக் குடித்து, மலையின் நிழலில் துயில்வதுபோலத் தலைவனும் பொருள் மிகுதியாகப் பெற்று தன்னுடன் இல்லறம் நிகழ்த்துவான் எனத் தலைவி தோழிக்கு உணர்த்தியமையினை,

**“செவ்வரைச் சேக்கை வருடைமான் மறி**

**கரை பொழி தீம்பால் ஆர மாந்தி”** **(குறுந்.187:1-2)**

என்னும் அடிகள் சுட்டும். இவ்விடத்தில் வருடைமானின் குட்டி இடம்பெறுகிறது. அதுபோல் ‘‘வருடை மான் குழவி’’ (கலித்.43:4, 50:21-22) ‘‘வருடை மடமறி’’ (கலித்50:4) என்ற பாடல்களிலும் வருடை மானின் குட்டி இடம்பெறுகிறது.

காதாசப்தசதியில் கலைமானும் பிணைமானும் மூவிடங்களில்[65] இடம் பெற்றுள்ளன. அவை நம்பிக்கை சார்ந்த பண்பாட்டில் கூறப்பட்டுள்ளது. ஒரு வேடன் கலைமான் மீது குறி வைத்ததைப் பார்த்த பெண்மான் அம்புக்குறி தன் மீது விழுமாறு ஊடே வந்து நின்றது. வேடன் அப்பெண் மான்மீது குறிவைக்க பெண்மானைக் காக்க வேண்டி கலைமான் குறுக்கே வந்தது. இவ்விதம்

ஒன்றினைக் காக்க ஒன்று தன் சாவைப் பொருட்படுத்தாது வாழும் அன்புறுகாட்சியைக் காதாசப்தசதி எடுத்துரைக்கின்றது. (காதா.456:1-2)

**குரங்கின் பெயர்கள்**

அக இலக்கியத்தில் குரங்கு கடுவன், மந்தி, கலை, முசு, ஊகம் எனப் பல வகைகளாகக் கூறப்பட்டுள்ளன.

**குரங்கு**

"மனித இனத்திற்கு தலைமையானதும் விலங்குகளின் முதன்மையானதும் குரங்காகும்"[66] "குர்+ உர்=கு என அதன் சத்தத்தின் அடிப்படையில் பிறந்ததே குரங்கென்னும் பொதுப்பெயர்"[67] இச்சொல் அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[68] குறிக்கப்பட்டுள்ளது.

பாறையில் காய வைத்த சிவந்த தினையை மகளிர் நீராடும் பொழுது, மரங்கிளையிலிருந்து தம் குட்டிகளுடன் இறங்கிய பசிய கண்களை உடைய பெண்குரங்கு கைப்பற்றி உண்ணுதற்குரிய மலைநாடு (குறுந்.335:1-3) என்பதன் மூலமும்

**"-------------------------------------நீடுமயிர்க்**
**கடும்பல் ஊகக் கறைவிரல் ஏற்றை**
**புடைத் தொடுபு உடையூப் பூநாறு பலவுக்கனி**
**காந்தள்அம் சிறுகுடிக் கமழும்**
**ஓங்குமலை" (குறுந்.373:2-6)**

என்ற பாடலின் மூலமும் குரங்குகள் பெரும்பாலும் மலைகளிலேயே வாழும் தன்மையது என்பது புலனாகிறது.

**கடுவன்**

குரங்குகளின் தலைவன் கடுவன் என்றழைக்கப்படும் (கடுவன் - கடி (காவல்) வன் (வலிமை) ஆண் குரங்காகிய கடுவன் குறித்து அகஇலக்கியத்தில் பதினான்கு[69] இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது.

**"மந்திக் கணவன் கல்லாக் கடுவன்" (ஐங்.274:1)**

என மந்தியின் கணவனான குரங்குச் சாதிக்குரிய திறன்கள் யாவும் படைத்த ஆண் குரங்கு கடுவனாகும் என்று சுட்டப்பட்டுள்ளது. அதுபோல்

**"பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்" (அகநா.352:2)**

**"வரை ஆடு வன்பறழ்த் தந்தைக்**
**கடுவனும் அறியும்" (குறுந்.26:7-8)**

என்ற பாடலடிகள் விளக்கும். மேலும் குரங்குகள் சிறு சிறு கூட்டமாக வாழக்கூடியவை (நற்.334:1,குறுந்.69:3) என்று கூறுவதன் மூலம் அக்கூட்டங்களில் வலிமையான குரங்காக கடுவன் விளங்கினமை புலனாகின்றது.

**மந்தி**

பெண்குரங்கு மந்தி என்றழைக்கப்படும். அகஇலக்கியத்தில் இச்சொல் முப்பது[70] இடங்களில் சுட்டப்பெற்றுள்ளது.

**"குரங்கும் முசுவும் ஊகமும் மந்தி"[71]**

எனத் தொல்காப்பியர் குரங்கு முதலாயின மூன்றும் மந்தி என்னும் பெண்பாற்பெயர் பெறும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

**"அதவத் தீம் கனி அன்ன செம்முகத்**
**துய்த் தலை மந்தி வன் பறழ் தூங்க" (நற்.95:3-4)**

என்ற அடிகளின் மூலம் மந்திக் குரங்கு அத்திப்பழம் போன்ற சிவந்த முகத்தையும் பஞ்சு போன்ற தலையையுமுடையது என்பது புலனாகிறது. அதுபோல்,

**"செம் முக மந்தி செய்குறி" (நற்.151:8)**

என்ற அடியும் மந்தி என்பது நிறத்தால் அமைந்த பெயரென்பதைச் சுட்டுகின்றது.

**கலை**

கலை என்னும் பெயர் முசுவின் ஆண் குரங்கினைக் குறிப்பதாகும். இதன் முகம் கருமையானமையினால் கலை என்றழைக்கப்பட்டது. இதனை,

**"மைபட்டன்ன மாமுக முசுக்கலை" (குறுந்.121:2)**

**"கருங்கட் தாக்கலை பெரும்பிறிது உற்றென**
**கைம்மை உய்யாக் காமர் மந்தி" (குறுந்.69:1-2)**

என்ற பாடல் அடிகள் விளக்கும். அகஇலக்கியத்தில் கலை குறித்து பதினொரு[72] இடங்களில் குறிக்கப்பட்டு உள்ளது. "கலை என்பதற்கு செந்தமிழ் அகராதி "மரவயிரம்" என்று பொருள் தருகின்றது. அதாவது மரவயிரம் என்பது முற்றிய மரத்தின் உள்பகுதியாகும். அதன் நிறம் கருமையாக இருப்பதால் கருமைநிறக் குரங்கு 'கலை' எனவும் வழங்கப்பட்டுள்ளது."[73]

தொல்காப்பியர் கலை என்னும் பெயர் முசுவிற்கும் உரித்தாகும் என்பர். பேராசிரியர் "முசுவிற்கும் நிலை பெற்றனவே அத்துணை நிலைபேறின்றிக் குரங்கிற்கு வருவனவும் கொள்க என்பர்."[74] ஆகவே குரங்கினங்களில் முகம் கருமைநிறமுடைய ஆண், பெண் குரங்கினங்கள் கலை எனவும் முசுக்கலை எனவும் அழைக்கப்படும் என்பது மேற்கூறிய செய்திகளின் வழி புலனாகிறது.

**முசு**

"கருமுக முசுவின்" (அகநா.121:15) "மைபட்டன்ன மாமுக முசுவினம்" (அகநா.267:9) என்ற அடிகளின் மூலம் முசு என்பது முகம் கரியதாகிய ஒருவகை பெண் குரங்காகும். பொதுவாக முசு என்றால் சிறியது எனப்பொருள்படும். அதாவது ஆண்குரங்காகிய கலையை விடச் சிறிய முகமும் அதிரும் குரலையும் உடையதாகும். இது மிளகுக் கொடியை விரும்பி உண்ணும் (அகநா.182:12-18) என அகநானூறு சுட்டுகின்றது. முசு குறித்து அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[75] குறிப்புளது.

**ஊகம்**

உடல் முழுவதும் நீண்ட மயிரினையும் கடிய பற்களையும் கருமையுடைய விரல்களையும் உடைய கருங்குரங்கின் ஆண் ஊகம் எனப்படும். (குறுந்.373:5) இவ்வூகம் குறித்து அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[76] சுட்டப்பெற்றுள்ளது.

**"நரைமுக ஊகம் பார்ப்பொடு பனிப்ப" (குறுந்.249:2)**

என்னும் அடி விளக்கும்.

மேற்கூறிய செய்திகளின் மூலம் குரங்குகள் குறிஞ்சிநிலத்தில் அதிகமாக காணப்படும் என்பது புலனாகிறது. காதாசப்தசதியில் குரங்கு பற்றி ஓரிடத்தில் மட்டும் பதிவு செய்யப்பட்டுள்ளது. குரங்கொன்று முன்பு வண்டு கடித்து, துன்புற்ற பயத்தால் வண்டைப் போன்றுள்ள நாவற் கனியை எடுக்கப்பயந்து கிளையை உலுக்கியும் விலகி, நின்றும் குதித்தாட்டம் போட்டது. அதாவது ஓர் அனுபவத்தில் துன்புற்றவர் அதே போன்று மற்றவர்களிடம் அஞ்சும் மனநிலைக்கு உவமையாகக் குரங்கு கூறப்பட்டுள்ளமை அறியமுடிகிறது. (காதா.406:1-4)

**பன்றி**

பன்றியைக் குறிக்கும் பெயர்களாகப் பன்றி, கேழல், கோட்டுமா, ஒருத்தல், ஏற்றை, புருவை போன்றவை புலவர்களால் சுட்டப்பெற்றுள்ளன.

உரிச்சொல் நிகண்டு பன்றியின் பெயர்களாக, "கருமா, கேழல், எறுழிகோலம், சூகரம், ஏனம், கோணி, வராகம், குரோடம், அரி, போத்திரி, பூதாரம், கிருட்டி, கிரி" போன்றவற்றையும்[77] சேந்தன் திவாகரம் "இருளி, கனலி, ஏனம், சூகரம், கருமா, மோழல், வல்லுளி, கேழல், வராகம், எறுழி, கோலம், களிறு முதலிய பெயர்களையும்[78] குறிப்பிடுகின்றது.

பன்றியானது தன் மூக்கினால் நிலத்தைப் பறித்து கிழங்கு முதலிய உணவுப்பொருட்களை உண்ணும் என்பதை,

**"வாழைஅம் சிலம்பில், கேழல் கெண்டிய**
**நிலவரை நிவந்த பல உறு திரு மணி" (நற்.399:4-5)**

என்று சுட்டும். அகஇலக்கியத்தில் பன்றி என்னும் சொல் பதினொரு[79] இடங்களில் பயின்று வந்துள்ளது.

**கேழல்**

கேழல் என்பது காட்டுப்பன்றியைக் குறிக்கும். இது அகஇலக்கியத்தில் பன்னிரண்டு[80] இடங்களில் குறிக்கப்பெற்றுள்ளது.

**"குருவும் கெழுவும் நிறனாகும்மே"[81]**

எனத் தொல்காப்பியர் கேழல் என்பது கருமை நிறத்தால் அமைந்த பெயராகும் என்பர். மேலும்

**"இளம் பிறை அன்ன கோட்ட கேழல்**
**களங் கனி அன்ன பெண்பால் புணரும்" (ஐங்.264:1-2)**

என்ற பாடல் விளங்கும். காட்டுப் பன்றியை வீட்டுப் பன்றியிலிருந்து பிரித்துணர முக்கியமாக உதவுவது அதன் முதுகிலும் கழுத்திலும் உள்ள கதிர் போன்று நீட்டியுள்ள மயிர்க்கற்றையே ஆகும் எனலாம்.

**"மென் தினை மேய்ந்த தறுகட் பன்றி**
**வன்கல் அடுக்கத்துத் துஞ்சும்" (ஐங்.261:1-2)**
**"வாழைஅம் சிலம்பில், கேழல் கெண்டிய" (நற்.399:4)**

என்னும் பாடலடிகள் கேழல் மலைப்பக்கத்தில் வாழும் தன்மையது என்று விளக்குகின்றது.

மேற்கூறிய செய்திகளின் வழி கேழல் என்னும் காட்டுப்பன்றி கருமை நிறமுடையதாகவும் மலைப்பக்கங்களில் வாழக்கூடியதாகவும் விளங்கும் என்பது அறியப்படுகின்றது. அதுமட்டுமின்றி சங்கப் பாடல்கள் கேழலின் உருவம், நிறம், குணம் ஆகியவற்றைப் பற்றி நன்கு எடுத்துரைக்கின்றன.

**கோட்டுமா**

கொம்பினை உடைய விலங்கு கோட்டுமாவாகும். இவ்விடம் கோடு என்பது பன்றியின் பற்களை (ஐங்.264:1) குறிக்கும். மருப்பு (ஐங்.265:1) என்ற சொல்லும் இதனைச் சுட்டும். எனவே கோட்டுமா என்பது பன்றியைக் குறிக்கும் பெயராகும். (நற்.75:6)

**புருவை**

புருவை (இளமை) பன்றியின் இளங்குட்டி புருவையாகும். இது அகஇலக்கியத்தில் ஓரிடத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதாவது பழங்கொல்லையாகிய மேட்டுநிலத்தில் வளர்ந்த, தினைப்பயிரை இளமை பொருந்திய புருவை உண்ண வருவதை அகநானூறு (88:1-4) எடுத்துரைக்கின்றது.

**ஏனம்**

தினைப் புனத்தில் அதிகமாகக் காணப்படும் பன்றி ஏனம் என்றழைக்கப்படும் (குறுந்.54:2)

**முளவுமா**

''முளவு மா வல்சி எயினர்'' (ஐங்.364:1) என்பதில் முள்ளம்பன்றி முளவுமா எனப்பட்டது. உடல்மேல் முள்ளையுடைய விலங்கு என்பதால் முள்மா, முளவுமா என்றும் எய்ப்பன்றி என்றும் அழைப்பர். இது தன்னைத் தாக்க வரும் விலங்கிடமிருந்து காத்துக் கொள்ள முள்ளை அம்பு போல் எய்வதால் எய்முள், எய், எய்மான் எனப் பலபெயர்களாலும் அழைக்கப்படும். இம்முளவுமா குறித்து அகஇலக்கியத்தில் ஆறிடங்களில்[82] சுட்டப்பெற்றுள்ளது. இந்த முள்ளம்பன்றி வழிப்போவோரைத் தாக்குவதை,

**"இயங்குநர்ச் செகுக்கும் எய்படு நனந்தலை" (அகநா.307:9)**

என அகநானூறு குறிப்பிடுகின்றது. அதுபோல் காட்டில் கானவன் அம்பெய்திக்கொணர்ந்த முள்ளம்பன்றியின் கொழுத்த தசைப்பகுதியைக் கிழங்கோடு தேன்மணம் கமழும் கூந்தலையுடைய கொடிச்சி சிறுகுடியினர் பலர்க்கும் பகுத்துத்தருவர். (நற்.85:8-10) எனக் கூறுவதன் மூலம் மலைவாழ் மக்களுக்கு உணவாகப் பயன்பட்ட செய்தி புலனாகிறது.

**எய்ம்முள்**

முள்ளம் பன்றியின் முள்ளைப் போன்ற பருத்த மயிரைஉடைய பிடரும் சிறிய கண்ணும் வயலிடத்தே சென்று மேயும் விருப்பமுடைய பன்றி உயர்ந்த மலையிடத்தே உள்ள பெரிய தினைப்புனத்திலே மேயும் என்பதனை,

**"எய்ம் முள் அன்ன பரூஉ மயிர் எருத்தின்**
**செய்யும் மேவல் சிறுகட் பன்றி**
**-----------------------------------------------------------------**
**கல் அளைப் பள்ளி வதியும்" (நற்.98:1-7)**

என்னும் அடிகள் சுட்டும். காதாசப்தசதியில் பன்றி பற்றிய குறிப்பு ஓரிடத்தில் (காதா.327:3) மட்டும் காணப்படுகின்றது. பன்றி வயல்வெளிகளில் கூட்டமாக மேய்வதால் அவ்விடத்தை ஒருத்தி குறியிடமாக அமைத்ததாக காதாசப்தசதி கூறுகின்றது.

**கரடி**

சங்க இலக்கியத்தில் கரடி என்ற சொல்லாட்சி இல்லை. எண்கு, உளியம் என்ற பெயர்களே காணப்படுகின்றன.

**எண்கு**

அகஇலக்கியத்தில் எள்ளைக் குறிக்க எண்கு (குறுந்261:2) என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. எள் - கருமைநிறம். எனவே எண்கு என்பது கரடிக்கு அதன் கருமைநிறத்தினால் அமைந்த பெயராகும். அதுபோல் மலைச்சாரலின்கண் பெரிய கையும் பிளந்த வாயும் உடைய ஆண்கரடி, இருளை வெட்டி வைத்தாற் போன்ற திரண்ட மயிர்உடைய குட்டியுடன் சுருண்டு தொய்ந்த முலையையுடைய பெண்கரடியுடனும் மகிழ்ந்திருக்கும் (அகநா.201:15-19) என்பதன் மூலமும் எண்கு என்பது கரடிக்குக் கருமைநிறமான முடியால் அமைந்த பெயர் என்பது புலனாகிறது. அகஇலக்கியத்தில் எண்கு என்னும் சொல் பதினான்கு[83] இடங்களில் காணப்படுகின்றது.

**உளியம்**

உளியம் என்னும் சொல் அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[84] பயின்று வந்துள்ளது. உளியம் என்பதற்கு “உளிபோலத் தரையைப் பிளக்கும் வாய் உடமையின் உளியம் என்னும் பெயர் வந்திருக்கலாம்”[85] என்பர் ஆ.சிவலிங்கனார்.

**“நாள் உலா எழுந்த கோள்வல் உளியம்” (அகநா.81:1)**

**“கொடுவிர லுளியங் கெண்டும்” (அகநா.88:14)**

என்ற அடிகளின் மூலம் உளியம் இரைதேட எழுவது புற்றாஞ்சோற்றினைக் கிண்டுவது போன்ற செயல்களால் இப்பெயர்பெற்றது எனலாம்.

மேலும் கரடியின் கையினைப் பெருங்கை என்றும் கொடுவிரல் என்றும் சங்கப்புலவர்கள் கூறியுள்ளனர். ஏனெனில் மலைப்பகுதியில் உள்ள பாம்புகள் இருக்கும் கறையான் புற்றினைத் தோண்டும் கரடிகள் அக்கறையானைத் தனக்கு இரையாகக் கொள்ளும். அதற்கேற்றவாறு கரடியின் கைகள் பெருங்கை, கொடுவிரல் என்றும் அழைக்கப்படும். இதனை,

**“------------------------------- குன்றத்து**
**இரும் புலி தொலைத்த பெருங் கை யானைக்**
**கவுள் மலிபு இழிதரும் காமர் கடாஅம்**
**இருஞ் சிறைத் தொகுதி ஆர்ப்ப யாழ் செத்து**
**இருங் கல் விடர் அளை அசுணம் ஓர்க்கும்**
**காம்பு அமல் இறும்பில் பாம்பு படத் துவன்றி**
**கொடு விரல் உளியம் கொண்டும்**
**வடு ஆழ் புற்றின வழக்கரு நெறியே” (அகநா.88:8-15)**

என்னும் பாடலடிகள் விளக்கும்.

காதாசப்தசதியில் கரடியின் தோல் மேல்மயிர் கரிந்த வைக்கோல் போலவும் உள்ளிருக்கும் தோல் சிவப்பாகத் தீக்கங்கு போலவும் இருப்பதாகச் சித்திரிக்கப்பட்டுள்ளது (காதா.98:3-4)

**வெருகு**

காட்டுப்பூனையினைக் குறிக்கும் வெருகு என்னும் சொல் அகஇலக்கியத்தில் ஏழிடங்களில்[86] பயின்று வந்துள்ளது. இல்லின்கண் உறைகின்ற கோழியானது மாலைக்காலத்தில் வெருகிற்கு அஞ்சி தன் குஞ்சுகளைக் கூவி அழைத்தலை,

**“மனை யுறை கோழிக் குறுங்காற் பேடை**
**வேலி வெருகினம் மாலை யுற்றெனப்**
**புகுமிட னறியாது தொகுபுடன் குழீஇய**
**பைதற் பிள்ளைக் கிளைபயிர்ந் தாஅங்கு” (குறுந்.139:1-4)**

என்னும் பாடல் எடுத்துரைக்கும். அதுபோல் நடு இரவில் வீட்டு எலியைத் தேடி வந்த காட்டுப்பூனைக்குச் சேவல் இரையாக அகப்பட்டதை (குறுந்.107:1-4) கூறுவதன் மூலம் கோழிகளுக்கு அச்சந்தரும் விலங்காக வெருகு விளங்கினமை புலனாகிறது.

**அரிமா**

காட்டில் விலங்குகளில் தலைவனாக விளங்குவதுதான் அரிமாவாகும். இவ்வரிமா மடங்கல், விலங்குமான், கோண்மா, உளைமான், வயமான், கடுமா எனப் பல சொற்களால் குறிக்கப்பட்டுள்ளது. “அரி என்ற சொல்லிற்கு வலி, அழகு என்று பொருள்”[87]

**“உரும்பு இல் உள்ளத்து அரிமா வழங்கும்**
**பெருங் கல் நாடன்” (நற்.112:4-5)**

என்னும் பாடல் சிங்கம் உலவும் அச்சம் கொண்டது. மலை நாடனின் மலை என்று விளக்குகின்றது. அதுபோல் மலையடிவாரத்தை நோக்கி அரிமாவின் குட்டி பாய்வது போல, மகன் தந்தை மார்பில் பாய்ந்ததை,

**“குன்ற இறு வரைக் கோண்மா இவர்ந்தாங்கு**
**தந்தை வியன் மார்பில் பாய்ந்தான்” (கலித்.86:32-33)**

என்று கலித்தொகை சுட்டுகின்றது.

**விலங்குமான்**

**“இலங்குமாண் அவிர்தூவி அன்ன மென்சேக்கையுள்**
**துலங்குமான் மேல் ஊர்தித் துயில் ஏற்பாய்! மற்று ஆண்டை**

**விலங்குமான் குரல் கேட்பின், வெருவுவை அல்லையோ?**

**(கலித்.13:15-17)**

என்று விலங்குகளில் மாட்சிமையுடையதாதலாலும் வீரத்தில் சிறந்ததாதலாலும் சிங்கமானது விலங்குமான் என்றழைக்கப்பட்டது.

**கோண்மா**

**"குன்ற இறு வரைக் கோண்மா இவர்ந்தாங்கு**

**தந்தை வியன் மார்பில் பாய்ந்தான்" (கலித்.86:32-33)**

என்பதில் கோண்மா என்பது சிங்கத்தைக் குறிக்கின்றது.

**கடுமா**

**" -------------------------------நயந்தனை அருளாய்,**

**இயங்குநர் மடிந்த அயம் திகழ் சிறு நெறிக்**

**கடு மா வழங்குதல் அறிந்தும்**

**நடு நாள் வருதி நோகோ யானே" (நற்.257:7-10)**

என்ற பாடலில் கடுமா என்பது சிங்கத்தை குறிக்கின்றது.

**மடங்கல்**

மடங்கல் என்பது சிங்கம் எனப் பொருள்படும். (நற்.57:1) காதாசப்தசதியில் அரிமா என்ற பெயரில் ஓரிடத்தில் (காதா.146:3) காணப்படுகின்றது.

**உளைமான்**

உளைமான் என்பது பிடரிமயிரினால் அமைந்த பெயராகும். உளை-மயிர், பிடரி மயிரினைக் குறிக்கும். இதனை,

**"உளைமான் துப்பின், ஓங்கு தினைப் பெரும் புனத்துக்**

**கழுதில், கானவன் பிழி மகிழ்ந்து வதிந்தென" (அகநா.102:1-2)**

சுட்டும்.

**வயமான்**

வய-வலிமை. வலிமையான விலங்கு வயமான் என்றழைக்கப்பட்டது. இது அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[88] காணப்படுகின்றது.

**ஆளி (யாளி)**

ஆளி என்பது "யானையின் தந்தமும், துதிக்கையும் சிங்கத்தின் முகமும் உடையதாகக் கருதப்படும் விலங்கு"[89] சங்க அகஇலக்கியத்தில் இச்சொல் மூவிடங்களில்[90] காணப்படுகின்றது. ஆளி என்னுமொரு விலங்கு கொல்லவல்ல

நகங்களையும் அழகிய கோடுகளையும் உடையது. அது புலியால் கொல்லப்பட்ட கூரிய களிற்றியானையினை இரையெனக் கொள்ளுதலை,

**"அருவி ஆர்க்கும் பெரு வரை அடுக்கத்து,**
**ஆளி நன் மான் வேட்டு எழு கோள் உகிர்ப்**
**பூம் பொறி உழுவை தொலைச்சிய, வைந் நுதி**
**ஏந்து வெண் கோட்டு, வயக் களிறு இழுக்கும்" (நற்.205:1-4)**

சுட்டும். அதுபோல் வேட்டைக்குச் செல்லும் வாள் போன்ற வரிகளையுடைய புலியானது நடுங்குமாறு, ஆளியானது பாய்ந்து வந்து யானையினைக் கொள்ளும் (அகநா.252:1-4) என்பதன் மூலம் ஆளியும் புலிப்போல் வலிமை மிகுந்த விலங்கு என்பது புலப்படுகின்றது.

**நரி**

நாயினத்தைச் சார்ந்த விலங்குகளாக ஓநாயையும் செந்நாயையும் நரியையும் குறிப்பிடுவர். ஆனால் இந்த மூன்று விலங்குகளும் தனித்தனியாகவே இலக்கியங்கள் கூறுகின்றன. நரி - நரை என்பதன் அடியாகப் பிறந்த சொல்லாகும். அதாவது நரியின் உடன் முழுவதும் நரைத்த வெளிர் பூத்த மஞ்சள் நிறத்தில் முடிகள் காணப்படுவதால் இப்பெயர்பெற்றது. இதில் சிறியவகை குறுநரி என்றும் கூட்டமான நரிகள் கணநரி (அகநா.375:6) என்றும் முதிய நரிகள் முதுநரி என்றும் அழைக்கப்படுகின்றன. நரிகள் அக இலக்கியத்தில் ஏழு[91] இடங்களில் பயின்றுவந்துள்ளன.

"இந்நரிகள் அடர்ந்த காடுகளில் இருப்பதை விடச் சற்று வறண்ட பாலை நிலக் காடுகளிலேயே அதிகம் காணப்படும். மேலும் இந்நரிகளுக்குத் தாமே வேட்டையாடி உண்ணும் பழக்கம் கிடையாது. வேட்டையாடும் விலங்குகளாகிய புலி சிறுத்தை போன்றவைகள் வேட்டையாடி உண்ட இரையின் மிச்சத்தையே இவைகள் உண்ணும். இதனால் வேட்டையாடும் விலங்குகள் விட்டுச் சென்ற கழிவுகளையே தின்பதால் அதற்கு என்றும் பஞ்சம் ஏற்பட்டதில்லை என்று பி.எல்.சாமி கூறுவர்[92] இதனை

**"இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுள்ளோர்**
**ஏதில் குறு நரி பட்டற்றால்! காதலன்" (கலித்.65:24-25)**

என்ற பாடல் சுட்டும். அதாவது புலி வேட்டையாடும் இரைகளை உண்ணும் பொருட்டு அதன் பின்னர் சென்ற பொழுது, புலியைப் பிடிப்பதற்காக விரித்த வலையில் அகப்பட்டது எடுத்துரைக்கப்படுகின்றது.

மேலும் நரிகள் கூட்டமாக வாழுவதால் கணநரி என்று அழைக்கப்படும். இந்நரிகள் இனத்தோடு கூடி பிணத்தின் கொழுப்பைத் தின்பதனை,

**“கல்லா இளையர் கலித்த கவலை,**

**கணநரி இனனொடு குழீஇ, நிணனருந்தும்”  (அகநா.375:5-6)**

எனக் கலித்தொகை விளக்குகின்றது. அதுபோல் பாலை நிலத்திலிருந்த ஆண்நரி ஒன்று மரத்தின் நிழலில் வெயில் தாங்காது கதறிக்கொண்டு இரத்தம் சொட்டும் குடலைத் தின்பதை அகநானூறு (307:10-11) விளக்குகின்றது.

**முயல்**

விலங்குகளில் மிகவும் சிறியது முயலாகும். இது வெண்மை நிறமாகவும் நீண்டகாதுகளையும் குடுகுடுவென ஓடும் தன்மையுடையதாகவும் காணப்படும். இது எப்போதும் தலையையும் கால்களையும் சேர்த்து முயங்கிக் காணப்படுவதால் முயல் என்றழைக்கபட்டது.

**“சிறியிலை நெல்லிக் காய்கண் டன்ன**
**குறுவிழிக் கண்ண கூரலம் குறுமுயல்**
**முடந்தை வரகின் வீங்குபீள் அருந்துபு**
**குடந்தையம் செவிய கோட்பவர் ஒடுங்கி**
**இன்துயில் எழுந்து துணையொடு போகி,**
**முன்றில் சிறுநிறை நீர்கண் டுண்ணும்**
**புன்புலம் தழீஇய பொறைமுதல் சிறுகுடி”  (அகநா.284:1-7)**

என்ற பாடல் முயலின் அனைத்து இயல்புகளையும் எடுத்துரைக்கின்றது. அதுபோல் காட்டில் தங்கும் இடையன் தன் ஆட்டினங்களை ஒரே இடத்தில் கூட்டுவதற்காக வாயை மடித்து எழுப்பும் சீழ்க்கை ஒலிக்கு அஞ்சி குறுமுயல்கள் மன்றத்தில் உள்ள பெரிய புதரில் மறைந்து கொள்ளும் (அகநா.394:13-16) என்று கூறுவதன் மூலம் முயல்கள் காட்டில் உள்ள புதர்களில் தங்கும் இயல்புடையது. இதனை ‘‘நறும்பூழ் புறவி னொடுங்கு முயலிரியும்’’ (ஐங்.421:2) என்னும் தொடர் சுட்டுகின்றது.

**செந்நாய்**

நாயின் வகைகளில் ஒன்று செந்நாயாகும். இது மான், பன்றி, முயல் ஆகியவற்றை வேட்டை ஆடுவதில் ஆற்றல் உடைமை தோன்ற ‘‘வேட்டச் செந்நாய்’’ என்று அடையுடன் கூறப்பட்டது[93]

‘‘செந்நாய் என்ற சொற்பெயரே இதன் நிறத்தைக் குறித்துத் தோன்றியது. செந்நாயின் மேல் தோல் சிவப்பு நிறமாக இருப்பதாக விலங்கு நூலார் கூறுவர். செந்நாய் உருவில் வீட்டு நாயைப் போல் இருக்கும்[94]. அகஇலக்கியத்தில் செந்நாய் குறித்து பதின்மூன்று[95] இடங்களில் குறிப்புளது. காட்டு

விலங்குகளில் கொடிய பண்புகள் கொண்டது செந்நாயாகும். அதன் கொடுமைக்கு அதன் கூரிய பற்களே காரணம் என்பர். இத்தகு செந்நாயின் பற்களை,

**‘‘அரந்தின் ஊசித் திரள்நுதி அன்ன,**
**திண்நிலை எயிற்ற செந்நாய் எடுத்தலின்’’ (அகநா.199:8-9)**
**“வள் ளெயிற்றுச் செந்நாய்” (அகநா.53:6)**
**“பொன்வார்ந் தன்ன வைவால் எயிற்றுச்**
**செந்நாய் வெரீஇய புகர் உழை ஒருத்தல்” (அகநா.219:12-13)**
**“வள் எயிற்று செந்நாய் வயவு உறு பிணவிற்குக்” (ஐங்.323:1)**

என்று அக இலக்கியங்கள் சுட்டுகின்றன. செந்நாய்கள் பாலை நிலத்தில் வாழும் இயல்புடைய வலிமைமிக்க விலங்காகும். அதன் கழுத்தில் அடர்த்தியான மயிர்க்கற்றை வளர்ந்து தொங்குமாதலின் அதனை ‘‘எருத்தினைகவிழ் மயிர் எருத்து’’ (ஐங்.397:1) எனச் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

மேலும் இந்நாய் சிறியதாக இருப்பதால் பிற விலங்குகளைக் கொன்று உண்ணமுடியாது. அதற்காகவே செந்நாய்கள் கூட்டமாகச் சேர்ந்து ஒற்றுமையாகக் கூடிப் பிற விலங்குகளை வேட்டையாடுகின்றன. இதனால் புலி, கரடி முதலிய விலங்குகள் செந்நாய்க்கு அஞ்சும். ஆனால் சங்கப்பாடல்களில் செந்நாய் கூட்டமாக வேட்டையாடிய செயல் சுட்டப்பெறவில்லை. மாறாக தனித்து வேட்டையாடிய செய்திகள் மட்டும் கிடைக்கப் பெற்றுள்ளன. இதனை,

**“மென் புனிற்று அம் பிணவு பசித்தென பைங் கட்**
**செந்நாய் ஏற்றை கேழல் தாக்க,**
**இரியற் பிணவல் தீண்டலின், பரீஇச்**
**செங் காய் உதிர்ந்த பைங் குலை ஈந்தின்**
**பரல் மண் கவல முரண் நிலம் உடைத்த” (அகநா.21:17-21)**

சுட்டும். அதுபோல் ‘‘செந்நாயின் குணங்களில் ஒன்று அது கடும் வெயிலில், ஈரமான இடத்தைத் தேடி சென்று தன் வயிற்றை ஈரத்தில் பொருத்தி ஓய்வெடுக்கும் என்று விலங்கு நூலறிஞர்’’[96] கூறியுள்ளனர். இதனை,

**‘‘களிறு நின்று இறந்த நீர்அல் ஈரத்துப்**
**பால்அவி தோல் முலை அகடு நிலம் சேர்த்திப்**
**பசி யட முடங்கிய பைங் கட் செந்நாய்**
**மாயா வேட்டம் போகிய கணவன்**
**பொய்யா மரபின் பிணவு நினைந்து இரங்கும்**

**விருந்தின் வெங் காட்டு வருந்ததும் யாமே" (நற்.103:4-9)**

என்ற நற்றிணைப் பாடலும் பதிவு செய்கின்றது.

**கோள்நாய்**

"நரியினத்தோடு தொடர்புடைய ஆனால் நரியின் வேறான ஒரு விலங்கு ஓநாய் ஆகும். கோள்நாய் அக இலக்கியத்தில் ஓரிடத்தில் மட்டும் காணப்படுகின்றது.

**"போகிய நாகப் போக்கருங் கவலை**
**சிறு கட் பன்றிப் பெருஞ் சின ஒருத்தல்**
**சேறு ஆடு இரும் புறம் நீறொடு சிவண**
**வெள் வசிப் படீஇயர், மொய்த்த வள்பு அழீஇ**
**கோள் நாய் கொண்ட கொள்ளைக்**
**கானவர் பெயர்க்கும் சிறுகுடியானே" (நற்.82:5-10)**

என்ற பாடல் விளக்கும். அதாவது காட்டுப் பன்றியை ஓநாய்கள் தாக்கிச் சேற்றில் புரட்டி அதன் தசைகளைப் பிளந்து கவ்விக் கொன்றதைக் கண்ட கானவர், அந்தக் கோநாய்களை ஓட்டி அவை கொன்ற பன்றியின் தோல் அழித்த தசையை நிறைய கைக்கொண்டு சென்றதைக் கூறுவதன் மூலம் நாயினத்தைச் சார்ந்த இக்கோநாய் நரியினத்தைப் போலவே கூட்டமாக வாழ்ந்து பிற விலங்குகளைக் கொல்லும் தன்மையுடையது என்ற செய்தி புலனாகிறது.

**வருடை**

வருடை என்பதை வரையாடு என்றும் மலையாடு என்றும் அழைப்பர். இது பார்ப்பதற்கு மான் போலத் தோற்றமளிப்பதால் இதனை வருடைமான் என்றும் அழைப்பர். அகஇலக்கியத்தில் வருடை குறித்து மூவிடங்களில்[97] காணப்படுகின்றது.

**"தூங்கு இலை வாழை நளிபுக்கு, ஞாங்கர்**
**வருடை மடமறி ஊர்வு இடைத் துஞ்சும்**
**இருள்தூங்கு சோலை" (கலித்.50:3-5)**

என வருடையானது மலைச்செரிவுகளிலும் மலைமுகடுகளிலும் இருள்மிக்க இடங்களிலும் தங்கும். அதுபோல் வருடையின் குட்டி தன் தாய் மடியில் சுரக்கும் இனிய பாலை வயிறு நிரம்ப உண்டு அம்மலையில் உள்ள நிழலில் துள்ளி விளையாடும் (நற்187:1-10) என்று கூறுவதன் மூலமும் வருடை மலைகளில் வாழும் தன்மையது என்பது புலனாகிறது.

**ஒட்டகம்**

ஒட்டகம் ஒரு நீளமான விலங்காகும். ஒட்டகம் என்பது ஒட்ட+ அம் - அம் திரட்சி (அ) வீக்கம். ஒட்டகத்தின் வயிறு இரண்டு புறமும் வீங்கிப் பருத்து ஒட்டியது போல் காணப்படுவதால் ஒட்டகம் என அழைக்கப்பட்டது. இது உருவத்தால் அமைந்த பெயராகும். பாலை நிலத்தில் வாழக்கூடியது ஒட்டகமாகும். ஆனால் தொல்காப்பியர் காலத்திலேயே ஒட்டகம் தமிழ்நாட்டில் பயன்படுத்தப்பட்டிருந்தமையினை,

**“ஒட்டகம் அவற்றோடு ஒருவழி நிலையும்”[98]**

**“ஒட்டகம் குதிரை கழுதை மரை இவை**
**பெட்டை யென்னும் பெயர்க்கொடைக்கு உரிய”[99]**

என்னும் நூற்பாவால் அறியமுடிகின்றது.

ஒட்டகம் குறித்து அக இலக்கியத்தில் ஓரிடத்தில் வந்துள்ளது. இது பாலை நிலத்தைக் கடப்பதற்கு பயன்படுத்தியமையினை,

**“குறும் பொறை உணங்குத்ததர் வெள்ளென்பு**
**கருங்கால் ஒட்டகத் தல்குபசி தீர்க்கும்**
**கல்நெடுங் கவலைய காணம் நீந்தி” (அகநா245:16-18)**

என்னும் பாடல் எடுத்துரைக்கின்றது.

**உடும்பு**

உடும்பு என்பது நிலத்தையும் சுவரையும் ஒட்டிப் பற்றும் உயிரி. இது அதன் செயலின் அடிப்படையில் அமைந்த பெயராகும். இவ்வுடும்பு அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[100] சுட்டப்படுகிறது.

**அணில்**

தொல்காப்பியர் அணிலை ‘‘மூவரி அணில்’’ (தொல்1505) என அதன் மேற்புறத்தின் மூன்று கோடுகளைக் கொண்டு கூறுகின்றார். இதனை

**“மக்கள் போகிய அணில் ஆடு மூன்றிற்**
**புலம்பில் போலப் புல்லென்று**
**அலப்பென்” (குறுந்.41:4-6)**

**“அணிற்பல அன்ன கொங்குமுதிர் முண்டகத்து**
**மணிக்கேழ் அன்ன மாநீர்ச் சேர்ப்ப” (குறுந்49:1-2)**

என்ற பாடல் விளக்கும்.

**வெளில்**

அணிலின் மற்றொரு வகை வெளிலாகும். இது வெளிரிய சாம்பல் நிறமுடையதால் வெளில் என்றழைக்கப்பட்டது. ‘‘வெளில் என்ற பெயர் வெண்மையைக் குறித்துக் கருமை என்ற பொருளில் வழங்கினதாகத் தெரிகின்றது’’[101] என்பர் பி.எல்.சாமி. இந்த வெளில் என்னும் அணில் அடர்ந்த காடுகளில் உயர்ந்த கிளைகளில் உச்சியில் வாழும் என்பதை,

**‘‘காடுகால்யாத்த நீடு மரச் சோலை**

**விழைவெளில் ஆடுங் கழை வளர் நனந்தலை’’ (அகநா.109:5-6)**

சுட்டுகின்றது. அதுபோல் தினைப்புனக் காவலர் கூறும் பொழுது பயந்து கிளிப்போலக் கத்தும் (அகநா.12:7) எனக் கூறுவதின் மூலம் வெளில் என்னும் அணில் சிறிய ஓசையைக் கேட்டாலும் பயந்து அஞ்சி ஓயாது கத்தும் இயல்புடையது என்பதை அறிய முடிகின்றது.

**ஓதி**

ஓந்தி என்பதே ஓதி என வழங்கப்பட்டுள்ளது. ‘‘ஓந்தி என்பது ஓதி என இடைக்குறையால் வந்தது. ஓதி என்பது நிலத்தையும் மரத்தையும் ஓட்டிச் செல்லும் உயிரி’’[102] என்று கூறுவர் ஞா.தேவநேயன். இவ்வாறு இருக்கும் இடத்திற்குள் நிறத்தை மாற்றிக் கொள்ளும் இயல்புடைய இப்பறவை குறித்து அகஇலக்கியத்தில் ஈரிடங்களில் காணப்படுகின்றது. இதனை

**‘‘வேனில் ஓதி நிறம்பெயர் முது போத்து’’ (நற்.186:4-5)**

என்ற அடி சுட்டுகின்றது. அதுபோல்

**‘‘வேதின வெரிநின் ஓதி முது போத்து**

**ஆறுசெல் மாக்கள் புன்கொள பொருந்தும்**

**சுரனே சென்றனர்’’ (குறுந்.140:1)**

என நிறமாறும் தன்மையினால் வழி செல்வோர்க்கு நிமித்தமாகவும் பயன்பட்டமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**குதிரை**

அக இலக்கியத்தில் குதிரைகள் மா, பாய்மா, வயமான், குதிரை, கலிமா, கடுமா, பரி, பாய்மான், இவுளி, உளை, புரவி எனப் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றது.

**மா**

குதிரை விலங்கென்ற அடிப்படையில் மா என்று சுட்டப்பெற்றுள்ளது. அகஇலக்கியத்தில் இருபத்தொன்பது[103] இடங்களில் காணப்படுகின்றது.

**குதிரை**

குதிரை என்பதற்குக் "குதிப்பது அல்லது தாண்டுவது"[104] என்பர் ஞா.தேவநேயன். அகஇலக்கியத்தில் குதிரை குறித்து பதினொரு[105] இடங்களில் சுட்டப் பெற்றுள்ளது. குதிரை என்பது பொதுப்பெயராகும்.

**"விட்ட குதிரை விசைப்பின் அன்ன**

**விசும்புதோய் பசுங்கழை" (குறுந்.74:1-2)**

என அவிழ்த்து விட்ட குதிரை துள்ளி எழும் எழுச்சியைப் போன்று வளைத்து விடப்பட்ட மூங்கில் வானத்தைத் தொட்டது என உவமை கூறப்பட்டுள்ளது. இவ்வுவமை கூறிய அருமை கருதி 'விட்ட குதிரையார்' என்றழைக்கப்பட்டார். சங்க அக இலக்கியத்தில் குதிரையைப் போரிடுவதற்கும் தேரிழுப்பதற்கும் மட்டுமே பயன்படுத்தப்பட்டுள்ளதைப் பல பாடல்கள் வழி அறியமுடிகிறது.

**கலிமா**

குதிரையின் மற்றொரு பெயர் கலிமா என்பதாகும். கலி – செருக்கு (குறுந்.173:2) மா.(விலங்கு) எனவே கலிமா என்பது செருக்கான விலங்காகும். அகஇலக்கியத்தில் இச்சொல் பதின்மூன்று[106] இடங்களில் குறிக்கப்பட்டுள்ளது. பறவை போல விரைந்து செல்லும் ஆற்றலுடைய குதிரைகள் கலிமா எனப்படும், இதனை

**"புள் இயல் கலி மாப் பூண்ட தேரே" (ஐங்.481:4)**

**"விரி உளைப் பொலிந்த வீங்கு செலல் கலி மா" (நற்.121:8)**

**"விசும்பு கடப்பன்ன பொலம் படைக் கலி மா" (நற்.361:3)**

என்ற அடிகள் விளக்கும். மேலும்

**"வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவரு காலை**

**இடைச்சுர மருங்கில் தவிர்தல் இல்லை**

**உள்ளம்போல உற்றுழி உதவும்**

**புள்ளியற் கலிமா உடைமை யான"[107]**

என்னும் நூற்பாவும் சுட்டும்.

**கடுமா**

விரைந்து செல்லும் குதிரை கடுமாவாகும்.

**"கடுமாக் கடவுமதி" (குறுந்.250:4)**

எனக் கடமா விளக்கப்பட்டுள்ளது. அகஇலக்கியத்தில் ஐந்திடங்களில்[108] இவ்விலங்கு பற்றிய குறிப்பு காணப்படுகின்றது.

**பரி**

நல்ல செலவினை உடைய உயர்ந்த சாதிக் குதிரை பரியாகும். விரைந்த ஓட்டமே குதிரைகட்குச் சிறப்புத்தருவதாதலின் பரியுடை நன்மா என்றும் அழைக்கப்பட்டது. மேலும் குதிரையின் நடையினை "மல்லகதி, மயூரகதி, வானரகதி, சசகதி சரகதி என்று பல்வகையான பெயரினைத் திவாகரம் சுட்டுகிறது."[109] இது அகஇலக்கியத்தில் பத்தொன்பது[110] இடங்களில் குறிப்பிடப்படுகின்றது.

**பாய்மான்**

பயணத்திற்கு விரைந்து செல்ல உதவுவது பாய்மான் ஆகும். இதனை பாய்ந்து செல்லக்கூடிய குதிரை என்றும் அழைக்கலாம்.

**"பணை யமைப் பாய்மான்" (கலித்.57:14)**

என ஓரிடத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது.

**இவுளி**

இவுளி என்பது குதிரையைக் குறிக்கும் மற்றொரு சொல்லாகும். இவுளி என்பதற்கு "எதிர்த்துப் போரிடுவது என்பது பொருளாகும்"[111] ஆகவே இது போர்க்களத்தில் பயன்படுத்தப்பட்ட குதிரை என்பதற்கு

**"நிரை செலல் இவுளி விரைவுடன் கடைஇ" (அகநா.363:1)**

**"கழிச் சுரம் நிவக்கும் இருஞ் சிறை இவுளி" (நற்.63:9)**

என்ற அடிகள் சான்றாகும்.

**விரியுளை நன்மா**

விரிந்த பிடரிமயிரினை உடைய குதிரை விரியுளை நன்மா என்றழைக்கப்படும். (விரி –விரிந்த,உளை–பிடரிமயிர்,நன்மா–நல்ல விலங்கு) ஆகவே இது தோற்றத்தால் பெற்ற பெயர் என்பது புலனாகிறது. இதனை

**"விரி உளை நல் மான்" (நற்.185:4)**

விளக்கும். அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[112] காணப்படுகின்றது.

**புரவி**

புரவி என்பது "மதில் தாண்டும் குதிரை"[113] என்பர் ஞா.தேவநேயன். அகஇலக்கியத்தில் இருபத்து மூன்று[114] இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. அரசர்களால் நன்கு மதிக்கப்படுகின்ற மாட்சிமைப்பட்ட நடையினையுடைய குதிரைகள் புரவி என்றழைக்கப்படும். (நற்.81:3) இக்குதிரைகளை அவர்களின் தேர்களில் பூட்டுவர் (நற் 245.8) மேலும் புரவிநூல் கூறும் இலக்கணமுறைப்படி நுட்பமாக அமைந்த காற்றெனக் கடுகிச் செல்லும் குதிரை கல்லென்று ஒலிக்கும்.

மணி இடைவிடாது ஒலிக்குமாறு தாவிச் செல்லும் தன்மை வாய்ந்தது. (அகநா.314:8) என்று அகநானூறு கூறுகின்றது.

**நெடுமா**

விரைந்த நடையினை உடையது நெடுமாவாகும். (நற்.381:7)

**பாய்பரி, வண்பரி, விரைபரி**

பாய்ந்து செல்லும் குதிரைகள் பாய்பரி என்றும் வளவிய நடைவேகம் பயின்ற வலிமை பெற்ற குதிரை வண்பரி என்றும் விரைந்தோடும் குதிரை விரைபரி (அகநா.339:1) என்றும் அழைக்கப்படும். இதனை,

**"பாய்பரிக் கடுந்திண் தேர் களையினோ இடனே" (கலித்.121:23)**

**"வண் பரி நவின்ற வயமான் செல்வ" ( கலித்.125:5)**

என்ற அடிகள் விளக்கும். காதாசப்தசதியில் குதிரை பற்றிய குறிப்பில்லை.

**பசு**

வீட்டு விலங்காகிய பசுவின் பெண்ணினைத்தைக் குறிக்க ஆ.ஆன், கறவை, சேதா, மூதா, பெற்றம், நாகு, குரால், கோ எனும் பெயர்களும் ஆணைக் குறிக்க பகடு, விடை, காளை, ஏறு, எருது போன்ற பெயர்களும் வழங்கப்பட்டுள்ளன.

**ஆ,ஆன், நிரை**

'ஆ' என்பது பசுவின் ஒலியால் அமைந்த பெயராகும். இதில் 'ஆ' இருபத்துநான்கு இடங்களிலும் ஆ–"ன்" என ஒற்றுப்பெற்று ஆன் என்று பதின்மூன்று இடங்களிலும் நிரை என்று பதினெட்டு இடங்களிலும் காணப்படுகின்றது.[115]

**கோ**

பசு செல்வமாக மதிக்கப்பட்டதால் உயர்வு கருதி கோவென வழங்கப்பட்டமையினை கலித்தொகை (103:37,167:3) சுட்டுகின்றது.

**குரால்**

குரால் - 'கபிலநிறமென்பர்' உ.வே.சாமிநாதையர்[116]

**"மிக்கு ஒளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல்**
**முக்கணான் உருவே போல் முரண் மிகு குராலும்"**

**(கலித்.104:11-12)**

என ஒளிமிக்கு விளங்குகின்ற தாழ்ந்த சடையினையும் ஒரு பக்கத்தே பொருந்திய பிறைபோன்ற நுதலை உடையானும் முக்கண்ணனாகிய சிவபெருமானின் உருவினை ஒத்த வலிமையுடைய எருது குரால்நிறக்காளை

என்றழைக்கப்படும். அதுபோல் செந்நிறப்பசு குரால் ஆன் என்று குறுந்தொகை (224:4) சுட்டுகின்றது.

**கறவை**

கறவை என்பது பசுவினத்தினைக் குறிக்கும் மற்றொரு சொல்லாகும். இது பால் கறக்கும் தொழிலால் பசுவிற்கு பெயராய் வந்துள்ளது. இதனை,

**“கறவைப் புல்லினம் புறவுதொறு உகள”     (அகநா.354:4)**

என்ற அடிவிளக்கும். இது மூவிடங்களில்[117] பயின்று வந்துள்ளது.

**சேதா**

சிவப்பு நிறப்பசுக் கூட்டங்கள் சேதா எனப்படும். இது அகஇலக்கியத்தில் நான்கிடங்களில்[118] காணப்படுகின்றது.

**“சேதா எடுத்த செந் நிலக் குரூஉத் துகள்”     (அகநா.79:7)**

**“சிலம்பின் வேய்ந்த சிறு கோட்டுச் சேதா”     (நற்.359:1)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

**மூதா**

முதிய பசு மூதாவாகும்.(அகநா.156:4) அகஇலக்கியத்தில் இச்சொல் ஓரிடத்தில் சுட்டப்பெற்றுள்ளன.

**பெற்றம்**

பசுவின் திரட்சியான மடியிலிருந்து பால் பெறுவதால் பெற்றம் எனப்பெயர் பெற்றது. இது கலித்தொகையில் ஓரிடத்தில் (104:67) மட்டும் காணப்படுகின்றது.

**நாகு**

குடம்பால் சுரக்கும் ஆவினங்கள் நாகு என்றழைக்கப்படும்.

**“எருமையும், மரையும் பெற்றமும் நாகே”[119]**

எனத் தொல்காப்பியர் எருமை, மரை, பெற்றம் மூன்றும் நாகு எனும் பெண்பாற் பெயர் பெறும் என்று கூறுகிறார். ஆனால் சங்க அக இலக்கியமாகிய குறுந்தொகையும் (164:1, 346:1) கலித்தொகை (110:14,109:4) இவற்றில் பெண் இளமை என்ற இருபொருட்களில் கூறப்பட்டுள்ளன. அகஇலக்கியத்தில் நான்கிடங்களில்[120] கையாளப்பட்டுள்ளன.

**பகடு**

முதிய எருது பகடு எனப்பொருள்படும். அகஇலக்கியத்தில் பதினான்கு[121] இடங்களில் இச்சொல் பயின்று வந்துள்ளன.

**“முதைபடு பசுங்காட்டு அரில்பவர் மயக்கி,**

**பகடுபல பூண்ட உழவுறு செஞ்செய்” (அகநா.262:1–2)**

என்ற பாடலில் பகடு உழவுக்குப் பயன்பட்டமை எடுத்துரைக்கப்படுகின்றது. அதுபோல் உப்பு வணிகர்கள் பலபுரிகளையுடைய நீண்ட கயிற்றால் கட்டப்பட்ட வண்டியை எருதுகளின் வலிய கழுத்தில் பூட்டுவர். ஏற்றமான இடங்களில் ஓட்டும்போது அவ்வெருதுகளை அதட்டி ஓசை எழுப்புவர். அவ்வோசையைக் கேட்டு ஆண்மானும் பெண்மானும் அஞ்சி ஓடும் என்பதனை,

**"…………………………………….. பலபுரி**

**வார்கயிற்று ஒழுகை நோன்சுவற் கொளீஇ,**

**பகடுதுறை ஏற்றத்து உமண்விளி வெரீஇ,**

**உழைமான் அம்பினை இன்ன இரிந்து ஓட" (அகநா.173.8–11)**

சுட்டும். இவற்றால் எருதுகள் உழவிற்கும் வண்டி இழுக்கவும் பயன்பட்டமை அறிய முடிகின்றது.

**விடை**

''குவமையில் விடைய'' (அகநா.113:14) எனக் குவிந்த திமிலை உடைய எருதுகளை விடை என்றழைத்த செய்தி புலனாகும். அகஇலக்கியத்தில் ஓரிடத்தில் மட்டும் விடை பற்றிய குறிப்பு காணப்படுகின்றது.

**காளை (ஏறு)**

ஆண் இனமான எருது காளை என்ற பெயரிலும் ஏறு என்ற பெயரிலும் அழைக்கப்படும். இதனை,

**"நல்லஏறு தழீஇ நாகு பெயர் காலை**

**உள்ளு தொறும் கலிழும் நெஞ்சம்" (ஐங்.445:3–4)**

விளக்கும்.

ஆந்திர நாட்டு மக்களிடம் பசு செல்வமாகக் கருதப்பட்டது (காதா461:3)இது மூவிடங்களில்[122] காணப்படுகின்றது. காளை உழவிற்கும் பயன்படுத்தப்பட்டது (காதா.143:1)

**எருமை**

சங்க அகஇலக்கியத்தில் எருமையினைக் குறிக்க எருமை, காரான், மையான் என்ற சொற்கள் பயின்றுவருகின்றன.

**"நெறி மருப்பு எருமை நீல இரும் போத்து" (ஐங்.91:1)**

என்று நெறிப்பிணையுடைய கொம்புகளைக் கொண்ட எருமைச்சாதியின் ஆழ்ந்த கருநிறமுடைய பெரிய கடா எருமையாகும். அகஇலக்கியத்தில் இச்சொல் பத்தொன்பது[123] இடங்களில் காணப்படுகின்றது.

**“வலிமிகு முன்பின் அண்ணல் ஏஎறு**
**பனிமலர்ப் பொய்கைப் பகல்செல மறுகி,**
**மடக்கண் எருமை மாண்நாகு தழீஇ,**
**படப்பை நண்ணி, பழனத்து அல்கும்”** **(அகநா.146:1–4)**

என்ற பாடல் எருமையின் இயல்பினை எடுத்துரைக்கின்றது.

**காரான், மையான், பகடு, நாகு**

கார், மை போன்ற கருமைநிறத்தில் உள்ள எருமைகள் காரான்,மையான் என்ற பெயர்களில் அழைக்கப்படுகின்றது. இதில் காரான் குறித்து ஐந்திடங்களிலும் மையான் குறித்து நான்கிடங்களிலும் சுட்டப்பெற்றுள்ளது. இவற்றுள் ஆண் எருமை கடா பகடு ஓரிடத்திலும் பெண் எருது ஓரிடத்திலும் பயின்றுவந்துள்ளது.[124]

**“----------------- இருள்நிற மைஆன்”** **(குறுந்.279:1)**
**“கருங் கோட்டு எருமை”** **(ஐங்.95:1)**

என்ற அடிகள் காரான், மையான் என்பனவற்றுக்குச் சான்றாகின்றது.

காதாசப்தசதியில் எருமை பற்றிய குறிப்பு ஐந்திடங்களில்[125] காணப்படுகின்றது. இதனை மேதி என்ற பெயராலும் அழைத்தனர். (காதா.424:1) வானவில்லின் கூர்மையான முனை முகில் எனும் எருமை மாட்டின் வயிற்றைக் குத்த, வெளிப்பட்ட குடல்போல மின்னல் தோன்றியது. அதன் வலிதாங்காது அழும் எருமையின் கத்தல் போல இடிமுழக்கம் இருந்ததை,

**“வான வில்லின் வலிநுனி குத்த**
**வலிக்காற் றாது வாய்விட் டழூஉம்**
**முகிலெனும் எருமை மூரி வயிற்றின்**
**வெளிப்படும் குடர்என மின்னல் தோன்றும்”(காதா.446:1–4)**

என்னும் பாடல் சுட்டும்.

**ஆடு**

ஆடுகின்ற தலையினை உடைமையினால் ஆடு என்றழைக்கப்பட்டது. ஆட்டினை ஆடு. வெள்ளை, துருவை, தகர், மைவிடை, கிடாய் புருவை போன்ற சொற்களால் அழைத்தனர். அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[126] ஆடு பற்றிய குறிப்புளது.

**வெள்ளாடு**

வெண்மையான நிறத்தினை உடையதால் இப்பெயர்பெற்றது. (அகநா.104:9) அகஇலக்கியத்தில் இச்சொல் ஈரிடங்களில்[127] பயின்று வந்துள்ளது.

**“சிறுதலை வெள்ளை”** **(குறுந்.163:2)**

என சிறிய தலையை உடையது வெள்ளாடு என்றும் அதன் கொம்பு நிலைக்கோடு என்றும் காது கவிந்துள்ளதை ‘‘நால்செவி’’ என்றும் (அகநா.156:14) சுட்டுகின்றது.

**துருவை**

துருவை என்பது செம்மறியாட்டினைக் குறிக்கும் பெயராகும். இரும்பில் துரு ஏறியது போன்ற நிறமுடைய துருவையை,

**‘‘உருவத் துருவின் நாள் மேயல் ஆரும்’’ (நற்.192:4)**

என நற்றிணை குறிப்பிடுவதன் மூலம் துருவை நிறத்தால் அமைந்த பெயர் என்பது புலனாகின்றது. இது அகஇலக்கியத்தில் ஆறிடங்களில்[128] இடம்பெற்றுள்ளது.

**‘‘களவும் புளித்தன: விளவும் பழுநின:**
**சிறுதலைத் துருவின் பழுப்புஉறு விளைதயிர்,**
**இதைப்புன வரகின் அவைப்புமாண் அரிசியொடு,**
**ஈயல் பெய்துஅட்ட இன்புளி வெஞ்சோறு**
**சேதான் வெண்ணெய் வெம்புறத்து உருக,**
**இளையர் அருந்த, பின்றை, நீயும்**
**இடுமுள் வேலி முடக்கால் பந்தர்,**
**புதுக்கலத்து அன்ன செவ்வாய்ச் சிற்றில்,**
**புனைஇருங் கதுப்பின்நின் மனையோள் அயர’’ (அகநா.394:1–9)**

என்ற பாடல் சிறிய தலையினையுடைய செம்மறியாட்டின் பழுப்பு நிறம் வாய்ந்த முற்றிய தயிரை உலை நீராக்கி உணவு சமைத்தமையினை எடுத்துரைக்கப்படுகின்றது.

**தகர்**

செம்மறியாட்டின் மற்றொரு பெயர் தகர் என்பதாகும். இது இடம்விட்டு இடம்பெயர்தலால் இப்பெயர் வழங்கப்பட்டிருக்கலாம் தொல்காப்பியர்,

**‘‘மோத்தையுந் தகரும் உதளும் அப்பரும்**
**யாத்த என்ப யாட்டின் கண்ணே’’[129]**

என ஆண்மைப்பெயர்களுள் ஒன்றாகத் தகரைச் சுட்டுகிறார்.

**‘‘வார் கோட்டு வயத் தகர் வாராது மாறினும்,**
**குரு மயிர்ப் புருவை நசையின் அல்கும்’’ (ஐங்.238:1–2)**

என்ற பாடலடி தகர் என்பது கொம்பினை உடைய வலிய ஆட்டுக்கடாயினைக் குறிக்கும் பெயர் என்பது புலனாகும்.

**கிடாய்**

ஆடுகளில் பெரியது கிடாய் என அகஇலக்கியத்தில் ஓரிடத்தில் மட்டும் சுட்டப்பெற்றுளது.

**"கள்ளும் கண்ணியும் கையுறை யாக**
**நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்**
**நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி**
**தணிபருங்கு அறியாள், யாய்அழ,**
**மணிமருள் மேனி பொன்நிறம் கொளலே"** **(அகநா.156:13–17)**

என்பதில் கிடாய் அன்று போல் இன்றும் கடவுளுக்குப் படைக்கப்படுதல் குறிப்பிடத்தக்கது.

**புருவை**

புருவை என்பது பெண்ணாட்டைக் குறிக்கும் பெயராகும் (ஐங்.238:2) அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[130] காணப்படுகின்றது.

**மைவிடை**

மை – கருமை, விடை – கிடாய் கருமை நிறம் வாய்ந்த கிடாய் மைவிடை என்ற பெயரால் அழைக்கப்படும். இது ஓரிடத்தில் (அகநா.136:1) மட்டும் காணப்படுகின்றது.

**நாய்**

வீட்டில் வளர்க்கப்படும் விலங்குகளின் ஒன்று நாய். இது பாதுகாப்பிற்கும் வேட்டையாடுதலுக்கும் பயன்படுகின்றது. அகஇலக்கியத்தில் ஐந்திடங்களில்[131] காணப்படுகின்றது. இந்நாயானது வயநாய், கதநாய், ஞமலி, எகினம் எனப் பல்வேறு பெயர்களால் சங்க அக இலக்கியத்தில் அழைக்கப்படுகின்றது.

**வயநாய்**

வலிய வேட்டை நாயினை வயநாய் என்பர் (அகநா.198:5) இது அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[132] காணப்படுகின்றது.

**கதநாய்**

சினமிக்க நாய் கதநாயாகும். (அகநா.107:1) அகஇலக்கியத்தில் இச்சொல் ஐந்திடங்களில்[133] காணப்படுகின்றது.

**ஞமலி**

நாயின் குரைத்தல் செயலால் ஞமலி என்றழைக்கப்படும். இச்சொல் ஐந்திடங்களில்[134] காணப்படுகின்றது. இதனை

**"மனைவாய் ஞமலி ஒருங்கு புடை ஆட"** **(நற்.285:5)**

என்னும் அடி சுட்டும்.

**எகினம்**

எகிரித் தாவும் தன்மையால் எகினம் என்றழைக்கப்பட்டது. இது ஓரிடத்தில் (நற்.132:5) மட்டும் காணப்படுகின்றது. காதாசப்தசதியில் நாய் வீட்டில் வளர்க்கப்படும் விலங்காகவும் காவல் காக்கும் விலங்காகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[135] பயின்று வந்துள்ளது.

**கழுதை**

சங்க அக இலக்கியத்தில் கழுதை குறித்து மூவிடங்களில்[136] காணப்படுகின்றது இது "காள் காள் எனக் கத்துவதன் வழிக் கழுதை என்னும் பெயர் பிறந்தது"[137] என்பர் கு.அரசேந்திரன். சங்க கால மக்கள் பொருட்களை ஏற்றிச் செல்ல கழுதைகளைப் பயன்படுத்தினமையினை,

**"நிரைப்பரப் பொறைய நரைப்புறக் கழுதைக்**

**குறைக்குளம்பு உரைத்த கல்பிறழ் இயவின்" (அகநா.207:5–6)**

என்ற பாடல் விளக்கும்.

**அத்திரி**

"அத்திரி என்ற விலங்கு ஆண்கழுதையும் பெண்குதிரையும் இணைந்து பெற்ற கலப்பின விலங்கு"[138] என்பர் பி.எல்.சாமி. அத்திரி கோவேருகழுதை என்றும் அழைப்பர்[139] அதுபோல் சிலப்பதிகாரத்தில் கடலாடு காதையில் கோவலன் கடற்கரைக்கு அத்திரியில் சென்றான் (கடலாடுகாதை119) என்பதன் மூலமும் அத்திரி என்னும் கோவேறு கழுதை அக்காலத்தில் உயரிய இடம் வகித்தது புலனாகிறது. அகஇலக்கியத்தில் இச்சொல் மூவிடங்களில்[140] காணப்படுகின்றது.

**எலி**

வீட்டிலும் வயல்வெளிகளிலும் வளை அமைத்து வாழக்கூடியது எலியாகும். அக இலக்கியத்தில் எலி, வெள்ளெலி என இருவகை காணப்படுகின்றது. இதில் வீட்டில் உள்ள எலியை இல்லெலி (குறுந்.107:3,அகநா.122:13) என்பர்.

**வெள்ளெலி**

வெண்மையான முடிகளை உடையது வெள்ளெலியாகும், இதனை

**"குன்றி யன்ன கண்ண, குரூஉமயிர்ப்**

**புன்றாள் வெள்ளெலி" (அகநா.133:1-2)**

என்னும் அடிகள் சுட்டும்.

**முதலை**

முதலை என்பதற்கு ''முதல் - முதலை – திரண்ட மர அடி போன்ற நீருயிரி''[141] என்பர் ஞ.தேவநேயன். முதலை குறித்து ஆறிடங்களில்[142] குறிப்புளது. இதனை

**''கொடுந்தாள் முதலைக் கோள்வல் ஏற்றை**

**வழிவழக்கு அறுக்கும் கானலம் பெருந்துறை'' (குறுந்.324:1–2)**

என்ற பாடலடிகள் விளக்கும்.

**கராஅம்**

கருமையான மேற்தோலையும், வீங்கித் திரண்ட உடம்பையும் உடைய முதலை கராஅம் எனப்படும். இது மூவிடங்களில்[143] காணப்படுகின்றது.

**''இருங் கழி முதலை மேஎந்தோல் அன்ன**

**கருங் கால் ஓமை'' (அகநா.3:1–2)**

என்ற பாடல் ஓமை மரத்தின் கரிய அடிப்பகுதி போல் முதலையின் மேவின தோல் இருப்பதைக் குறிப்பிடுகின்றது. அதுபோல் கராம்-காட்டாற்றின் கண் வாழ்வதை நற்றிணையும் (292:7–8) அகநானூறும் (18:3) சுட்டுகின்றன.

**ஆமை**

ஆமையின் மேற்புறம் திரண்டு வீக்கமாக இருப்பதால் ஆமை என அழைக்கப்பட்டிருக்கலாம். அகஇலக்கியத்தில் இச்சொல் ஏழிடங்களில்[144] காணப்படுகின்றது. ஆமை கடலில் வாழ்வதை அகநானூறும் (160:3–8) வயலைக் காவல் செய்யும் உழவர் தாம் சுடுகின்ற நத்தையை, ஆமையின் முதுகிலே உடைத்துத் தின்பதை நற்றிணையும் (280:6–7) சுட்டுவதன் மூலம் ஆமை நீரிலும் நிலத்திலும் வாழ்வதை அறியமுடிகின்றது. அதுபோல் காதாசப்தசதியில் ஆமையும் மீனும் சேற்றிடத்தில் வாழ்வதாகச் சுட்டப்பெற்றுள்ளது. (காதா.334:2)

**நண்டு**

நீர்வாழ் உயிரினங்களில் ஒன்றாக நண்டு இடம்பெறுகின்றது. இலக்கியத்தில் நண்டு என்ற சொல் அலவன் களவன் ஞெண்டு என்ற பெயர்களில் நாற்பது[145] இடங்களில் வழங்கப்படுகின்றது. நண்டின் இயல்பு பற்றி உ.வே.சா ''இது ஞெண்டு எனவும் வழங்கப்படும். நீர்த் துறைகளில் உள்ள மரங்களின் வேரில் வளை அமைத்தும் கொண்டு வாழும். அலைகளால் தன் மனை சிதைக்கப்படும் போது வருந்தி ஓடும். இதன் கால்கள் வளைந்து இருக்கும். கடற்கரையில் விளையாடும் மகளிர் இதனை அலைத்து விளையாடுவர். அதற்கு அலவனாட்டு என்று பெயர். நண்டு ஓடும் போது மணலில்

கோடுகள் உண்டாக்கும். அவை கோலம் செய்தாற் போலத் தோன்றும்'' என்றுரைப்பர்.[146]

**நீர்நாய்**

நீரை உணவாகவும் மரத்தை உறைவிடமாகவும் கொண்டு வாழும் நாய் போன்ற அமைப்புடைய விலங்கு நீர்நாய் எனப்படும். இதை ''நீரில் வாழ்வது, பிரம்பின் தூற்றில் தங்கியிருக்கும். இது வாளைமீனை உணவாகக் கொள்ளும். இதன் உடலிலே கோடுகள் இருக்கும் என்றும் அவை பிரப்பம் பழத்தின் மேலுள்ள கோடுகளைப் போலத் தோன்றும்''[147] என்னும் உ.வே.சா கூற்றால் அறியமுடிகின்றது.

மேலும் நீர்நாயின் வாழிடத்தை நீரில் மூழ்கி மீன்களைப் பற்றி உண்ணும் தன்மை உடைய இது கழிப்பகுதியில் வளர்ந்துள்ள பெரிய மரத்தின் பொந்தில் விளங்கியதாக நற்றிணை (358) குறிப்பிடுகின்றது.

**மீன்**

சங்க இலக்கியத்தில் அயிரைமீன், அயிலைமீன், ஆரல்மீன், இறால்மீன், கயல்மீன், கெலுற்றுமீன், கொழுமீன், கோட்டுமீன், சுறாமீன், வாள்சுறாமீன் சிறுமீன், பெருமீன் என்பன போன்ற மீன்களைப் பற்றிய பதிவுகள் இடம்பெற்றுள்ளன.

**அயிரைமீன்**

சிறிய வகை மீன்களுள் ஒன்று அயிரை மீனாகும். அகஇலக்கியத்தில் இம்மீன்களைப் பற்றிய செய்தி ஐந்திடங்களில்[148] காணப்படுகின்றது. சேற்றில் துள்ளிக்கிடக்கும் அயிரை மீன்களை நாரைகள் உண்ட செய்தியை,

**''தண் கடல் படுதிரை பெயர்த்தலின், வெண்பறை**
**நாரை நிரைபெயர்ந்து அயிரை ஆரும்'' (குறுந்.166:1-2)**

என்னும் அடிகள் விளக்கும்

**அயிலை**

அயிலை மீன் 'கானாய்கெழுந்தை' என்று அழைக்கப்பெறும்.

**''கொடுந் திமிற் பரதவர் வேட்டம் வாய்த்தென**
**-----------------------------------------------------------------------**
**கொழுங் கண் அயிலை பகுக்கும் துறைவன்'' (அகநா.70:1-4)**

என்ற பாடலின் மூலம் அயிலை பெரிய கண்களை உடையது என்றும் அதன் தோற்றத்தை அறிய முடிகின்றது.

**ஆரல்மீன்**

''தமிழில் அர என்னும் சொல் பாம்பு என்னும் பொருளைத் தருகின்றது. கூர்மையான மூக்கும், பாம்பு போன்ற உடலமைப்பும் பெற்றிருக்கும் தன்மையால் இது அர – அரல் - ஆரல் என்று வழங்கப் பெற்றதாகக் கருதமுடிகின்றது. நன்னீரில் வாழக்கூடிய இம்மீனை இன்று ஆரல்மீன் என அழைக்கின்றனர்''[149] இம்மீன் குறித்து நான்கிடங்களில்[150] காணப்படுகின்றது.

**கயல்மீன்**

அகஇலக்கியத்தில் இம்மீன் பதினாறு[151] இடங்களில் பயின்றுவந்துள்ளது. இம்மீனை ''கருங்கயல், செய்கயல், வெண்கயல்''[152] என்று மூன்று வகைகளில் குறிப்பிடுகின்றார் பி.எல்.சாமி. இம்மீன்கள் பெரும்பாலும் பெண்ணின் கண்களுக்கு உவமையாகக் கூறப்படும். (குறுந்.250:5)

**கெடிற்று மீன்**

இம்மீனைக் ''கெளிறு, கெடுறு, கெழுத்தி'' என்று வழங்குவர். மேலும் ''இம்மீன் தன்னைக் கவர நினைப்பவரையும் தாக்க வரும் பிற உயிரினங்களையும் முள்கொண்டு கொட்டித் துன்புறுத்தும் ஆற்றல் உடையமையினால் கெடிறு''[153] என்று அழைக்கப்பட்டது. அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[154] சுட்டப்பெற்றுள்ளது.

**கொழுமீன்**

கொழு என்னும் சொல்லுக்கு 'மிகுதி' என்பது பொருள் இம்மீன்கள் கூட்டமாக வாழும் பண்பினால் கொழுமீன் என்றழைக்கப்பட்டது அகஇலக்கியத்தில் பதின்மூன்று[155] இடங்களில் காணப்படுகின்றது. ''மீனவரது வலைகளில் கூட்டமாக அகப்படும். இவை மக்களால் பெரிதும் விரும்பி உண்ணப் பெறும் மீன்களில் ஒன்றாக உள்ளது. சிறிய மீன் வகையைச் சார்ந்த இம்மீனை உலர்ந்த நிலையிலும் பயன்படுத்துகின்றனர்''[156] நெய் போன்ற வளவளர்ப்புத் தன்மையுடன் காணப்படும் கொடுமீன்களைக் குருகு இனங்கள் அருந்தியதை

**''நெய்த் தலைக் கொழு மீன் அருந்த, இனக் குருகு'' (நற்.291:2)**

என்னும் அடி விளக்கும்.

**கோட்டுமீன்**

சங்க இலக்கியங்களில் இம்மீன் சுறவம், சுறா, சுறவு என்று அழைக்கப்பெறுகின்றது. இது அகஇலக்கியத்தில் முப்பத்திமூன்று[157] இடங்களில்

காணப்படுகின்றது. கோட்டுமீன் என்பது கொம்பினை உடைய சுறாமீன் என்பது பொருளாகும். இதனை எறியுளி என்னும் கருவி கொண்டு வேட்டையாடியதை,

**“கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறிஉளி**

**---------------------------------------------------------------**

**கொடுந்திமிற் பரதவர் கோட்டுமீன் எறிய” (குறுந்.304:1-4)**

என்னும் அடிகள் சுட்டும்.

**சுறாமீன்**

“சுறா – சுர்+அறா – சுர் - கூர்மை, அறா – அறாவுதல், அறுத்தல், வெட்டுதல், என்று பொருள், சுறாமீன் தன் கூர்மையான கொம்பினால் வெட்டும் (அ) கிழிக்கும் ஒருவகை உயிரி”[158] இம்மீன் ஐந்திடங்களில்[159] காணப்படுகின்றது.

நெய்தல் நிலத் தலைவி தன் தந்தை வலியை உடைய சுறாமீன் வீசியதால் உண்டான் புண் ஆறி, மீண்டும் மீன் வேட்டையாடும் பொருட்டுக் கடலுக்குள் சென்றார் என்று கூறுவதன் மூலம் சுறாமீனின் தாக்குதல் சுட்டப்பெற்றுள்ளது. (குறுந்.269:3–4) அதுபோல் சுறாமீன்களை

**“எறிசுறாக் கலிந்த இலங்கு நீர்ப் பரப்பின்” (குறுந்.318:1)**

என்பர். அதன் வாய் வாள்போன்று கூர்மையாக இருத்தலால் “வாள்வாய்ச் சுறவொடு” (நற். 111:7) என்றும் குறிப்பிடுவர்.

**சிறுமீன்**

இம்மீன் “மிகவும் சிறியது. ஒன்றரை அங்குலத்தில் இருந்து மூன்று அங்குலம் வரையே வளரக்கூடியது”[160] என்று பி.எல்.சாமி குறிப்பிடுவர்.

**“ஐய சிறு கண் செங் கடைச் சிறு மீன்” (நற்.91:5)**

என்பதில் சிறுமீன் சிவந்த கண்களையும், சிறிய வடிவத்தையும் உடையது என்பதை அறியமுடிகின்றது. இம்மீன் அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[161] காணப்படுகின்றது.

**பெருமீன்**

பெருமீன் என்பது பெரியமீனாகிய திமிங்கிலத்தைக் குறிப்பதாகும். இம்மீன் அக இலக்கியத்தில் நான்கிடங்களில்[162] இடம்பெற்றுள்ளது. “குறுகிய இறப்பினை உடைய குடிசையில் வாழும் கொலைத் தொழில் வல்ல பரதவர்கள் எறியுளி கொண்டு, பெருமீனைத் தாக்க அப்பெரிய மீனின் உடலிலிருந்து குருதி வெளியேறிக் கடல்நீரை நிறம் மாற்றியது. புண்பட்ட அம்மீன், வானத்தை அழகு செய்யும் வானவில்லைப் போன்று தவிர உயரே தாவிக் குதித்து

திவலைகளையுடைய அலைகள் நெருங்கிய கடற்பரப்பைக் கலக்கிவிட்டு, வலியிழந்து வரிசையாக நின்றிருந்த படகுகளின் அருகில் மயங்கும் (அகநா.210:1–6) என அகநானூறு சுட்டுகின்றது மேற்கூறிய செய்தியில் “பெருமீனின் செயல் வேட்டையாளர் குறிப்பிடும் திமிங்கலத்தின் செயலுடன் ஒத்திருப்பதால் பெருமீன் திமிங்கிலத்தையே குறித்துள்ளது”[163] என்பர் பி.எல்.சாமி.

**இறால்மீன்**

கணுக்காலி வகையைச் சார்ந்த இறாமீன் இறவு. இறா என்னும் சொற்களில் வழங்கப்பட்டுள்ளது. “சுருங்கும் தன்மையுடைய மீன் என்பதனால் இது இறு-இறா-இறா என மருவி வழங்கியதாகக் கருத இயலும்.”[164] அகஇலக்கியத்தில் இம்மீன் இருபத்தொன்பது[165] இடங்களில் பயின்றுவந்துள்ளது. இறால்மீனின் தலைப்பகுதி இருப்பைப் பூவுடனும் (நற்.111:1-2) கால் பகுதி முள்ளுடனும் உவமையாகக் கூறப்பெற்றுள்ளது. (குறுந்.109:1)

**புன்னை மரம்**

சங்க அக இலக்கியத்தில் புன்னைமரம் குறித்து ஐம்பத்திமூன்று[166] இடங்களில் பயின்றுவந்துள்ளது. இம்மரம் நெய்தல் நிலப்பகுதியால் அதிகமாகக் காணக்கூடியது. சங்க காலப் புலவர்களால் மிகவும் போற்றிப் பாடப்பட்ட ஒன்றாகும். இப்புன்னையின் கிளை, இலை, மொட்டு, பூ, மகரந்தத்தாது, காய் ஆகியவற்றை சங்ககாலப் புலவர்கள் கண்டுணர்ந்தமையினை,

**“இரும்பின் அன்ன கருங் கோட்டுப் புன்னை**
**நீலத்து அன்ன பாசிலை அகம்தொறும்;**
**வெள்ளி அன்ன விளங்கு இணர் நாப்பண்**
**பொன்னின் அன்ன நறுந் தாது உதிர**
**புலிப் பொறி”** **(நற்249:1-5)**

என்ற பாடல் சுட்டும், அதாவது புன்னையின் கரிய கிளைகள் இரும்பை ஒத்த வலிமையுடையன, கரும்பச்சை இலைகள் நீலநிறத்தன. வெள்ளி போன்ற பூங்கொத்தின் உள்ளே விளைந்த பொன் போன்ற நறிய தாது உதிரா நிற்கும். அதில் புலியினது புள்ளியைக் கொண்ட அழகிய வரிவண்டுகள் ஊதி மொய்க்கும் புன்னைமர அழகுக் காட்சியை எடுத்துரைக்கின்றன.

அதுபோல் நெய்தல் நிலப்பாங்கான கடற்கரை ஓரத்தில் உப்பங்கழிக் கரையிலும் புன்னைமரம் வளர்வதால் அதன் வேர்கள் கடல் அலைகளால் அரிப்புண்டு புன்னை மரம் நிற்பதையும், அதன் கிளைகள் வளைந்து நிலத்தில்

தோய்ந்து நிற்பதையும் குன்றன்ன பெரிய மணற்பாங்கில் புன்னை வளர்வதையும் குறுந்தொகை (236:3-4) விளங்குகின்றது.

மேலும் புன்னை மரத்தை தனது சகோதரியாக நினைத்து வந்தமையினை நற்றிணை (172) உணர்த்துகின்றது.

காதாசப்தசதியில் புன்னைமரம் குறித்து ஓரிடத்தில் காணப்படுகின்றது. இதனை,

**"கோதா வரியின் கோதில் தடத்தமர்**
**பன்மலர்ச் சுமையின் நன்கு விளைந்த**
**கிளையுடைப் புன்னை மரனே! கேள்நீ!**
**மென்மெல உதிர்ப்பாய் நன்மலர்க் குவையே" (காதா.93:1–4)**

விளக்கும். அதாவது கோதாவரி நதிக்கரையில் உள்ள புன்னை மரத்தடியில் தலைவி தலைவனைக் கூட நினைத்து குறியிடம் காட்டினாள். தலைவன் இன்னும் வரவில்லை. அப்போது புன்னைமரத்துடன் தலைவி பேசுகிறாள். தலைவன் வரும்வரை நான் பூ பொறுக்குவதற்கு ஏதுவாகக் கொஞ்சம் கொஞ்சமாக மெல்ல மெல்லப் பூக்களை உதிர்ப்பாயாக எனக் கூறுவதன் மூலம் தலைவர் அன்பு மிகுதியால் தன்பால் தாழ்ந்துவரும் பாங்கைக் குறிப்பால் உணர்த்துகின்றது.

**ஓமைமரங்கள்**

அகஇலக்கியத்தில் இம்மரம் குறித்து இருபத்திரண்டு[167] இடங்களில் காணப்படுகின்றது. இது வறண்ட பாலைநிலத்தில் காணக்கூடியது. இதன் அடிமரத்தைப் புன்தாள், பொரிதாள், முடத்தாள் என்றும் அழைப்பர்.

இம்மரம் புல்லிய இலைகளை உடையது என்றும் அதில் பருந்துகள் தங்கி கூவும் என்றும் சிள்வீடு என்ற வண்டொன்று தங்கி வெப்பமிக்க நடுப்பகலில் கறங்கும் என்றும் உடன்போக்கில் பாலை வழிப்போவோரும் பிறரும் இம்மரத்தின் நிழலில் தங்கி இளைப்பாறுவர் என்றும் இதன் பட்டையை உதித்து யானை உண்ணும் என்றும் அகஇலக்கியத்தில் கூறப்பட்டுள்ளது. மேலும்,

**"உவர் எழு களரி ஓமை அம் காட்டு**
**வெயில் வீற்றிருந்த வெம்பு அலை அருஞ் சுரம்" (நற்.84:7-8)**

என்ற அடி சான்றாகும். அதுபோல் காதாசப்தசதியில்

**"களிற்றினம் உராய்ந்த கன்ன மதத்தால்**
**மாசுறும் ஓமை மரங்களைக் கண்டு**
**தாய்வீட் டிருந்து தனதூர்க் கேகும்**
**நங்கை யறிந்தாள் நடுவழி தனிலே**

**மணாளன் அந்தோ மறைந்தான் எனவே" (காதா.106:1-5)**

என்ற பாடலில் ஓமைமரம் குறிப்பிட்டுளது.

**கோங்கமரம்**

இம்மரம் மலைப்பகுதியில் காணப்படும். அக இலக்கியத்தில் பதினாறு[168] இடங்களில் பயின்றுவந்துள்ளது. இதன் அடிமரம் பிணர் உடையது என்றும் இதன் இளமலர் பொன்னிறமானது என்று ஐங்குறுநூறு (367:1) சுட்டுகின்றது. அதுபோல் காதாசப்தசதி,

**"கொல்லைப் புறத்துக் கோங்கி நிலைதான்**
**முதுகிற் பட்டது! தட்டி விடுவாய்!**
**மற்றுளார் காணின் மனம்பொறார்! நின்னை**
**வீண்பழி சொல்லல் விளையு மற்றே" (காதா.259:1-4)**

என்ற பாடலின் ஓரிடத்தில் கோங்க மரம் எடுத்துரைக்கப்படுகின்றது.

**ஆலமரம்**

ஆல் எனவும் ஆலம் எனவும் கூறப்படும் ஆலமரம் சங்க அக இலக்கியத்தில் பன்னிரண்டு[169] இடங்களில் காணப்படுகின்றது. இம்மரம் மிகப் பரவி வளரும் பெருமரமாகும். இதன்கிளைகள் நீண்டு தழைத்து நாள்புறமும் பரவி நிழல் பரப்பிநிற்கும் கிளைகளிலிருந்து அடிமரத்திலிருந்து விழுதுகள் கீழ்நோக்கி வளர்ந்து நிலத்தில் ஊன்றிப் பருத்துவிடும்.

**"துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்**
**முறையுளி பராஅய், பாய்ந்தனர், தொழூஉ" (கலித்.101:13-14)**

என முல்லை நிலத்தே ஏறுதழுவுதற்குத் திரண்ட ஆயர்குல மறவர் நீர்த்துறையிலும் ஆலமரத்தின் கீழும் மாமரத்தின் கீழும் உறையும் தெய்வங்கட்குச் செய்யும் முறைமையைப் பரவித் தொழுவிலே பாய்ந்தார் என்று கலித்தொகை சுட்டுகின்றது.

காதாசப்தசதியில் ஐந்திடங்களில்[170] ஆலமரம் குறித்துக் காணப்படுகின்றது. இதில் எத்துணையோ பறவைகட்கு உறைவிடமாய், அண்டி வந்தவர்கட்கு நிழல்தந்து உதவியது பெரிய ஆலமரம் (காதா.84:1-3) தலைவி காதலரைக் காணும் குறியிடமாக அந்த பெரிய ஆலமரம் திகழ்ந்தமையினை,

**"பாதையிற் செல்வோர் பறிப்பரென் றஞ்சி**
**இருள்மிகல் வேண்டித் தெருளுறு பெண்டிர்**
**மாவினைக் கலந்தநீர் பாவிய கிளைசேர்**
**ஆல மரத்திலை அனைத்தும் தெளித்தார்" (காதா.139:1–4)**

என்னும் பாடல் சுட்டும்

**மாமரம்**

அக இலக்கியத்தில் மாமரம் குறித்து முப்பத்திநான்கு[171] இடங்களில் சுட்டப் பெற்றுள்ளது. இளவேனில் காலத்தில் மாமரம் மணத்துடன் தழைத்திருக்கும் இது பொரிந்த அடிமரத்தையும் பலகிளைகளையும் கரும்பச்சை நிற இலைகளையும் தீயைக் கக்குவது போன்ற இளந்தளிரையும் கொண்டது. (ஐங்.349:2–3) காதாசப்தசதியில் ஓரிடத்தில் காணப்படுகிறது பிரிவாற்றியிருந்த தலைவி மாம்பூக்கள் பூத்ததைக் கண்டு, வசந்த காலத்தின் வருகையுணர்த்தும் பூக்களால் ஆற்றாமை மிகுமாதலில் இன்னல் பிறந்தது என்று கூறுகிறாள் (காதா.383:1-4)

**குரவம்**

“குரவம் ஒரு சிறுமரமாகும். இதனை குரா, குரவு, குருந்தம், குருந்து என்று அழைப்பர்”[172]. இது பதினொரு[173] இடங்களில் காணப்படுகின்றது. இதன் அடிமரம் சற்று மஞ்சள் கலந்த வெண்மை நிறத்தில் வலிமையானது. இது சிறுமரமாக இருந்தாலும் இதன் கிளைகள் ஓங்கி நீண்டு வளரும் எனவும் இதன் நிழலில் தனது குட்டியுடன் பெண்மான் இரலையுடன் வந்து தங்கும் என்றும் கிளைகளில் குயிலினம் தங்கிருந்து கூவுமென்றும் அகநானூறு (54:7-8) சுட்டுகின்றது.

குராமரம் பெண்கள் அணைப்பதால் வளமுற்று பூக்கும் என்பது பழையமரபு. தலைவன் குராமரம் வளர்ந்து வளம்படப்பூக்க எருவைத் தேடி அலைந்தமைக்கண்ட தலைவி, தலைவன் தன்னைத்தழுவி மகிழ்வித்தாலல்லவா தானும் குராவைத் தழுவி வளப்படுத்தலாம் என்று எள்ளி நகையாடியமையினை,

**“குராமரம் பூக்க தராதலந் தன்னில்**
**எனைத்தே டாமல் எருவைத் தேடலேன்?**
**என்றே மடந்தை எழில்முகந் திருப்பி**
**நகைத்திடு கின்றாள் நாயக காணாய்” (காதா.5:1-4)**

என்னும் பாடல் விளக்கும். இவ்வோரிடத்தில் குராமரம் குறிப்பிடப்பட்டுள்ளது.

**வேங்கைமரம்**

குறிஞ்சி நிலத்தில் அதிகமாக காணக்கூடியது வேங்கைமரமாகும். அகஇலக்கியத்தில் நாற்பத்தொரு[174] இடங்களில் பயின்றுவந்துள்ளது. மலைப்பகுதியில் காணக்கூடிய வேங்கை மரம் கரிய அடிமரத்தையும் புள்ளிகளையும் பல கிளைகளையும் நெருப்புக் கொழுந்துவிட்டு எரிந்தாள் போன்ற பொன்னிறமான பூங்கொத்தினை (நற்.379:4) உடையது. இத்தகைய

வேங்கை மரத்திடையே கட்டிய பரப்பு அமைந்த பரண்மீது ஏறி வளைந்த கதிர்களைக் கொண்ட சிறிய தினைப்புனத்தில் தினை உண்ணவரும் கிளியினத்தை ஓட்டுவர். (நற்.373:6-9)

**"சுரும்பு உண விரிந்த கருங் கால் வேங்கைப்**
**பெருஞ் சினைத் தொடுத்த கொழுங் கண் இறாஅல்,**
**புள்ளூற்றுக் கசிந்த தீம் தேன் கல் அளைக்**
**குறக் குறுமாக்கள் உண்ட மிச்சிலைப்**
**புன் தலை மந்தி வன் புறழ் நக்கும்**
**நன் மலை நாட" (நற்.168:1- 6)**

என்ற பாடல் சுட்டும். மேலும் வேங்கை மலரைப் பறிக்க விரும்பிய குறமகளிர் 'புலி புலி' என்பர். அவ்வோசையைக் கேட்டு வேங்கைமரம் மலர் கொய்யத் தாழ்ந்து கொடுக்கும் என்பது மலைவாழ்மக்களின் நம்பிக்கையாகும். (அகநா.52:2) அதுமட்டுமின்றி வேங்கை மலர்தலும் திங்கள் நிறைவுறுதலும் மணம் நிகழ்த்துவதற்குரிய காலமாகும். (அகநா.2:16) இதனை கடவுள் நிலைபெற்ற மரம் என்பர். (நற்.216:6) காதாசப்சதியில் வேங்கை மரம் பற்றி குறிப்பில்லை.

**குமிழமரம்**

குமிழ் என்ற தாவரம் ஒருவகை புதர்ச்செடியாகும். இது பல்லாண்டு வாழும் இயல்பினை உடைய சிறுமரம் ஆகும். விறகுக்கும் வேலிக்கும் பயன்படக்கூடியது. சங்க அக இலக்கியங்கள் குமிழ் செடியை விட அதன் மலர்களைப் பற்றிய பதிவுகளே அதிகமாகக் காணப்படுகின்றது. குமிழமரம் குறித்து ஈரிடங்களில்[175] சுட்டப்பெற்றுள்ளன. இம்மரத்தின் வளைந்த மூக்கையுடைய முற்றிய கனிகள் கீழே உதிர்ந்து அங்குக் குதித்து விளையாடும் இளமானுக்கு உணவாகும். (நற்.6:7) என நற்றிணை எடுத்துரைக்கின்றது.

**சந்தனமரம்**

மலைச்சாரல்களில் மிகுதியாகக் காணக்கூடியது சந்தனமரமாகும். இது உயரமாகவும் (நற்.1:4) நீண்ட கணுக்களையும் (நற்.292:1) சிறிய இலைகளையும் (நற்.64:5–6) கிளைகளில் பூங்கொத்துகளையும் (நற்.140:1-2) நறுமணத்தையும் (நற்.5:4) உடையது. இத்தகைய சந்தன மரத்தின் துண்டுகளுடன் பல நறுமணப் பொருள்களையும் சேர்த்தரைத்து குழம்பினைப் பூசினமையினை,

**"கொண்டல் மா மழை குடக்கு ஏர்பு குழைத்த**
**சிறு கோல் இணர பெருந் தண் சாந்தம்**
**வகை சேர் ஐம்பால் தகை பெற வாரி**

**புலர்விடத்து உதிர்தத் துகள் படு கூழைப்" (நற்.140:11-4)**

என்ற பாடல் உணர்த்தும். இதனை ஆரம் எனவும் சாந்தம் எனவும் சந்தனம் எனவும் அழைப்பர். அகஇலக்கியத்தில் முப்பத்தெட்டு[176] இடங்களில் இம்மரம் குறித்த செய்தி காணப்படுகின்றது. இம்மரத்தினால் செய்யப்பட்ட உலக்கையால் ஐவன நெல்லைப் பாறை உரலிட்டுக்குற்றுவர் (கலித்.41:1-4) காதாசப்தசதியில் இம்மரம் குறித்த குறிப்பில்லை.

**பலா**

பலவு எனச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுவது பலா மரமாகும். இதன் அடிமரம் வலியது அழகான மஞ்சளும் இளஞ் செம்மையும் கலந்த நிறமானது. இதனை

**"கொழுஞ் சுளைப் பலவின் பயம் கெழு கவாஅன்,**
**செழுங் கோள் வாங்கிய மாச் சினைக் கொக்கினம்**
**மீன் குடை நாற்றம் தாங்கல்செல்லாது**
**துய்த்த தலை மந்தி தும்மும் நாட" (நற்.326:1-4)**

என்ற பாடல் சுட்டும். இதனை ஆசினி என்றும் அழைப்பர். அகஇலக்கியத்தில் முப்பத்தைந்து[177] இடங்களில் காணப்படுகின்றது. காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

**மூங்கில்**

உயர்ந்த மலைப்பக்கத்தில் அசைகின்ற தண்டுயர்ந்த பசிய கணுக்களைக் கொண்டது மூங்கிலாகும். (நற்.28:7–9) இது மூங்கில், கழை, காம்பு, வெதிர், அமை, வேய், வேரல், முந்தூழ், பணை எனப் பலபெயர்களால் அழைக்கப்படும் அகஇலக்கியத்தில் நூற்றிஇருபத்தொரு[178] இடங்களில் பயின்று வந்துள்ளது. இது ஒரு வலிய பல்லாண்டு வாழ்ந்து ஒரு முறை பூக்கும் புதர்ச்செடியாகும். இதன் அரிசியை மூங்கிலரிசி என்று அழைப்பர்.

**"தேம் பிழி நறவின் குறவன் முன்றில்,**
**முந்தூழ் ஆய் மலர் உதிர" (அகநா.78:7–8)**

என்ற பாடல் விளக்கும்.

மேலும் வண்டுகளால் துளைக்கப்பெற்ற துளையிடத்தே மேல்காற்றினால் எழுகின்ற அழகிய ஒலி குழல் இசையாக ஒலிக்கும் (அகநா.82:9) என மூங்கில் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**செயலை (அசோகு)**

சிவந்த அடிமரத்தைக் கொண்டது அசோக மரமாகும். இதன் தளிரால் புனைந்த உடையைக் குறமகள் உடுத்தி இருந்தாள். (அகநா.7:19–22) அதுபோல்

**“அத்தச் செயலைத் துப்பு உறழ் ஒண் தளிர்**

**புன் தலை மந்தி வன்பறழ் ஆரும் (ஐங்.273: 1-2)**

என அசோக மரத்தின் தளிர் பவளம் போன்ற நிறம் கொண்டமை புலனாகும். மேலும் அகஇலக்கியத்தில் பத்திடங்களில்[179] சுட்டப்பெற்றுள்ளது. காதாசப்தசதியில் அசோகமரம் குறித்து மூன்றுபாடல்களில்[180] குறிப்புளது.

**“அசோக மரமே! அவனியில் உனக்கே**

**இதைவிடப் பெரும்பே றென்ன வேண்டும்?**

**காரிகை யாரின் கரங்கள் தம்மை**

**உன்தளிர் உடனன்றோ உவமிப் பாரே” (காதா.329:1-4)**

எனத் தலைவன் தலைவியின் நலம்பாராட்டும் வகையில் அசோக மரத்தினைச் சிறப்பித்துள்ளான்.

**வாழை**

முக்கனிகளுள் ஒன்றான வாழை சங்க அக இலக்கியத்தில் பத்தொன்பது[181] இடங்களில் காணப்படுகின்றது. வாழைமரம் தோட்டங்களில் வளர்க்கப்படுவதின்றி மலைப்புறத்தில் தானாகவே வளரும் இயல்பிற்று என்பதை ,

**“வாழைஅம் சிலம்பின் வம்பு படக் குலைஇ (நற்.176:7)**

**“வாழை ஓங்கிய வழை அமை சிலம்பில்” (நற்.222:7)**

போன்ற அடிகள் விளக்கும். மேலும் இதன் குழை தார் எனப்படும். முருகப் பெருமானை ஒத்த வலிமையுடன் கடுமையான சினமுடையதாய்ப் போரிட்ட யானையின் வெண்மையான தந்தம் குருதி படிந்து சிவந்திருக்கும். அத்தந்தம் போல வாழை ஈன்ற கூரியதும் உயர்ந்து காணப்படுவதுமான கொழுத்த அரும்பு காணப்படும். அது மெல்லிய இயல்புடைய மகளிர் முடித்த கூந்தலைப் போலப் பூவொடு அசையும் (நற்.225:1-5)

மேலும் வாழையின் கூர்மையான குவிந்த மொட்டு மலராது. காய்க்கும் மொட்டுக்கும் உடையே உள்ள தார் ஆண்மானின் கொம்பு போன்றிருக்கும். (அகநா.134: 10-11) கீழே சிந்திய வாழைப் பூக்கள் உடைந்த வளையல்கள் போன்றிருக்கும் (நற். 188:1) செம்முகம் கொண்ட வாழை செவ்வாழை (அகநா.302:1) என வாழைமரம் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**இல்லம்**

சங்க இலக்கியத்தில் கூறப்படும் இல்லம் என்பது தேற்றாங் கொட்டை மரமாகும். இம்மரம் கார்காலத்தில் பூக்கும். கலங்கல் நீரைத் தேற்றித் தெளிவிக்க இதன் கொட்டையை நீரில் தேய்ப்பர். தேற்றப் பயன்படுவதால் இதனை தேற்றாங்கொட்டை என்றழைத்தனர். இதனை

**“கலம் சிதை இல்லத்துக் காழ்கொண்டு தேற்றக்**

**கலங்கிய நீர்போல் தளித்து நலம் பெற்றாள்” (கலித்.142:64-65)**

என்ற அடி சுட்டும். இதன் அடிமரம் கருமஞ்சள் நிறமாகவும் வலிமையாகவும் பட்டை தக்கை போன்றும் அதில் பல பிளவுகளைக் கொண்டும் காணப்படும். அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[182] சுட்டப்பெற்றுள்ளது.

**ஞாழல்மரம்**

கடற்கரைச் சோலையில் காணக்கூடியது புலிநகக் கொன்றை என்னும் ஞாழல் மரமாகும். அகஇலக்கியத்தில் இருபத்துநான்கு[183] இடங்களில் வந்துள்ளது. பார்ப்பதற்கு சிறிய மரமாகவும் பெரிய கரிய கிளைகளையும் கொண்டது. இதன் தழைகள் பசுமையானவை. இவற்றை இளமகளிர் தழையாடையாக உடுப்பர். இளந்தழைகளைக் கொய்த பின்னர் திரும்பவும் தழைக்கும் இத்தழை மேலும் அழகுடையது. அதனால் இதனைக் ‘குமரி ஞாழல்’ என்றும் அழைப்பர். குவிந்த பூங்கொத்தாகப் பூக்கும் இம்மலர்கள் நறுமணத்துடனும் பெண்களின் பசலைநிறத்திற்கு இம்மலரின் நிறம் உவமையாக நற்றிணையில் சுட்டப்பட்டுள்ளது.

**பனைமரம்**

மிகவும் உயரமாக வளரக்கூடிய மரம் பனைமரமாகும். இதனைப் பெண்ணை என்றும் அழைப்பர். கரிய பெரிய அடிப்பகுதியை உடைய இம்மரத்தைப் “புல்வகை” (தொல்.இளம்.உரை-8) என்பர் தொல்காப்பியர். இதன் பதநீர், நுங்கு போன்றவை மக்களுக்கு உணவாகப் பயன்படும். இதனை,

**“பாளைதந்த பஞ்சிஅம் குறுங்காய்**

**ஓங்கிரும் பெண்ணை நுங்கு” (குறுந்.293:3-4)**

என்னும் அடிகள் சுட்டும். அதன் ஓலையை மாலையாகவும் சூடிக்கொள்வர் (அகநா.294:5) அகஇலக்கியத்தில் முப்பத்தொரு[184] இடங்களில் பனைமரம் குறித்த செய்தி அமைந்துள்ளது.

**மராஅம்**

மராஅம் என்பது வெண்கடம்பு, செங்கடம்பு, ஆட்சாமரம், மரவம் என்ற பெயர்களில் இருபத்தெட்டு[185] இடங்களில் காணப்படுகின்றது.

**கடம்பு**

கடம்பு என்ற சொல் செங்கடம்பு மரத்தையே குறிப்பிடுகின்றது. இம்மரம் வெண்மை நிறத்தில் வலிமையானதாகவும் பட்டை கரும்பழுப்பு நிறத்துடனும் வெள்ளிய ஆரங்களோடும் (கோடுகளை) காணப்படும். பூக்கும் தன்மையது எனினும் இம்மரத்தினால் பயனில்லை.

**வெண்கடம்பு (மராஅம்)**

மரவத்தைக் குறிக்கும் வெண்கடம்பு மரம் ஐங்குறுநூற்றில் காணப்படுகின்றது. இத்தகைய வெண்கடம்பு மரம் பாலைநிலத்தில் வளரக்கூடிய உறுதிமிக்க பெரியமரமாகும். அடிமரம் திரண்டு கரிய நிறமுடையதாகவும் பட்டை பெரிந்தும் கிளைகள் செந்நிறத்துடனும் காணப்படுவதாகும். இதனை

**“ஆலமும் தொல்வலி மராஅமும்” (கலித்.101:13 )**

**“கருங் கால் மராஅத்துக் கொழுங் கொம்பு பிளந்து” (அகநா.83:1)**

என்ற பாடலடிகள் விளக்கும். மேலும்

**“கடம்புகொடி யாத்து கண்ணி சூட்டி” (அகநா.382:3)**

என்பதில் வெறியாட்டு எடுப்போர் கடப்பமரத்தில் கொடியேற்றி மாலை சூட்டியமை குறிப்பிடத்தக்கது.

**இற்றிமரம்**

அகஇலக்கியத்தில் இத்திமரம் என்றழைக்கப்படும் இச்சொல் ஐந்திடங்களில்[186] பயின்று வந்துள்ளது.

**யாமரம்**

யா என்பது ஒரு வறண்ட பாலைநிலப் பகுதியில் வளரும் மரமாகும். அகஇலக்கியத்தில் இருபத்தினான்கு[187] இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. இம்மரம் உரம் பாய்ந்த பொரிந்த திரண்ட அடியையும் மெல்லிய கிளைகளையும் ஒள்ளிய தளிர்களையும் உடையது. இதனுடைய பட்டையைத் யானை தனது கொம்புகளால் குத்திப் பிளந்து பசி களைய பெண்யானைக்கும் மற்ற பசியால் உழந்த யானை கூட்டத்திற்கும் கொடுக்கும் என்பதை,

**‘‘பிடிபசி களைஇய பெருங்கை வேழம்**

**மென் சினை யாஅம் பொளிக்கும்’’ (குறுந்.37:2-3)**

என்ற பாடல் விளக்கும்.

**வேப்பமரம்**

இது வேம்பு என்ற பெயராலும் அழைப்படும் இம்மரமானது அகஇலக்கியத்தில் பதினைந்து[188] இடங்களில் சுட்டப்பெற்றுளது. இது கரிய

அடிமரத்தை உடைய பல கிளைகளையும் அதில் இலைகளையும் உடையது. வெண்மையான பூக்களைக் கொத்துக் கொத்தாகப் பூக்கும் மணமுடையது.

**“கருங்கால் வேம்பின் ஒண் பூ யாணர்**

**என்னை இன்றியும் கழிவது கொல்லோ” (குறுந்.24:1-2)**

என்ற பாடல் வேம்பினைச் சிறப்பிக்கின்றது. மேலும் வேலனும் கட்டுவிச்சியும் வெறியாடும்போது மணம் உள்ள வேப்பிலையையும் நீலமலரையும் சூடிக்கொள்வர் (அகநா.138:4-5) இதன் பூ பாண்டிய மன்னனுக்கு தலைமாலையாகும். (கலித்.27:21–24) இம்மரம் குறித்து காதாசப்தசதியில் ஓரிடத்தில் (காதா.28:4) விளக்கப்பட்டுள்ளது.

**இலவமரம்**

நெடிது உயர்ந்து வளரக் கூடிய பல கிளைகளையும் குவிந்த முட்டு முட்டான தடித்த முட்களையும் கொண்டிருக்கும். இலவமரம் அகஇலக்கியத்தில் பதினொரு[189] இடங்களில் சுட்டப்பெற்றுள்ளது. இதனை வெள்ளோத்திரம் என ஐங்குநூறுறு (301:1) குறிப்பிடுகின்றது.

**“முள் அரை இலவத்து ஒள்ளிணர் வான்பூ” (ஐங்.320:1)**

**“முளி கொடி வலந்த முள் அரை இலவத்து” (நற்105:1)**

என்ற பாடலடிகள் இம்மரத்தைச் சிறப்பிக்கும்.

**குராமரம்**

குரவம் ஒரு சிறுமரமாகும். இதனை குரா, குரவம் என்ற பெயர்களில் அழைக்கப்படும் குராமரம் அகஇலக்கியத்தில் பதினொரு[190] இடங்களில் குறிப்பிடப்பெற்றுளது. இதன் அடிமரம் சற்று மஞ்சள் கலந்த வெண்மை நிறத்தோடு வலிமையானது. இதன் கிளை ஓங்கி நீண்டு வளரக்கூடியது. இதில் குயிலினம் தங்கியிருந்து (அகநா.317:10) கூவும் என்றும் சித்திரிக்கப்பட்டுள்ளது.

**காயா**

காயா என்னும் புதர்ச்செடியை பூவை (அகநா.134:3) என்ற பெயராலும் அழைப்பர். காயா பூத்திருக்கும் நிலையில் மயிற்கழுத்து போன்ற பளபளப்பான நீலநிறமாக இருக்கும். இம்மரம் பற்றி அகஇலக்கியத்தில் நான்கிடங்களில்[191] குறிப்புளது.

**இலுப்பை**

இலுப்பை என்று அழைக்கப்பெறும் இம்மரம் கதிர் போன்ற நீண்ட நிலையைக் கொண்ட பொந்துகளைப் பெற்ற முரட்டு அடிமரத்தையும் கரிய கிளைகளையும் கொண்டது. மேலும் சிவந்த தளிரையும் கூர்மையான

அரும்பினையும் உடைய பாலைநிலத்தில் வளரக்கூடிய இம்மரம் குறித்து அகஇலக்கியத்தில் பதினெட்டு[192] இடங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

**ஞெமைமரம்**

பாலை நிலத்தில் உயரமாக வளர்ந்து, காய்ந்த உச்சியினை உடையது ஞெமை மரமாகும். (அகநா.187:11) இம்மரம் குறித்து ஒன்பது[193] இடங்களில் சுட்டப்பெற்றுளது.

**குருந்த மரம்**

**“குருந்து அவிழ் குறும்பொறை” (நற்.321:9)**

என்ற பாடலடி குருந்த மரத்தைச் சுட்டுகின்றது. இதன் பூவை இடையர்கள் தலைமாலையாக அணிந்தனர். (ஐங்.439:2) அகஇலக்கியத்தில் இம்மரம் குறித்து நான்கிடங்களில்[194] விளக்கப்பட்டுள்ளது.

**காஞ்சிமரம்**

மருத நிலத்தில் வளரக்கூடிய குட்டையான மரம் காஞ்சிமரமாகும். இதனை,

**“பயறு போல் இணர பைந்தாது படீஇயர்**
**உழவர் வாங்கிய கழ்பூ மென்சினைக்**
**காஞ்சி” (குறுந்10:2-4)**

எனக் குறுந்தொகை சுட்டும், அதுபோல் குளிர்ந்த மடுவின் கரையில் அமைந்த சோலையில் உள்ள காஞ்சிமரத்தின் பூங்கொத்தில் காணக்கூடிய பூக்கள் திருமணப்பந்தலின் தோற்றம் போன்று உள்ளதாக அகநானூறு (25:3–5) விளக்குகின்றது. மேலும் இம்மரத்தின் தழை மகளிர் ஆடையாகவும் பயன்பட்டது. (கலித்.108:63) அகஇலக்கியத்தில் இம்மரம் குறித்து பன்னிரண்டு[195] இடங்களில் எடுத்துரைக்கப்பட்டுளது.

**மருதமரம்**

மருத நிலத்தில் காணக்கூடியது மருதமரமாகும். இது உயர்ந்து சோலையாக வளரக்கூடியது. வயலின் அயலிலும் வளைந்த கிளைகளையும் பூங்கொத்துக்களையும் உடையது என்பதனை,

**“வரு புனல் வையை வார்மணல் அகன் துறை,**
**திரு மருது ஓங்கிய விரி மலர்க்” (அகநா.36:9-10)**

என்னும் பாடல் சித்திரிக்கின்றது. அகஇலக்கியத்தில் மருதமரம் இருபது[196] இடங்களில் பயின்றுவந்துள்ளது.

**புன்கமரம் (புங்கமரம்)**

புள்ளிகளை உடைய புன்கமரம் குறித்து ஏழிடங்களில்[197] சுட்டப்பெற்றுள்ளது. இதனை

**"பொரிப் பூம் புன்கின் அழில் தகை ஒண் முறி**
**கணங்கு அணி வன முலை அணங்கு கொளத் திமிரி" (நற்.9:5–6)**

என்னும் பாடல் விளக்கும்.

**வஞ்சிமரம்**

மருத நிலத்திற்குரிய உயர்ந்து வளரக் கூடியது வஞ்சிமரமாகும். (ஐங்.50:2) இது அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[198] இடம்பெற்றுளது.

**கவிர்**

முள்முருங்கை மரம் கவிர் என்றழைக்கப்படும். இச்சொல் அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[199] காணப்படுகிறது.

**முருக்கமரம்**

முருக்கமரமானது வறண்ட நிலத்தில் உயர்ந்த கிளைகளுடன் இளவேனிலில் பூக்கும் மரமாகும். இதனை

**"வைகு புலர் விடியல், மை புலம் பரப்ப,**
**கரு நனை அவிழ்ந்த ஊழுறு முருக்கின்**
**எரி மருள் பூஞ் சினை இனச் சிதர் ஆர்ப்ப" (அகநா.41:1-3)**

என்ற பாடல் சிறப்பிக்கும். இம்மரம் அக இலக்கியத்தில் ஏழிடங்களில்[200] இடம்பெற்றுள்ளது.

**தாழைமரம்**

நெய்தல் நிலத்தில் வளரக்கூடிய தாழைமரமானது, கைதை, கண்டல் என்ற பெயர்களாலும் அழைக்கப்படும். அகஇலக்கியத்தில் முப்பத்தைந்து[201] இடத்தில் குறிக்கப்படுகின்றது. இது வளைந்த அடிமரத்தையும் முள் உள்ள நீண்ட மடலையும் அதன் அக மடலில் தாழை மொட்டினையும் கொண்டது. அம்மொட்டு முதிர்ந்து வெண்மையான சங்கு நீண்டது போல தாழம்பூ மலரும். (நற்.203:2-6) பல விழுதுகளும் தொங்கும் (குறுந்.228:1-2) என்றும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**தில்லைமரம்**

தில்லை என்பது கடலோரத்தில் உப்பங்கழியால் வளரும் ஒரு சிறுமரமான இது ஈரிடங்களில்[202] காணப்படுகின்றது இம்மரம் கழி முள்ளியுடன் சேர்ந்து கானலிடத்தே வளரும் இயல்புடைமையினை,

**“------------- இருங் கழிக்**

**குருளை நீர்நாய் கொழு மீன் மாந்தி,**

**தில்லைஅம் பொதும்பில் பள்ளி கொள்ளும்” (நற்.195:1-3)**

என்று நற்றிணை குறிப்பிடும். மேலும் இம்மரங்கள் சிற்றூரில் வேலியாக அமைந்துள்ளமையினை,

**“தில்லை வேலி இவ்வூர்” (ஐங்.131:2)**

என்ற அடி விளக்கும். அதுமட்டுமின்றி இம்மரத்தில் கொடிய நச்சுப்பால் சுரக்கும் தன்மையது என்றும் சித்த மருத்துவத்திற்குப் பயன்படும் என்றும் கூறப்பெறுகிறது.

**செருந்திமரம்**

நெய்தல் நிலத்திற்குரிய ஒருவகையான மரம் செருந்திமரமாகும். நெட்டிக்கோரை என்றும் வாள்கோரை என்றும் அழைக்கப்படும். இம்மரமானது அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[203] சுட்டப்பெற்றுளது. இதனை,

**“ .................. வண்டுபட**

**விரிந்த செருந்தி வெண்மணல் முடுக்கர்,**

**பூவேய் புன்னைஅம் தண்பொழில்,**

**வாவே தெய்ய, மணந்தனை, செலற்கே” (அகநா.240:13-16)**

என்னும் பாடல் சுட்டும்.

**வாகைமரம்**

போரில் வெற்றி பெற்றோர் சூடுவது வாகை மலராகும். இது இலையுதிர்ந்த பெருமரமாகும். இதன் இலைகளைக் கவட்டிலை என்று அழைப்பர். (அகநா.136:10) இலையின் மேற்புறம் பசுமையாகவும் அடிப்புறம் புல்லென்று சற்று வெள்ளியதாகவும் இருக்கும் என்பதனை,

**“மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை” (அகநா.136:10)**

**“பொன் படு கொண்கான நன்னன் நல் நாட்டு” (நற்.391:6)**

என்ற பாடலடிகள் விளக்கும். உழிஞ்சில் என்ற பெயரால் அழைக்கப்படும் வாகைமரமானது அகஇலக்கியத்தில் ஒன்பதிடங்களில்[204] எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**ஈச்சமரம்**

பாலைநிலத்தில் காணக்கூடிய ஈச்சமரமானது ஈரிடங்களில்[205] பயின்றுவந்துள்ளது. இதனை,

**“பைங் காய் நல் இடம் ஓரீஇய செங் காய்ச்**

**கருங் களி ஈந்தின் வெண் புறக் களரி” (நற்.126:1-2)**

என்ற பாடல் விளக்கும்.

**பாலைமரம்**

பாலை நிலத்தில் காணக்கூடிய பாலைமரமானது அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[206] காணப்படுகிறது.

**“பிடி பிளந்திட்ட நார் இல் வெண்கோட்டுக்**

**கொடிறு போல் காய வால் இணர்ப் பாலை,**

**செல் வளி தூக்கலின், இலை தீர் நெற்றம்**

**கல் இழி அருவியின் ஒல்லென ஒலிக்கும்” (நற்.107:2-5)**

என்ற பாடலில் பாலைமரம் சிறபபிக்கப்படுகின்றது. அதாவது பாலைநிலத்தில் வெப்பக்காற்றினால் இலைகள் உதிர்வதாலும் அதன் பட்டையை யானை உரித்துத் தின்பதாலும் பாலைமரத்தின் அடிமரம் வெண்மையாகவும் அதன்பூக்கள் மற்றும் குறடு போன்ற அதன் காய்களும் வென்மையால் வெண்மையாகவும் காணப்படும். மேலும் அக்காய்கள் காற்றினால் அலைக்கப்பட்டு எழுப்புகின்ற ஒலி மலையினின்றும் விழுகின்ற அருவியின் ஒலியை ஒத்தது என நற்றிணை விளக்குகின்றது.

**பாதிரிமரம்**

சங்க அக இலக்கியத்தில் இம்மரத்தை விட இம்மரத்தின் பூக்களையே அதிகம் இடம் பெற்றுள்ளன. பாதிரி ஓர் உயரமான மரமாகும். “இம்மரத்தின் கிளை, முருங்கை போன்று எளிதில் ஒடியும் புல்லியது. இதனால் ‘புன்கலி’ என்ற பெயரும் உண்டென நிகண்டுகள் கூறும் என்பர் கு.சீனிவாசன்.[207]

**இரத்தி - இலந்தைமரம்**

சிறிது வளைந்த உயர்ந்த கிளைகளையும் புல்லிய அடியையும் உடையது இலந்தை மரமாகும். (நற்.113:2) ஓரிடத்தில் மட்டும் காணப்படுகிறது.

**தேக்குமரம்**

பாலைநிலத்தில் காணக்கூடிய தேக்குமரமானது புள்ளிகளைக் கொண்ட அடிப்பகுதியையும் அகன்ற இலையினையும் உடையது என்பதனை,

**“…………………̇…………….. தேக்கின்**

**அகல்இலை கவித்த புதல்போல் குரம்பை,**

**ஊன்புழுக்கு அயரும் முற்றில்,**

**கான்கெழு வாழ்நர் சிறுகுடி யானே” (அகநா.315:15-18)**

என்னும் பாடல் விளக்கும். அகஇலக்கியத்தில் இம்மரம் குறித்து ஐந்திடங்களில்[208] காணப்படுகின்றது.

**உகாய்மரம்**

உகாய் மரமானது உகாஅ எனவும் அழைக்கப்படும். அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[209] சுட்டப்பெற்றுள்ளது.

> **“புறவுப் புறத்தன்ன புன்கால் உகாஅத்து**
> **இறவுச் சினை அன்ன நளிகனி உதிர”** **(குறுந்.274:1-2)**
> **“மிளகு பெய்தனைய சுவைய புன் காய்**
> **உலறு தலை உகாஅய்”** **(நற்.66:1-2)**

என்னும் பாடல்களின் மூலம் இம்மரம் புறாவினது முதுகினைப் போன்ற புல்லிய அடியினையுடையது என்றும் இதன் புல்லிய காய்கள் மிளகின் சுவை போன்றது என்றும் இதன் பழம் மணியைப் போன்ற தோற்றமுடையது என்றும் அறியமுடிகின்றது.

**கணைக்கால் - கமுகமரம்**

கணைக்கால் என்பது கமுகமரமாகும். இதனை பாக்குமரம் என்றும் அழைப்பர். இது திரண்ட அடிப்பகுதியையும் நீல மணி போன்ற கழுத்தினையும் உடையது. உட்புறத்தில் மடல்களுக்கிடையில் வாள்போலும் வடிவினை உடைய பாளை தோன்றும். இந்த பாளைப்பூ மாலை போன்றது என அகநானூறு (335:12-20) சுட்டுகின்றது.

**நொச்சி மரம்**

நொச்சி மரமானது வீட்டுக்கு வேலியாக அமையும் மரமாகும். (அகநா.23:11-13) இது மென்மையான கிளைகளையும் கரிய கொம்பையும் மயிலடி போன்ற இலையையும் கருமையான பூங்கொத்தையும் உடையது. இதனை,

> **‘‘மயில் அடி இலைய மாக்குரல் நொச்சி**
> **அணிமிகு மென்கொம்பு ஊழ்த்த**
> **மணிமருள் பூவின்”** **(குறுந்.138:2-5)**

எனக் குநற்தொகை சுட்டும். அகஇலக்கியத்தில் இம்மரம் ஆறிடங்களில்[210] காணப்படுகின்றது.

**அரையத்து**

அரையத்து என்பது அரசமரத்தைக் குறிப்பதாகும். இது ஓரிடத்தில் காணப்படுகின்றது. (ஐங்.325:1)

**சிலைமரம்**

வாகை மரத்தைப் போன்ற உறுதி உடைய மரம் சிலைமரமாகும் (ஐங்.363:1)

**வற்றல்மரம்**

பாலை நிலத்தில் காணக்கூடிய வற்றல் மரம் அகஇலக்கியத்தில் ஈரிடங்களில் பயின்றுவந்துள்ளது. இது வேர்முதலாக மரம் முழுவதும் காய்ந்து வற்றிப்போய்ப் பொந்துபட்ட அடியினையுடையதும் தேரின் மணியோசைபோல் சிள்வண்டுகள் ஒலிப்பதும் ஆகிய மரம் வற்றல் மரமாகும். (அகநா.145:3,395:8)

**எறுழ் மரம்**

முருகன் வீற்றிருக்கும் மலையில் எறுழ்மரப் பூங்கொத்துகளின் காம்பில் உள்ள மலர்கள் கழன்று வீழ்ந்து பரவிக்கிடந்தமையினை,

**"............................... விரிஇணர்**
**கால் எறுழ் ஒள் வீ தாஅய**
**முருகு அமர் மாமலை"** **(ஐங்.308:2-4)**

என்னும் பாடல் எடுத்துரைக்கும்

**இரவ மரம்**

இரவ மரம் இரா, இரவு இரவம் என பலபெயர்களால் அழைக்கப்படும் இதனை,

**"இரங்காழ் அன்ன அரும்புமுதிர் ஈங்கை"** **(அகநா.125:3)**

என்னும் தொடர் சுட்டும்.

**இகணை**

இகணை என்பது மருத நிலத்திற்குரிய ஒருவகையான மரமாகும். இது விண்ணைத் தொடுமளவு உயர்ந்து வளர்ந்த கரிய அடியினையும் பசிய நிறமுடைய மெல்லிய இலைகளை ஒன்றன் அருகே ஒன்றாக நெருங்கச் செறித்து வைத்தாற் போன்ற அமைப்பினை உடையது என்று அகநானூறு (131:1) விளக்குகிறது.

**நெல்லிமரம்**

அகஇலக்கியத்தில் நெல்லிமரம் குறித்து நான்கிடங்களில்[211] பயின்றுவந்துள்ளது. இதன் அடிமரம் வலிமையானதாகவும் இலைகள் சிறியனவாகவும் கனிகள் சுவைமிக்கதாகவும் காணப்படும். இது ஒரு மருந்துப்பொருளாகும்.

**நாவல்மரம்**

கடலோரத்திலிருந்து உயரமான மலைப்பாங்கு வரையில் வளரும் பசிய தழைத்த கிளைத்த வலிய மரம் நாவல் மரமாகும். இது வன்மைமிக்க மரமாகவும் செம்பழுப்பு நிறமாகவும் கட்டட வேலைக்கும் வேளாண்மைக் கருவிகளுக்கும் பயன்படும் சிறந்த மரமாகும். இதனை

**"பொங்கு திரை பொருத வார் மணல் அடைகரைப்**
**புன் கால் நாவல் பொதிப் புற இருங்கனி**
**கிளை செத்து மொய்த்த தும்பி"** **(நற்.35:1-3)**

என அம்மூவனார் சிறப்பிக்கிறார்.

**நுணா**

சங்க இலக்கியங்களில் நுணா, நுணவு, நுணைவம் என்ற பெயர்களில் அழைக்கப்படும். இம்மரமானது மலையிடத்துக் காடுகளில் வளரும் பல பூக்களை உடைய மரமாகும்.

**"கரும்பு களித்து ஆலும் இருஞ் சினைக்**
**கடுங் கால் நுணவம் கமழும் பொழுதே" (ஐங்.342:2-3)**

எனக் கரிய அடிமரத்தையுடையது நுணாமரம் என்று கொள்ளலாம். மேலும் இம்மரம் புறத்தே கருமையாகத் தோன்றினும் அகமரம் மஞ்சள் நிறமானது. சிற்றருவியின் நீர்த் துளிகளால் மலருமெனவும் வெண்மையான பூக்களை உடையது எனவும் ஐங்குறுநூறு சுட்டுகின்றது.

**வில்வம்**

வில்வ மரம் கூவிளம் என்றும் அழைக்கப்படும். இதனை

**"பெரு வரை நீழல் வருகுவன், குளவியொடு**
**கூவிளம் ததைந்த கண்ணியன் யாவதும்**
**முயங்கல் பெறுகுவன் அல்லன்"** **(நற்.119:7-10)**

என்ற பாடல் வில்வம் பற்றிப் பதிவு செய்கிறது.

**விளாமரம்**

**"விளம்பழங் கமழும் கமஞ்சூற் குழீசிப்."** **(நற்.12:1)**

என விளாமரம் குறித்து ஈரிடங்களில்[212] சிறப்பிக்கப்பட்டுளது.

**ஆரி – அத்திமரம்**

அதவம் என்றும் அத்தி என்றும் அழைக்கப்படும் இச்சிறுமரம் பூத்துக் காய்க்குமாயினும் மலர்கள் வெளிப்படையாய்த் தெரியாது. ஆகவே தான், அத்தி பூத்தாற்போல், என்ற பழமொழியைக் கூறியுள்ளனர். அத்தியில் ஆண்மரமும்

பெண்மரமும் தனித்தனியாக வளரும். அத்தி மரம் ஆற்றங்கரைகளில் வளரும் என்றும் இதன் கிளைகள் வெண்ணிறமானவை என்றும் இதன் கனி மிக மென்மையானது என்றும் நண்டு மதித்த இதன் கனிகுழையும் என்றும் குறுந்தொகை (66:1) கூறுகின்றது. இதனை

**" ......................... மன்றுழைக்**

**கவை இலை ஆரின் அம் குழை கறிக்கும் (அகநா.104:12-13)**

என்ற பாடலடியும் சுட்டும்.

**சேம்புச் செடி**

அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[213] வந்துள்ளது.

**"சிலம்பில் சேம்பில் அலங்கல் வள்இலை**

**பெருங்களிற்றுச் செவியின் மானத் தைஇ**

**தண்வரல் வாடை தூக்கும்**

**கடும்பனி அற்சிரம் நடுங்கு அஞர் உறவே" (குறுந்.76:3-6)**

எனக் களிற்றின் செவிக்குச் சேம்பின் இலையும் அவற்றின் அசைவிற்கு வாடையில் அதன் அசைவும் உவமையாகச் கூறப்பட்டுள்ளது. நீலமணியைப் போன்ற நிறத்தினை உடைய அகன்ற இலையினைக் கொண்ட சேம்புச் செடியின் கிழங்கு, பிண்டம் போன்ற கொழுமையான அமைப்பினை உடையது. (அகநா.178:4-5) அதுமட்டுன்றி எனச் சேம்பின் இலையை சுளகாகப் பயன்படுத்தியமையினை கலித்தொகை சுட்டுகின்றது. (கலித்:41-2)

**கள்ளிச்செடி**

வறண்ட நிலத்தில் காணக்கூடிய கள்ளிச் செடி குறித்து அக இலக்கியத்தில் ஏழிடங்களில்[214] பயின்றுவந்துள்ளது. இதனை

**"நிலம்கரி கள்ளிஅம் காடு இறந்தோரே" (குறுந்.67:5)**

எனும் அடி சுட்டும். மேலும் பொறிந்த அடிப்பகுதியினையும் (குறுந்.154:5) முள்ளினைக் கொண்ட காயினையும் (குறுந்174:1-2) குட்டையான கிளையினையும் சிறிய முட்களையும் (அகநா.18:4-8) உடையது. இவ்வாறு கள்ளிச்செடி அகஇலக்கியத்தில் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**கூதளச் செடி**

நீர் நிலைகளில் நெருங்கி வளரக்கூடிய கூதளச் செடியானது அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[215] பயின்றுவந்துள்ளது.

**உழுந்துச் செடி**

முன்பனிப்பருவத்தில் மயிர்களைக் கொண்ட காய்களையும் அகன்ற இலைகளையும் உடையது உழுந்துச் செடியாகும் (நற்.89:5)

**ஈங்கை**

கூதிர்காலத்தில் மலரும் இண்டஞ்செடியாகிய ஈங்கை அகஇலக்கியத்தில் ஆறிடங்களில்[216] குறிக்கப்பெற்றுள்ளது. இது நுண்ணிய முள்ளினையும் இலைக்கோணத்தில் இருந்து சிவந்த அரும்புகளையும் உடையது.

**“புதல் இவர் ஈங்கை” (அகநா.294:6)**

**“ஈங்கைப் பைம்புதல்” (ஐங்.456:3)**

என்னும் அடிகள் சிறப்பிக்கும்.

**முள்முள்ளிச்செடி**

மருத நிலத்தில் வளரக்கூடிய நீர்முள்ளிச் செடிகளில் ஒன்று முள்முள்ளிச் செடியாகும். இது வளைந்த முட்களையுடைய நீர்முள்ளிச் செடியின் குவிந்த குலைகளினின்றும் கழன்று உதிர்ந்த மீனினது முள்ளினைப் போன்ற வெண்மையான காம்புகளையுடைய கருமையான மலர்களை விளையாடும் மகளிர் தாம் கொண்டாடும் விழாவிற்கு அழகு காட்டும் பொருட்டு பொறுக்கிச் சேர்ப்பர் (அகநா.26:1) என ஓரிடத்தில் சுட்டப்பெற்றுள்ளது.

**முள்ளிச்செடி**

நெய்தல் நிலமாகிய கடற்கரை கழியிடத்தே காணக்கூடிய முள்ளை உடைய முள்ளிச் செடியானது அகஇலக்கியத்தில் பத்திடங்களில்[217] பயின்றுவந்துள்ளது. இது நுண்ணிய பூந்தாது மூடிய சிவந்த காம்பினையும் கொழுவிய மொட்டினையும் உடைய கழி முள்ளிச் செடிகள் மணலால் ஆன உயர்ந்த நீரடை கரையின்கண் வளர்ந்திருக்கும் என அகநானூறு (130:4) குறிப்பிடுகின்றது.

மேலும் இம்முள்ளிச் செடியினால் குறுகிய கூரையையுடைய சிறுகுடில்களை அமைப்பதும் (நற்.207:1-2) அப்பூக்களை நெய்தல் நில மகளிர் தலையில் சூடுவதும் (நற். 245:2) உண்டு.

**குல்லை**

குல்லைச் செடியானது கஞ்சாங் குல்லை, கஞ்சாச் செடி, அல்லது துளசி என பலபெயர்களால் அழைக்கப்படும். இதனை,

**“குல்லை குளவி கூதளம் குவளை**
**இல்லமொடு மிடைந்த ஈர்ந் தண் கண்ணியன்” (நற்.376:4-5)**

என்ற அடி விளக்கும். மேலும் இதன் தளிரை வடுகர் தலைமாலையாக அணிவர் (குறுந்.11:5)

**மரல்**

பாலைநிலத்தில் காணக்கூடியது மரல். இதனைக் கற்றாழை என்று அழைப்பர். இதனை

**"மரற் புகா அருந்திய மாஎருத்து இரலை" (குறுந்.232:3)**

எனக் குறுந்தொகை விளக்கியுள்ளது.

**பிடவம்**

பிடவம் என்பது ஒரு வலிய புதர்ச்செடி ஆகும். இதன் புறத்தில் முட்கள் நிறைந்திருக்கும். மலைப்புறக் காடுகளிலும் குன்றுகளிலும் வளரும், அடித்தண்டு கருமைசார்ந்த வெளிர்நிறமானது. வலிமையுள்ளது. இது பெரிதும் வேலி அமைக்கப்பயன்படும். கார்காலத்தில் பூக்கும் என்பதனை,

**"சிறு கரும் பிடவின் வெண் தலைக் குறும் புதல்**
**கண்ணியின் மலரும் தண் நறும் புறவில்" (அகநா.34:1-2)**

என அகநானூறு சுட்டும்.

**பூளை**

பூளை என்பது ஒருவகையான புதர்ச் செடியாகும். வறண்ட பாழிடங்களில் வளர்வது. கிளையில் வெண்ணிறமான நீண்ட பூக்கொத்தினை உடையது. (கலித்.23:4-7)

**மஞ்சள் செடி**

மஞ்சள் கொத்து ஓராண்டு வளரும் செடியாகும். இதன் கிழங்கு மஞ்சள் நிறம் என்பதால் இப்பெயர் பெற்றது.

**"முற்றா மஞ்சட் பசும் புறம் கருப்பச்**
**சுற்றிய பிணர சூழ் கழி இறவின்" (நற்.101:1-2)**

என முதிராத புதிய மஞ்சள் கிழங்கில் செதில்களும் வேர்களும் மூடியிருப்பதால் இறால் மீனின் புறத்திற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. மேலும் இம்மஞ்சள்கிழங்கு உணவாகவும் மருந்தாகவும் பயன்படும்.

**பருத்திச்செடி**

அகஇலக்கியத்தில் காணப்படாத பருத்திச் செடி குறித்து காதாசப்தசதியில் ஓரிடத்தில் காணப்படுகின்றது.

**"கலவி மயக்கிற் கண்மூடி யவளே**
**இறந்தன ளெனவிட் டேகு முழவன்**
**பேதமை கண்டு பிணியவிழ் காயின்**

**பருத்திச் செடிதான் சிரிப்பது போலும்" (காதா.293:1-4)**

எனக் களவுக்காலத்தே களவின்பத்தில் மயங்கிய பெண்ணைக் கண்டு சிரிப்பதாக பருத்திச்செடியின் காய் வெடிப்பு உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**கொடிவகைகள்**

**நறைக்கொடி**

தினைப்புனத்தில் களையாகக் காணக் கூடியது நறைக் கொடியாகும். இதனை நறவம் (ஐங்.276:2) என்பர். மணமிக்கது (குறுந்.339:1) இந்த நறைக்கொடி நாரினால் வேங்கை மலரைக் கட்டிக் குறிஞ்சிநிலத்தலைவன் சூடுவான் (அகநா.282:9) இது நான்கிடங்களில்[218] பயின்று வந்துள்ளது.

**நெருஞ்சி**

புன்செய் நிலத்தில் பாழ்பட்ட ஊரில் அச்சம் தரும் இடத்தில் அடர்ந்து படரும் கொடி நெருஞ்சி ஆகும். அகஇலக்கியத்தில் ஐந்திடங்களில்[219] சுட்டப்பெற்றுள்ளது. மேலும் இது சிறிய இலைகளையும் பொன்போன்ற நல்ல மஞ்சள் நிறப்பூக்களுடன் கண்களுக்கு இனியகாட்சி தரும். மலர்கள் முதிர்ந்து காயாகிப் பழுக்கும் நெருஞ்சிப் பழந்தான் 'நெருஞ்சி முள்' எனப்படும். அதுமட்டுமின்றி சிறுபஞ்ச மூலம் என்ற ஐந்து வகையான நோய் தீர்க்கும் மருந்துப் பொருளில் நெருஞ்சிப்பூவும் ஒன்றாகும்.

**மிளகுக்கொடி**

கறி என்றழைக்கப்படும் மிளகுக்கொடிக் குறித்து அகஇலக்கியத்தில் எழிடங்களில்[220] குறிப்புளது. இது ஒரு புதர்க்கொடியாகும். உயர்ந்த மலைச்சாரலில் வளரக்கூடியது. இக்கொடி கரிய நிறமுடையதென்றும் பசிய இதன் காய்கள் நீண்ட கொத்துகளாக இருக்குமென்றும் கூறுவர்.

**"கறி வளர் சாந்தம் ஏறல் செல்லாது" (அகநா.2:6)**

என மிளகு கொடி மலைப்புறத்தே உள்ள சந்தன மரத்தின் மீது ஏறிப்படரும் என்று கூறப்பட்டுள்ளது.

**தமாலம் கொடி**

**"நெடுந் தண் ஆரத்து அலங்கு சினை வலந்த**
**பசுங் கேழ் இலைய நறுங் கொடித் தமாலம்**
**தீம் தேன் கொள்பவர் வாங்குபு பரியும்" (நற்.292:1-3)**

என நீண்ட கணுக்களைக் கொண்ட சந்தன மரத்தின் அசைகின்ற கிளைகளில் சுற்றியிருக்கும் பசுமையான நிறம் பொருந்திய இலையையுடைய தமாலக் கொடியை சுவைநிரம்பிய தேனினை எடுக்கும் வேடர் வளைத்து அறுத்துக் கொண்டு செல்வர் எனச் சுட்டப்பெற்றுள்ளது.

**பீர்க்கம்**

அகஇலக்கியத்தில் பீரம் என்று அழைக்கப்படும் இக்கொடி ஈரிடங்களில்[221] சுட்டப்பெற்றுள்ளது. இக்கொடி மஞ்சள் நிறமான பூக்களை உடையது. பசலை பாய்ந்த மகளிரின் நிறத்திற்கு இதன் நிறத்திற்கு உவமிக்கப்படும். இம்மலர் ஒரு கொடிப்பூவாகும். பீர்க்கம் கொடி தழைத்துப் புதர் போலப் படரும். கார்க்காலத்தில் பூக்கும் இதனை,

**கண்ணெனக் கருவிளை மலர பொன்என**
**இவர் கொடிப் பீரம் இரும்புதல் மலரும்**
**அற்சிரம் மறக்குநர் அல்லர்" (ஐங்.464:1-3)**

என்னும் அடிகள் சுட்டும்.

**மாணைக்கொடி**

**"துறுகல் அயலது மாணை மாக் கொடி" (குறுந்.36:1)**

என மாணைக் கொடி சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**வள்ளிக்கொடி**

பசிய இலைகளை உடையதால் வாடா வள்ளி என்றுழைக்கப்படும். (குறுந்.216:2) இதனை

**"வலந்த வள்ளி மரன் ஓங்கு சாரல்" (அகநா.52:1)**

என்ற பாடிலடி விளக்கும்.

**அதிரல் (புனலிக்கொடி)**

**"புதுப்பூ அதிரல் தாஅய்க்" (ஐங்.345:2)**

என்பதில் அதிரல்கொடி குறிக்கப்பட்டுளது.

**வயலைக்கொடி**

உழுந்த மாவினை நெய்யொடு கலந்து பிசைந்து கையால் திரித்துப் பரப்பியது போல் வயலைக் கொடி தோற்றமளிக்கும். இது ஏழிடங்களில்[222] பயின்றுவந்துள்ளது. மேலும் இது வீட்டருகே நட்டு நீருற்றி வளர்க்கப்படும் என்று ஐங்குறுநூறு (25:2) சுட்டுகின்றது.

**வள்ளைக் கொடி**

நீர்மிக்க வயற்பரப்பில் அழகிய உள்துளை பொருந்திய வள்ளையினது மெல்லிய கொடி வள்ளைக் கொடியாகும் (அகநா.6:17) இவ்வாறு கொடிகள் ஒன்றொடு ஒன்று பின்னிக் கிடக்கக் கூடியதாகிய வள்ளைக்கொடி குறித்து ஏழிடங்களில்[223] காணப்படுகின்றது.

**கரந்தைக்கொடி**

கரந்தை என்பது ஒருவகைக் கொடியாகும். இது மண்டிக்கிடந்தமையால் வயல் அழகுபெற்றுத் திகழ்ந்தது என ஐங்குறுநூறு சுட்டுகின்றது. (ஐங்.26:1)

**அவரைக்கொடி**

அவரைக் கொடி முன்பனிக்காலத்தில் குளிர்ச்சியுள்ள புதரின் மேல் படரும் தன்மையது. இதன் பூக்கள் கிளி மூக்குப் போல் பூத்தமையினை,

**"பனிப்புதல் இவர்ந்த பைங்கொடி அவரைக்**
**கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு பல்மலர் (குறுந்.240:1-2)**

என்ற பாடலடி விளக்கும். இக்கொடி அகஇலக்கியத்தில் நான்கிடங்களில்[224] காணக்கிடைக்கின்றது.

**பகன்றைக்கொடி**

மருத நிலத்திற்குரிய பகன்றைக்கொடியானது ஏழிடங்களில்[225] காணப்படுகின்றது. 'பேரிலைப் பகன்றைப் பொதியவிழ்வான்பூ' (குறுந்.330:4) என்பது கொண்டு இது பெரிய இலையினையும் வெண்ணிறப் பூவினையும் உடையது என்பதை அறியலாம். இதனை நச்சினார்க்கினியர் "சிதலைக்கொடி என்றும் "மணிமில்லாத பகன்றைப்பூ" (குறிஞ்சிபா.88) எனவும் உரை கூறியுள்ளார். குளிர்ச்சியான நீர்த்துறையில் இருக்கும். இக்கொடியானது பகலில் தோன்றும் நிலாப்போலும் (ஐங்.456:1-4) வேல்போலும் வெள்ளி வட்டில் போலும் சலவைத் துணிபோலும் பூக்கும் (நற்.86:2-3) என அகஇலக்கியங்கள் சிறப்பிக்கின்றன.

**பாகல்கொடி**

பாகற்கொடி மருத நிலத்தில் காணக்கூடியது. இது பச்சைக் கொடி, இலை, காய் போன்றவற்றையும் மஞ்சள் பூவையும் சிவந்த பழத்தையும் கொண்டது. உணவிற்கும் மருந்திற்கும் பயன்படும். கசப்பு தன்மை வாய்ந்தது என அகஇலக்கியம் நான்கிடங்களில்[226] குறிப்பிடுகிறது.

**காக்கணங்கொடி**

கருங்காக்கணக் கொடி காட்டில் இருக்கும். புதர்க் கொடியாகும். இதன் மலர் நீலநிறமானது. இதனை கருவிளை என்பர். (நற்.221:1)

**முசுண்டைக் கொடி**

புன்மையான கொடி, முசுட்டை என்றும் அழைப்பர். இது குளிர்ந்த இலையை உடையது. கூதிர்காலத்தில் தளிர் நிரம்ப இருக்கும். புள்ளி உள்ள

வெண்மையான பூக்கள் பனைப்புட்டில்கள் போன்று பூக்கும். மலையில் மிகுதியாக இருக்கும். (அகநா 94:2,264:1-4) என அகநானூறு எடுத்துரைக்கின்றது.

**முல்லைக்கொடி**

முல்லைக்கொடியானது, கல்லின் மேலும் படரும் கொடி. முற்றிய நேரான கொம்பினைக் கொண்டது. இப்பசுமையானக் கொடி, கார்காலத்தில் அறும்பும் பூக்கள் பறிக்கப் பறிக்க கொடி தழைக்கும் மணமும் தேனும் இருப்பதால் மலரில் வண்டுகள் மொய்க்கும் என்பதனை,

**"……………………….. கனைபெயல் பொழிதலின்;**
**பொறிவரி இனவண்டு ஆர்ப்ப பலவுடன்**
**நறுவீ முல்லையொடு தோன்றி தோன்ற,**
**வெறிஏன் றன்றே வீகமழ் கானம்" (அகநா.164:4-7)**

என்னும் அடிகள் விளக்கும். அகஇலக்கியத்தில் நான்கிடங்களில்[227] காதாசப்தசதியில் ஈரிடங்களில்[228] குறிப்புளது.

**"புதரென வளர்ந்து பூக்கள் மிடைந்து**
**முன்றில் நின்ற முல்லைக் கொடிகள்**
**வாயிலிற் தடையாய் வழங்க லானே**
**தெருவைப் பார்த்துத் தேற்றி யிருந்தலும்**
**பிரிவில் ஏங்கும் பேதை யிழந்தாள்" (காதா.268:1-5)**

என முல்லைப்பூ பூத்து தலைவியின் பிரிவாற்றாமையினை மிகுவிப்பதால் தோழி பாங்கனிடம் தலைவியின் நிலையைக் கூறி தலைவனை விரைந்து வருமாறு வற்புறுத்துகிறாா். இந்நிலையில் முல்லைக்கொடி சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**அடப்பங்கொடி**

அகஇலக்கியத்தில் அடப்பங்கொடி என்றும் பாசரும்பு என்றும் அழைக்கப்படும் இக்கொடியானது பதின்மூன்று[229] இடங்களில் பயின்று வந்துள்ளது. இது கிளைத்த இலைகளையும் பூவையும் உடையது. இப்பூவினை மகளிர்தம் கூந்தலில் சூட்டினைமையினை,

**"மான்அடி அன்ன கவட்டிலை அடும்பின்**
**தார்மணி அன்ன ஒண்பூக் கொழுதி,**
**ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்" (குறுந்.243:1-3)**

என்னும் பாடல் சுட்டும்.

**வெள்ளரிக்கொடி**

**"முகமதி யத்தை முழுதும் திருப்பி**
**ஏனழு கின்றாய்? இளம்வெள் ளரிக்கொடிக்**
**கொழுந்து போன்ற குடில முடைத்தே**
**காதல் வழியும்! காரிகை! கலலேல்" (காதா.9:1-4)**

எனத் தலைவன் புலவியினால் நீங்கினால் அவன் உள்ளம் வெள்ளரிக்கொடியின் கொழுந்து போல் வேறொரு பெண்பால் சென்று விடும் என்று உவமையின் வழி வெள்ளரிக்கொடி சித்திரிக்கப்பட்டுள்ளது.

**மாலதிக் கொடி**

காதாசப்தசதியில் மாலதிக்கொடியானது, தலைவனின் தவறான ஒழுக்கத்திற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. (காதா.82:1) இவ்வாறு காதாசப்தசதியில் பயின்று வந்துள்ள மரம், செடி, கொடிகளாகிய கருப்பொருள்கள் உவமை வழியாக வெளிப்படுகின்றன என்பது புலனாகின்றது.

**புல்வகை**

**பைஞ்சாய்**

பைஞ்சாய் என்பது ஒருவகைக் கோரைப்புல். இதனைத் தண்டாங் கோரை என்றும் கூறுவர். மருதநிலத்தில் மண்டிக்கிடப்பது (ஐங்.269:1) ஆகும்.

பதவு – அறுகம்புல்

அகஇலக்கியத்தில் பதவு என்றழைக்கப்படும் அருகம்புல் நான்கிடங்களில்[230] சுட்டப்பெற்றுள்ளது.

**கரும்பு**

கரும்பு புல் வகையைச் சார்ந்தது. இதனைப் பிற்காலத்தில் வேழம், கன்னல் என்ற பெயர்களால் அழைத்தனர். அக இலக்கியத்தில் ஒன்பது[231] இடங்களில் வந்துள்ளது.

**"கரைசேர் வேழம் கரும்பின் பூக்கும்" (ஐங்.12:2)**

எனக் கரும்பிற்கு நீர் மிகவும் தேவைப்படுவதால் இது நீர்ப்பிடிப்புள்ள வயல்களில் பயிரிடுவர். மேலும்

**" .......................... கரும்பின்**
**வேல் போல் வெண் முகை விரிய" (நற்.366:7-8)**

**"சினைப் பசும் பாம்பின் சூல் முதிர்ப்பன்ன**
**களைத்த கரும்பின் கூம்புபொதி அவிழ" (குறுந்.35:1-2)**

என்ற பாடல்கள் மூலம் கரும்பு பல கணுக்களையும் நீண்டு உயர்ந்தும் வளரும். வெள்ளிய நீண்ட கொத்தாகவும் பூக்கும். இதன் இணரில் அரும்புகள் பரிய தாளால் மூடப்பட்டு இருக்கும். மேலும் தாளி ஓரிடத்திலும் வேழம் (நாணல்புல்) எட்டிடத்திலும்[232] எனப் புல்வகைகள் சங்க அகஇலக்கியத்தில் காணப்படுகின்றது. இவை காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

**பறவைகள்**

**நாரை:**

நாரை என்னும் பெயர் நரை என்னும் சாம்பல் நிறம் கலந்த வெண்மை நிறத்தில் இருப்பதால் நாரை என மருவி வழங்கப்பட்டது. இது முப்பத்திரண்டு[233] இடங்களில் வந்துள்ளது.

நாரையானது நீர்நிலைகளில் முக்கியமாகக் கடற்கரைக் கழிகளில் அதிகமாகக் காணப்படும். இது நெட்டையான சாம்பல் நிறத்தில், தலையும் கழுத்தும் வெண்மையாகக் காணப்படும். பெரும்பாலும் தனியாக நிற்கும் சில சிறு கூட்டமாக நீர்நிலைகளில் காணப்படும். இதன் நீண்ட கால்களும் நீண்ட கழுத்தும் இப்பறவையை நெட்டையாகக் காட்டுகின்றது. இதனை.

> **“அடும்பு அவிழ் அணிமலர் சிதைஇய மீன் அருந்தி,**
> **தடத்தாள் நாரை இருக்கும் எக்கர்த்**
> **தண்ணம் துறைவற் தொடுத்து, நம்நலம்” (குறுந்.349:1-3)**

என்று சுட்டும், மேலும் வெள்ளைநிறத்தில் சிறகுகளைக் கொண்டமையினால் “வெண்பறை நாரை” (குறுந்.166:1-2) என்று குறுந்தொகை குறிப்பிடுகின்றது.

**செந்நாரை**

நாரை இனத்தின் மற்றொரு வகை செந்நாரை ஆகும். இதன் இறகுகளில் சிறிதளவு சிவந்த தூவிகளை உடையமையினால் செந்நாரை என்றழைக்கப்பட்டது. இது முள்முருங்கைப் பூவின் இதழைப் போன்று சிவந்த மெல்லிய இறகுடையதாய் விளங்குவதை,

> **“கவிர் இதழி அன்ன தூவிச் செவ்வாய்,**
> **இரைதேர் நாரை க்கு” (குறுந்.103:2-3)**
> **“ ------------------------- மட நடை நாரை**
> **பதைப்ப ஒழிந்த செம் மறுத் தூவி” (ஐங்.156:2-3)**

என்னும் இருபாடல்கள் சுட்டுகின்றன.

காதாசப்தசதியில் நாரை என்ற சொல் ஓரிடத்தில் மட்டும் இடம்பெற்றுள்ளது. இது கொக்கு என்ற பெயரில் விளக்கப்பட்டுள்ளது. பிரிய

நினைத்த தலைவன் சுபமுகூர்த்தம் பார்க்கச் சூரியன் சந்திர நிலைகளை ஆராயும் போது தோழி சூரிய சந்திரர் தென்படாவிட்டலும் கொக்குகள் பறப்பது வானத்தின் கிரக நிலை காட்டும் வரைபடமாகத் தென்படுவதாகக் கூறி சுபசகுனம் என்றும் உணர்த்துவது போலச் சொல்லியமையினை,

**"செங்கதிர் எங்கோ?திங்களும் எங்கோ?**
**பொங்கொளித் தாரகை போனது மெங்கோ?**
**காலக் கணியன் கோல வானிடை**
**நாரைக் குழுவின் ஓரைகாட் டினனே" (காதா3.48:1-4)**

என்னும் பாடல் விளக்கும். இவ்விடம் நாரை நிமிர்த்தம்பார்க்கும் பறவையாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**கொக்கு**

மழைக்காலத்தில் சுண்ணாம்பு பூசிய ஈரமான சுவர் பழுப்பு நிறமாகிக் காணப்படுவதுபோல் கொக்கின் நிறம் இருந்தமையினை,

**"மாரிச் சுதையின் ஈர்ம்புறத்து அன்ன**
**கூரல் கொக்கின் குறும்பறைச் சேவல்" (அகநா.346:2-3)**

என அகநானூறு குறிப்பிடுகின்றது. இது பசுமையான கால்களையும் (குறுந்:122:1) பெரிய நகத்தையும் கரிய மூக்கினையும் உடையது (நற்.100:1-3) என்றும் குளத்தில் வாழும் தன்மையது (நற்.230:2) என்றும் அக இலக்கியங்கள் சுட்டுகின்றன. இது குறித்து பதினொரு[234] இடங்களில் காணப்படுகின்றது. இதில் ஆண் கொக்கானது சேவல் என்றழைக்கப்படும்.(அகநா.346:3)

**"ஆடா தசையா ததோபார் தாமரை**
**இலைமேல் அமர்ந்தே இருக்கும் கொக்குகள்" (காதா.4:1-2)**

எனப் பொய்கைக் கரையில் தாமரை இலைமேல் கொக்குகள் ஆடாது அசையாது இருந்தமையினால் அவ்விடம் குறியிடமாக அமைந்தது. இவ்வாறு ஆந்திர நாட்டு புலவர்கள் கருப்பொருளாகிய கொக்கினைத் தலைமக்களின் உணர்வுகளை வெளிப்படுத்தும் ஒரு கருவியாக மட்டும் பயன்படுத்தினமை புலனாகிறது.

**அன்னம்**

நீர்வாழ் பறவைகளுள் அழகானது அன்னமாகும். அகஇலக்கியத்தில் பதினைந்திடங்களில்[235] காணப்படுகின்றது. அன்னம் குறித்து

**“துதிக்கால் அன்னம் துணை செத்து மிதிக்கும்**

**தண் கடல் வளையினும் இலங்கும் இவள்” (ஐங்.106:2-3)**

என ஐங்குறுநூறு சுட்டும். காதாசப்தசதியில் அன்னம் குறித்து ஈரிடங்களில்[236] இடம்பெற்றுளது. தாமரைக் குளத்தில் அன்னங்கள் ஆடாமல் அசையாமல் இருந்தமையினை,

**“அத்தை எவரோ ஆகா யத்தை**

**நம்மூர்க் குளத்தில் நயனொடு வீசி**

**எறிந்தும் சிறிதும் ஏது மாகா**

**தசைந்தில தாமரை! அன்னமும் எழாதே” (காதா.99:1-4)**

என்ற பாடல் விளக்குகின்றது.

**மயிரெகினம்**

ஆடைகளிலே ஊட்டப்பெற்ற கஞ்சிப் பசையினைக் கரைத்துவிடும் மெல்லிய விரல்களையும் பெரிய தோள்களையும் உடைய ஆடை வெளுப்பவள் அக்கஞ்சிப் பசையினை நீர்த் துறையின்கண் அலசிவிட்டார் போன்ற தூய மயிரினையுடைய அன்னங்கள் மயிரெகினம் எனப்படும் (அகநா.34:12)

**கோழி**

கோழியானது நிலத்தையும் குப்பையையும் கிளைக்கும் பறவை என்பர் ஞா.தேவநேயன்.[237] இவ்வாறு கோழியின் இரை எடுக்கும் கிளைத்தல் செயலால் இப்பெயர்பெற்றது எனலாம். அகஇலக்கியத்தில் கோழி குறித்து நான்கிடங்களிலும் மனைக்கோழி குறித்து நான்கிடங்களிலும்[238] பயின்று வந்துள்ளது. வைகறையில் கோழி குக்கூ எனக் கூவுதலும் (குறுந்.157:10) குடுமியினை உடையது கோழிச்சேவல் என்றும் (குறுந்.234:4) குப்பையில் மேயும் கோழி குப்பபைக் கோழி (குறுந்.305:6-7) என்றும் குறுந்தொகை எடுத்துரைக்கின்றது.

**சேவல்**

கோழியின் ஆணினமாகிய சேவல் குறித்து நான்கிடங்களில்[239] காணப்படுகின்றது. சேவலானது சிவந்த கொண்டையினையும் விடியலில் கூவும் தன்மையது என்பதை,

**“குடுமி நெற்றி நெடு மரச் சேவல்**

**தலைக் குரல் விடியற் போகி (அகநா.87:5-6)**

என அகநானூறு விளக்குகின்றது. காதாசப்தசதியில் கோழி குறித்துச் சுட்டப்பெறவில்லை.

**''தன்மனை யாளைத் தழுவிக் கிடந்தும்**
**சேவல் கூவவும் சேக்கை தவிர்ந்து**
**பிறன்மனை என்றே பேதுற் றஞ்சி**
**திடுக்கிட் டெழலன்! நடுக்கம் கொள்ளேல்!**
**நின்மனை யிதுவே! நேரமு முளதே''** (காதா.444:1-5)

எனத் தலைவனின் தவறான ஒழுக்கத்தைத் தலைவி கண்டிக்கும் பாங்கில் சேவலானது கூறப்பட்டுள்ளது.

**காக்கை**

காக்கை குறித்து அக இலக்கியத்தில் பத்திடங்களில்[240] காணப்படுகிறது.

**"கொடுங் கண் காக்கைக் கூர் வாய்ப் பேடை**
**நடுங்கு சிறைப் பிள்ளை தழீஇ, கிளை பயிர்ந்து (நற்.367:1-2)**

என வளைந்த கண்ணையும் கூரிய வாயையும் உடைய காக்கைப்பேடை, நடுங்குகின்ற சிறகையுடைய தன் பிள்ளையைத் தழுவிக் கொண்டு தன் கிளையாகிய மற்ற காக்கைகளை அழைத்து உண்ணும் பண்பினை உடையது என்ற செய்தி புலனாகிறது. மேலும் காக்கை கரைதலை அக்காலத்தினர் நன்னிமித்தமாகக் கொண்டனர். (குறுந்.210:6) காதாசப்தசதியில் காக்கை குறித்து மூவிடங்களில்[241] சுட்டப்பெற்றுள்ளது.

**'பிரிந்த தலைவி பிண்டம் இடுங்கால்**
**கைவளை நெகிழ்ந்து பையென வீழ**
**நடுவண் உளபலி நச்சா தகன்று**
**கண்ணியென் றஞ்சிக் காகம் பறக்கும்' (காதா.170:1-4)**

என்பதில் ஆந்திரர்களிடமும் முற்காலத்தில் உணவுண்ணுமுன் காகங்களுக்கு ஒரு கவள உணவு தருவது வழக்கமாக இருந்தமை புலனாகிறது. அதுபோல் மழைபெய்து ஓய்ந்தவுடன் வெயில் வந்ததும் காகம் வீட்டு வேலியில் நீர்கழுவிய அலகுடன் சிறகுகள் காய்வதற்காகத் தொங்கப்போட்டுக் கொண்டு. சிறிது வளைந்த கழுத்துடன் இருந்தமையினைக் கண்ட தோழி, தலைவியிடம் இது கழுவேற்றுப்பட்டதுபோல் அபசகுணமாக உள்ளது. எனவே இப்பொழுது குறியிடம் செல்ல வேண்டாம் எனத் தடுத்தாள். (காதா.427:1-4) இவ்வாறு நிமித்தம் பார்க்க காக்கை பயன்பட்டமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**புறா**

முல்லைநிலத்து பறவையாகிய புறா அக இலக்கியத்தில் ஒன்பது[242] இடங்களில் பயின்றுவந்துள்ளது.

**“மறை உறை புறவின் செங் காற் பேடைக்**

**காமர் துணையொடு சேவல் சேர” (நற்.162:1-2)**

என நற்றிணை சுட்டுகின்றது. மேலும் இப்புறா மாடப்புறா, மணிப்புறா, வரிப்புறா, போகில் என பலவகைப்படும்.[243]

**மாடப்புறா**

கோயில்களில் தங்கியிருக்கும் புறா மாடப்புறாவாகும். இதனை

**“கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து**

**உடன்உறை பழமையின் துறத்தல் செல்லாது**

**இரும்புறாப் பெடையோடு பயிரும்**

**பெருங்கல் வைப்பின் மலைமுதல் ஆறே” (அகநா.307:12-15)**

என்னும் அடிகள் சுட்டும். காதாசப்தசதியிலும் ஓரிடத்தில் மாடப்புறா கூறப்பட்டுள்ளது. கோயில் கோபுரத்தில் புறாக்கள் ஒலி செய்தமையினை,

**“கோபு ரத்தின் கூர்நுனி தன்னில்**

**ஆணிக் கருகில் அமர் புறா வின்குரல்**

**பழைமைக் கோயில் கழுவேற் றியதால்**

**கலுழ்ந்தழு வதுபோற் காணப் படுமே” (காதா.57:1-4)**

என்னும் பாடல் விளக்கும். மேலும் கருஞ்சாம்பல் நிறமுடைய புறா மணிப்புறா(அகநா.167:13-14) என்றும் முதுகில் கோடுகளை உடையது வரிப்புறா (நற்.305:7) என்றும் அதுபோல் புள்ளிகளையும் கோடுகளையும் சிவந்த கால்களையும் உடைய ஆண்புறா பொறிவரிப்புறா (அகநா.271:1) என்றும் அக இலக்கியத்தில் சுட்டப்பட்டுள்ளது. அதுமட்டுமின்றி ஓரிடத்தில் நிரந்தரமாகத் தங்காமல் இடம்விட்டு இடம் போகின்ற ஒருவகைச் சாதிப் பறவையை போகில் என்று (ஐங்.303:1) கூறுவதன் மூலம் இதுவும் ஒருவகை புறா எனலாம். இப்போகிலை“பச்சைப் புறாவினங்கள்”[244] என்பர் பி.எல்.சாமி.

**மயில்**

மயிலைக் குறிக்க மயில். மஞ்ஞை, தோகை என பல்வேறு சொற்கள் அகஇலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளன. மயில் என்ற சொல் மை என்பதன் அடியாகப் பிறந்தது. மை-கருநீலவண்ணம். ஆகவே மயிலின் கருமை கலந்த நீல நிறமாகிய அதன் தோற்றத்தால் பெற்ற பெயரே மயில் என்பதனை அகஇலக்கியம் நாற்பத்தைந்து[245] இடங்களில் சுட்டுகின்றது.

**“அணி கிளர் கலாவம் ஐது விரித்து இயலும்**

**மணி புரை எருத்தின் மஞ்ஞை போல” (நற்.264:3-4)**

என நீலமணி போன்ற கழுத்தினையுடைய மயில் மழையைக் காண்பதற்கு அழகிய தோகையை விரித்து ஆடுதல் சுட்டப்பட்டுள்ளது. மேலும் மயிலின் சாயல் பெண்ணிற்கு ˙(ஐங்.258:1-2,கலித்.57:1-2) அதிகமாக உவமையாகக் கூறப்பட்டுள்ளது.

**"கதம்பக் கடிமணம் கழீஇய கற்குவை**
**களிமயில் ஆட்டம் கண்கவர் அருவி**
**இன்னிசை கூடிய எழில்மிகுங்குறிஞ்சித்**
**சிற்றூர் இன்பம் சிறந்திடும் உளத்தே" (காதா.478:1-4)**

எனக் காதாசப்தசதியில் குறிஞ்சிவளம் சுட்டும் போது மயிலின் செயல் எடுத்துரைக்கப்பட்டுள்ளது. அதுமட்டுமின்றி மழைக்காலத்தில் கீழே சிந்திய நீரைப்பருகாமல் புல்நுனிப்புனல் துளிகளை மட்டும் பருகும் மயில் போலத் தலைவன் பரத்தையர்பால் இன்புறாமல் தலைவியிடமே இன்புற வேண்டும் எனும் அறத்தை எடுத்துரைக்கும் போதும் மயில் சுட்டப்படுகின்றது. (காதா.318:1-4) காதாசப்தசதியில் மயில் என்னும் சொல் மூவிடங்களில்[246] பயின்றுவந்துள்ளது.

**கிளி**

கிளியைக் குறிக்கும் கிளி என்ற சொல் நாற்பத்தெட்டு இடங்களிலும் கிள்ளை என்ற சொல் பத்திடங்களிலும் செவ்வாய் பாசினம் என்ற சொல் ஈரிடங்களிலும் குட்டியைக் குறிக்கும் பிள்ளை என்ற சொல் ஓரிடத்திலும் பயின்றுவந்துள்ளது.[247]

கிளி என்ற சொல் "கிள்ளல் கொத்தல், கடித்தல் என்ற செயலால் அமைந்த காரணப்பெயர்"[248] என்பர் ஞா.தேவநேயன். கிளி வளைவாய்ச் சிறுகிளி(குறுந்.141:1) எனவும், சிவந்த அலகினை உடையது பசிய கிளி (ஐங்.284:1) எனவும் கழுத்தில் சிவப்பு நிற வளையமுடையது ஆண்கிளி (நற்.301:5;அகநா.34:13) எனவும் பச்சைநிற வளையமுடையது பெண்கிளி (அகநா.192:4-5) எனவும் அகஇலக்கியம் சுட்டுகின்றது. அதுபோல் காதாசப்தசதியில் கிளி குறித்து ஐந்திடங்களில்[249] பயின்று வந்துள்ளது. இவ்விடம் கிளியானது ஆலமரத்தின் இலைபோல் பசுமைநிறமும் அதன் கனிபோல் அலகும் (காதா.222:1-4) புரசம்பூ போன்ற வடிவத்துடன் மரப்பொந்துகளில் வாழ்வதாக (காதா.426:1) எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**"கிளிகளின் கூட்டம் கீழ்ப்பறந் திடுதல்**
**வான்மகள் கழுத்துறும் மரகதப் பளவ**
**மணிமா லையெனும் அணிகலன் தவறிக்**
**கீழ்வீழ்ந் திடுதல் போல்வதைக் காணாய்" (காதா.67:1-4)**

என்று கிளக் கூட்டமும் காதாசப்தசதியில் சுட்டப்பெற்றுள்ளது.

**வண்டு**

வண்டு என்ற பெயர் வட்டு என்பதன் அடியாகப் பிறந்த சொல்லாகும். அதாவது தேன் உண்ணப் பூவினை வட்டமிடுவதால் வட்டு வண்டு என அழைக்கப்பட்டதாக இலக்கியங்கள் சுட்டுகின்றன.

சங்க அகஇலக்கியத்தில் வண்டினைக் குறிக்க "வண்டு, பறவை புள், இருஞ்சிறைத்தொழுதி, ஈயன்மூதாய், சிதர், சிள்வீடு, சுரும்பு. தும்பி, தேனீ நீலச் செங்கட்சேவல், மாவீழ், மஞிறு,ஞிமிறு எனப் பல்வேறு பெயர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன"[250]. காதாசப்தசதியில் வண்டு, கருவண்டு, சுரும்பு, சில்வண்டு, தும்பி, தேனீ, தாது என்ற பெயர் மட்டுமே கூறப்பட்டுள்ளது[251].

**சங்க அக இலக்கியத்திலும் காதாசப்தசதியிலும் வண்டு**

வண்டின் பறத்தல் செயலால் பறவை என்றும் அதில் ஆறுகால்களை உடையவை அறுகாற்பறவை என்றும் பல்காற் பறவை என்றும் அழைக்கப்பட்டது. அதன் தேனுண்ணும் செயலால் தாதுண்பறவை என்றும் வீதேர் பறவை (அகநா.371:3) என்றும் அதன் இமிர்தல் செயலால் யாழிசைப் பறவை (அகநா.332:6) என்றும் பெயர்பெற்றது. அதுமட்டுமின்றி அவ்வண்டின் சிறகில் புள்ளிகள் கொண்டிருப்பின் பொறிவரிச் சிறைய வண்டு((ஐங்.240:2) என்றும் கரியசிறகினை உடைய வண்டு இருஞ்சிறைத் தொழுதி (அகநா.88:11,132:10) என்றும் பல்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றது.

மேலும் வண்டு தேனுண்ணும் செய்தியும் யானையின் மத நீரிலும் கூந்தலில் சூடிய பூவிலும் மொய்க்கும் செய்தியும் சங்க அக இலக்கியத்தில் அதிகமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. ஆனால் காதாசப்தசதியில் தலைவன் தலைவியின் அன்பினைப் புலப்படுத்தும் பாங்கிலும் (காதா.35:1-4) தலைவன் நலம் பாராட்டிய போதும் (காதா.70:1-5) தலைவனின் பண்பற்ற செயலைத் தோழி கண்டிக்கும் பாங்கிலும் (காதா.275:1-5) ஓர் அனுபவத்தில் துன்புற்றவர் அதேபோன்றே மற்றவற்றிடம் அஞ்சும் மனநிலையிலும் (காதா.406:1-4) தலைவியின் பிறப்பினை எடுத்துரைக்கும்போதும் வண்டானது சுட்டப்பெற்றுள்ளது.

**"வேறுவே றாய விரைமலர்த் தாதின்**
**சுவைதேர்ந் துண்ணச் சுரும்பலை வதெலாம்**
**அதன்குறை யென்றே ஆயிழை! கருதேல்!**
**தேனிலா மலர்கள் தானவை யாகும் (காதா.119:1-4)**

என வண்டு பல்வேறு மலர்களுக்குத் தாவிப் பறந்து செல்வதன் காரணம் அம்மலர்களில் போதுமான தேனின்மைதான் என்றும் அது மலர்களின் குற்றமன்றி

வண்டின் குற்றமன்று என்றும் பெண்மை நாம் கனிந்து பெட்புடன் அமையின் ஆடவா் பிறரிடம் செல்லாா் என்றும் தான் பெண்மை நலம் சான்ற பெண் என்று பெருமிதத்துடன் தலைவி கூறிய இடத்தும் வண்டு எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**குருகு**

நீா்வாழ் பறவைகளுள் ஒன்று குருகு ஆகும். இது நாரை எனவும் அழைக்கப்படும். வெண்குருகு, கருங்கால்வெண்குருகு, வெள்ளாங்குருகு சிறு வெள்ளாங்குருகு என பலவகைப்படும். இப்பறவையை பறவாக் குருகு (கலித்.54:10-11) என்றும் நீந்துகுருகு (அகநா.55:2) வெண்குருகு என்றும் அழைப்பா்.

**"பசுங்கால் வெண்குருகு வாய்ப்பறை வளைஇ" (அகநா.273:2)**

எனப் பசிய கண்களையுடைய வெள்ளிய நிறமுடைய நாரை வெண்குருகு என்றழைக்கப்படும். அகஇலக்கியத்தில் பதினெழு[252] இடங்களில் காணப்படுகிறது.

**கருங்கால் வெண்குருகு**

கரிமை நிறம் பொருந்திய காலினையுடைய வெண்மையான நாரை கருங்கால் வெண்குருகு எனப்படும். (நற்.54:4) இது அதிகமாக வயல் வெளிகளில் காணப்படும். (நற்.4:7-12) அகஇலக்கியத்தில் ஐந்திடங்களில்[253] கருங்கால் வெண்குருகு இடம்பெற்றுள்ளது.

**வெள்ளாங்குருகு**

வெண்ணிறக் கொக்கான வெள்ளாங்குருகு அகஇலக்கியத்தில் பன்னிரண்டு[254] இடங்களில் பயின்றுவந்துள்ளது.

**சிறுவெள்ளாங்குருகு**

வெளுக்கப்பட்ட வெண்ணிற ஆடையைப்போன்ற துவியை உடையதும் அளவில் சிறியதுமான (நற்.70:1-3) குருகு சிறுவெள்ளாங்குருகு எனப்படும்.

**யானையங்குருகு**

"யானை பிளிறுவதுபோல ஒலி எழுப்பும் ஒரு வகைப்பறவை யானையங் குருகாகும். இது தாழ்ந்து பறப்பது ஆனைச் சாத்தன் எனவும் கரிக்குருவி எனவும் வண்டாங் குருகு எனவும் அழைக்கப்படும். இதனை திருஓணம் என்னும் நாளின் பறவை எனச் சோதிட நூல் குறிக்கும்"[255] இதனை

**"முனாஅது யானையங்குருகின் கானலம் பெருந்தோடு**
**அட்ட மள்ளா் ஆா்ப்பு இசை வெரூஉம்" (குறுந்.34:4-5)**
**"குஞ்சரக் குரல குருகு" (அகநா.145:15)**

என்ற இருபாடல்கள் விளக்கும்.

**கூழைக்கடா**

"கூழை +கடா - கூழைக்கடா. இதில் கூழை – குட்டை என்றும் கடா – பெரியது என்றும் பொருள் உண்டு. எனவே கால் குட்டையாகவும் உருவம் பெரியதாகவும் உள்ள நீர்ப்பறவை கூழைக்கடா என்றழைக்கப்படும். இது உருவத்தால் பெற்ற பெயர்"[256]

இக்கூழைக்கடாவைப் பற்றி "கூழைக்கடாக்கள் தங்கள் வாயை அகலப் பிளந்து சரித்துக் கொடுத்து வலையில் மீன்களை அள்ளுவதுபோல வாரி எடுத்து விழுங்கும். இவை கூட்டமாகச் சேர்ந்து பனைமரம் அல்லது வேறு உயர்ந்த மரங்களில் கூடுகள் கட்டுகின்றன"[257] என்பர் ஸலிம் அலி.

**"நீர் பெயர்ந்து மாறிய செறி சேற்று அள்ளல்**
**நெய்த் தலைக் கொழுமீன், அருந்த இனக் குருகு**
**குப்பை வெண் மணல் ஏறி" (நற்.291:1-3)**

எனக் கூழைக்கடாவைக் குறித்து நற்றிணைப் பாடல் சுட்டுகின்றது.

**பூவை (மைனா)**

அக இலக்கியத்தில் காணப்படாத ஒன்று மைனா(பூவை). இது காதாசப்ததியில் ஈரிடத்தில்[258] காணப்படுகிறது. வீட்டில் வளர்க்கப்படும் பறவைகளுள் ஒன்று மைனா. இது சொல்லுவதை திரும்ப சொல்லும் தன்மையது. எனவே மைனாவனது தலைவனும் தலைவியும் இரவில் பேசிய காதல் மொழிகளை, பகலில் வீட்டுப் பெரியவர்களிடம் புலம்பியதை,

**"இரவில் நிகழ்ந்த தெல்லாம் எமது**
**பெரியோர் முன்னர் பேசிடும் பூவை**
**மொழிகள் கேட்டு முகத்தை மறைக்க**
**ஒளிவ தெங்கென உணரா திருந்தோம் (காதா.449:1-4)**

எனக் காதாசப்தசதி விளக்குகின்றது.

**வரித்தலை வாத்து**

வெள்ளிய தலையை உடைய குருகு மென்பறை போன்று ஒலிக்கும் (ஐங்.86:1) என்றும் அதன்ஒலி மணி ஓசை போன்றும் (கலித்.126:6-7) யாழ் ஓசை போன்றும் (நற்.189:3-4) இருக்கும் என அக இலக்கியம் கூறுவதன் மூலம் வரித்தலை வாத்து என்பது அதன் ஒலியால் பெற்ற பெயர் என்பது புலனாகிறது. இவ்வாத்து குறித்து மூவிடங்களில்[259] சுட்டப்பெற்றுளது.

**அன்றில்**

அகஇலக்கியத்தில் அன்றில் குறித்து பதினெழு[260] இடங்களில் பயின்று வந்துள்ளது.

**“மன்றலம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை**

**அன்றிலும் பையென நரலும் (குறுந்.177:3-4)**

என்ற பாடல் அன்றில் இரவில் காணப்படும் பறவை என்பதைச் சுட்டுகின்றது.

**மகன்றில்**

மகன்றில் பறவைகள் ஓருயிரும் இரண்டு உடல்களுடன் வாழும் நீர்வாழ்பறவையாகும் (குறுந்.57:1-3). இது மூவிடங்களில்[261] குறிக்கப்பட்டுள்ளது.

**கணந்துள்**

பாலை நிலத்தின் வழியில் செல்வோர் தாம் செல்லும் வழிகளில் ஆறலைக் கள்வர் உள்ளரா என்பதைக் கணந்துள் பறவையின் ஒலி கொண்ட அறிவர். என்பதனை,

**“நெடுங்காற் கணந்துள் ஆள் அறிவுறீஇ**

**ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்” (குறுந்.350:5-6)**

என்ற பாடல் விளக்கும். அதுபோல் வேட்டுவன் விரித்த வலைகண்டு அஞ்சிய கணந்துள் பறவை தம்மைக்காத்துக் கொள்ளும் (நற்.212:2) இவற்றால் கணந்துள் பறவை நன்மை தீமையினை அறியும் ஆள்காட்டிக் குருவி என்பதும் அறியமுடிகின்றது.

**கம்புள்கோழி**

அகஇலக்கியத்தில் கம்புள்கோழி மூவிடங்களில்[262] பயின்றுவந்துள்ளது. வயல்களில் காணப்படுவதால் பழனக்கம்புள் (ஐங்.60:1) என்றும் கோழியைப் போன்ற அமைப்புடையதால் நீர்க்கோழி என்றும் சம்பங்கோரையில் காணப்படுவதால் சம்பகோழி என்றும் செண்பகம் என்றும் கூறுவர்[263].

**“வெண் நுதற் கம்புள் அரிக்குரல்” (ஐங்.85:1)**

என இக்கோழியின் கண்ணை ஒட்டிய பகுதி வெண்மை நிறத்தினது என்பதும் அது கிணைப்பறை போல் பிறழும் என்பதும் (அகநா.356:3-4) குறிப்பிடத்தக்க செய்தியாகும். கம்புள் கோழி குறித்து “கானங் கோழியின் கண்ணும் ஒட்டிக் கழுத்து வரை வெண்மை நிறத்தில் காணப்படுவதால் இதனை கானங்கோழி”[264] என்பர் பி.எல்.சாமி.

**நீர்க்கோழி**

கானங்கோழி வகையை சார்ந்தது நீர்க்கோழியாகும். இது ஒலி எழுப்பும் முறையில் வேறுபடுகின்றது. (ஐங்.425:1)

**நீலச் சேவல்**

நீரில் வாழும் மற்றொரு வகைக் கோழி நீலச்சேவலாகும். "நீடத்து உரையும் நீலநிறத்தையுடைய கோழிச் சேவலைக் கூரிய நகத்தையுடைய பேடானது நினைத்துத் தன் வயா நோய் தீரும்" (ஐங்.51:1-2) என இக்கோழி ஓரிடத்தில் மட்டும் சுட்டப்பெற்றுள்ளது.

**கானக் கோழி**

காட்டில் வாழும் கோழி கானக் கோழியாகும். இது ஓரிடத்தில் காணப்படுகிறது (குறுந்.212:1-3)

**கானவாரணம்**

கானவாரணம் காட்டில் வாழக்கூடியது. இக்கோழியின் பின்பக்க சிறகு மேல்நோக்கி வளைந்திருப்பதால் கான வாரணம் எனப்பட்டது. இதனை,

> **"வளைசிறை வாரணம் கிளையொடு கவர**
> **ஏனலும் இறங்குபொறை உயிர்த்தன" (அகநா.192:7-8)**

சுட்டும். இக்கானவாரணம் குறித்து மூவிடங்களில்[265] குறிப்புளது.

**சிரல்(மீன்கொத்தி)**

சங்க அக இலக்கியத்தில் சிரல் என்னும் பறவை ஐந்திடங்களில்[266] குறிக்கப்பட்டுள்ளது. இதற்கு சிச்சிலிப்பறவை என்று மற்றொரு பெயரும் உண்டு. இதனை,

> **"எரி அகைந்தன்ன தாமரைப் பழனத்து**
> **பொரி அகைந்தன்ன பொங்கு பல் சிறு மீன்,**
> **வெறி கொள் பாசடை, உணீஇயர், பைப்பயப்**
> **பறை தபு முது சிரல் அசைபு வந்து இருக்கும் (அகநா.106:1-4)**

என்றுரைக்கும்.

**சிறுநீல மீன்கொத்தி**

மீன்கொத்திப் பறவைகளில் மிகவும் சிறியது சிறுநீலமின் கொத்தியாகும். இதனை,

> **"வராஅல் அருந்திய சிறுசிரல் மருதின்**
> **தாழ்சினை உறங்கும் தாண்துறை ஊரன்" (அகநா.286:6-7)**

என்னும் அடிகள் விளக்கும்.

**சிறுவெண்கொக்கை**

கடற்காக்கை சிறுவெண்காக்கை என அழைக்கப்படும் (குறுந்.246:1) இதனை "கடல் நீர்ப்பரப்பில் மிதந்து கொண்டு வெகுநேரம் தங்கக்கூடிய ஒரே

பறவையினம் சிறுவெண்காக்கை என்பர்''[267] இக்காக்கையின் உடல் முழுவதும் கருத்து, கழுத்தின் கீழ்பகுதி மட்டும் சிறிது வெண்மை நிறத்தில் காணப்படுவதால் சிறுவெண்காக்கை எனப்பெயர் பெற்றது. (ஐங்.161:1) அகஇலக்கியத்தில் இக்காக்கை குறித்துப் பத்தொன்பது[268] இடங்களில் பயின்றுவந்துள்ளது. இது சிவந்த வாயையுடையது.

மேலும் கடலில் இயங்கும் நீர்க்காக்கையின் ஆண்பறவையானது வெண்மணற் குவியலின் ஒருபுறம் தங்கியுள்ள தன்னால் விரும்பப்படும் பெண் காக்கைக்கு கரிய சேற்றிலிருந்து அயிரை மீனைத் தேடும். அது அங்ஙனம் தோந்தெடுக்கத் தெளிந்த கழியிடத்தின் பூவுதிர்ந்த ஆழமான இடத்தில் துழாவுதலை.

**''கடல்அம் காக்கைச செவ் வாய்ச் சேவல்**
**படிவ மகளிர் கொடி கொய்து அழித்த**
**பொம்மல் அடும்பின் வெண் மணல் ஒரு சிறை**
**கடுஞ்சூல் வதிந்த காமர் பேடைக்கு**
**இருஞ் சேற்று அயிரை தேரிய, தெண் கழிப்**
**பூவுடைக் குட்டம் துழவும்''(நற்.272:1-6)**

என நற்றினை சுட்டும்.

**இதல்**

இதல் என்னும் பறவை, கவுதாரி, சிவல் என்றழைக்கப்படும். அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[269] காணப்படுகிறது. இதல் பற்றி "தற்காலத்தில் சருகுக்கோழி, வரகுக்கோழி என்று வழங்குவர். இதன் உடல் செம்மை கலந்த பழுப்பு நிறத்திலும் வெள்ளையும் சிவப்பும் கலந்த பழுப்பு நிறத்திலும் வெள்ளையும் சிவப்பும் கலந்த வளைந்த வரிகள் உடலின் மேலும், கண்களைச் சுற்றி வட்டமான சிவந்த தோல் பகுதியும் காணப்படும்''[270] என்பர் பி.எல்சாமி.

**பூழ்**

காட்டில் வாழும் பறவையினங்களில் ஒன்று பூழ். இதனைக் காடை என்பர். அகஇலக்கியத்தில் பூழ், செம்பூழ் எனச் சுட்டுகின்றது.

**''முதைச் சுவல் கிளைத்த பூழி'' (நற்.389:9)**

எனப் புழுதி நிறமுடையபறவை பூழி என்றழைக்கப்படும். இப்பறவையின் காலுக்கு நிலத்தின்மேல் சிறிதளவே வெளித்தோன்றும் உழுந்தின்வேர் உவமையாகும். (குறுந்.68:1-2)

**செம்பூழ்**

சிவந்த காடைபறவை செம்பூழ் எனப்படும். இது பசிய தினையினை உண்ணும் (ஐங்.469:1)

**குயில்**

குயிலானது அதன் கூவுதல் செயலால் இப்பெயர்பெற்றது. சங்க அக இலக்கியத்தில் இருபத்தெழு[271] இடங்களில் குயில் இடம்பெற்றுள்ளது. "குயிலில் ஆண் ஒளிரும் கறுப்பாகவும் அலகு மட்டும் மஞ்சளாக இருக்கும். கண் இரத்தச் சிவப்பு பெண்தவிட்டு நிறமும் வெள்ளைப் புள்ளிகளும் உடையது''.[272]

அகஇலக்கியத்தில் கரிய குயில்கள் இருங்குயில் (குறுந்.192:3) என்றும் நீலமணியின் நிறத்தினை ஒத்த கருங்குயில்கள் மணிற்றின் இருங்குயில் (அகநா.25:6) என்றும் சிவந்த கண்களையுடைய கரியகுயில் செங்கண் இருங்குயில் (அகநா.229:19) என்றும் அதன் தோற்ற அடிப்படையில் பல்வேறு பெயர்களில் அழைக்கப்படுகின்றன.

**குரீஇ**

சிறிய பறவைகள் குரீஇ எனப்படும். இது மனையுரைக்குரீஇ, ஊர்க்குரீஇ, துர்க்கணாய் குரீஇ, மலைக்குரீஇ என பல வகைப்படும்.

**கூகை**

இப்பறவை "கூ கூ எனக் குழறுல்வதால் இப்பெயர்பெற்றது''[273] என்பர் பி.எல்.சாமி. அகஇலக்கியத்தில் கூகை என்பது கூகை, குரால், குடிஞை, ஆண்டலை, ஊமன், முரல்வாய்முதுபுள் எனப் பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுகின்றது. வேப்ப மரத்தின் பெரிய கிளையிலிருந்து குரலாகிய கூகை இரவு முழுவதும் குழறி ஒலி எழுப்பியதனை,

**"பராரை வேம்பின் படு சினை இருந்த**
**குராஅற் கூகையும் இராஅ இசைக்கும்'' (நற்.218:7-8)**

என்ற பாடலடிகள் சுட்டும். மேலும் இதில் கபிலநிறமுடைய கூகை குரால் (குறுந்.224:4) என்றும் பேராந்தை குடிஞை (ஐங்.291:1) என்றும் அண் மகனின் தலையைப்போல் இருக்கும் ஆந்தை ஆண்டலை (கலித்.94:4) என்றும் வயதான ஆந்தை முரவுவாய்முதுபுள் (அகநா.260:12) என்றும் அக இலக்கியம் குறிப்பிடுகின்றது. அதுபோல் "ஊம் ஊம்" என ஒலி எழுப்பும் கூகை ஊமன்''[274] என பி.எல்.சாமி விளக்குகின்றார்.

**பருந்து**

**"ஊன்நசைப் பருந்து இருந்து உகக்கும்**

**வான் உயர் பிறங்கல் மலை இறந்தோரோ" (குறுந்.285:7-8)**

என்ற பாடலடிகள் மூலம் பருந்து அதன் உயரப் பறக்கும் செயலால் இப்பெயர்பெற்றது புலனாகிறது. அகஇலக்கியம் பருந்தினைப் பருந்து, செம்பருந்து, தேன்குடிச்சான் பருந்து, பாறு, கழுகு, எழால் எனப் பல்வேறு பெயர்களால் அழைக்கின்றது. பருந்து குறித்து பதினெட்டு[275] இடங்களில் பயின்றுவந்துள்ளது. இதில் காட்டில் வாழக்கூடிய உடல்வெண்சாம்பல் நிறத்திலும் தலை உலறப் பெற்ற நிலையிலும் உடையது. கரும்பருந்து (ஐங்.321:1-2) என்றும் வெண்ணிறத் தலையினை உடையது செம்பருந்து (அகநா.117:6-7) என்றும் மலையில் உள்ள தேன்கூட்டைக் கிழித்து தேன் உண்ணும் பருந்து தேன்குடிச்சான் பருந்து எனப்படும் (நற்.168:1-5)

**எருவை**

**"பொருகளத்து ஒழிந்த குருதிச் செவ்வாய்**

**பொறித்த போலும் வால்நிற எருத்தின்,**

**அணிந்த போலும் செஞ்செவி எருவை" (அகநா.193:4-6)**

என்று சிவந்த வாயினையும் பொறிக்கப்பட்டன போன்ற வெண்மையான கழுத்தினையும் செய்து பதித்து வைத்தாற் போன்ற சிவந்த செவியினையும் உடையது எருவை ஆகும். மேலும் எருவை என்பதனை "தலையும், கழுத்தும் இறகுகள் இல்லாமல் வழுக்கையாய்ப் புதிதாக வெட்டப்பட்ட விலங்கின் இறைச்சியைப் போலக் காணப்படும். அதிலும் காது மிகச் சிவப்பாகக் காணப்படும்"[276] என்பர் பி.எல்.சாமி.

**பாறு**

பாறு என்பது ஒருவகையான பிணந்தின்னிக் கழுகாகும். இதனை

**"வரையா நயவினர் நிரையம் பேணார்**

**----------------------------------------------------**

**------------------------------------ பொறிய முது பாறு**

**இறகு புடைத்து இற்ற பறைப் புன் தூவி" (நற்.329:1-5)**

என்னும் அடிகள் விளக்கும்.

**கழுகு**

பருந்தினங்களுள் மிகவும் கூர்மையான பார்வையை உடையது கழுகாகும். இதனை

**"கருங்கட் காக்கையொடு கழுகு வீசும்பு அகவ"** **(ஐங்.**314:2)

என்னும் அடி சுட்டும்.

**எழால்**

"இரையை வேட்டையாடும் பொழுது மிக விரைவாகத் திடுமெனத் தாக்கி, அதே வேகத்தில் மேல்நோக்கி, எழுந்து பறந்துவிடும் வீழ்ந்த வேகத்தில் எழுவதால் எழால் எனப்பெயர் பெற்றது"[277] இது சிறுசிறு பறவைகளை வேட்டையாடுவதால் புல்லூறு என்றும் புள்ளூறு என்றும் அழைக்கப்பட்டது. குறும்பூழ் சேவலை புல்லூறு எறிதற்குக் குறிவைக்கும் (103:1-4) என அகநானூறு சுட்டுகின்றது.

**வங்கா**

மூங்கில் குழல் போல் இசைக்கும் பறவைக்கு வங்கா என்று பெயர் (குறுந்.151:11-6) இதனை வங்கியம் என்ற பெயராலும் அழைப்பர்.

**வானம்பாடி**

**"வானம்பாடி வறம் களைந்து, ஆனாது" (ஐங்.418:1)**

என வானம்பாடிப்புள் மழைத்துளியை வேண்டிப் பாடுதலின் வானம்பாடி அல்லது வானம்வாழ்த்தி என்று அழைக்கப்பட்டது. அதுபோல் வானம்பாடி மிசைபாடும்புள் என்றும் அழைக்கப்படும் (கலித்.46:20)

**வாவல்**

கருமை நிறத்துடன் உண்ட உணவின் எச்சத்தை வாயின் வழியை வெளியேற்றும் பறவை வாவல் ஆகும். இது இரவில் இரைதேடும் பறவையாகும். (அகநா.244:1-3). மேலும் வௌவால் பழுத்த மரத்தை நாடி செல்லும் (குறுந்.172:1) கூரிய நகங்களை உடையதால் இது கூர்உகிர்ப்பறவை (குறுந்.352:2) என்றும் அழைக்கப்படும்.

**பூக்கள்**

**தாமரை**

நீர்நிலைகளில் காணப்படுவது தாமரை மலராகும். இது மருத நிலத்திற்குரியது. அகஇலக்கியத்தில் தாமரை குறித்து நாற்பத்தாறு[278] இடங்களில் காணப்படுகின்றது. "இதில் வெண்தாமரை, செந்தாமரை என இருவகையுண்டு. வெண்தாமரையின் மொட்டு அன்னம் போன்றும் புறஇதழ் முயல்காது போன்றும் அகஇதழ் குழந்தையின் கை போன்றும் இருக்கும். முறுவல் பூத்த முகத்திற்கு இப்பூவை உவமையாகக் கூறுவர். செந்தாமரை விளக்குப்போன்றும் வேள்வித்தீ போன்றும் தோன்றும் - இப்பூ காலையில் மலரும் மாலையில் கூம்பும் நீரில்லையேல் வாடும் பனியில் கருகும்"[279] என்பர். எனினும்

அகஇலக்கியத்தில் தாமரை மலரானது செங்கழுநீர்ப்பூ எனவும் பல்மல் எனவும் பல்இதழ் எனவும் முளரி எனவும் கனைக்கால மலர் எனவும் பல்வேறு பெயர்களால் அழைக்கப்பட்டுள்ளது. தீப்போன்ற நிறம் கொண்ட செந்தாமரை வயல்களில் களையாக வளரும் (ஐங்.454:1-3) இதன் கிழங்கு நிலம் பிளக்கும்படிக் கீழ் இறங்கும். தண்டில் துளைகள் காணப்படும். யானையின் செவி போன்ற பச்சை இலைகளையும் கழுமரம் நிமிர்ந்தாற் போன்ற வளமான அரும்புகளையும் கொண்டது. இவ்வரும்புகளுக்கிடையே முறுவல் பூத்த முகத்தைப் போன்ற பல பூக்கள் மலரும். அதில் வண்டுகள் ஒலிக்கும். (அகநா.176:1-7)

மேலும் குளிர்கால மாலையில் தாமரைமலர் தான் வாங்கிய ஞாயிற்றின் கதிர்களைக் கூட்டிக்கொண்டு. குவிந்து அழகாக அசைகின்ற வெப்பத்தைத் தன்னிடத்தில் வைத்திருக்கும். (குறுந்.376:3-6) என தாமரைமலர் குறித்த பல்வேறு செய்திகளை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. காதாசப்தசதியில் செந்தாமரை குறித்து பதினைந்து[280] இடங்களில் சுட்டப்பெற்றுள்ளது.

**"மகரந் தமுடன் மதுவும் ததும்பும்**
**விரைகமழ் எழில் தாமரை" (காதா.313: 1-2)**

எனத் தாமரை சிறப்பிக்கப் பெற்றுள்ளது. மேலும் தலைவி தன் காதலை ஒருவருக்கும் புலப்படுத்தாமல் மனத்துப் புதைத்து மறைக்க விரும்பிய போது, தோழியர் ஏதோ பேச்சு வாக்கில் தலைவன் பெயரை எடுத்ததும் தலைவியின் முகம் அன்றலர்ந்த செந்தமரை போல செஞ்ஞாயிற்றின் ஒளிபட்டுப் பிரகாசிப்பதுபோல மலர்ச்சியுற்றது. இவ்வாறு செந்தாமரை தலைவியின் முகத்திற்கும் உவமையாகக் கூறப்பட்டுள்ளது. (காதா.284:1-4)

**குவளை**

குவளை மலர் பொய்கை சுனை போன்ற நீர்நிலைகளில் வளரக்கூடியதாகும். மாலையில் பூக்கும் தன்மையது. அகஇலக்கியத்தில் நாற்பத்தைந்து[281] இடங்களில் இடம்பெற்றுள்ளது. வரிசையான இதழ்களைக் கொண்ட இம்மலரின் நீலநிறம் கொண்ட குவளை மலரினை நீலம், நீலமலர் எனவும் பெரிய கரிய இதழ்களையும் கரிய காம்பினைக் கொண்ட குவளை மலரினை காவி, ஞாங்கர் மலர் (கருங்குவளை) எனவும் அழைப்பர். நீரில் உள்ள இப்பூ கோடைக்காற்றால் வாடாமல் இருக்கும். குவளையும் ஆம்பலும் தழை ஆடையாகப் பயன்படும் குவளை மணம் மிக்கது. வண்டுகள் தேனுக்காக மொய்க்கும்.

**“குவளை உண்கண் இவளும் யானும்” (அகநா.156:8)**

எனப் பெண்ணின் கண்களுக்கு இப்பூவை உவமையாக்குவர். ‘‘கதவுப்பிடி குவளைப் பூவின் வடிவில் செய்யப்பெறும்’’ எனக் காதாசப்தசதியில் குவளை மலர் குறித்து மூவிடங்களிலும் கருங்குவளை மலர் குறித்து ஓரிடத்திலும்[282] இடம்பெற்றுள்ளது. தலைவி குவளை மலரை தம் காதில் செருகிருத்தல் (காதா.147:1) என்பதன் மூலம் குவளை மலர் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

**முல்லை**

கற்பொழுக்கத்திற்குரியது முல்லை மலராகும்.இது மௌவல், தளவு, தளவம் (செம்முல்லை) மாரிபித்திகம் (செம்முல்லை) எனப் பல பெயர்களால் அழைக்கப்படும். அகஇலக்கியத்தில் இச்சொல் குறித்து தொண்ணூற்றெட்டு[283] இடங்கள் காணப்படுகின்றன. முல்லை வெண்மையான பூக்களை உடையது (அகநா.134:5-6)

**‘‘சிறுவீ முல்லைத் தேம் கமழ் பசு வீ**
**பொறி வரி நல் மான் புகர் முகம் கடுப்ப**
**தண் புதல் அணிபெற மலர” (நற்.248:1-3)**

என்ற பாடலில் யானை போல் காணப்படும். புதரின் மேல் பூத்த முல்லைப்பூக்கள் யானை முகத்தில் உள்ள வரிகளும் புள்ளிகளும் போன்றிருந்தன எனச் சுட்டப்பெற்றுள்ளது. அதுபோல் கதிர் அறுக்கப்பெற்ற வரகுத்தாளின் பக்கத்தில் முல்லைக் கொடியின் அரும்பு காட்டுப்பூனை சிரித்தது போன்றிருந்தது என்று குறுந்தொகை குறிப்பிடுகின்றது (குறுந்.1:5) இவ்வாறு தலைவனுக்குத் தலைமாலையாகவும் தலைவிக்குக் கூந்தல் மலராகவும் முல்லை விளங்கினமையினைக் கலித்தொகை

**“தொழுவத்து,**
**சில்லைச் செவி மறைக்கொண்டவன் சென்னிக் குவி முல்லைக்**
**கோட்டம் காழ் கோட்டின் எடுத்துக் கொண்டு, ஆட்டிய**
**ஏழை இரும் புகர்பொங்க, அப்பூ வந்து என்**
**கூழையுள் வீழ்ந்தன்று மன்” (கலித்.107:5-9)**

என்று எடுத்துரைக்கின்றது. காதாசப்தசதியில் ஈரிடங்களில்[284] இம்மலர் குறித்துப் பயின்றுவந்துள்ளது.

**“புதரென வளர்ந்து பூக்கள் மிடைந்து**
**முன்றில் நின்ற முல்லைக் கொடிகள்**
**வாயிலிற் தடையாய் வழங்கலானே**

**தெருவைப் பார்த்துத் தேற்றி யிருத்தலும்**

**பிரிவில் ஏங்கும் பேதை யிழந்தாள்'' (காதா.268:1-5)**

எனப் பிரிவாற்றாமையினை மிகுவிப்பதாக முல்லைப் பூ சுட்டப்பெற்றுள்ளது.

**பாதிரி**

பின்பனியில் பூக்கும் மரம் பாதிரியாகும். அகஇலக்கியத்தில் பதினொரு[285] இடங்களில் பயின்றுவந்துள்ளது. பருத்த புல்லிய அடிமரத்தையும் அழகிய கிளைகளையும் இளவேனிலில் பூக்கள் உதிரும் தன்மையது. இலை பச்சை நிறத்திலும் பூ வரியுள்ள வளைந்த பெரிய பூ (அகநா.237:1-5) கரிய புறஇதழ், வளமையான அகஇதழ், இதழின் உட்பக்கம் சிவப்பு நிறத்தை உடைய துய் (பஞ்சு) தேனும் மணமும் கொண்டது. (குறுந். 147:1-3) விலைக்கு விற்கப்பெறும் (நற்.118:6-11) காதாசப்தசதியில் ஓரிடத்தில் மட்டும் இம்மலர் குறித்து இடம்பெற்றுள்ளது. பாதிரிப் பூ போன்ற சிவந்த இதழை உடையவள் தலைவி எனச் சுட்டப்பெற்றுள்ளாள் (காதா.13:1-4)

**இருப்பை வெண்பூ**

பாலைநிலத்து மரம் இருப்பையாகும். இதனை இலுப்பை என்றும் அழைப்பர். அகஇலக்கியத்தில் ஐந்திடங்களில்[286] காணப்படுகின்றது. இப்பூ வெண்மையாகவும் உருண்டையாகவும் உள்துளைகளைக் கொண்டும் தேனைக்கொண்டும் பூக்கள் குலைக்குலையாகவும் காணப்படும். காதாசப்தசதியில் ஓரிடத்தில் இப்பூ சுட்டப்பெற்றுள்ளது.

**''முகரும் தடவும் முத்தமிட் டின்புறும்**

**தகவே இதயந் தன்னில் ஒற்றும்**

**மெய்யுள குறவே தையல் கன்னம்**

**போலும் இலுப்பைப் பூவினை யவனே'' (காதா.479:1-4)**

எனக் காதலர்கட்குக் காதலியை நினைப்பூட்டும் பொருள்களுள் ஒன்றாக இலுப்பைப்பூ கூறப்பட்டுள்ளது.

**வயலை**

வீட்டு மரத்தில் ஏறும் வளமையான கொடி வயலையாகும். இதன்இலை, பூ, தளிர் போன்றவை தழையாடைக்கு உதவும். பலகிளைகளை உடையது இக்கொடி என்பதனை

**''மனைநகு வயலை மரன்இவர் கொழுங்கொடி**

**அரிமலர் ஆம்பலொடு ஆர்தழை தைஇ**

**மலர்ஏர் உண்கண்'' (அகநா.176:13-16)**

என்னும் பாடலடி சுட்டும். காதாசப்தசதியில் வயலை இடம்பெறவில்லை.

**வள்ளிப்பூ**

மலைச்சரிவுகளில் வேங்கை மரம் போன்ற மரங்களில் படர்வது வள்ளிக் கொடியாகும். இது சுருளை உடைய பூவைக் கொண்டது. காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

**கரந்தைப்பூ**

ஆநிரையை மீட்போர் இப்பூவைச் சூடுவர். (அகநா.292:4)

**வேம்பின்பூ**

அகஇலக்கியத்தில் இச்சொல் ஐந்திடங்களில்[287] பயின்றுவந்துள்ளது. கரிய அடிமரத்தை உடையது (குறுந்24:1-2) இதன் அரும்பு நண்டின்கண் போன்றது (ஐங்.30:1-3) இப்பூ பாண்டியமன்னனுக்குரியது (கலித்.27:21-24) வேலனும் கட்டுவிச்சியும் வெறியாடும் போது மணம் உள்ள வேப்பிலையையும் நீலமரையும் சூடிக் கொள்வர், (அகநா.138:4-5) காதாசப்தசதியில் இது குறித்த குறிப்பில்லை.

**கரும்பின் பூ**

அகஇலக்கியத்தில் நான்கிடங்களில்[288] கரும்பின் பூ சுட்டப்பெற்றுள்ளது. பனிக்காலத்தில் கோல்வடிவம் கொண்ட கரும்பின் அரும்பு மேல் வடிவில் தோன்றும். (நற்.366:7-8) வெண்மையாகப் பூக்கும் (குறுந்.2:5) என கரும்பின் பூ பாடப்பெற்றுள்ளது.

**புன்குபூ**

பொரி போன்ற மலரைக் கொண்டது புன்கு. அதனுடைய ஒளியுள்ள தளிரை மகளிர் தம் தேமல் உள்ள மார்பகத்தின் மேல் அழகாக அப்பிக்கொள்வர் (நற்.9:5-6) இப்புன்கின் அரும்பு வெண்மை நிறத்தில் நெற்பொரியைப் போல் காணப்படும் (குறுந்.58:2-5) அகஇலக்கியத்தில் இப்பூ குறித்து மூவிடங்களில்[289] இடம்பெற்றுள்ளது. காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

**மா (மாவின்பூ)**

இளவேனில் மாமரம் வளமையான தளிரைப்பெறும். மரக்கொம்பில் நின்று குயில் பல குரலில் இனிய பாட்டைப்பாடும் பழைய இலைகள் உதிர்ந்துவிட பெரிய கிளைகளில் அரும்புகள் மலரும். அம்மலர்களில் இருந்து வண்டுக்கூட்டம் இசையில் வல்லபாணன் தன் யாழில் பாலைப்பண்ணை எழுப்பியது போலத் தெளிந்த நீரைக் கொண்ட குளத்தின் அருகில் உள்ள தூய மணல்மேட்டில் மாமரச்சோலை பூந்துகளைச் சிந்தும். (அகநா.355: 1-7) இம்மாவின்பூ குறித்து ஐந்திடங்களில்[290] காணப்படுகின்றது. காதாசப்தசதியில் ஆறிடங்களில்[291] பயிற்றுவந்துள்ளது.

**“முதன்முதல் மெல்லென் முளைத்த மாந்தளிர்**
**கருப்பு வில்லுடைக் காமன் கையுள்**
**குருதி தோய்ந்த கொலைவாள் எனவே**
**பிரிவுடைக் காதலர் பேதுறு வாரே” (காதா.447:1-4)**

என மாவின் செந்தளிரைக் கண்ட தலைவி அதனை காமதேவனுடைய கையில் இருக்கும் குருதி தோய்ந்த வாள்போன்ற கருவி எனப்பாவித்து வருந்துவர் எனச் சுட்டப்பெற்றுள்ளது.

**கண்டல்**

நெய்தல் நிலத்திற்குரிய புல்மரம் கண்டலாகும். அகஇலக்கியத்தில ஈரிடங்களில்[292] காணப்படுகின்றது. இதனை தாழை என்றும் அழைப்பர்.

**கமுகு**

பாக்கு மரத்தின் பூ மாலைபோல் அழகு விளங்க இருக்கும். அதில் வண்டுகள் தேன் குடிப்பதால் நீண்ட கவரியைப்போல மலரும். அதனினின்றும் வெண்மையான முத்துகளைப் போல வெண்மையான மலர்கள் உதிர்ந்து பரவும். உதிராத அவ்வழகிய பூக்களோடு முள்ளாத பசுங்காய் வளரும். (அகநா.335:18-23) காதாசப்தசதியில் கமுகு இடம்பெறவில்லை.

**கழுநீர்ப்பூ**

பொய்கையிலும் சுனையிலும் வயலிலும் பூக்கும் நீர்ப்பூ கழுநீர் பூவாகும். இதனை செங்கழுநீர் என்றும் அழைப்பர். இது வயல்களில் களையாகக் காணப்படும் (நற்.260:1-2) இப்பூவைமாலையாகக் கட்டிச் சூடுவர். (அகநா.5:22-26) இப்பூ பெண்களின் கண்ணுக்கு உவமையாகக் கூறுவர். காதாசப்தசதியில் கழுநீர்ப்பூ இடம்பெறவில்லை.

**நாவற்பூ**

காதாசப்தசதியில் தலைவர் நாவற்பூவின் செந்தளிரைக் காதில் செருகிக் கொண்டு தலைவிக்குக் குறியிடம் காட்டினான் என ஓரிடத்தில் (காதா.151:1) சுட்டப்பெற்றுளது.

**குரவம்பூ**

பிரிந்திருக்கும் தலைவருக்கு வசந்த காலத்தை உணர்த்துவது குரவம் பூவாகும். (காதா.183:3)

**அசோகம்பூ**

அசோகப்பூ குறித்து ஈரிடங்களில் (காதா.235:3, 329:3) பயின்றுவந்துள்ளது.

**“காரிகை யாரின் கரங்கள் தம்மை**

**உன்தளிர் உடனன்றோ உவமிப் பாரே” (காதா.329:3-4)**

என அசோகமரத்தின் செந்தளிர்களை மங்கையின் கையுடன் உவமிப்பர்.

**புரசம்பூ**

காதாசப்தசதியில் புரசம் பற்றி ஈரிடங்களில் (காதா.255:2,448:3) சுட்டப்பெற்றுள்ளது. புரசம் பூக்கள் பூத்துக் குலுங்குவது தீப்பற்றி எரிவது போலத் தோன்றும் (காதா.448:1-4) எனப் பாடுவர்.

**மாலதிப்பூ**

தேன் நிறையக் கொண்டு மணம்வீசும் பூ மாலதிப்பூவாகும். இதனை வண்டு விரும்பும் (காதா.355:3) என்று காதாசப்தசதி சித்திரிக்கின்றது.

**கதம்பப்பூ**

காதாசப்தசதியில் கதம்பப்பூ குறித்து ஓரிடத்தில் மட்டும் சுட்டப்பெற்றுள்ளது. இதனை,

**“கதம்பக் கடிமணம் கமீஇய கற்குவை**

**களிமயில் ஆட்டம் கண்கவர் அருவி**

**இன்னிசை கூடிய எழில்மிகுங் குறிஞ்சிச்**

**சிற்றூர் இன்பம் சிறந்திடும் உளத்தே”** (காதா.478:1-4)

என்னும் பாடல் விளக்கும்.

**காந்தள்**

காந்தள் மலரானது கோடல் (வெண்காந்தள்) தோன்றி (செங்காந்தள்) என்ற பெயரால் அழைக்கப்படும். காந்தள் குறித்து அறுபத்தேழு[293] இடங்களில் பயின்று வந்துள்ளது. இதில் காந்தள் மலரானது குருதி நிறமுடையது. மணம் கமழும் தன்மையது (நற்313:6) என்று கூறப்பட்டுள்ளது. செங்காந்தள் மலர் முருகனுக்குரியது (குறுந்.1:3-4) பெண்களின் குவிந்த கை காந்தள் அரும்பு போன்றும் விரிந்த கை அதன் மலர் போன்றும் தோன்றும் (குறுந்.62:1) (ஐங்.293:1-2) இதன் பூங்கொத்துக்கள் பாம்பின் தலைபோல் காட்சியளிக்கும். (கலித்.9:2-5)

மேலும் பாம்பின் உடலில் வரிசையாக பல கோடுகள் இருப்பது போல் அரும்பில் வரிகள் இருக்கும். (குறுந்.185:4-6) இப்பூக்களை மாலையாகக் கட்டி அணிவர் தலைமாலையாகவும் சூடுவர். இப்பூவின் தேன் மணம் கொண்டது.

**“கோடு உடைந்தன்ன கோடல்” (அகநா.23:6)**

என வெண்காந்தள்பூ வெண்சங்கு உடைந்தாற் போன்று பூக்கும் என்று அகநானூறு சுட்டுகின்றது காதாசப்தசதியில் இம்மலர் குறித்து இடம்பெறவில்லை.

**ஆம்பல்**

ஆம்பல் அல்லி என்றும் அழைக்கப்பெறும். இது ஒரு நீர்ப்பூ. இதன் தண்டு உள்ளே துளைகளை உடையது (குறுந்.178:1-4) இதன் பூந்துகள் மஞ்சள் வண்ணம் கொண்டது (ஐங்.34:2-4) மாலை நேரத்தில் பூக்கும். திங்களைக் கண்டு மலரும் (கலித்.7:6-8) "இம்மலரை அரிசியோடு சேர்த்துச் சமைப்பர். பூமாலையாகவும் கூந்தலில் சூடும் மலராகவும் பயன்படுத்துவர். இம்மலர் குறித்து முப்பத்திநான்கு[294] இடங்களில் பயின்றுவந்துள்ளது. காதாசப்தசதியில் இம்மலர் குறித்துச் சுட்டப்பெறவில்லை.

**நெய்தல்**

நெய்தல் நிலத்திற்குரியது நெய்தல் பூவாகும். இது உப்பங்கழியில் காணக்கூடியது (அகநா.400:19-21) தலைவியின் கண்ணிற்கு உவமையாகக் கூறப்படும். (நற்.23:7) அறுபத்திமூன்று[295] இடங்களில் இம்மலர் குறித்து இடம்பெற்றுள்ளது. நெய்தல் பூவானது கழுநீர்மலர், மணிப்பூ கழிமலர், கழிப்பூ எனப்பல்வேறு பெயர்களால் அழைக்கப்படும். அதுமட்டுமின்றி கருங்குவளையினைக் குறிக்கும் காவி என்ற பெயராலும் அழைக்கப்படும்.

மேலும் இம்மலர் "நீலம், கருங்குவளை என்றும் அழைக்கப்பெறும். காலையில் மலர்ந்து மாலையில் கூம்பும் வைகறையில் எருமை இப்பூவைத் தின்னும். இப்பூ அளவில் பெரியது. அமிழ்தம் போன்ற பூத்துகளைக் கொண்டது. அறுபட்ட இச்செடியின் அரும்பு பாம்பின் தலைப்போல் தோன்றும். இப்பூவை மாலையாகத் தொடுத்தும் கோலத்தின் மேல் வைத்தும் பந்தலில் கட்டியும் அழகுப்படுத்துவர். அதுமட்டுமின்றி விளையாட்டுப் பெண்கள் இப்பூவைப் பாவைக்குப் படுக்கையாக்குவர் நீரில்லையேல் இச்செடி வாடும்"[296] காதாசப்தசதியில் நெய்தல் மலர் இடம்பெறவில்லை.

**வேங்கை**

குறிஞ்சி நிலத்திற்குரிய பூ வேங்கையாகும். இது ஐம்பத்திரண்டு[297] இடங்களில் பயின்றுவந்துள்ளது.

**"வேங்கை தந்த வெற்பு அணி நல் நாள்**
**பொன்னின் அன்ன பூஞ் சினை துழைஇ" (நற்.396:3-4)**

என வேங்கைப்பூ பொன்னிறமுடையன என்பது புலனாகிறது. புலி புலி என்று கூவினால் இக்கிளை தாழ்ந்து பூப்பறிக்க உதவும் என்ற நம்பிக்கை சங்க காலத்தில் நிலவியது (அகநா:202:5) என்பதை அகநானூற்றின் வழி அறியமுடிகின்றது. மேலும் இது விரிந்து கொத்தாகப்பூ பூக்கும். சிறிய காய்களைக் கொண்டிருக்கும்.

**“மன்ற வேங்கை மலர் சில கொண்டு,**

**மலை உறை கடவுள் குல முதல் வழுத்தி,**

**தேம் பலிச் செய்த ஈர் நறுங் கையள்” (ஐங்.259:2-4)**

என்ற பாடலின் மூலம் தெய்வத்தை வழிபடவும் இப்பூ பயன்பட்டமை புலனாகிறது. காதாசப்தசதி இம்மலர் குறித்துச் சுட்டவில்லை.

**பிடவு (நறவம்பூ)**

அகஇலக்கியத்தில் இச்சொல் இருபத்திரண்டு[298] இடங்களில் வந்துள்ளது. பிடவு, பிடவம் என்றும் அழைக்கப்பெறும்.

**“சிறு கரும் பிடவின் வெண் தலைக் குறும் புதல்**

**கண்ணியின் மலரும் தண் நறும் புறவில்” (அகநா.34:1-2)**

எனக் குட்டிப்பிடவுச்செடி சிறிய கரிய கொம்புகளைக் கொண்டு புதர்களில் காணப்படும். இது இயல்பாகவே தலையில் சூடும் தலைமாலையாகவே, கண்ணியாகவே பூக்கும். குளிர்ச்சி பொருந்திய முல்லைநிலத்தில் காணப்படும் இப்பூக்கள் வெண்ணிறமானவை. (அகநா.184:8) முள்ளைப் புறத்திலே கொண்ட அரும்பாக இருக்கும் (கலித்.1:2-2) ஆயர்குலத் தலைவன் ஏறுதழுவலுக்கு முன் கார்காலத்தில் தோன்றும் பிடா, காந்தள், காயா போன்ற மலர்களைத் தலைமாலையாகச் சூடுவான். (கலித்.1:1-6) கோடைகாலத்திலும் சில மலர்கள் பூக்கும். (நற்.238:1-3) காதாசப்தசதியில் இம்மலர் இடம்பெறவில்லை.

**குளவி**

குளவி என்ற சொல் இருபத்திரண்டு[299] இடங்களில் பயின்றுவந்துள்ளது. இது காட்டு மல்லிகை, குளவி (மலைப்பச்சை) அதிரல் (புனமல்லிகை) மலை மல்லிகை எனப் பல பெயர்களால் அழைக்கப்படும். நீர் ஓடைக்கு அருகே நெருக்கமாக வளரும் (அகநா.272:7-9) இதன் பூ குளிர்ச்சியும் மணமும் உடையது. (நற்.51:1)

**“குளவி மேய்ந்த மந்தி” (ஐங்.279:1)**

எனக் காட்டு மல்லிகையின் தளிரை மந்தி தின்னும். காதாசப்தசதியில் இம்மலர் குறித்துச் சுட்டப்பெறவில்லை.

**சுனைப்பூ**

சுனையில் பூக்கும் பூ சுனைப்பூவாகும் அகஇலக்கியத்தில் இச்சொல் நான்கிடங்களில்[300] இடம்பெற்றுள்ளது. காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

**கூதளம்**

கூதளம் என்பது ஒரு மலைத்தாவரமாகும். கூதிர்காலத்தில் பூக்கும் தன்மையது. வெண்கூதாளி எனவும் அழைக்கப்பெறும். அகஇலக்கியத்தில் இச்சொல் குறித்து பத்திடங்களில்[301] குறிப்புளது.

> **'.................................சாரல்**
> **கூதிர்க் கூதளத்து அலரி நாறும்**
> **மாதர் வண்டின் நயவருந் தீம் குரல்**
> **மணம் நாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்" (நற்.244:1-4)**

என்ற பாடலில் கூதாளி பூக்களின் மணத்தில் மயங்கிய வண்டுகளின் ஒலியை மலை அடுக்கில் உள்ள அசுணம் இரசித்துக்கேட்கும் என விளக்கப்பட்டுள்ளது. காதாசப்தசதியில் இம்மலர் குறித்து இடம்பெறவில்லை.

**கடம்பு**

மராஅம் என்பது செங்கடம்பு, வெண்கடம்பு, ஆச்சா, மரவம் எனப் பல்வேறு பெயர்களால் அழைக்கப்படும். இது ஈரிடங்களில்[302] காணப்படுகின்றது.

இம்மரப்பூ முருகனுக்குரியது. வெண்கடம்பு செம்கடம்பு என இருவகைகள் உண்டு. செங்கடம்பு மாலை மாலையாகவே பூக்கும். இப்பூ சிவப்பு நிறத்துடன் உருண்டையாக இருக்கும். குறும்பூழ்ப் பறவையின் குஞ்சு வெண்கடப்பின் பூப் போன்று இருக்கும் முருகனுக்குரிய விழாவில் கடம்ப மரத்தில் கொடி ஏற்றுவர் (அகநா.392:3)

**வெண்கடம்பு**

ஒற்றைக் குழை அணிந்த ஒப்பற்றவன் பலதேவன். அவனைப்போல் வெண்பூங்கொத்துகளைக் கொண்டு இருந்தது வெண்கடம்பமரம் (கலி.25:1) இது ஐந்திடங்களில்[303] சுட்டப்பெற்றுள்ளது.

இது தேன் உள்ள மெல்லிய பூங்கொத்துகளைக் கொண்டது. காம்பு செந்நிறத்துடனும் பூ வெண்ணிறத்துடனும் கரிய திரண்ட பருத்த அடிமரத்தையும் வளைந்த குறுகியகிளைகளையும் உடையது. மழைத்தூரல், ஆலங்கட்டி மழை, பூத்த கிளிஞ்சல் சுண்ணாம்பு, வெண்நெல் விதை ஆகியவற்றிற்கு இப்பூவை உவமையாக்குவர் (அகநா.211:2-7) இளவேனிலில் பூக்கும் தன்மையது. காதாசப்தசதியில் இம்மலர் குறித்து மூவிடங்களில்[304] இடம்பெற்றுள்ளது. கடப்பம் பூக்கள் மழைக்காலத்தே மலரும். உருண்டை வடிவமான பூவாகும். பிரிவுற்றிருந்த

தலைவிக்குக் கார்கால வரவை உணர்த்தும் கடப்பம் பூக்கள் மிகுந்த துன்பம் விளைவித்தமையினை,

**“கடப்பம் பூக்கள் கலக்கிடல் போல**
**எனைப்பிற பூக்கள் இடர்செய் வதிலை**
**மழைக்கா லத்தே மன்மத னார்தாம்**
**உண்டை வில்லை கொண்டெய் குவரோ?” (காதா.148:1-4)**

என்னும் பாடல் சுட்டும்.

**எருக்கங்கண்ணி**

எருக்கங்கண்ணி நெருக்கமாகப்பூக்கும். குவிந்த கொத்துகளைக் கொண்டது. இப்பூவையும் தலைமாலையாகச் சூடுவர். (அகநா.301:11-12,14-15) அகஇலக்கியத்தில் இப்பூ குறித்து ஆறிடங்களில்[305] இடங்களில் காண்ப்படுகின்றது.

**எருவைப்பூ**

எருவை கோரை என்றும் கொறுக்கச்சி என்றும் அழைக்கப்பெறும் இதனை

**“………………………….. விடர்முகை**
**எருவை நறும் பூ நீடிய” (நற்.261:8-9)**

சுட்டும்.

**எறுழ்வீ**

அகஇலக்கியத்தில் எறுழ்வீ குறித்து இது ஈரிடங்களில்[306] குறிப்பிடப்பட்டுள்ளது. எறுழச் செடிகள் நீலமணி போன்ற நிறத்துடன் புதராக இருக்கும். இது மழைபெய்தபின் வெண்ணிற பூக்களை அரும்பியமையினை,

**“------------------ விரி இணர்க்**
**கால் எறுழ் ஒள் வீ தாஅய” (ஐங்.308:2-3)**

என்று ஐங்குறுநூறு எடுத்துரைக்கும். காதாசப்தசதியில் இம்மலர்கள் குறித்த குறிப்பில்லை.

**குறிஞ்சி**

கார்காலப் பூவாகிய குறிஞ்சி பன்னிரண்டு வருடத்திற்கு ஒருமுறை பூப்பதாகும். அகஇலக்கியத்தில் நான்கிடங்களில்[307] பயின்றுவந்துள்ளது. இதில் கரிய காம்பினைக் கொண்ட மென்மையான வெண்பூ கருங்காற் குறிஞ்சி என்றும் பருத்த காம்பினைக் கொண்ட வெண்பூ பெருங்காற் குறிஞ்சி என்றும் அழைக்கப்படும். இப்பூமாலை முருகனுக்குரியது. உயர்ந்த மலையில் நீண்ட கரிய கோல்களாக இச்செடி தழைத்திருக்கும். இப்பூக்களில் உள்ள தேன் உயர்தரம் வாய்ந்தமையினை,

**"……………….. சாரல்**

**கருங்கோற் குறிஞ்சிப் பூக் கொண்டு**

**பெருந்தேன் இழைக்கும்" (குறுந்.3:2-4)**

என்ற பாடல் சுட்டும். காதாசப்தசதி இம்மலர் குறித்துக் கூறவில்லை.

**குல்லை**

அகஇலக்கியத்தில் கஞ்சங் குல்லை, துளசி என்றும் அழைக்கப்பெறும் குல்லை மூவிடங்களில்[308] இடங்களில் காணப்படுகின்றது.

**"குல்லைக் கண்ணி வடுகர்" (குறுந்.11:5)**

என்ற பாடல் கஞ்சங் குல்லையை வடுகர் தலைமாலையாக அணிந்திருந்தமையினையும் புலப்படுத்துகின்றது. காதாசப்தசதி இம்மலர் குறித்துக் கூறவில்லை.

**நரந்தம்பூ**

தேன் மணம் கொண்ட நரந்தம்பூ சோலைகளில் இருக்கும். அகஇலக்கியத்தில் நான்கிடங்களில்[309] இப்பூ குறித்து சுட்டப்பெற்றுள்ளது. காதாசப்தசதியில இம்மலர் குறித்து இடம்பெறவில்லை.

**நொச்சிப்பூ**

வீட்டிற்கு வேலியாக அமையும் நொச்சிச் செடியானது பன்னிரண்டு[310] இடங்களில் காணப்படுகின்றது. மரமாகவும் வளரும் (அகநா.267:1) இது கரிய கொம்பையும் மயிலடி போன்ற இலையையும் உடையது. கருமையான பூங்கொத்தைக் கொண்டது. நீலமணி போன்ற பூக்களையும் உடையது (குறுந்.138:3) "இப்பூவை குயவன் மாலையாகச் சூடுவான். இதன் அரும்பு நண்டின்கண் போன்றிருக்கும் தழையானது தழையாடைக்கு உதவும். மதிலைக் காப்போரின் அடையாளப்பூ இதுவாகும்"[311] காதாசப்தசதியில் இம்மலர் குறித்த குறிப்பில்லை.

**நெருஞ்சிமலர்**

புன்செய் நிலத்தில் பாழ்பட்ட ஊரில் அச்சம் தரும் இடத்தில் அடர்ந்து படரும் கொடி நெருஞ்சியாகும். நெருஞ்சிக்கொடியானது அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[312] காணப்படுகின்றது இதன் சிறிய இலையும் சிறிய மஞ்சள் பூவும் சூரியனை நோக்கியே இருக்கும். கண்ணிற்கு இனிய பூவினையும் காலுக்குத் துன்பம் தரும் முள்ளினைக் கொண்டிருக்கும் என்பதை,

**"புன்புலத்து அமன்ற சிறியிலை நெருஞ்சிக்**

**கட்குஇன் புதுமலர் முட்பயந்தா அங்கு" (குறுந்.202:2-3)**

எனக் குறுந்தொகை சுட்டும். காதாசப்தசதியில் இம்மலர் குறித்து இடம்பெறவில்லை.

**காயா**

பூவை என்று அழைக்கப்படும் காயா அகஇலக்கியத்தில் பதின்மூன்று[313] இடங்களில் இடம்பெற்றுள்ளது. செறிந்த இலையை கொண்ட காயாஞ்செடியானது கருநீலமலர்ப் பூக்கொத்துகளையும் அழகற்ற கொம்புகளையும் உடையது. (குறுந்.183:5-6) இப்பூவைத் தலைமாலையாகக் கட்டிச் சூடுவர். (கலித்.8:10) காதாசப்தசதியில் இம்மலர் குறித்து இடம்பெறவில்லை.

**பூளை**

"பாழ் இடத்தில் இச்செடி காணப்படும். பெரும்பூளை, சிறுபூளை என இருவகையுண்டு. சிறுபூளை உழிஞை என்றும் அழைக்கப்பெறும். முற்றுகை இடுவோர் உழிஞை சூடுவர். பெரும் பூளைப்பூ, வரகு அரிசிச் சோறுபோலக் கொத்தாகப் பூக்கும், பூனையின் சிலர்த்த மயிர்போலும் இப்பூ இருக்கும். மிக மெல்லிய பூ. மடல் மா ஏறுவோர் இப்பூமாலை சூடுவர்"[314] அகஇலக்கியத்தில் இப்பூவானது ஐந்திடங்களில்[315] காணப்படுகின்றது. காதாசப்தசதியில் இம்மலர் குறித்துக் கூறப்பெறவில்லை.

**இலவம்பூ**

இலவம் என்று அழைக்கப்பெறும் இப்பூகுறித்து ஐந்திடங்களில்[316] குறிப்புளது. இப்பூவானது இளவேனிலில் கொத்துகளாய் செக்கச் செவேலென மகளிர் ஒன்றுகூடி ஆரவாரத்தோடு கார்த்திகை விளக்கு ஏற்றியது போன்று பூக்கும் (அகநா.11:1-5) என அகநானூறு சுட்டுகின்றது.

**ஈங்கைமலர்**

முல்லை நிலத்தில் காணக்கூடிய இண்டங்கொடி ஈங்கை என்றும் அழைக்கப்படும் இது புதராக வளரக்கூடியது. கூதிர்காலத்தில் பூக்கும் தன்மையது. நீண்ட கொடியினையும் கரும்பச்சை நிறத் தளிரையும் கொண்டது. மேலும் இராமரக் கொட்டை போன்ற பேரரும்பையும் வெண்ணிற ஆலங்கட்டி மழைத்துளியைப் போல பூக்களையும் உதிர்க்கும். (அகநா.125:1-4) அதுமட்டுமின்றி வளைந்த முள்கொம்பையும் உடையது. பனிக்காலத்தில் உதிரும். (குறுந்.380:5-7) இம்மலர் குறித்து ஏழிடங்களில்[317] குறிப்புளது. காதாசப்தசதியில் இம்மலர் குறித்த குறிப்பில்லை.

**கொன்றை**

குறிஞ்சி, முல்லை நிலங்களில் காணப்படும் கொன்றை மலரானது அகஇலக்கியத்தில் முப்பத்தாறு[318] இடங்களில் பயின்றுவந்துள்ளது. இம்மரத்தின்

இலைகளிடையே பூங்கொத்துகள் கொத்துக் கொத்தாகத் தொங்கும். அவற்றில் வண்டுகள் மொய்க்கும் அம்மலர்க் கொத்துகள் மகளிர்தம் கூந்தலில் அணியும் பொன்னணிகள் போல் காட்சியிளிக்கும். (குறுந்.21:1-3) மேலும் கார்க்காலத்தில் பூக்கும் இப்பூ சிவனுக்குரிய பூவாகவும் தலைமாலையாகவும் கொள்ளப்படும் (கலித்.3:1-5) காதாசப்தசதியில் இம்மலர் குறித்துச் சுட்டப்பெறவில்லை.

**அவரைப்பூ**

முன்பனிக்காலம் இக்கொடி பூக்கும் காலமாகும். வளமான இலையும் அரும்பும் கொண்டது. பவழ நிறத்திலும் நீலநிறத்திலும் வெள்ளைநிறத்திலும் பூக்கும். (அகநா.243:1-4) கிளி மூக்குப் போன்ற நுனியைக் கொண்டது. இதன் பிஞ்சு அமுங்கி இருக்கும். காய் அரிவாள் போன்று வளைந்திருந்கும் (குறுந்.240:1-4) என அகஇலக்கியத்தில் இப்பூ ஏழிடங்களில்[319] பாடப்பெற்றுளது. காதாசப்தசதியில் இம்மலர் குறித்த செய்தி இடம்பெறவில்லை.

**கோங்கு**

எல்லாப் பருவங்களிலும் பூக்கும் புல்லிய புற இதழ்களைக் கொண்ட கோங்கமரத்தின் பூ குடை போன்று இருக்கும். அகஇலக்கியத்தில் இப்பூ குறித்து எட்டிடங்களில்[320] காணப்படுகின்றது. பொன் நிறத்தில் பூக்கும் இப்பூவின் மொட்டு பெண்ணின் மார்பகம் போன்றும் (ஐங்.254:1-2) பூவானது காாத்திகை விளக்கு ஏற்றி வைத்தாற் போன்றும் விண்மீன்களாயும் விளங்கும் (நற்.8:3-5) மலை வழிகளெல்லாம் இப்பூக்கள் அழகோடு மணம்வீசும். காதாசப்தசதியில் இம்மலர் குறித்து இடம்பெறவில்லை.

**புன்னை**

கடற்கரைப் பரப்பில் காணப்படுவது புன்னைமரமாகும். இது கரிய நீண்ட வளைந்த கிளைகளைக் கொண்டது. (அகநா.10:1-3) வீட்டின் முன்புறமும் இம்மரத்தை வளர்ப்பர் (குறுந்.311:5-7) இம்மரம் மின்னும் பச்சை இலைகளையும் முத்துப் போன்று கொத்துக் கொத்தாக அரும்பும் வெள்ளி போன்ற பூக்களையும் பொன் போன்ற மஞ்சள் பூந்துகள்களையும் உடையது. அதன் மேல் வண்டுகளின் ஒலி ஊர்க் குருவியின் முட்டைகள் உடைந்தது போல் பூக்கும் (நற்.249:1-6) அகஇலக்கியத்தில் இருபத்தாறு[321] இடங்களில் காணப்படுகின்றது. காதாசப்தசதியில் இம்மலர் குறித்து மூவிடங்களில்[322] பயின்றுவந்துள்ளது. இதனை

**‘‘பாராய் வீட்டுக்கூரையி லிருந்துதன்**
**நூலிழை தன்னிற் கீழிறங் கிடுமிச்**
**சிலந்தி! நூலிற் கட்டி விட்ட**

**புன்னைப் பூவெனப் பொலியு மன்றே" (காதா.56:1-4)**

என்ற பாடல் சுட்டும்.

**நறவம்பூ**

மணம் உள்ள நறவமாகும். அகஇலக்கியத்தில் ஐந்திடங்களில்[323] செவ்வரி பொருந்திய பெண்ணின்கண்ணுக்கும் பெண்ணின் விரலுக்கும் குழந்தையின் விரலுக்கும் இப்பூ இதழ்கள் உவமையாகக் கூறப்பட்டுளது. (அகநா.19:19-16) மேலும் எருதின் கழுத்துமணி குருதிபடிந்து நறவம்பூப் போல் தோன்றுவதும் காம மகிழ்ச்சிக்கு இப்பூ உதவுவதாகவும் கலித்தொகை சுட்டுகின்றது. (கலித்.5:39-42) காதாசப்தசதியில் இம்மலர் குறித்த செய்தி இடம்பெறவில்லை.

**குருக்கத்தி மலர்**

இம்மலர் ஓரிடத்தில் (நற்.97:6) மட்டும் காணப்படுகிறது. குருகு என்றும் மாதவிக் கொடி என்றும் அழைக்கப்பெறும். இக்கொடி பச்சை நிறத்திலும் பூக்கள் பஞ்சு போன்ற வெண்மைநிறத்தில் வரிகொண்ட புற இதழ்களுடன் காட்சியளிக்கும். இது ஒரு சூடும் பூவாகும். காதாசப்தசதியில் இம்மலர் குறித்துச் சுட்டப்பெறவில்லை.

**பித்திகம் (சண்பகமலர்)**

"பிச்சி என்றழைக்கப்படும் சிறுசண்பகம் கார்காலத்தில் பூக்கும் மாலையில் மலரும் தன்மையது. அரும்பின் புறத்தில் செவ்வரிகளும் மிகச்சிவப்பாகப் பூக்கும். இதழ் ஈரமாக இருக்கும். பெண்களின் கடைக்கண்ணுக்கு இச் செம்பூவை உவமையாக்குவர். அரும்பு வலமாகச் சுருந்திருக்கும்"[324] அகஇலக்கியத்தில் இப்பூ மூவிடங்களில்[325] பயின்றுவந்துள்ளது. காதாசப்தசதியில் இம்மலர் குறித்துச் சுட்டப்பெறவில்லை.

**குருந்தம்பூ**

அகஇலக்கியத்தில் இச்சொல் ஏழிடங்களில்[326] காணப்படுகின்றது. மலைப் பகுதியில் மலரும் இதனை இடையர்கள் தலைமாலையாக அணிவர் (ஐங்.439:2) காதாசப்தசதியில் இம்மலர் குறித்துக் காணப்படவில்லை.

**பீர்க்கம்பூ**

"பீரம், பீர்க்கன் என்று அழைக்கப்பெறும். இதன் பசுமையான நுண்கொடி புதர்மேல் படரும் மஞ்சள் பூங்கொத்துகளையும் பூந்துகளையும் கொண்டிருக்கும். பெண்கள் பெறும் பசலை நிறத்திற்கு இப்பூ உவமையாகும்"[327] அகஇலக்கியத்தில் இப்பூவானது ஆறிடங்களில்[328] காணப்படுகின்றது. காதாசப்தசதியில் இம்மலர் குறித்து இடம் பெறவில்லை.

**கருவிளைமலர்**

அகஇலக்கியத்தில் கருவிளைமலர் குறித்து ஆறிடங்களில்[329] குறிப்புளது. தலைவரைப் பிரிந்த தலைவியரின் நீர் ஒழுகும் கண்களைப்போல கருவிளம் பூக்கள் மலரும். அது துய்யைத் தன் தலையில் கொண்ட பூக்களை உடைய இண்டை புதர்மேல் படர்ந்திருக்கும். அதன் தளிர் நெய்யில் தோய்த்தாற் போன்று நீரில் நனைந்து இரண்டாகப் பிரிந்து நுரையீரல் போன்ற தோற்றத்துடன் ஈரத்தோடு அசையும் (அகநா.294:3-9) என்று அகநானூறு சுட்டுகின்றது. காதாசப்தசதியில் இம்மலர் குறித்த குறிப்பில்லை.

**இல்லம்**

விளக்குப் போல் ஒளிரும் சிவப்பு நிறப் பூக்களை உடையது இல்லமாகும். இதனை தோன்றா மலர் என்றும் அழைப்பர்.

**பகன்றைப்பூ**

பகன்றைப் பூவானது அகஇலக்கியத்தில் எழிடங்களில்[330] காணப்படுகின்றது. இதனை சிவதைக் கொடி என்றும் அழைப்பர். இது நுங்கின் நுனியைப் போன்ற அரும்புகளை உடையது. தை மாதத் தூற்றலுக்குத் தான் மலரும் (அகநா.24:2-5) குளிர்ச்சியான நீர்த்துறையில் இக்கொடி இருக்கும். இதன் அரும்பு முறுக்கிப் பிழிந்த துணித்திரிபோல் காணப்படும். இதன் பூ தேன் மணம் கொண்டது. ஆகையால் தலைமாலையாகவும் மாலையாகவும் தொடுக்கப்பெறும். இது பகலில் தோன்றும் நிலாப்போலும் (ஐங்.456:1-2) வேல்போலும் வெள்ளி வட்டில்போலும் (நற்.86:2-3) சலவைத்துணி போலும் பூக்கும் (குறுந்.330:1-5) காதாசப்தசதியில் இம்மலர் குறித்து கூறப்பெறவில்லை.

**யாமரப்பூ**

கரிய அடிமரத்தைக் கொண்டது. அதன் தளிர் வீட்டில் வளரும் சேவலின் தாடி தொங்குவது போலக் கிளைத்து ஒளியுள்ளதாக இருக்கும் என்பதனை அகநானூறு (187:14-15) குறிப்பிடும்.

**வெட்சிப்பூ**

வெட்சிப்பூ குறித்து அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[331] காணப்படுகின்றது. இம்மரம் வளைந்த கொம்பைக் கொண்டது. இதன் அரும்பு கௌதாரியின் நகம் போன்று கூர்மையானது. சிவந்த காம்பில் சிவந்த பூ பெரியதாகவும் மணம் கொண்டதாகவும் இருக்கும். (அகநா.133:14-15) காதாசப்தசதியில் இம்மலர் குறித்துக் கூறப்பெறவில்லை.

**காஞ்சிப்பூ**

மருத நிலமரமான காஞ்சியில் பூக்குறித்து அகஇலக்கியத்தில் ஐந்திடங்களில்[332] இடம்பெற்றுள்ளது. மரம் குட்டையானது. மாலை போன்று பூங்கொத்துகளில் இருந்து நுண்மையான மணம் உள்ள பூந்துகள்களைச் சிந்தும் பூங்கொத்துகள் பயிறங்காய்க் கொத்துகள் போன்றிருக்கும். (குறுந்.10:2-4) மென்மையான கிளையில் தோன்றிய தளிர் தழையாமைக்கு உதவும் (கலித்.9:5) ‘‘காஞ்சித் தளிரையும் ஆத்திப் பூவையும் கொண்டு தலைமாலை ஆக்கினர்’’[333] காதாசப்தசதியில் இம்மலர் குறித்துச் சுட்டப்பெறவில்லை.

**ஞாழல்**

புலிநகக் கொன்றை என்றழைக்கப்படும் கடற்கரைச் சோலையில் இருக்கும் ஞாழல் குறித்து முப்பத்திமூன்று[334] இடங்களில் பயின்றுவந்துள்ளது. இது பெரிய கரிய கிளைகளைக் கொண்டிருக்கும். இதன் தளிர் தழையாமைக்குப் பயன்பட்டது (அகநா.70:8-12) ‘‘மலர் பொன்நிறம் கொண்ட வெண்சிறு கடுகு போன்று சிறியதாக இருக்கும். குவிந்த கொத்தாகப் பூக்கும். பூக்கள் மணமும் தேனும் கொண்டன. இம்மரம் தழைத்த நிழலைக் கொண்டது. பெண்களின் பசலை நிறத்திற்கு இம்மலரின் நிறம் உவமையாகும்.[335] காதாசப்தசதியில் இம்மலர் குறித்து இடம்பெறவில்லை.

**வாகைப்பூ**

போரில் வெற்றி பெற்றோர் அணிவது வாகைப் பூவாகும். இப்பூ புகழுக்குரியது. இம்மரம் புல்லிய புறம் கொண்ட கிளைத்த இலையை உடையது. இதன் பூ நீண்ட காம்பையும் துய்யையும் உடையது (அகநா.136:10-11) அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[336] காணப்படுகின்றது. காதாசப்தசதியில் ஓரிடத்தில் (காதா.82:1-4) மட்டும் அதன் மணம் சுட்டப்பெற்றுள்ளது

**வாழைப்பூ**

வாழைப்பூ குறித்து அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[337] பயின்று வந்துள்ளது. இதன் கூர்மையான குவிந்த மொட்டு மலராது. காய்க்கும் மொட்டுக்கும் உடையே உள்ள தார் ஆண்மானின் கொம்பு போன்றிருக்கும் (அகநா.134:10-11) கீழே சிந்திய வாழைப்பூக்கள் உடைந்த வளையல்கள் போன்றிருக்கும் (நற்.188:1-5) காதாசப்தசதியில் இப்பூ இடம்பெறவில்லை.

**கொடிப்பூ**

வரிசையாக அமைந்த பூ கொடிப்பூவாகும். (அகநா.14:1) காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

**வேழவெண்பூ**

அகஇலக்கியத்தில் வேழவெண்பூ குறித்து நான்கிடங்களில்[338] சுட்டப்பெற்றுள்ளது. இதனைப் பேய்க்கரும்பு என்பர். புதராக இருக்கும் வெண்மையான பூக்களைப் பூக்கும்.

**"புதல் மிசை நுடங்கும் வேழ வெண் பூ**
**விசும்பு ஆடு குருகின் தோன்றும்" (ஐங்.17:1-2)**

எனக் கொக்கிற்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளது. காதாசப்தசதியில் இம்மலர் குறித்து இடம்பெறவில்லை.

**நாகம்**

இது "சுரபுன்னை என்று அழைக்கப்பெறும். நீண்ட மலரை உடையது. தேன் இருப்பதால் வண்டுகளால் மொய்க்கப் பெறுவது. மாலையாகத் தொடுக்கப்பெறுவது"[339] என்பர். காதாசப்தசதியில் இம்மலர் குறித்துக் காணப்படவில்லை.

**அரக்கு**

சாதிலிங்கப்பூவினை அரக்கு என்பர் (கலித்.72:16) காதாசப்தசதியில் இம்மலர் இடம்பெறவில்லை.

**அனிச்சம்**

மென்மையான பூவைக் கொண்டது அனிச்சமாகும். (கலித்.91:1) காதாசப்தசதியில் இம்மலர் இடம்பெறவில்லை.

**தாழைப்பூ**

கடற்கரையைக் கொண்ட நெய்தல் நிலத்தில் காணப்படுவது. இளவேனில் காலத்தில் பூக்கும். இதனை,

**"தடந் தாட் தாழை முள்ளுடை நெடுந் தோட்டு**
**அக மடல் பொதுளிய முகை முதிர் வான் பூங்**
**கோடு வார்ந்தன்ன வெண் பூந் தாழை**
**எறி திரை உதைத்தலின், பொங்கித் தாது சோர்பு**
**சிறுகுடிப் பாக்கத்து மறுகு புலா மறுக்கும்" (நற்.203:2-6)**

விளக்கும். அதாவது வளைந்த அடிமரத்தைக் கொண்ட தாழை முள் உள்ள நீண்ட மடலைக் கொண்டது. அதன் அக மடலில் தாழை மொட்டு விளங்கும். அம்மொட்டு முதிர்ந்து வெண்மையான சங்கு நீண்டதுபோல வெண்மையான தாழம்பூ மலரும். அம்மரத்தின் மேல் கடல் அலைமோதும் அதனால் அப்பூவில் உள்ள பூந்துகள் பொங்கி உதிரும். அப்பூந்துகளின் மணம் சிறுகுடிப்

பாக்கத்தில் உள்ள தெருவில் இருக்கும் புலால் நாற்றத்தை ஓட்டும் என்று சுட்டப்பெற்றுள்ளது.

மேலும் தாழைப்பூ மடல்களில் விரிவது அன்னம் கோதுவது போல் தோன்றும் (குறுந்.228:1-2) எனக் குறுந்தொகை எடுத்துரைக்கின்றது. இம்மலர் குறித்து ஐந்திடங்களில்[340] காணப்படுகின்றது. இம்மலர் காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

**அடுப்புமலர்**

அகஇலக்கியத்தில் அடுப்புமலர் குறித்து ஈரிடங்களில்[341] இடம்பெற்றுள்ளது. இது நெய்தல் நிலமாகிய கடற்கரை மணலில் காணப்படுவது. கிளைத்த இலைகளைக் கொண்டது. இதன்பூ நீலநிறம் கொண்டது. சூடும் பூ"[342] காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

**உழிஞைப்பூ**

இது கலித்தொகையில் ஓரிடத்தில் மட்டும் காணப்படுகின்றது. "கொற்றான் என்று அழைக்கப்பெறும் இந்நுண்ணிய கொடி மஞ்சள் நிறத்தளிரை உடையது. முற்றுகை இடுவோர் சூடுவது உழிஞைப் பூமாலையாகும்."[343] காதாசப்தசதியில் இம்மலர் குறித்து இடம்பெறவில்லை.

**பாலை**

வெப்பாலை என்ற மரம் வெண்மையான பூங்கொத்துகளை உடையது. இதனை,

**"வால் இணர்ப் பாலை" (நற்.107:3)**

என்ற அடி சுட்டும் - இது குறித்து காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

**களாவின்பூ**

கூர்மையான நுனியை உடைய இலையைக் கொண்ட களாச்செடி கார்காலத்தில் ஓரே சமயத்தில் பூத்து மணம்பரப்பும். (நற்.256:6) இம்மலர் குறித்து காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

**முருங்கைப்பூ**

முருங்கையானது உறுதியற்ற அடிமரத்தை உடையது. கோடைக்காலத்தில் கிளைகளில் வெண்மையான பூக்கள் ஆலங்கட்டி மழைத்துளிபோல மலர்கள் உதிரும் (அகநா.1:15-19) இது அகநானூற்றில் மூவிடங்களில்[344] இடம்பெற்றுள்ளது. காதாசப்தசதியில் இப்பூ இடம்பெறவில்லை.

**முருக்கு**

வறண்ட நில மரம் முருக்கு ஆகும். அகஇலக்கியத்தில் ஈரிடங்களில்[345] காணப்படுகின்றது. இது உயர்ந்த கிளையைக் கொண்டது. இளவேனிலில்

புலியின் நகம் போன்ற கூரிய செந்நிற அரும்புகள் இருக்கும். கொத்துக் கொத்தாகச் செக்கச் செவேல் எனப்பூக்கும் (அகநா.99:1-10) இவ்வாறு முருக்க மரத்தின் முதிர்ந்த இதழ்கள் நீருள் விழுகின்ற காட்சி தெளிவான கண்ணாடி ஏனத்தில் பவளத்தை இட்டது போன்றிருந்தது. கரையோரக் கிளைகளில் உள்ள மலர்களில் நிழல் நீரில் தோன்றிற்று அதனை உண்மையான பூக்கள் என்று மயங்கிய வண்டுக் கூட்டம் நீரில்மேல் வட்டமிட்டு ஆரவாரித்தது. (கலித்.32:2-5) கதாசப்தசதியில் இப்பூ இடம் பெறவில்லை.

**கவிர்ப்பூ (முருக்கம்பூ)**

முள்முருக்கு மரத்தின் பூவினைக் கவிர்ப்பூ என்பர். அகஇலக்கியத்தில் மூவிடங்களில்[346] இடம்பெற்றுள்ளது. இதன் பூ சிவப்பாக இருப்பதால் கவிர்ப்பூ என்ற அழைக்கப்பட்டது. பூ இதழ் நாரையின் உள் இறகுபோல மென்மையானது. (குறுந்.103:2-3) காதாசப்தசதியில் இப்பூ இடம்பெறவில்லை.

**சாந்தம்**

வடகிழக்குப் பருவ மழையால் மேற்குத் தொடர்ச்சி மலையில் உள்ள சந்தனமரம் தழைத்து, தன்சிறு கொம்பில் பூங்கொத்துகளைக் கொண்டது என்பதனை,

**"கொண்டல் மா மழை குடக்கு ஏர்பு குழைந்த**
**சிறு கோல் இணர பெருந் தண் சாந்தம் (நற்.140:1-2)**

சுட்டும். காதாசப்தசதியில் இம்மலர் காணப்படவில்லை.

**அந்தி**

அந்தி என்பது செவ்வந்தியைக் குறிக்கும். இது ஓரிடத்தில் காணப்படுகின்றது. உலையில் வெந்து ஆறிய பொன்னைப்போல் செவ்வந்திப்பூ காட்சியளிப்பதனை,

**"வெந்து ஆறு பொன்னின் அந்தி பூப்ப" (அகநா.71:6)**

என்ற அடி விளக்கும். காதாசப்தசதியில் இம்மலர் இடம்பெற்றுள்ளது.

**ஆர்**

ஆத்தி மலர் ஆர் என்றழைக்கப்படும். சோழன் ஆத்தி மாலையை அணிந்திருப்பர். இதனை,

**"ஆரங் கண்ணி அடுபோர்ச் சோழர்" (அகநா.93:4)**

என அகநானூறு சுட்டும். காதாசப்சதியில் இம்மலர் இடம்பெறவில்லை.

**நீர்நிலைகள்**

**சுனைநீர்**

மலைகளில் காணப்படும் சுனைளில் உள்ள நீர் சுனைநீர் எனப்படும். இதனை குறுச்சுனை, நெடுஞ்சுனை, பைஞ்சுனை எனப்பல பெயர்களால் அழைப்பர். அகஇலக்கியத்தில் சுனைநீர் பற்றி நாற்பது[347] இடங்களில் குறிப்பிடப்படுகின்றது. இதனை,

**"வான் உற நிவந்த பெரு மலைக் கவாஅன்**
**ஆர் கலி வானம் தலைஇ, நடு நாள்**
**சுனை பெயல் பொழிந்தென, கானக் கல் யாற்று**
**முளி இலை கழித்தன முகிழ் இணரொடு வரும்**
**விருந்தின் தீம் நீர் மருந்தும் ஆகும்." (நற்.53:1-5)**

என்னும் அடிகள் சுட்டும். அதாவது மலைப்பக்கத்தில் பெருமழை பெய்ததால் சுனைகள் நிரம்பி நீரானது காட்டாற்றில் வழியே பெருகி ஓடும். அதில் மரங்களிலிருந்து உதிர்ந்த சருகுகளும் பூக்களும் தலைவியின் நோயைத் தீர்க்கும் மருந்தாகும் எனக் கூறப்பட்டுள்ளது.

**கயம் (குளம்)**

ஆழமான நீர்நிலை கயம் (குளம்) என்றழைக்கப்படும் (குறுந்.170:3) இலஞ்சிவியன் அயம் எனப் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றது. அகஇலக்கியத்தில் முப்பத்தொரு[348] இடங்களில் சுட்டப்படுகின்றது.

**"சிறு கண்யானைப் பெருங் கை ஈர் இனம்**
**குளவித் தண் கயம் குழையத் தீண்டி" (நற்.232:1-2)**

எனச் சிறிய கண்ணையும் பெரிய கையையுமுடைய யானையின் ஆண், பெண்ணாகிய இரு இனமும் மலைப்பச்சை சூழந்த குளிர்ந்த குளத்தில் மெய் தளருமாறு புணர்ந்து மகிழும் என்ற செய்தியைச் சுட்டுகின்றது. காதாசப்தசதியில் மூவிடங்களில்[349] குளத்துநீர் காணப்படுகின்றது.

**"சேறும் காய்ந்து கீறற் பட்டு**
**ஆமையும் மீனும் அழிய யிதுவரைக்**
**காணரும் குளத்தரை கண்டனம் அந்தோ!**
**காலம் செய்யும் கோல மென்னே (காதா.334:1-4)**

எனத் தலைவி குளத்துநீர் வற்றிய இடத்தைக் குறியிடாமாகச் சுட்டியமை புலனாகிறது.

**அருவி**

அருவியானது குறிஞ்சித்திணைப்பாடல்களில் அதிகமாகக் காணப்படுகின்றது. மற்ற திணைகளில் ஓரிரு பாடல்களில் மட்டுமே காணப்படுகின்றது. அகஇலக்கியத்தில் இவ்வருவி குறித்து தொண்ணூற்றொன்று[350] இடங்களில் பயின்றுவந்துள்ளது. பெரியமலையின் உச்சியில் உள்ளதாகிய நெடிய வெள்ளிய அருவி, அறிவு வாய்த்த தலையுடைய கூத்தர்களின் முழவு ஒலிப்பதைப் போல ஒலித்துப் பக்கமலைகளில் கீழ் இறங்கி விழும் (குறுந்.78:1) காந்தளை இயற்கை வேலியாக உடைய சிறுகுடியில் வாழ்பவர் அருவியை உடைய பரந்த நிலத்தில் மலை நெல்லை விதைப்பர் (குறுந்.100:1) கோடையில் நீர்நிலையை நாடிச்சென்ற யானைக்கு அருவியால் தரப்பட்ட இனிய கொறுக்கச்சித் தட்டை உணவாகக் கிடைத்தது (குறுந்.170:2-3) அதன் ஒலி முரசினுடைய தாழ்ந்து இசைக்கும் இனிய ஓசைக்கு உவமையாகக் கூறப்பட்டு உள்ளது (குறுந் 363:3) குறிஞ்சிவாழ் மக்கள் மலைப்பக்கத்தில் மலை நெல்லை விதைத்து மலையருவியின் நீரால் விளைவிப்பர். (குறுந்.371:2-3) அத்தயை இசைக்கு ஏற்ப சூரரமகளிர் ஆடுவர் (நற்34:5) மேலும் மலையினின்றும் ஓடிவரும் அருவியின் ஒலியுடன் வண்டின் ஒலி சேர்ந்து, முழவின் ஒலியுடன் யாழ்ஒலி சேர்ந்து ஒலிப்பதுபோல் இம்மென்று ஒலிக்கும் என அகநானூறு சுட்டுகின்றது. (அகநா.318:5-7)

**ஆற்றுநீர்**

ஆற்று நீரானது ஆறு, கான்யாறு, உந்தி, தேறுநீர், நெடுநீர் அனல்நீர் எனப்பல பெயர்களால் அழைக்கப்படுகின்றது. அகஇலக்கியத்தில் ஆற்றுநீர் முப்பத்திரணடு[351] இடங்களில் காணப்படுகின்றது. அதுபோல் காதாசப்தசதியில் ஆற்றுநீர் கான்யாறு போன்ற நீர்நிலைகள் இடம்பெற்றுள்ளன[352].

**கான்யாறு**

காட்டகத்தே ஓடிவரும் ஆறு கான்யாறு என்றும் காட்டாறு என்றும் அழைக்கப்படும். பிளந்த வாயையுடைய பெண்புலி இரைதேடி இயங்கும் துயரம் தரும் கவர்த்த வழி அவ்வழியில் விரைந்த போக்கினையுடைய நீரினையுடையதும் கரை காண்பதற்கு அறிதானதுமாகக் காட்டாறு (நற்.144:6-7) விளங்கும். அவ்வாறு கரிய கற்பாறைகளில் ஓடிவரும் காட்டு ஆற்றில் கடத்தற்கரிய நீர்ச்சுழிகள் உள்ள இடங்களில் முதலைகள் இயங்கும். (நற்.292 6-8) காதாசப்தசதியில்

**“சுடுவெயிற் காற்றா தலைந்து மலையின்**
**கான்யா றென்றே கருதிப் பாந்தனை**

**எருமை நக்கிட அதன்வா யூறலை**

**கருங்க லூற்றெனக் கருதிப் பருகும்" (காதா.419:1-4)**

என பாலையின் சிறப்பும் கான்யாற்றின் சிறப்பும் உவமித்துக் கூறப்பட்டுள்ளது.

**கிணறு - கூவல்**

ஆயர்கள் பருத்த மடியினையும் ஒலிக்கின்ற மணியினையும் உடைய பசுக்கூட்டம் நீர் உண்ணும் பொருட்டு விளைவின்றி விடப்பட்ட தரிசு நிலத்தின்கண் கற்களை உடைத்து நீர்பிலிற்றும் ஊற்றுக் கண்ணினையுடைய கிணற்றினைத் தோண்டுவர் (அகநா. 321:7-8)

**"வெயில் வெய்துற்ற பரல் அவல் ஒதுக்கில்,**

**கணிச்சியில் குழித்த கூவல் நண்ணி" (நற்.240:6-7)**

எனப் பரல்கற்கள் மிகுந்த பள்ளத்தின் ஒரு புறத்தில் குந்தாலியால் கிணறு தோண்டப்பட்டமை எடுத்துரைக்கப்படுகின்றது. இக்கிணற்றுநீர் குறித்து எட்டிடங்களில்[353] விளக்கப்பட்டுள்ளது.

**பொய்கை**

அகன்று விளங்கும் நீர்த்துறை பொய்கை எனப்படும். இது ஒருவர் ஆக்காத நீர்நிலை (குறுந்.370:1) என்பர். பொய்கை நீரானது அனைவருக்கும் பயன்படக்கூடியது (குறுந்.354:4) இப்பொய்கை சருச்சரை பொருந்திய உடலினையும் பெரிய வாயினையும் உடைய ஆண்சங்கு, கதிர் நுனை போலும் மூக்கையுடைய ஆரல்மீன் சாட்சியாக ஆழமான நீரையுடைய பொய்கையில் பெண்சங்கினொடு மணம் கொள்ளும் (அகநா.246:1-3) என வருணிக்கப்பட்டு உள்ளது.

மேலும் முறுக்கிய கொம்புகளையும் ஈரமிக்க குளிர்ந்த முதுகினையும் உடைய முதிய எருமைக் கடாவானது, துறையருகே மீன்கள் திரியும் நீர்நிறைந்த பொய்கையின்கண் இருந்த அழகிய ஆம்பல் மலரை மேய்ந்தது (அகநா.316:1-3) எனவும் பொய்கையிலுள்ள புலால்நாறும் ஆண் நீர்நாய் விடியற்காலத்தே வாளைமீனை இரையாகக் கொள்ளும் (அகநா.386:1-2) என்ற செய்திகளும் அகஇலக்கியத்தின் எடுத்துரைக்கபபட்டுளது.

**சிற்றாறு**

பரற்கற்கள் நிரம்பிய பள்ளத்திலே மிகக்குறைந்த அளவுடையதாய் நீர் ஊறும் ஆற்றிடம் சிற்றாறு எனப்படும் (நற்.333:3)

**சிற்றோடை**

காதாசப்தசதியில் சிற்றோடைக் குறித்து ஓரிடத்தில் (காதா.95:1) குறிப்புளது.

**நதி**

காதாசப்தசதியில் முல்லை, மருதம் ஆகிய நில ஆற்றுவருணனைகள் தான் மிகுதி, ஏனெனில் காதாசப்தசதி மலர்ந்த இடம் கோதாவரி நதிக்கரையாகும் எனவேதான் ரேவா, பூம்புதர், தாபி, முதலிய நதிகளைப் பற்றிய வருணனைகள் அதிகம் இடம்பெற்றுள்ளன[354].

**கடல்**

கடல்நீர் முந்நீர், முதுநீர், துறைநீர், கடல் கழி எனப் பல பெயர்களால் அழைக்கப்பட்டமையை அகஇலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.[355]

**தொகுப்புரை**

அகஇலக்கியத்திற்குக் கருவாய் அமைவன கருப்பொருளாகும். பிராகிருத மொழி இலக்கியமாகிய காதாசப்தசதியில் கருப்பொருள் இல்லையெனினும் ஒருசில இடங்களில் உரிப்பொருளை விளங்கும் நிலையிலும் உவமை கூறும் பாங்கிலும் காணக்கூடிய கருப்பொருள்கள் விளக்கப்பட்டுள்ளன.

தொல்காப்பியர் நிலத்தைச் சுட்டுங்கால் அவ்வந்நிலத்திற்குரிய தெய்வத்தையும் சுட்டுவர். அகஇலக்கியத்தில் குறிஞ்சி நிலக்கடவுள் முருகன், வேலன், சேஎய், நெடுவேள், முருகு, செவ்வேள், அலைவாய், ஆல்அமர்செல்வன் மகன் எனப் பலபெயர்களாலும் முல்லைநிலத் தெய்வம் மாயோன், நேமியான், தெய்வமால், கண்ணபிரான், நேமிஅம்செல்வன், நெடியோன், திருமால், வாலியோன், பால்நிறவண்ணன், ஒருகுழையவன், இராமன், கணிச்சியோன் எனப் பலபெயர்களாலும் மருத நிலத் தெய்வம் இந்திரன் வச்சிரத்தான் எனவும் நெய்தல் நிலத்தெய்வமாகிய வருணன் புகாஅர்த்தெய்வம் கடல்பெருந்தெய்வம் கடல்கெழு செல்வி என்றும் சுட்டப்பெற்றுள்ளன.

கலித்தொகையில் சிவன், சிவபெருமான், முக்கட்செல்வன், கூற்றுவன் எனப் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றார். பிரமன், கொற்றவை, தேவர்களைக் குறிக்கும் அமரர், ஞாயிற்றுப்புத்தேளாகிய கர்ணன் பற்றிய குறிப்பும் இடம்பெற்றுளது. காதாசப்தசதியில் புராணத் தெய்வங்களின் காதல் நிகழ்ச்சிகளும் இதிகாச மாந்தர் குறித்த மனவுணர்வுகளும் இடம்பெற்றுள்ளன. மானிடக் காதல் உணர்வுகளை அவர்களின் மீது ஏற்றிப்போற்றி இன்புறும் பாங்கு இவ்விலக்கியத்தில் காணப்பெறுகிறது. திணைத் தெய்வமாக எக்கடவுளும் குறிப்பிடப்படவில்லை.

கார்காலத்தில் மலரும் கடப்ப மலர்களை உண்டைவில்லில் வைத்து மன்மதன் எய்வதால் தலைவனைப் பிரிந்த தலைவிக்கு வருத்தம் ஏற்படுவதாகவும் தலைவியின் அருள்பெறாது மீளும் தலைவனின் பார்வை மன்மதனின் கொடிய கணையாகக் கொள்ளப்படுவதையும் காதாசப்தசதி சுட்டுகின்றது. மேலும் கணவனும் மனைவியும் சேர்ந்து காமனை வழிபடுவதால் அவர்களுக்கு இன்பவாழ்வு அமையும் என்றும் கூற்றுகள் மன்மதன் மக்களின் காதல் உணர்ச்சியினைத் தூண்டுபவனாகவும் மலரம்புகளை உடையவனாகவும் வழிபடுவார்க்கு இன்ப வாழ்வை நல்குபவனாகவும் காதாசப்தசதியில் சித்திரிக்கப்பட்டுள்ளன. காதாசப்தசதியில் சிவன் பற்றிய குறிப்பு கடவுள் வாழ்த்தாக அமைந்துள்ளது. சிவன், உமை ஆகியோரைக் காதல் மாந்தர்களாகப் படைப்பதொடு நின்றுவிடாமல் சிவனைக் காலையிலும் மாலையிலும் வணங்க

வேண்டும் என்ற கருத்தையும் காதாசப்தசதி முன்வைக்கிறது. மேலும் தலைவியின் நலம் புனைந்துரைப்பதன் மூலம் நான்முகன் பற்றிய குறிப்பும் காதலியின் முத்தச் சிறப்பைப் பாராட்டும் வகையில் தேவர்கள் பற்றிய குறிப்பும் மாந்தர்களின் அக உணர்ச்சிகளைப் புலப்படுத்தும் பாங்கில் கதிரவன் பற்றிய செய்தியும் காதாசப்தசதியில் இடம்பெற்றுள்ளது.

சங்க கால மக்கள் தங்கள் நிலத்திற்கேற்ற உணவுப் பொருட்களை உண்டு வாழ்ந்தனர். அந்த வகையில் குறிஞ்சி நிலமக்கள் தினை, செந்தினை, சிறுதினை, பைந்தினை, ஏனல், வரகு, தேன், என உணவுப்பொருள்களைப் பற்றிய குறிப்பு காணப்படினும் தினை உணவுப் பொருளாய் பயன்பட்டதாக ஒருபாடலும் சுட்டவில்லை. மாறாகத் தினைப்புனம் காத்தலும் அங்கு நிகழும் களவு நிகழ்ச்சிகளுமே சுட்டிக் கூறப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

முல்லைநில மக்களின் உணவுப்பொருட்களில் பால், தயிர் முதலிடம் பெற்றது. மருத நில மக்களிடம் உழுதுவிளைவித்த பொருட்களும் நெய்தல்நில மக்களிடம் மீன்வகைகளும் பயறுவகைகள், கிழங்குவகைகள் நெய், வெண்ணெய், பாசவல் தேறல், நறவுகள், பிழி, அரியல் தேக்கட்தேறல், தோப்பி, பனந்தீம்பிழி போன்ற உணவுப் பொருட்களும் முதலிடம் பெற்றன.

மேலும் பாலைநிலத்தில் வாழும் மக்களோ விளைநிலப் பகுதிகளில் வாழாததால் ஆறலைத்தல் வரும் பொருள்களையும் அயலூர்களில் சென்று கவர்ந்துவந்த பொருள்களையும் உண்பர். அவற்றோடு தாம்வாழும் வறண்ட நிலத்தில் விளைந்த உணவுப்பொருள்களையும் உண்பர். காதாசப்தசதியில் உணவுப்பொருள்கள் பற்றிய குறிப்பில்லை.

அக இலக்கியத்தில் யானை, புலி, சிங்கம், மான், பன்றி, குரங்கு, வருடை, முளவு, மரையா, செந்நாய், எண்கு, வெளில், வெருகு, ஆளி, முயல், ஒட்டகம், உடும்பு, கீரி, ஓதி, குதிரை, பசு, எருமை, ஆடு, கழுதை எனப் பலவகையான விலங்குகள் பற்றியும் அவற்றின் செயல்பாடுகள் பற்றியும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. காதாசப்தசதியில் யானை, பிடி, மான் போன்றவற்றின் அன்புறுகாட்சிகள் சித்திரிக்கப்பட்டுள்ளன. குரங்கு, கரடி, பன்றி, அரிமா, நாய், பசு, எருவை, எருது, காளை பற்றிய குறிப்புகளும் காதாசப்தசதியில் இடம்பெற்றுள்ளன.

அகஇலக்கியத்தில் ஐம்பத்திமூன்று வகை மரங்களும் சேம்பு, கள்ளி, கூதளம், உழுந்து, ஈங்கை, முள்ளி, முள்முள்ளி, குல்லை எனப் பல வகைச் செடிவகைகளும் நரைக் கொடி, கறிக்கொடி, நெருஞ்சிக்கொடி, தாமலம்கொடி, பீர்க்கங்கொடி, மாணைக்கொடி, வள்ளிக்கொடி, சூரல்கொடி, வாடாவள்ளி,

அதிரல், வயலைக்கொடி, வள்ளைக்கொடி, கரந்தைக்கொடி, முல்லைக்கொடி, அடுப்பங்கொடி, அவரைக்கொடி, ஆம்பல்கொடி, பகன்றைக்கொடி, பாகல்கொடி, காக்கணங்கொடி, முசுண்டைக்கொடி என்னும் கொடிவகைகளும் பைஞ்சாய்புல், பதவுபுல், தாளிப்புல் எனச்சில புல்வகைகளும் இடம்பெற்றுள்ளன. காதாசப்தசதியில் குராமரம், அசோகமரம், வேம்பு, ஆலமரம், புன்னைமரம், கோங்கமரம், மாமரம் என்ற சில மர வகைகளும் மாலதிக்கொடி, முல்லைக்கொடி, வெள்ளரிக்கொடி போன்ற கொடிவகைகளும் பருத்திச்செடியும் பற்றிய குறிப்புளது.

பறவை குறித்து அகஇலக்கியத்தில் குருகு, நாரை, கொக்கு, வாத்து, அன்னம், அன்றில், மகன்றில், கூழைக்கடா, கணத்துள், கம்புள்கோழி, நீர்க்கோழி, நீலச்சேவலல், கானக்கோழி, கானவாரணம், கோழி, சேவல், இதல், பூழ், சிரல், மயில், கிளி, குயில், கூகை பருந்து, கழுகு, வாவல், புறா, போகில், வங்கா, வானம்பாடி, காக்கை, சிறுவெண் காக்கை, வண்டு எனப் பலவகையான பறவைகள் காணப்படினும் காதாசப்தசதியில் நாரை, கொக்கு, அன்னம், நீர்ப்பறவைகள், காகம், மயில், கிளி, வண்டு சேவல் போன்ற பறவைகள் மட்டும் காணப்படுகின்றன.

காதாசப்தசிதியில் பூக்களாகச் செந்தாமரை, பாதிரிப்பூ, மாம்பூ, புன்னைப்பூ, குவளை, கடம்பூ, நாவற்பூ, குரவம்பூ, அசோகம் பூ, புரசம்பூ, முல்லைப்பூ, கருங்குவளை, இல்லம், வாகைப்பூ, மாலதிப்பூ, இலுப்பை, போன்ற மலர் வகைகளும் பயின்றுவந்துள்ளன. அகஇலக்கியத்தில் நீர்நிலையாகச் சுனைநீர், அருவிநீர், குளத்துநீர், ஆற்றுநீர், கடல்நீர், பொய்கைநீர், கிணற்றுநீர், சிற்றாறு போன்றவையும் காதாசப்தசதியில் ரேவா, பூம்புதர், தாபி, கோதாவரி போன்ற நதிகளும் ஆற்றுநீர், சிற்றோடை, குளத்துநீர் போன்ற நீர்நிலைகளும் அதிகமாகக் காணப்படுகின்றன.

இவ்வாறு இரு இலக்கியங்களில் ஒப்பீடும் நிலையில் சங்க அகஇலக்கியத்திற்குக் கருவாய் அமைவன கருப்பொருள் என்பது புலனாகின்றது. காதாசப்தசதியில் இவ்வகையான கருப்பொருள் இல்லையெனினும் ஒரு சில இடங்களில் பயின்றுவந்துள்ள கருப்பொருள்கள் சங்க அகஇலக்கியத்தை ஒத்துள்ளது. எனினும் இக்கருப்பொருள்கள் உவமை வழியாகவும் உரிப்பொருள் வழியாகவும் வெளிப்பட்டுள்ளமை சுட்டுதற்குரியது.

**சான்றெண்விளக்கம்**

1. இளம்(உரை),தொல்.பொருள்.அகத்.நூ. 20
2. மேலது நூ. 20
3. நச்(உரை),தொல்.பொருள்.அகத். நூ. 20
4. நக்கீரா்(உரை), இறை.அகப்.1
5. இளம்(உரை),தொல்.சொல். நூ.487
6. இளம்(உரை), தொல்.பொருள்.அகத். நூ. 951
7. நச்(உரை),தொல்.பொருள்.அகத். நூ.5
8. அட்டவணை - 1
9. மேலது 1
10. இரா.செகதீசன்,தொல்காப்பியப் பொருளதிகாரவழி அகநானூறு ஓர்ஆய்வு, ப.146
11. நச்(உரை),தொல்.பொருள்.அகத். நூ.5
12. காதா.79:1-4, 103:1-4, 390:1-4, 101:1-4
13. பா.ஆனந்தகுமார், இலக்கியமும் பண்பாட்டு மரபுகளும், ப.64
14. கலித்.109:19-20, 27:24
15. பா.ஆனந்தகுமார்,இலக்கியமும் பண்பாட்டு மரபுகளும், ப.64
16. நச்(உரை),கலித்.109:19-20
17. காதா.37:14, 104:1-4, 175:1-4, 258:1-4, 447:1-4
18. க.த.திருநாவுக்கரசு, தமிழ்ப்பண்பாடு, ப.77
19. கலித்.104:11
20. க.த.திருநாவுக்கரசு, தமிழ்ப்பண்பாடு, ப.78
21. காதா.172:1-4, 198:1-4
22. சாமி.சிதம்பரனார்,பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப.35
23. அட்டவணை 1
24. மேலது 2
25. இரா.செகதீசன்,தொல்காப்பியப் பொருளதிகாரவழி அகநானூறு ஓர் ஆய்வு,ப.144
26. அட்டவணை
27. மேலது 2
28. மேலது 2
29. மேலது 2
30. மேலது 2

31. மேலது 2
32. மேலது 2
33. மேலது 2
34. மேலது 2
35. இளம்(உரை), தொல்.பொருள்.மர. நூ. 1531
36. மேலது நூ.1532
37. மேலது நூ.1534
38. அட்டவணை 3
39. மேலது 3
40. மேலது 3
41. மேலது 3
42. இளம் (உரை), தொல்.பொருள்.மர.நூ.596
43. அட்டவணை 3
44. ஞா.தேவநேயன், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ப.63
45. அட்டவணை 3
46. இளம்(உரை), தொல்.பொருள்.மர. நூ.1518
47. அட்டவணை 3
48. மேலது 3
49. மேலது 4
50. மேலது 4
51. மேலது 3
52. மேலது 3
53. மேலது 3
54. மேலது 3
55. மேலது 3
56. இளம்(உரை), தொல்.பொருள்.மர .நூ. 1545
57. அட்டவணை 3
58. மேலது 3
59. இளம்(உரை),தொல்.பொருள் மர. நூ. 1544
60. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.103
61. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ் அகராதி, ப.883
62. அட்டவணை 3
63. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.103

64. அட்டவணை 3
65. மேலது 4
66. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.1
67. தி.முருகரத்தினம், மொழியாய்வுக் கட்டுரைகள், ப.89
68. அட்டவணை 3
69. மேலது 3
70. மேலது 3
71. இளம்(உரை),தொல்.பொருள்.மர. நூ. 1567
72. அட்டவணை 3
73. ந.சி.கந்தையா,செந்தமிழ் அகராதி, ப.160
74. க.வெள்ளைவாரணன் (உரை), தொல்காப்பிய மரபியல், ப.65
75. அட்டவணை 3
76. மேலது 3
77. காங்கேயர், உரிச்சொல் நிகண்டு, ப.25
78. திவாகரமுனிவர், சேந்தன் திவாகரம், ப.55
79. அட்டவணை 3
80. மேலது 3
81. இளம்(உரை),தொல்.சொல்.உரி. நூ.786
82. அட்டவணை 3
83. மேலது 3
84. மேலது 3
85. ஆ.சிவலிங்கனார் (க.ஆ), தமிழியற் காட்சிகள், ப.37
86. அட்டவணை 3
87. ச.மெய்யப்பன், வெற்றி தமிழகராதி, ப.21
88. அட்டவணை 3
89. தமிழ் லெக்சின் தொகுதி 6 ப.3404
90. அட்டவணை 3
91. மேலது 3
92. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.165
93. குறுந்.56:1
94. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.180
95. அட்டவணை 3

96. ஜெ.சந்திரகலா,சங்க இலக்கியங்களில் பறவைகள் விலங்குகள் ஆய்வேடு, ப.49
97. குறுந்.187:10; ஐங்:287:1; கலித்.50:3-5
98. இளம்(உரை), தொல்.பொருள்.மர. நூ. 1517
99. மேலது நூ. 1552
100. அட்டவணை
101. பி.எல்.சாமி,சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.393
102. ஞா.தேவநேயன்,சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ப.40
103. அட்டவணை
104. ஞா.தேவநேயன்,சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ப.40
105. அட்டவணை 3
106. மேலது 3
107. இளம்(உரை), தொல்.பொருள்.கற். நூ. 1140
108. அட்டவணை 3
109. ஞா.தேவநேயன், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ப.40
110. அட்டவணை 3
111. ஞா.தேவநேயன், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ப.40
112. நற்.185:4, 367:11
113. ஞா.தேவநேயன், சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள், ப.40
114. அட்டவணை 3
115. மேலது 3
116. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப.420
117. அட்டவணை 3
118. மேலது 3
119. இளம்(உரை), தொல்.பொருள்.மர. நூ. 1562
120. அட்டவணை 3
121. மேலது 3
122. மேலது 4
123. மேலது 3
124. மேலது 3
125. மேலது 4
126. மேலது 3
127. மேலது 3

128. மேலது 3
129. இளம்(உரை), தொல்.பொருள்.மர. நூ. 1562
130. அட்டவணை 3
131. மேலது 3
132. மேலது 3
133. மேலது 3
134. மேலது 3
135. மேலது 3
136. மேலது 3
137. கு.அரேசேந்திரன், உலகம்பரவிய தமிழின் வேர், கல், ப. 81
138. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.454
139. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, நற்றிணை மூலமும் விளக்கவுரையும், ப.1088
140. அட்டவணை
141. ஞா.தேவநேயன், முதல்தாய்மொழி (அ) தமிழாக்கி விளக்கம், ப.230
142. அட்டவணை 3
143. மேலது 3
144. மேலது 3
145. மேலது 3
146. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப.22
147. மேலது ப.56
148. அட்டவணை 3
149. ந.சி.கந்தையா, செந்தமிழ் அகராதி, ப.35
150. அட்டவணை 3
151. மேலது 3
152. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் மீன்கள், ப.29
153. சு.கார்த்திகேயன்,சங்ககால மக்களின் கடல் சார்வாழ்வியல் (ஆய்வேடு), ப.68
154. அட்டவணை 3
155. மேலது 3
156. சு.கார்த்திகேயன்,சங்ககால மக்களின் கடல் சார்வாழ்வியல் (ஆய்வேடு), ப.69
157. அட்டவணை 3
158. இரவிக்குமார்,சங்கப் பாடல்களில் பெயர்க்குறியீடுகள் (ஆய்வேடு),பக்.57
159. அட்டவணை 3

160. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் மீன்கள், ப.122
161. அட்டவணை 3
162. மேலது 3
163. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.432
164. சு.கார்த்திகேயன்,சங்ககால மக்களின் கடல்சார் வாழ்வியல் (ஆய்வேடு), ப.72
165. அட்டவணை 3
166. மேலது 5
167. மேலது 5
168. மேலது 5
169. மேலது 5
170. காதா.84:2, 139:4, 222:1, 235:3, 246:2
171. அட்டவணை 5
172. கு.சீநிவாசன், சங்க இலக்கியத்தில் தாவரங்கள், ப.120
173. அட்டவணை 5
174. மேலது 5
175. மேலது 5
176. மேலது 5
177. மேலது 5
178. மேலது 5
179. மேலது 5
180. காதா. 6:2, 329:1, 330:3
181. அட்டவணை 5
182. மேலது 5
183. மேலது 5
184. மேலது 5
185. மேலது 5
186. மேலது 5
187. மேலது 5
188. மேலது 5
189. மேலது 5
190. மேலது 5
191. மேலது 5
192. மேலது 5

193. மேலது 5

194. மேலது 5

195. மேலது 5

196. மேலது 5

197. மேலது 5

198. மேலது 5

199. மேலது 5

200. மேலது 5

201. மேலது 5

202. மேலது 5

203. மேலது 5

204. மேலது 5

205. மேலது 5

206. மேலது 5

207. கு.சீனிவாசன், சங்க இலக்கியத்தில் தாவரங்கள், ப.503

208. அட்டவணை 5

209. மேலது 5

210. மேலது 5

211. மேலது 5

212. மேலது 5

213. மேலது 5

214. மேலது 5

215. மேலது 5

216. மேலது 5

217. மேலது 5

218. மேலது 5

219. மேலது 5

220. மேலது 5

221. மேலது 5

222. மேலது 5

223. மேலது 5

224. மேலது 5

225. மேலது 5

226. மேலது 5
227. மேலது 5
228. மேலது 5
229. மேலது 5
230. மேலது 5
231. மேலது 5
232. மேலது 5
233. மேலது 7
234. மேலது 7
235. மேலது 7
236. காதா.99:4, 471:4
237. ஞா.தேவநேயன், முதல்தாய்மொழி (அ) தமிழாக்க விளக்கம், ப.283
238. அட்டவணை 7
239. மேலது 7
240. மேலது 7
241. காதா.136:3, 170:4, 427:3
242. அட்டவணை 7
243. மேலது 7
244. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப.172
245. அட்டவணை 7
246. காதா. 49:1, 318:1-4, 478:1-4
247. அட்டவணை 7
248. ஞா.தேவநேயன், சொல்லாராய்ச்சி கட்டுரைகள், ப.106
249. காதா.67:1, 22:3, 255:1, 426:1, 478:2,
250. அட்டவணை 7
251. மேலது 7
252. மேலது 7
253. மேலது 7
254. மேலது 7
255. வி.நாகராசன் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப.96
256. து.இரவிக்குமார். சங்கப் பாடல்களில் பெயர்குறியீடுகள் (ஆய்வேடு), ப.252
257. மேலது ப.253
258. காதா.420:2, 2449:2

259. அட்டவணை 7
260. மேலது 7
261. மேலது 7
262. மேலது 7
263. அ.தட்சிணாமூர்த்தி, ஐங்குறுநூறு (மூலமும் உரையும்), பக்.132
264. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம், ப.112
265. அட்டவணை 7
266. மேலது 7
267. பி.எல்.சாமி,சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப.131
268. அட்டவணை 7
269. மேலது 7
270. பி.எல்.சாமி,சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப.183
271. அட்டவணை 7
272. து.இரவிக்குமார், சங்கப்பாடல்களில் பெயர்க் குறியீடுகள் (ஆய்வேடு), ப.276
273. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக்.287
274. மேலது ப.296
275. அட்டவணை 7
276. பி.எல்.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், பக்.343
277. து.இரவிக்குமார், சங்கப்பாடல்களில் பெயர்க் குறியீடுகள் (ஆய்வேடு), ப.288
278. அட்டவணை 9
279. எச்.இராமசாமி, சங்கஇலக்கியத்தில் மலர்கள், ப.261
280. அட்டவணை 10
281. மேலது 9
282. மேலது 9
283. மேலது 9
284. மேலது 10
285. மேலது 9
286. மேலது 9
287. மேலது 9
288. மேலது 9
289. மேலது 9
290. மேலது 9
291. மேலது 10

292. மேலது 9

293. மேலது 9

294. மேலது 9

295. மேலது 9

296. எச்.இராமசாமி,சங்க இலக்கியத்தில் மலர்கள், ப.268

297. அட்டவணை 9

298. மேலது 9

299. மேலது 9

300. மேலது 9

301. மேலது 9

302. மேலது 9

303. மேலது 9

304. மேலது 10

305. மேலது 9

306. மேலது 9

307. மேலது 9

308. மேலது 9

309. மேலது 9

310. மேலது 9

311. எச்.இராமசாமி, சங்க இலக்கியத்தில் மலர்கள், ப.265

312. அட்டவணை 9

313. மேலது 9

314. எச்.இராமசாமி, சங்க இலக்கியத்தில் மலர்கள், ப.254

315. அட்டவணை 9

316. மேலது 9

317. மேலது 9

318. மேலது 9

319. மேலது 9

320. மேலது 9

321. மேலது 9

322. மேலது 10

323. மேலது 9

324. எச்.இராமசாமி, சங்க இலக்கியத்தில் மலர்கள்,ப.260

325. அட்டவணை 9
326. மேலது 9
327. எச்.இராமசாமி, சங்க இலக்கியத்தில் மலர்கள், ப.267
328. அட்டவணை 9
329. மேலது 9
330. மேலது 9
331. மேலது 9
332. மேலது 9
333. எச்.இராமசாமி, சங்க இலக்கியத்தில் மலர்கள், ப.254
334. அட்டவணை 9
335. எச்.இராமசாமி, சங்க இலக்கியத்தில் மலர்கள், ப.260
336. அட்டவணை 9
337. மேலது 9
338. மேலது 9
339. எச்.இராமசாமி, சங்க இலக்கியத்தில் மலர்கள், ப.263
340. அட்டவணை 9
341. மேலது 9
342. எச்.இராமசாமி, சங்க இலக்கியத்தில் மலர்கள், ப.248
343. மேலது ப.251
344. அட்டவணை 9
345. மேலது 9
346. மேலது 9
347. மேலது 11
348. மேலது 11
349. மேலது 12
350. மேலது 11
351. மேலது 11
352. மேலது 12
353. மேலது 11
354. மேலது 12
355. மேலது 11

## இயல் - 4

## உரிப்பொருள்

திணை அமைவு கொண்ட அகப்பாடல்களில் முப்பொருள்களுள் உரிப்பொருளே தலையாயது. திணையை உணர்த்தும் முறையில் முதற்பொருள் இல்லாவிடத்துக் கருப்பொருளும் கருப்பொருள் இல்லாதவிடத்து உரிப்பொருளும் திணையுணர்த்தும். அதுபோல் முதற்பொருளாலும் கருப்பொருளாலும் இன்னதிணை என்று முடிவுசெய்ய இயலாத நிலையில் உரிப்பொருள் கொண்டு அறியலாம். அவ்வகையில் எட்டுத்தொகை அகஇலக்கியத்திலும் காதாசப்தசதியிலும் பயின்றுவந்துள்ள உரிப்பொருள் குறித்து எடுத்துரைப்பது இவ்வியலின் நோக்கமாகும்.

### குறிஞ்சி உரிப்பொருள்

குறிஞ்சிக்குரிய உரிப்பொருள் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் ஆகும்.[1] தலைவியைப் புணர்தலே கருத்தாகி வந்து செல்லும் தலைவனைத் தோழி, பகற்குறி மறுத்து இரவு வா என்றும் இரவுக்குறி மறுத்துப் பகற்குறியிடத்தே வா என்றலும் இற்செறிப்பினைச் சுட்டியும் வேலன் வெறியாட்டினை உணர்த்தியும் உடன்போக்கு ஒருப்படுத்து மீளும் போதும் தலைவன் சிறைப்புறமாக நிற்கும் போது விரைந்து வந்து வரைந்து கொள்க என்று கூறுதலும் செவிலிக்கு அறத்தோடு நிற்றலும் கிளி, நிலவு போன்ற பேசாப் பொருளுடன் தோழி பேசுதலும் வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் குறித்த பருவத்திற்கு முன்னே வந்தமை அறிந்து மகிழ்ந்த தோழி தலைவிக்குக் கூறுதலும் தோழி, தமர் முதலியோருக்கு அறத்தொடு நிற்றலும் தலைமகன் வரைவு வேண்டித் தமரை விடுத்துழி மறுப்பர் கொல்லோ என்று அச்சம் உறுகின்ற தலைவிக்குத் தோழி ஆறுதல் கூறுதலும் தலைவி ஆற்றாமையால் பேசாப் பொருள்களுடன் புலம்பிக் கூறுதலும் தலைமகன் வரைந்தெய்துதல் உணர்த்திய செவிலியைத் தோழி வாழ்த்திக் கூறுவதும் கிழத்திக்கு நொதுமலர் வரையுமிடத்து அறத்தொடுநிற்றலும் தலைவியையும் அறத்தொடு நிற்கச் சொல்லுதலும் மணமனையுள் புக்க தோழி தலைமகளது கவின் கண்டு புகழ்தலும் தலைவன் திருமணம் புரிந்த பின் அன்புமாறாது இருப்பதைத் தலைவி தோழியிடம் கூறுதலும் புணர்ந்து நீங்கிய தலைவன் தன் தலைவியின் அன்பினைத் தன் நெஞ்சிற்குக் கூறுதலும் குறிஞ்சிக்குரிய பொதுவான உரிப்பொருளாக அமைந்துள்ளன.

**தோழி தலைவனுக்குக் கூறுதல்**

தலைவன் களவின்பமே பெரிதும் கருதி இருவகைக் குறியிடத்தும் மாறிமாறி இடைவிடாது வந்து நிற்கின்றபோது தோழி தலைவியை அன்னை இற்செறித்தமை வெறியாட்டு எடுக்க முயன்றமை அலர் எழுந்தமை ஆகியவற்றைக் கூறி விரைவில் வரைந்து கொள்க என்று தலைவனுக்கு அறிவுறுத்துவாள். இவ்வகையில் நூற்றித் தொண்ணூற்று மூன்று[2] பாடல்கள் சங்க அகஇலக்கியத்தில் உள்ளன.

காதாசப்தசதியில் தோழி தலைமகனுக்குத் தலைவியின் ஆற்றாமை கூறுதல் தலைவியின் நலம்பாராட்டுதல் செறிப்பறிறுத்துதல் தலைவியின் காதலைத் தலைவனுக்குக் கூறுதல் வரைவு நீட்டித்த இடத்து விரைந்து வரைந்து கொள்ளுமாறு கூறுதல் தலைவன் இரவுக் குறி வராமையால் தோழி தலைவியின் நிலையைக் கூறுதல் முன்னிலைப் புறமொழியாகத் தலைவனை இயற்பழித்தல் அல்லக் குறிப்பட்டு மீளுதல் குறிப்பால் வரைவு கடாவுதல் குறியிடம்வேண்டல் தலைவனை இயற்படமொழிதல் தலைவனை நாடுதல் எனத் தோழி தலைவனுக்கு கூறியதாக முப்பத்தைந்து[3] பாடல்கள் காணப்படுகின்றன. சங்க அகஇலக்கியத்தில் குறிஞ்சித் திணையில் தோழி கூற்று அதிகமாகக் காணப்படுவதுபோல் காதாசப்தசதியிலும் தோழிகூற்றே அதிகமாக இடம்பெற்றுள்ளது.

களவுக் காலத்துப் பிரிவிடை வேறுபட்ட தலைவியை நோக்கி, ‘இவள் முருகனால் வருத்தப்பட்டாள் என்று தாய் வெறியாட்டு நிகழ்த்தினாள். அதனைக் கண்ட தோழி அறத்தொடு நிற்கும் பாங்கில் வெறியாட்டை விலக்கும் வகையில் தலைவியின் காமநோய் தலைமகனது மார்பு காரணமாக வந்தது; அவனோடு உண்டான புணர்ச்சியான் வந்தது. இது தெய்வம் அறியாமலா நிகழும் அவ்வாறிருக்க, இந்நோய் முருகனால் வந்ததென்று தாய் கருதி வெறியாட்டு எடுத்தாள். முருகனே! இதனை நீ அறியாமையின் உண்மையில் நீ அறிவற்றவனே ஆவாய் என்று தோழி உரைப்பது வெறியாட்டு விலக்கவும் உண்மையை அறிவுறுத்தவும் வாய்ப்பாக உள்ளது’. (நற்.34:5-11)

மிளகுக்கொடி வளர்ந்துள்ள மலைப் பக்கத்தில் இரவுப்பொழுதில் முழக்கத்தைச் செய்த சூல் முற்றிய மேகங்கள், பெரிய மழைத்தாரைகளைப் பொழிந்தன. குளிரால் சிலிர்த்த மயிரினையுடைய ஆண்குரங்கு பலாபழத்தைக் தோண்டி எடுக்கத் தீண்டியமையினால் பழம் கீழே விழுந்தது. அதன் மணம்யாண்டும் பரவுவதாயிற்று. அதுபோலத் தலைவன் களவில் பெற்ற இன்பம் தலைவியின் உடல் மெலிவிற்கும் ஊர் அலர் உரைப்பதற்கும் ஏதுவாயிற்று

எனத் தலைவன் சிறைப்புறமாக இருக்கும் போது அவன் வரைவு நீட்டித்தமையைச் சுட்டிக்காட்டி விரைந்து வரைந்து கொள்ள வேண்டித் தோழி தலைவிக்கு உரைப்பவள் போலத் தலைவனுக்கு உணர்த்தினாள். (குறுந்.90:2-7)

அதுபோல் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி செவிலித்தாய்க்குச் சொல்வாளாய்த் தலைமகன் கேட்ப, ''அன்னாய் அவள் இருள்செறிந்த இடையாமத்தே தனியாய் நம்படைப்பையிற் சென்றதனை யான்கண்டேன் என்று கூறித் துன்புறுத்தாதே நீ நள்ளிரவில் கண்டது இவற்போலும் உருவத்தே தோன்றியதொரு அணங்கே ஆகும். அல்லது நீ களவில் அவ்வாறு கண்டிருத்தல் கூடும். இவள் இருளில் செல்லப் பெரிதும் அஞ்சுவாள். கூகை குழறினும் அஞ்சி அரணம் சேருவாள் நம் தந்தையும் இல்லத்தில் இருக்கின்ற பொழுது இவள் இவ்வாறு செய்வதற்குப் பெரிதும் அஞ்சுவாளல்லளோ என்பர் (அகநா.158:1-18) வரைதலின்கண் கருத்தின்றி ஒரு நாள் இரவு மனைத்தோட்டத்தின் அருகே தலைவன் வந்து நிற்றலைக் கண்ட தோழி, ''முகிலே நீ முறைப்படி இரவில் வந்து வளைத்துக் கொண்டிருக்கிறாய் மின்னிமின்னி முழங்குகின்றாய் இவற்றால் பயன் ஏதுமில்லை. எம்மினத்துக் குறப்பெண் பாதுகாக்கின்ற தினைக்கதிர் மழையின்றி வாடிக்கிடக்கின்றது. நீ அருள் கூர்ந்து பொழிவாயாயின் யாங்கள் பெரிதும் பயன்பெறுவோம். அவ்வாறு பொழிந்தால் நீடுவாழ்க என்று நாங்களும் வாழ்த்துவோம் என்று வானத்தே இருண்டு கிடக்கும் முகிலைநோக்கி வாழ்த்தித்தான் தலைவனுக்குக் கூறப்புகுந்த செய்தியினையும் திறம்படக்கூறி இரவுக்குறி மறுத்து வரைவு கடாவுகின்றாள்'' (அகநா.188:8-14)

தலைவன் களவொழுக்கமே காமுற்றுப் பகற்குறியிடத்தே வருகின்றான். அவன் வரவினை உணராவள்போன்று தோழி தலைவியிடம் நமது களவொழுக்கம் பிறர் அறியாது மறைவிடத்தே நிகழ்வதாய் இருந்தும் இவ்வூர் மக்கள் அதனையும் அறிந்துகொண்டனரே. அதனால் அலர் ஏற்பட்டது இதை அறிந்து தலைவன் அலர் அடங்குதற் பொருட்டு ஒருவழித்தணந்து வந்தான். அதனால், அவ்வலரே நாளுக்கு நாள் மிகுகின்றது என்று கூறுகிறாள். (அகநா.368:8-9) இங்ஙனம் சங்கத் தோழி தலைவனுக்கு அலர் அறிவுறுத்தி வரைவினை விரைவுபடுத்துகிறாள். காதாசப்தசதியில்

**''மூங்கிற் தட்டியின் பாங்கர் துளைவழி**
**அலைந்திடும் விழியின் அழக! நீதான்**
**செல்வதைக் காணும் சேயிழை யிவளே**
**கூண்டிற் புள்ளெனக் கோலம் தருமே'' (காதா.184:1-4)**

எனத் தலைவி இற்செறிக்கப்பட்டமையினைத் தோழி தலைவனுக்குக் கூறினாள். அதுபோல் இற்செறிக்கப்பட்ட தலைவி ஒருத்தி மூங்கில் தட்டியில் உள்ள துளைவழியே தலைவனைக் காணமுடியாமல் வருந்திய நிலையினைத் தோழி தலைவனிடம் கூறி விரைவில் மணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தினாள். (காதா.185:1-4)

**தலைவியின் நலம்பாராட்டுதல்**

**“ஆயிரக் கணக்காம் அழகியர் நிறைந்த**
**மாயிரு ஞாலத் தாயுங் காலிவள்**
**வலப்பா தியுடன் இடப் பாதியதே**
**இணையா யிருக்கும்! இல்லை வேறே” (காதா.250:1-4)**

என்பதில் இவ்வுலகில் எத்தனையோ அழகியர் உள்ளனர். ஆனால் தலைவிக்கு நிகர் தலைவியே எனத் தோழி தலைவனிடம் தலைவியின் அழகை வியந்து பாராட்டும் நிலை சுட்டப்பெறுகிறது.

**தலைவியின் துயரைக் கூறுதல்**

தலைவன் இரவுக்குறி வாராமையால் தோழி தலைவனிடம் தலைவி தலைவன் வருவான் என்னும் ஆவலினால் விழித்திருந்து இமைநொடிப் பொழுதெனப் பாதி இரவைக் கழித்தாள். தலைவன் வரவே இல்லை. இனி வராமாட்டான் என்ற நிராசையும் துக்கமும் மேலிட மீதியிரவு பாதியும் துயிலும் இன்றி நொந்து கொண்டே ஓராண்டு போலத் துன்பத்துடன் கழித்தாள் என்று தோழி தலைவனிடம் கூறி வரைவுகடாவினள் (காதா.311:1-4)

**ஆற்றிடை அச்சம் கூறி வரைவு கடாவுதல்**

தேனீயால் கடியுண்ட குரங்கு கோ கோ என அரற்றியவாறு மரத்தில் ஏறி அடுத்தடுத்த மரத்திற்குத் தாவி கிளைகளை உலுக்குகின்றது. அம்மரத்திலுள்ள நாவற்பழங்களைத் தேனீக்கள் எனக் கருதி மருண்டு உண்ணத் தயங்குகிறது (காதா.406:1-2) எனத் தோழி தலைவனிடம் ஆற்றிடை அச்சம் கூறி வரைவுகடாவினாள்.

**தோழி அன்னைக்குக்கூறியது**

தோழி அன்னைக்கு அறத்தொடு நின்றதாக இருபத்தொரு[4] பாடல்கள் காணப்படுகின்றன. தலைவியின் மெய்வேறுபாட்டினை அறிந்த அன்னை அம்மெலிவிற்குக் காரணம் யாது எனவினவ, அதற்குத் தோழி, “அன்னையே முன்பு ஒருநாள் பூக்கள் நிறைந்த மலைச் சாரலிலே என்தோழியோடு தழைத்த கிளைகளை உடைய வேங்கையின் பூவினைக் கொய்யச் சென்றேன். அந்த வேளையில், ‘புலிபுலி’ என்னும் ஓர் ஆரவாரம் அவ்விடத்தே தோன்றியது.

அங்கு ஒருவன் எம்முன் தோன்றினான். அந்தப் புலி சென்றவழிதான் யாதோ? என்று எம்மிடத்தே கேட்டான். அவனைக் கண்டநாங்கள் ஒருவர் முதுகில் ஒருவராக மறைந்து ஒதுங்கி நாணியவர்களாகப் பேசாது இருந்தோம். அவனோ, மடந்தையர்களே நும்மிடத்தே பொய்யும் உளவாமோ? எனத் தன்குதிரைகளின் வேகத்தை அடக்கி மெல்லெனச் செலுத்தும் தேரனாகி, நின் மகளது மையுண்ட கண்களை எதிர்மறுத்துப் பன்முறை நோக்கியவாறே அவ்விடம் விட்டகன்றான். அவன் மறைந்த திசையையே நோக்கி நின்ற நின் மகள் தோழியே இவன் ஒரு சிறந்த மகனே!'' என்றாள். ஆராய்ந்து அறியும் அறிவுமிக்கவர்க்கு அதன் ஆதரவான ஒரு கோட்பாடு உண்டன்றோ? இதனை அன்னையே நீயும் ஆய்ந்து அறிக என்று நிகழ்ந்ததைக் கூறி அறத்தொடு நின்றாள். (அகநா.48:1-26) இவ்வாறு குறிஞ்சி ஒழுக்கம் அறத்தொடு நிற்றல் என்னும் முறையில் புனையப்படுவதுமுண்டு. காதாசப்தசதியில்,

**“வெட்ட வெளியை வெறித்து நோக்கும்**
**நெடுமூச் செறியும்! நீள நகைக்கும்!**
**பொருளில் சொல்லிற் புலம்பும்! யாதோ**
**உறுவதொன்றுண்டிங் வொண்டெடியுளத்தே” (காதா.247:1-4)**

என்பதில் காதல் நோயுற்ற கன்னியின் உள்ளக் குறிப்பையுணராத தாய் தந்தையர் ஏதோ நோய் என்றும் பூதம் என்றும் வைத்தியம் செய்ய முனைகின்றனர். ஆனால் தோழி அவர்களுக்கு உண்மை கூறுபவளாய் அவள் உள்ளத்தில் நிலைகொண்ட கருத்தொன்று உள்ளது என்று குறிப்பாகக் கூறி அறத்தொடு நின்றாள். இவ்வாறு தலைமக்கள்பால் நிகழ்ந்துள்ள களவொழுக்கதை வெளிக்காட்டலே இதன் தலையாய நோக்கமாகும்.

**தலைவி தோழிக்கு அறத்தொடு நின்று கூறியது**

தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் போன்று தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலுமுண்டு. இது மூவிடங்களில்[5] இடம்பெற்றுளது.

தோழிக்குத் தன்மெய்வேறு பாட்டினை உணர்த்த வேண்டித் தலைவி ‘‘புது மலர்களால் ஆன தாரினை அணிந்தவன் ஒருவன் அச்சம்தரும் வில்லினைக் கையில் ஏந்திக்கொண்டு, தன்னால் அம்பு எய்தப்பெற்ற யானையானது இவ்வழிச் சென்றதா? என வினவியவனாக முதிர்ந்த தினைப்புனத்தின் வாயிலிலே ஒருபுறமாக வந்துநின்றான். அப்படி நின்ற அவனைக் குறமகளிர் பலரும் கண்டனர். ஆனால், இவ்விரவிலே நீர்சொரியும் கண்களோடு, மெலிந்த தோளினை உடையவளாகி நான் ஒருத்தி மட்டுமே வருத்தமுருவது ஏனோ?'' என்று கூறுகிறாள். இவ்வாறு தனக்குற்ற

காதல்நோயைத் தோழிக்குத் தலைவி தெரிவிக்கிறாள். (அகநா.82:11-18) அதுபோல் காதாசப்தசதியில் கோதாவரியின் வெள்ளப்பெருக்கையும் பொருட்படுத்தாது மழைபெய்யும் நடுநிசி இரவில் தலைவி தலைவனைச் சந்திக்கச் சென்றாள். தலைவனின் குணநலன்களில் ஈடுபட்ட தன்மையல்லவா இந்த உறுதியைத் தந்துள்ளது. இந்த ரகசியம் நடுநிசிக்கும் கோதாவரி வெள்ளத்திற்கு மட்டும்தான் தெரியும் எனத் தலைவி தன் காதலருமையையும் காதலன் அருமையையும் தோழியிடம் கூறி அறத்தொடு நின்றாள் (காதா.194:1-4)

**தலைவி தோழிக்குச் சிறைப்புறத்தே கூறியது**

களவொழுக்கமே விரும்பி நாள்தோறும் வந்துமீள்கின்ற தலைவனை வரைவு கடாதற் பொருட்டு ஒருநாளிரவு சிறைப்புறத்தே அவன் வந்து நின்றதை அறிந்த தலைவி, அவன் வருகையை உணராதவள்போல் தோழிக்குச் சொல்வதாய் இருபத்தேழு[6] பாடல்கள் அமைந்துள்ளன. காதாசப்தசதியில் இற்செறிக்கப்பட்ட தலைவித் தோழிக்குச் கூறுவதாக ஒருபாடலும் களவுக்காலத்தில் தன் மனநிலையைக் கூறுவதாக மூன்றுபாடலும் அலர்தூற்றுவதைக் கூறுவதாக ஒருபாடலும் தனது பிரிவுத் துன்பத்தைக் கூறி வருந்துவதாக இரண்டுபாடலும் என ஏழு[7] பாடல்கள் காணப்படுகின்றது.

இரவுக்குறியிடத்தே பலப்பல இடர்ப்பாடுகளையும் கடந்து வந்து களவிலே கூடி மகிழ்ந்தவன் தன் சொற்படி வந்து தன்னை வரைந்து கொள்ளாததால் உள்ளம் வருந்திய தலைவி, “தோழி நாடன் காவலாளர் அறிதலையும் இயலாது கரந்து தாழிடாத கதவினைத் திறந்து, மெல்லென வீட்டினுள் வந்தான். யான் வருந்தும் துன்பம் நீங்கத் தழுவி அணைத்தும் கூடினான். இனிமையான சொற்களால் என்னுடன் பேசிவிட்டுச் சென்றான். இன்றோ, அவன் தான் சொன்னது போல வந்து அருள் செய்யாமையால் அலரும் ஆயிற்று. நாம் அவனொடு கூடிக்கண்டதும் தான் என்னவோ?” என்று தலைவன் சிறைப்புறமாயிருக்க தோழிக்குக் கூறித் தன் ஏக்கத்தினை வெளிப்படுத்தினாள். (அகநா.102:1-9)

அதுபோல் இயற்பழித்த தோழியிடம் “தோழி, நம்பெருமானைப் பழிக்காதே. வெறியாடும் களம் நல்லமுறையிலே அமைக்கப்பெற்று வேலினை நிறுத்தி அதற்குக் கண்ணியும் சூட்டினர். வளம் பொருந்திய வேலனின் புகழையும் பாடினர். முருகனை வரவழைத்தனர். அச்சம் பொருந்திய அந்த நடுஇரவில் காவலர்கள் அறியாதவாறு மறைந்து நம் நோயைத் தணிவிக்க வந்த காதலர், தன்னை விரும்புதலை உடைய நம் உள்ளத்தே உள்ள விருப்பம் நிறைவேற நம் இனிய உயிரும் குழையும்படியாக முயங்கினார். அப்படி அவர்

நம்மைத் தழுவுந்தொறும் இவ்விடத்து ஏதும் தொடர்பில்லாத வேலனுக்கு வெறியாட்டு எடுத்தமை நினைத்துச் சிரித்தேன்'' என்று தலைவி இயற்படமொழிந்தாள். (அகநா.22:8-21) காதாசப்தசதியில்

**மலய மாருத மணங்களுக் காற்றாய்**

**என்மனைப் புறத்தெனை ஏகவி டாள்தாய்!**

**அழிஞ்சிற் பூமணத் தாற்றா திறப்பின்**

**அதுவும் சாதல் ஆகா தாமோ? (காதா.381:1-4)**

என்பதில் தலைவி பொதியமலைத் தென்றல் காற்று மணத்துடன் வீசிக் கொண்டிருக்கிறது. தாயோ என்னை வெளியில் செல்லாதவாறு இற்செறித்தாள். அங்கு உள்ள மரத்தின் நறுமணத்தால் மனமுருகி நிற்கின்ற அவருக்கு உயிர் விடுவதன்றி வேறு வழியில்லை என்று வருந்திக் கூறுகிறாள்.

மேலும் இவ்வூர்மக்கள் மிகச்சிறியதைக் கூட மிகவும் பெரிதாக்கிப் பேசுவார்கள் ஊசியின் காதில் மறத்தண்டைப் (கதாயுதத்தை) புகுத்தி இழுத்து விடுவார்கள். என்று அலர் தூற்றும் பெண்களை நினைத்தும் வருந்துகிறாள். (காதா.385:1-4)

நல்லவராயினும் அல்லவராயினும் இவர்கள் தொடர்பு நமக்குத் துன்பம் தருவதுதான் இவ்விரண்டுமில்லாத சாதாரண மனிதர் தொடர்பே இனிமை பயக்கும். ஏனென்றால் தீயவரைக் காணின் துன்பம் சான்றோரைத் காணாதிருப்பின் துன்பம். ஆக இருவரும் ஒருவகையில் துன்பம் தருகிறார்கள். ஆகையால் நடுநிலைப்பட்டவர் தொடர்பே துன்பம் தராது எனத் தோழியிடம் தலைவி தலைவனின் பிரிவுத்துன்பத்தைக் கூறினாள் (காதா.188:1-4) இவ்வாறு காதாசப்தசதியில் தலைவி தோழியிடம் தன் களவொழுக்கத்தினைக் கூறி வரைவு வேட்கையினை வெளிப்படுத்தும் நிலை காணப்பெறுகிறது.

**தலைவி தலைவனுக்குக் கூறியது**

அகஇலக்கியத்தில் தலைவி தலைவனுக்குக் கூறுவதாக இரு[8] பாடல்கள் காணப்படுகின்றன. காதாசப்தசதியில் மூன்று[9] பாடல்கள் அமைந்துள்ளன.

வரைதல் கருத்தின்றி இரவுக்குறியிடத்து வந்து மீளும் தலைவனுக்குக் களவொழுக்கத்தே தான் உறும் துன்பத்தை, "பெருமானே, உம்மை எய்துதல் இல்லாத தனிமைப்பொழுதில் யான் வருந்துவதற்கு இடமான குளிர்ந்த வாடைக்கு அஞ்சி அதற்குத் தப்பி உய்தற்கு வழியின்றி, நீ வரும்காலத்தை எதிர்பார்த்து மனையிடத்து நிற்கும் மரம் முறியுமாறு வளைத்துப் பிடித்தவாறே, ஊரில் உள்ளோர் பலரும் உறங்குகின்ற இரவிலே, யான் தனித்து இருக்கும் நிலை இப்பொழுது வனைவதுபோல வளர்ந்து வருகின்ற எனது இளமுலைகள்

நன்கு அழுந்தப் பலமுறை நினது மார்பினிடத்து முயக்கம் பெறுவதைவிட இன்பமிக்கதாய் உள்ளது'' என்று தலைவனிடம் கூறிக் குறிப்பால் உணரவைத்து வரைவினை விரைவுபடுத்துகிறாள் (அகநா.58:7-14) கங்குல் காலத்துத் தலைவன் வருகைக்காகப் புறத்தே காத்துக் கொண்டிருக்கும் நிலை மார்பின்கண் முயங்குதலினும் இனிதாகின்றது என்று கூறும் கூற்றில் வரைவின் இன்றியமையாமையை நயமாக உணர்த்தப்படுகிறது.

காதாசப்தசதியில் இதற்கு முற்றிலும் மாறான, தலைவி தலைவனுக்குக் கூறுவதான கருத்து காணப்படுகிறது. அதாவது, தலைவன் தலைவியை நீத்து மற்றொருத்தி மயலில் சிக்கி இருந்தான். தலைவி தன் விருப்பப்படி இன்பம் தரவில்லை என்றும் கூறிக் கொண்டான். அது அறிந்த தலைவி தன்னைக் குறைகூறும் தலைவனுக்குப் பதில் கூறும் வகையில், ''உனக்கு எது எது இன்பம் தாராதோ, தீதாகத் தென்படுமோ அவற்றை எல்லாம் செய்யாமல் தவிர்ந்திருக்க என்னால் இயலும். உனக்கு இன்பம் தருவது எது எதுவோ அவற்றை மட்டுமே இயற்றுவேன். ஆனால் என்ன செய்ய முடியும்? நின் வெறுப்புக்குளாகிவிட்ட பின் இறத்தல் வேண்டும். அது இறைவன் விதித்தபடி நடக்குமன்றி நான் செய்தற் கொன்றுமில்லை'' என்று தலைவி கூறி, தலைவனிடம் தன் கடமையைப் புலப்படுத்துகிறான். (காதா.465:1-4)

**தலைவி புலம்பிக் கூறுதல்**

காமம் மிக்க கழிபடர் கிளவி என்னும் கூற்றில் இரண்டு[10] பாடல்கள் அமைந்துள்ளன. காதாசப்தசதியில் இரண்டு[11] பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

களவொழுக்கத்தால் அலர் மிகுந்தது. அதனால் தலைவி வருந்தினாள். விரைந்து வந்த தலைவன் மணந்து கொள்ளாது காலம் நீட்டித்தமையால் வருந்திய நிலையில் தலைவி, அவன் மலையினின்றும் வருகின்ற கான்யாற்றை நோக்கி ''நின் தலைவன் இழைத்த தவற்றிற்கு யான் உன்னை இடித்துரைத்துப் புலத்தலுக்கு நீ அஞ்சி அவர் மலையில் மலர்கின்ற பலமலர்களாலும் உனது உடலை முழுவதும் மூடிக்கொண்டு நாணம் உடையவளாய்ச் செல்கிறாய் உன்னை மட்டும் எம் ஊர்வழிச் செலுத்திய தலைவன் அன்பு சிறிதும் இன்றிச் செல்லும் வன்மையுடையோராவர். அதுபற்றி நீ சிறிதும் இரங்காமல் நெடுஞ்தொலைவு வந்த களைப்புத் தீர இளைப்பாறி இன்று மட்டும் இவ்விடத்திலே எம்மோடு சேர்ந்திருந்து நாளை செல்வாயானால், உனக்குக் கெட்டுப் போவது யாதேனும் உண்டோ? கூறுவாயாக'' என்று கூறித் தலைவி தன் தனிமைத் துன்பத்தை வெளிப்படுத்துகிறாள் (அகநா.398:17-21) இவ்வாறு

களவொழுக்கத்தே தலைவி கூற்று நிகழும் சூழல்கள் பலநிலைகளில் சித்திரிக்கப்பட்டுள்ளது.

காதாசப்தசதியில் தலைவிக்கு எங்கு பார்த்தாலும் தலைவனின் உருவெளித்தோற்றம் தெரிகிறது. அவ்வளவு அன்பு தலைவிக்கு தன் தலைவனின் உருவத்தை சிலையாக சித்திரமாக எல்லாத் திசையிலும் வைத்து விட்டார்களா? என்று கேட்கிறாள். (காதா.450:1-4) இது தொல்காப்பியம் கூறும் நோக்குவஎல்லாம் அவையே போறல் என்னும் அவத்தை அடிப்படையில் அமைந்திருத்தல் குறிப்பிடத்தக்கது. இவ்விரு இலக்கியங்களும் களவொழுக்கத்தில் தலைவியின் நிலையினைச் சுட்டுகின்றன.

**தோழி தலைவிக்குக் கூறியது**

ஆற்றாளாய தலைவியை ஆற்றுவித்தலாகப் பத்து பாடல்களும் தலைவன் குறித்த பருவத்திற்கு முன்னே வந்தமை மகிழ்ந்து கூறியதாக நான்கு பாடல்களும் உடன்போக்கு நயப்பித்தலாக இரண்டு பாடல்களும் செலவு குறிப்பறிந்து வேறுபட்ட கிழத்திக்குச் சொல்லியதாக இரண்டு பாடல்களும் தலைமகளைக் குறைநயப்பித்தலாக ஏழுபாடல்களும் விரிச்சி பெற்று புகன்ற தோழி கூறியதாக ஒருபாடலும் நொதுமலர் வரையும் பருவத்து தலைவியை அறத்தொடு பயப்பச் சொல்லியதாக ஒருபாடலும் தலைவன் வரைவு மலிந்தமையைக் கூறியதாகப் பதினொரு பாடல்களும் தலைமகள், இரவுக்குறி வந்தமையினைக் கூறியதாக ஒருபாடலும் தலைவியின் மனையின்கண் கூறியதாக ஒருபாடலும் என நாற்பது[12] பாடல் இடம்பெற்றுள்ளன.

காதாசப்தசதியில் தோழி, தலைவியைத் வினவியதாகவும் தலைவியின் காமஞ்சிறத்தலைக் கூறுவதாகவும் தலைவியிடம் முன்னிலைப்புறமொழியாகக் கூறுவதாகவும் தலைவியின் களவினைத் தோழி குறிப்பால் உணர்வதாகவும் தலைவியின் அன்புடைமையைக் கூறுவதாகவும் தலைவியை ஆற்றுவித்தலாகவும் கரணத்தின் அமைந்து முடிந்த காலை தோழி தன்னுள் கூறியதாகவும் தலைவியின் பண்புநலன்களைப் பாராட்டியதாகவும் தலைமகளை நகையாடியதாகவும் என ஏழு[13] பாடல்கள் காணப்படுகின்றன.

பகற்குறி வந்தொழுகும் தலைவன் வாராது பிரிந்து நீட்டித்தலால் தலைவி மெய்வேறுபட்டனள். இவ்வோறுபாட்டைக் காணும் தாய் இற்செறிப்புச் செய்வரோ எனவும் அஞ்சினள். அ்.து உணர்ந்த தோழி, ‘‘நம்மைத் தினைப்புனக் காவலின் பொருட்டுத் தாயும் நின் தந்தையும் ஏவினர் யானோ உடன்படாதவாறு உரையாடினேன். ஆகையால் நாம் மீண்டும் தினைப்புனம் காவலுக்குச்

செல்வோம், தலைவனைக் கூடவும் செய்வோம் எனக் கூறி ஆற்றுவித்தான் (நற்.134:2:10)

பனிப்பருவத்தின்கண் வந்து வரைந்து கொள்வதாக உறுதியளித்துச் சென்ற தலைமகன் அப்பருவம் வருவதற்கு முன்பே விரைந்து வந்தமையைக் கண்டு தோழி தலைவியிடம், ‘‘நம்முடைய மலையினின்று அருவிகள் ஒழுகவும் காந்தள் மலர்கள் மலர்ந்து விளங்கவும் காதலரைப் பிரிந்தோர் செயலற்றுவருந்தவும் வீசும் தண்ணிய நடுக்கத்தைத் தரும் வாடைக் காற்று வீசுதற்கு உரிய பனிக்காலம் வருதற்கு முன்பே நம் காதலர் வந்தார். எனவே இனி நின் வருத்தம் நீங்கி மகிழ்ந்திருப்பாயாக என்று கூறினாள் (ஐங்.223:1-5)

காதாசப்தசதியில் காதலியைக் காண வீடு திரும்பும் தலைவன் வழியில் களைப்போடு வரும் போது சரத் காலத்தில் தூய பளிங்கு சொரிந்தது போன்ற நீரில் கருங்குவளை மணம் பரவிக் கிடக்க, தம் காதலியின் மணமும் தூய்மையும் இனிமையும் மிக்க முகத்தின் எழிலைப் பருகுவது போல, தீராத வேட்கையுடன் தண்ணீரைப் பருகுகின்றான். அக்காட்சியைத் தோழி தலைவிக்குக் கூறி அழகிய பொய்கை நீரில் தலைவியின் முகத்தை நினைவு கூர்ந்த தலைவன் விரைந்து வருவன் என்று கூறி ஆற்றுவித்தாள் (காதா.469:1-4)

**தலைவன் தன்நெஞ்சிற்குக் கூறியது**

இரவுக்குறிக்கண் தலைவன் வந்து நிற்கும் முன்னரே தலைவி வந்து அல்லகுறிப்பட்டுத் தலைவனைக் காணப்பெறாமல் தன் இல்லம் புகுவதுண்டு. பின்னர்த் தலைவன் அவ்விடத்தே வந்து புள்ளெழுப்புதல் முதலான குறிகளைச் செய்யவும் அவையும் முன்புபோல இயற்கையாய் நிகழ்வனவே என்று எண்ணித் தலைவி வாராதொழிவாள். அத்தகைய சூழலில் தலைவி வாராததை நினைந்து தலைவன் வருந்தித் தன்நெஞ்சிற்கு கூறுவான். அல்லகுறிப்பட்டுத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாகப் பத்து[14] பாடல்களும் இரவுக் குறிக்கண் தலைவியைக் கூடிக் களித்துச் செல்லும் சூழலில் தலைவன் தன்நெஞ்சிற்குக் கூறுவதாகப் பதினொரு[15] பாடல்களும் இடந்தலைப்பாட்டின்கண் தலைவன் தன்நெஞ்சிற்குக் கூறுவதாகப் பத்து[16] பாடல்களும் உள்ளன. காதாசப்தசதியில் இரண்டு[17] பாடல்கள் காணப்படுகின்றன. குறிபல செய்தும் தலைவி வராமையைக் கண்டு ஏமாற்றம் எய்திப் பின்மீளும் தலைவன், ‘‘நெஞ்சே, பெறுதற்கரியவள் தலைவி என்று எண்ணிப்பாராது அவள்பால் ஈடுபாடு கொள்ளச்செய்து என்னை எல்லையில்லாத இன்னலுக்கு ஆளாக்கினாய், பேரழகுடைய கூந்தலையும் பவள வாயையும் இனிய மொழியையும் உடைய தலைவியை அடைய நீ விரும்பினாய் நம்மால் பெறுதற்கு அரியள் அவள் என்பதையும் நினைத்துப் பார்த்தாய்

அல்லை. அவளை இடையறாது நினைத்துப் பல்வேறு துன்பங்களையும் பொருட்படுத்தாது அவளிடம் செல்கின்றாய். அவள் அரியள் என்பதை உணராது இன்னற்படுத்தினை. அத்தகைய தொல்லை அளித்த உன் செருக்கு அழிவதாக கடல்பிறக்கோட்டிய குட்டுவனது அம்பு மாற்றார் நெஞ்சைத் தாக்கி வலிமையை அழித்தது. அந்த அம்புபாய்ந்து நின்செருக்கும் அழிவதாக, எனத் தன் நெஞ்சுக்குக் கூறினான். (அகநா.212:1-2) இ∴து அல்லகுறிப்பட்ட சூழலில் பிரிந்தது இதற்கு மாறாக இரவுக்குறிக்கண் தலைவியோடு கூடிக்களித்துச் செல்லும் தலைவன், "நெஞ்சே வாழிய நம் காதலி பலரும் அறிகுவர் என்று அஞ்சி நள்ளிரவிலே யாரும் அறியாமல் மெல்லவந்து இனியமொழி பேசித் தனது தொடிக்கண் வடுக்கொள நம்மைத் தழுவினாள் அல்லளோ? அப்பேரின்பத்தை நினைந்து நினைந்து நீ பெரிதும் மகிழ்ந்திருப்பாயாக" என்று இன்ப நுகர்ச்சி எய்திய நிலையில் வாழ்த்துகிறான். (அகநா.142:20-26)

அதுபோல் இயற்கைப் புணர்ச்சியில் தலைவியைப் பெற்று இன்புற்றது போல, இடந்தலைப்பாட்டின் கண்ணும் அவளை பெற்று மகிழவிரும்பிய தலைவன், "காந்தள் மலரையும் தோற்றிய அரும்புகளிலிருந்து உண்டாகிய செவ்வி மலர்களாகிய முல்லைப் பூக்களையும் மணம் கமழும் இதழ்களையுடைய குவளை மலர்களோடு இடையிடையே பொருந்துமாறு கலந்து அழகாகத் தொடுத்தலால் மாட்சிமை பெற்ற மாலையைப் போல, நறுநாற்றத்தையுடைய தலைவியின் மேனி தளிரைக் காட்டிலும் மென்மையும் நிறமும் உடையது. தழுவுதற்கும் இனிமையுடையது என்று தலைவியின் மேனியை நினைத்து தன்நெஞ்சிற்குக் கூறி மகிழ்ந்தான். (குறுந்.62:1-5)

இவ்வாறு களவொழுக்கத்தின்கண் குறிப்பட்டுப் புணர்ந்து மகிழ்தலையும் அல்லகுறிப்பட்டு வருந்தி அழிதலையும் இடந்தலைபாட்டில் இயற்கைப் புணர்ச்சியின் போது தலைவியின் உடல் முழுவதும் தனக்குத் தந்த இன்பத்தை நினைத்து மகிழ்தலையும் குறிஞ்சித்திணைப்பாடல்கள் சுவைபடச் சித்திரித்துள்ளன.

காதாசப்தசதியில் தலைவியின் இடையிற் பொருந்தி இணையும் இன்பம் சாதாரண மனிதனுக்கு கிடைப்பது அறிது என்பதனை

**"பிறர்நின திடையிற் பிணைந்துற வாடி**
**இன்புற லென்ப தென்று மில்லை!**
**பொன்மணி மேகலை பொருந்திய தெல்லாம்**
**நீர்நெருப் பிடைத்தவம் நேர்ந்ததா லன்றோ? (காதா.176:1-4)**

என்ற பாடல் சுட்டும். இவ்வாறு இருவகை இலக்கியத்திலும் உணர்த்தும் முறை வேறாக இருந்தாலும் வெளிபடும் கருத்து ஒரே மாதிரியானவை என்பதை மேற்கூறிய செய்திகளின் வழி அறியலாம்.

**தலைவன் பாங்கனுக்குக் கூறியது**

பாங்கன் கூட்டத்தில் வினவிய பாங்கனுக்குத் தலைவன் கூறுவதாக பதினேழு[18] பாடல்கள் பயின்றுவந்துள்ளன. காதாசப்தசதியில் ஒரு பாடல் அமைந்துள்ளது. பாங்கற் கூட்டத்து வினவிய பாங்கனுக்குத் தலைவன் ‘குன்றகத்துச் சீறூர். அவ்வூரினள் கொடிச்சி அவளிடத்து என் மனம் ஆட்பட்டது அவளையன்றிப் பிறரால் அது விடுத்தற்கரியது என்று தன்னிலையைத் தலைவன் உணர்த்தினான் (நற்.95:1-10) ஆனால் காதாசப்தசதியில்,

**“இளமை நிறைந்த வளமிகு கதுப்பின்**
**வழியே கீழ்வாய் வைத்துச் செவிமலர்**
**அழகெனும் அமுதம் அள்ளிப் பருகும்!**
**காட்சி தன்னைக் காணாய் இனிதே” (காதா.352:1-4)**

ஒரு தலைவன் தலைவியின் அழகை அள்ளிப் பருக ஆசைப்பட்டான். ஆனால் அவள் காதில் செருகியிருக்கும் குவளை மலரோ அவள் முக அழகை, இளமை ததும்பும் கன்னங்கள் மூலமாக வழியும் சௌந்தர்ய ரசத்தைக் குடிப்பதாக எண்ணித் தனக்குக் கிடைக்கவில்லையே என்ற காதல் ஏக்கத்தைப் பாங்கனிடம் கூறுகின்றான்.

**முல்லை உரிப்பொருள்**

முல்லைக்குரிய உரிப்பொருள் இருத்தலும் இருத்தல் நிமித்தமும் ஆகும்[19] வினைமேற்சென்ற தலைவன் போர்க்களத்திலே தங்கி இருத்தலும் அவன் வருகையை எண்ணித் தலைவி இல்லத்தே ஆற்றியிருத்தலும் முல்லை ஆகும். தலைவன் போர்க்களத்தை தனது வீரத்தைக் காட்டி, பகைவரை அழித்து தனது மன்னனுக்கு வெற்றியைத் தேடித்தருவான். பின் தலைவியிடம் தான் குறித்த பருவத்தே மீள நினைப்பான். அதன் காரணமாகத் தேர்ப்பாகனிடம் விரைந்து தேரைச் செலுத்துக என்பான். அவனும் தலைவன் மனக்குறிப்பு அறிந்து தேரை விரைந்து செலுத்துவான். இவ்வாறு விரைந்து வந்த தலைவன் தலைவியின் துயரை நீங்குவான். இச்சூழ்நிலைகளிலே முல்லைக்குரிய உரிப்பொருள் அமையும்.

**தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறியது**

வினைமுற்றிய தலைவன் தான் மேற்கொண்டவினை இனிது முடிந்தவுடன் தலைவியை நினைந்தவனாய் அவனைக் காணும் ஆர்வம் கொண்டவனாய்த்

தேர்ப்பாகனை நோக்கித் தேரினை விரைந்து செலுத்துவாயாக என்று கூறுவதுபோல் நாற்பத்திநான்கு[20] பாடல்கள் உள்ளன. காதாசப்தசதியில் இக்கூற்று இடம்பெறவில்லை.

தலைவன் வேந்தற்கு உற்றுழி உதவித் தலைவியைப் பிரிந்து சென்று, ஆங்குச் செய்வினை முற்றியவழி தலைவியை நினைந்து, மழை பெய்ததால் உண்டான தவளைகளின் ஒலியால் நம் தேர்மணிக்குரலைத் தலைவி அறியவில்லை. உடனே நான் வருவது குறித்துத் தெரிவிப்பீர் என ஏவலரை ஏவினேன். அவர்கள் சென்று அறிவிக்கவே அவள் நீராடித் தன்னைப் புனைந்துக் கொள்ளும் பொழுதில் நான் செல்லவும் அவள் என்னை அணைத்து மகிழ்ந்த நிலைமுன் நிகழ்ந்தது. அது மறத்தற்கரியது என்று கூறி பாகனைத் தேரை விரைவாக செலுத்துமாறு கூறினான். (நற்.42:1-12) அவனும் நெடுவழியில் தேரை நடத்தி, இல்லம் திரும்பினால் தலைவியைக் காணக் காலம் தாழ்த்தும் என உணர்ந்து தன் அறிவுத்திறத்தால், மேட்டுநிலத்தின் வழியாகவும் கரம்பு நிலங்கள் வழியாகவும் தேரைச் செலுத்திப் புதுவழி உண்டாக்கி விரைந்து இல்லம் அடைந்தனன். அவன் செய்த உதவி தனக்குமட்டுமின்றி தன்போலப் பின்னர் வரும் பலர்க்கும் பயன்படும் எனத் தலைவன் நினைத்தான். பாகனுடைய உதவியால் தலைவியைப் பெற்று அவளுடைய துயரத்தைப் பெற்றமையோடு, தன்னுடைய வாய்மைகாக்கப்படுமாறும் தன் உயிர்நிலை பெறுமாறும் பாகன் செய்த உதவியைத் தலைவன் பாராட்டிப் புகழ்ந்துரைத்தான். (குறுந்.400:1-7)

**தலைவன் தன்நெஞ்சுக்குக் கூறியது**

வினைவயிற் பிரிந்து சென்ற தலைவன் வேற்று நாட்டுப் பாசறையின்கண் நின்ற தான் மீண்டுவருவதாகக் கூறிய பருவம் வந்தும் வாராதனை நினைத்து வருந்தி தன் நெஞ்சிற்குக் கூறியதாக இருபது[21] பாடல்கள் காணப்படுகின்றன. காதாசப்தசதியில் இடம் பெறவில்லை.

போர்க்களத்தின்கண் வேந்தனுக்குத் துணையாதல் பொருட்டுச் சென்ற தலைவன், தான் திரும்பி வருவதாகக் கூறி சென்ற கார்ப்பருவ வரவினைக் கண்டு தன் நெஞ்சை நோக்கி கூறுவனாய், “நெஞ்சே! பெரிய வானில் எழுந்த மின்னும் இடியும் முதலாகிய தொகுதியையுடைய கரியமேகம், நீர்நிறைந்த நுங்கினது கண்கள் சிதறிவிழுந்தவை போன்று, தெய்வம் ஏறி நடுங்கச் செய்வது போல நடுங்கச் செய்கின்ற குளிர்ச்சிப் பொருந்திய ஆலங்கட்டியோடு பெரிய இராப்பொழுது புலர்கின்ற விடியற்காலத்தே மழைத்துளிகளைச் சொரிந்தது.

செவ்வண்ணம் தீட்டி வைத்தாற் போன்ற செம்மண் நிலத்தில் நிரம்பி வைத்தாற் போன்ற தெளிந்த அறல்பட்ட நீரைக்குடித்துச் சிறிய குட்டியைத்

தழுவிய வண்ணம் இருந்த துள்ளி நடத்தலாகிய இயல்பினையுடைய பெண்மான், வலப்பக்கம் முறுக்குண்ட கொம்பினையும் தலைமைத் தன்மையையும் உடைய ஆண்மானுடன் அசைந்தாடும் கிளைகளையுடைய குருந்த மரத்தின் நிழலிலே தங்கும்.

கோடுகளையுடைய வண்டுகள் ஒலித்து ஊதப் பிடாவினது அரும்புகள் மலர்ந்தன. புள்ளிகளையுடைய மயில்கள் ஆடுதலைச் செய்தன. கோடு கோடாகக் கிடக்கின்ற மணற்பரப்பில் நீலமணியுடன் செம்பவளம் கலந்து கிடந்தாற் போலக் காயாவின் உதிர்ந்து வீழ்ந்த பழம்பூக்களும் இந்திர கோபப்பூச்சிகளும் ஒரு சேரப் பரவி ஈரமான நிலத்தின் மேற்பரப்பினைக் கோலஞ் செய்யுமாறு கார்காலம் தோன்றியது.

மேலுயர்ந்த கொம்பையுடைய யானையினையுடைய அரசன் ஏவிய வினை காரணமாக வேற்று நாட்டில் அவனது பாசறைக்கண் தங்கி, மாமை நிறமுடைய தலைவியை நினைத்து நாம் பெருந்துன்பம் அடைந்துள்ளோம். இதனை அவள் அறியாதவளாய் இப்பருவத்து மீண்டு வந்து, 'நமக்கு அருளாத தலைவர் அறவோர் அல்லர்' என நினைத்து நம்மை நொந்து நம்மீது வெறுப்பினைக் கொள்வாளோ? யாம் என் செய்வோம் என்றும் புலம்பினான். இதில் இல்லிருத்தலாகிய முல்லையின் ஒழுக்கம் சுட்டப்பெற்றுள்ளது. (அகநா.304:16-21)

அதுமட்டுமின்றி வினைமுற்றி மீண்டவன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக மூன்று[22] பாடல்களும் காணப்படுகின்றன. குறித்த பருவத்திற்கு முன்பே வந்து தலைவியைக் கூடினான் தலைவன். அதுபற்றி அவன் நெஞ்சில் மகிழ்ச்சி நிரம்பியிருந்தது. தன் நெஞ்சிற்கு அதனை வெளிப்படுத்துவான் போலத் தலைவி கேட்கும்படி "பூக்களில் நிறைந்த நறுமணம் மிக்க தாதினை அளாவியமையால் அழகு பெற்று, காட்டின்கண் பூத்த மலர்களில் தேனைப் பருகிக்களித்து வண்டுகள் ஆரவாரம் செய்தற்கு இடமான அழகிய புதர்களின் இடையே களிறுகள் தம் இளம்பிகளைத் தழுவின அவ்வண்ணமே யாமும் ஒளிவிளக்கும் தொடியணிந்த மடப்பம் பொருந்திய நம் காதலியைத் தழுவி இன்புற்றேம் என்று கூறினான்". (ஐங்.416:1-5)

**தேர்ப்பாகன் தலைவனுக்குக் கூறியது**

வினைவயிற் பிரிந்த தலைவன் அவ்வினை முடித்து மீள்கின்றான். அங்ஙனம் வரும்பொழுதில் தன் காதலியை நினைத்துக் கவலையுறுதலை உணர்ந்த தேர்ப்பாகன், "மனைவியின் தோளில் துயில விரும்பியவனே; வருந்தாதே; நின்கண்ணி வாழ்க! நீ விரும்பிய காதலியின் ஊர் இப்புறவத்துள் இருக்கின்றது. ஆதலால் விரைவாகச் சென்று நீ காணும்படி தேரைச்

செலுத்துவேன் எனத் தேற்றினான்''. (நற்.121:1-12) காதாசப்தசதியில் இக்கூற்று இடம்பெறவில்லை.

**தலைவன் முல்லைக்குக் கூறியது**

வினைமுற்றி மீளும் தலைமகன் முல்லைக்கு உரைப்பானாய் ''முல்லையே நீ வாழ்வாயாக. முல்லையே மேகத்தால் பாதுகாக்கப்பெற்ற நீரையுடைய அகன்ற முல்லை நிலத்தில் வினைமுற்றிப் பலரும் ஊருக்குத் திரும்பும் ஒளி மழுங்கிய மாலைக்காலத்தில் நீ நினது சிறிய வெள்ளிய அரும்புகளால் சிறுமுறுவல் கொண்டனை. தம் காதலியரைப் பிரிந்து தனிமையுடையோரைக் கண்டு சிரித்தனைப் போல உன் ஆற்றலைக் காட்டுதல் நினக்குத் தகுவதாகுமோ? என வினைமுற்றிப் பலரும் இல்லம் திரும்பும் மாலையில் தலைவன் காலம் தாழ்த்தி வருதலால் தன்னை எள்ளி நகைப்பதாகக் கருதினான். (குறுந்.162:1-6)

**புறவை நோக்கிக் கூறுதல்**

குறித்த பருவத்து எய்திய அணித்தாக வந்த தலைமகன் புறவை நோக்கி, ''புறவே கொன்றை மலர்கள் பொன்னெனக் கருதுமாறு மலர்ந்தன. தேன் மிகுந்த காயாம்பூக்களும் மணியென்னுமாறு மலர்ச்சியுள்ளன. இவற்றோடு தோன்றியும் மலர்ந்து. இவற்றால் நீ நன்னலம் எய்தி நின்கின்றாய் ஒளி பொருந்திய நெற்றியினையுடைய என் காதலியோடு அவளுடைய அழகிய நலத்தினை மேலும் மிகுந்தற் பொருட்டாக நின்னைக்காண வருவேன் என்று கூறினான். (ஐங்.420:1-5)

**தலைவன் மழையை வாழ்த்திக் கூறுதல்**

வினைவயிற் பிரிந்த தலைமகன் அவ்வினையை முடித்து, மீண்டுவந்து தலைவியுடன் உறைவானாயினன். அவன் கார்ப்பருவத்திலே பெய்த மழையை நோக்கி, ''மேகமே! உதவி புரிந்தனை; நீ உலகத்துக்கு ஆதாரமாகப் பலரும் தொழும்படி மலைச் சிகரங்களில் நின்று உலாவுவாயாக'' என வாழ்த்தினான். (நற்.139:5-10)

காதாசப்தசதியில் தலைவன் முல்லையை நோக்கிக் கூறுவதோ, புறவை நோக்கிக் கூறுவதோ, மழையை வாழ்த்திப் புகழ்வதோ எதுவும் இடம் பெறவில்லை.

**தலைவன் கண்டோருக்கு உரைத்தது**

தலைவன் வினைமுடித்து மீள்கையில் வழியிடைக் கண்டாரிடம், ''புதியவர்களே! தலைவியை இதுவரை நான் பிரிந்திருந்தேன். அதனால் விரும்பத்தக்க கரிய மணிபோலும் அலங்கரிக்கப்பெற்ற நெடிய கூந்தலையும்

திருந்திய அணிகலன்களையும் இனிய மொழிகளையும் உடைய அவள் இதுவரை பிரிந்திருந்தமையின் கண்ணிலிருந்து வடியும் நீர் மார்பை நனைக்க வருந்தியிருந்தான். இப்போது நாம் புதியேமாய் வருதலின் எமக்கு விருந்து செய்யும் விருப்பம் கொண்டு, உணவு சமைக்கும் செயலில் வருந்துவள் ஆயினள். தேன் போலும் மொழியுடைய தலைவியின் இப்புதிய நிலையை யாம் இப்போதே பெற்றோம் என மகிழ்ந்து கூறினான். (நற்.374:5-9) காதாசப்தசதியில் இல்லை.

**தலைவன் தலைவிக்குக் கூறியது**

வினைமேற் செல்லும் தலைவனை நினைத்து தலைவி வருந்துவதனை அறிந்த தலைவன் அவளை ஆறுதல்படுத்துவதும் குறித்த பருவத்திற்கு முன்னரே வந்து தலைவியை மகிழ்வித்தலும் செய்வான். இந்நிலையில் இருபத்திரண்டு[23] பாடல்கள் காணப்படுகின்றன. காதாசப்தசதியில் தலைவன் தலைவிக்குக் கூறுவதாகிய கூற்று இடம்பெறவில்லை.

அரசன் கடமையை மேற்கொண்டு தலைவன் பிரிந்து செல்ல விழைந்ததைக் குறிப்பாலுணர்ந்தாள் தலைவி. அவள் மேனிவேறுபாடு அவளுடைய உடன்பாடு இன்மையைக் காட்டிற்று, அவள் உடன்படும் வகையில் தலைவன் “அடர்ந்த கரிய கூந்தலை உடையாய், யான்பகை மன்னர்களுடைய வெற்றிக் கொடிகள் உயர்ந்த மதில்களை அழித்தனவும் இயல்பிலேயே போர்க்குணம் கொண்டனவுமான யானைப்படைகளைக் கொண்ட நம் வேந்தனின் பகைவர்களை வெல்லுவதற்கு நீ நின் படப்பினை விடுத்து ஆற்றியிருப்பாயாகில் செல்வேன் என்று கூறி உடம்படுமாறு கூறினான்” (ஐங்.429:1-4)

அதுபோல் வினைமுற்றிப் புகுந்த தலைமகன் கிழத்தியோடு உடனிருந்து “தான் பிரிந்த காலத்தில், தான் வேண்டிக் கொண்ட வண்ணம் பெய்யாது, தலைவியின் உயிரைக் காத்த மாரிக்குத்தான் செய்யும் கைம்மாறு வேறு இல்லாமையால், ‘வாழி’ என அதனை வாழ்த்தினன். மேகம் செய்த உதவியால் தான் தலைவியின் கூந்தலாகிய மெல்லணை வாய்க்கப்பெற்றது எனத் தலைவன் நினைத்தான். தலைவியின் கடவுட்கற்பால் மழை நிலைபெறுவதால் அதனை வாழ்த்தினன். இவ்வாறு பொருள்முற்றிய தலைமகன், அப்பொருளால் அறனும் இன்பமும் எய்தப் பெற்றமையால், அம்மூன்றனுக்கும் ஏதுவாகிய மேகத்தை வாழ்த்தினன்” (குறுந்.270:1-8)

**தலைவன் பாணனைத் தூதாக விடுத்தல்**

பாணனைத் தலைவித்தூதாய் தலைவனிடம் அனுப்புதலும் தலைவன் தலைவியிடம் அனுப்புதலும் உண்டு. இது குறித்து மூன்று பாடல்கள்[24] இடம் பெற்றுள்ளன. காதாசப்தசதியில் பாணன் கூற்று இல்லை.

மன்னனுக்குப் போர்த்துணையாகச் சென்ற தலைமகன், உரிய பருவத்தை மீள இயலாதவனாகி, பாணனைத் தலைவிபால் தூதனுப்பினான். அப்பொழுது ‘‘பாணனே! எம் தலைவி தன் குளிர்ந்த மலர்போலும் நெடுங்கண்கள் பசலை பாயப்பெற்று, என்மேல்கொண்ட புலவி மிக உடையவளாய், பெருந்துயரம் எய்தி, பொறுத்தற்கரிய நினைவுகளால் அல்லலுறுவாள், அவளுடைய செயலற்ற நெஞ்சிற்கு உசாத் துணையாக நீ விரைந்து சென்று சிறிது பொழுது தாழ்ப்பாயெனில் ஆங்கு எம்தேர் வருதலைத் தவறாது காண்பாய் எனக் கூறினான்’’ (ஐங்.477:1-5)

அதுபோல் தலைவன் வினைமேற்சென்று வினைவிடப் பெறானாய்ப் பாசறையில் தங்கினான். ஆற்றாமைமிக்க தலைவி தன் கணவன்பால் பாணனைத் தூதாகவிடுத்தாள் பாணண் கூறியதைக் கேட்ட தலைமகன் அச்சொற்கள் தன் தனிமைத்துயர்க்கு மருந்தாகும் என மகிழ்ந்து கூறினான். (ஐங்.479:1-5)

**தலைவி தோழிக்குக் கூறியது**

அரசனுக்கு உற்றுழி உதவத் தலைவன் தலைவியைப் பிரிந்தான். பிரிந்தபோது கார்காலத் தொடக்கத்தே மீண்டு வருவேன் எனச் சொல்லிப்பிரிந்தான். அவன் சொல்லிய கார்காலமும் வந்தது. ஆனால் தலைவன் வரவில்லை. தலைவி ஆற்றாது பெரிதும் வருந்தினாள். அதுகண்ட தோழி, ‘‘ஆற்றியிருக்க என்று வற்புறுத்த தலைவி தோழிக்கு தான் ஆற்றுதற்கு இயலாமையும் பருவ வரவு வந்து தன்னை வாட்டுவதையும் கூறுகின்றாள் இவ்விதம் அமைந்த பாடல்கள் ஐம்பத்திரண்டு[25] ஆகும். இவற்றிற்கு முற்றிலும் மாறாக காதாசப்தசதியில் தலைவி தோழியிடம் கூறுவதாக ஒருபாடல் அமைந்துள்ளது.

ஆற்றுவிக்கும் தோழியிடம் தலைவி ‘‘நம் தலைவரோ வெஞ்சின வேந்தனின் மிகப்பெரிய பாசறையின்கண் இருந்து கொண்டு நம்மை மறந்தார். நாம் அவரை மறக்கமுடியுமா அவர் வேண்டுமானால் பகைவென்று வாகை சூடலாம். ஆனால் கொல்லும் களத்தில் கொலைஞர் வருமாறு போல எம் உயிரை உண்ணுதற்கு வருகின்ற மாலைப் பொழுதை நாம் எவ்வாறு வெல்லமுடியும். இனி நாம் என் செய்வோம். எங்ஙனம் ஆற்றியிருப்பேன்’’.

(அகநா.364:9-14) என ஆற்றி இருத்தலின் அருமைப்பாடு பாடுபொருளாகி முல்லையொழுக்கச் சிறப்பினை வெளிப்படுத்துகின்றது.

“முல்லைக்கலியில் தலைவி தோழியிடம் அறத்தொடு நிற்குமாறு வேண்டும் ஒழுக்கம் சுட்டப்பெற்றுள்ளது” (கலித்.111,114) இதனை வ.சுப.மாணிக்கனார் “முல்லைக்கலி நல்லுருத்திரனார் அகத்திணைக்குரிய முதல், கருப்பொருள்களைக் கொண்டாரேனும் இருத்தல் பாடாது குறிஞ்சிக்குரிய புணர்தலையும் பாடி இலக்கிய வெற்றி அடைந்தார். உரிப்பொருள் மாற்றத்தாலும் ஆயர்தம் ஒழுகலாறுகளைக் கொண்டு கூறியதாலும் முல்லைக்கலி புத்தொளி பெறுவதாயிற்று என்றும் கூறினார். இத்தகைய இவரின் கூற்று உரிப்பொருள் குறிப்பிட்ட திணைக்கே உரிமை உடையதாக வரும் எனும் கருத்தையும் உரிப்பொருள் பிற திணைகளிலும் பாடப்பெறலாம் என்பதை வெளிப்படுத்துகின்றது”[26] என்பர். காதாசப்தசதியில்,

**“எதுஎது வேண்டும் என்றே தோழிகள்**
**புதுவயாக் கொண்ட பொலந்தொடி நங்கையை**
**மீண்டும் மீண்டும் வினவ அவளோ**
**ஆண்டகை தன்னையே அவாவுடன் பார்த்தாள்”(காதா.14:1-4)**

அதாவது, தலைவியிடம் தோழிகள் என்ன வேண்டும் என்று கேட்டதும் தலைவி என் விருப்பம் எவை என்பதை அவரே அறிவார் அவ்வளவு ஒன்றி உள்ளோம். ஆகையால் அவரிடமே கேளுங்கள். அவரே கூறுவார் என்று கூறுவதுபோலத் தலைவனைப் பார்த்தாள் என்று உரை கூறுவர்.

**தோழி தலைவனைப் பாராட்டிக் கூறுதல்**

வினைவயிற் பிரியுங்காலத்துக் ‘கார்ப்பருவத்தே வருவேன் வருந்தாதே’ என்று கூறிச் சென்ற தலைவன் தன்வினை முடித்துக் குறித்த பருவத்தே தவறாமல் வந்தான். அதனைக் கண்டு மகிழ்ந்த தோழி அவனைப் பாராட்டுவதாக ஐந்து[27] பாடல்கள் அமைந்துள்ளன. காதாசப்தசதியில் தோழி தலைவனைப் பாராட்டுவதானப் பாடல் இடம் பெறவில்லை.

வினைமுற்றிப் புகுந்த தலைவனின் தேர் மாலைப்பொழுதில் வந்ததனைக் கண்டதோழி, மகிழ்ந்து “இனித் தலைவியின் அழகு பசலையால் கெடா தென்றும் முன்பு பரத்தையிற் பிரிந்த தலைவனைத் தலைவி வெறுத்தாற் போல வெறுக்காது இப்போது வினைமுற்றி மீளும் தலைவனை உவந்து வரவேற்பார் என உள்ளுறையானும் தோழி கூறினாள்”. (நற்.181:1-13) இப்பாடலில் குறித்த

பருவத்தே வினைமுற்றி மீளல் என்னும் செய்தி பாடுபொருளாகி முல்லையொழுக்கத்தை வெளிப்படுத்துகின்றது.

**தோழி தலைவற்குக் கூறியது**

முல்லைத்திணையில் தோழி தலைவனைச் செலவு உடன்படுத்துதலும் செலவழுங்குவித்தலும் உண்டு. இது மூவிடங்களில்[28] காணப்படுகின்றது. காதாசப்தசதியில் தோழி தலைவனிடம் தலைவியின் பிரிவுத்துயரைக் கூறும்போது, தலைவன் வரவுணர்ந்து மகிழ்ந்த தலைவியின் நிலையினைக் கூறும்நிலையில் நான்கு[29] பாடல்கள் உள்ளன.

பொருள்வயிற் செல்லக்கருதிய தலைவனிடம் தோழி, ''தலைவ! நீவிர் நாங்கள் தனித்தொழிய எம்மைக் கைவிட்டு வினைமேலிட்டுப் பிரிவீராயின், அப்போது கொல்லைகளிலே இருக்கும் ஆனிரை மேய்ப்போர்களின் சிறிய புனத்தைச் சார்ந்ததும் குறுகிய காலை உடையதுமான குராமரத்தின் குவிந்த கொத்திலுள்ள வெள்ளியபூ ஆடுகளை மேய்க்கும் இடையன் அணிந்து கௌ்ளுமாறு பூக்கும். அத்தகைய அகன்ற சீறூரின் கண்ணே நீ பிரியுங்காலத்துத் தங்குவேம். அவ்வாறு தங்குதலே எம் குடிப்பிறந்தார்க்குப் பெருமை என்று கூறினாள்''. (நற்.266:1-3)

அதுபோல் கார்ப்பருவம் தலைமகன் பிரிவதற்கு ஏற்றதன்று. ஆனால் அவன் அக்காலத்தில் பிரியவேண்டிய சூழல் தோன்றிற்று. அந்நிலையில் தலைவன் செலவைத் தடுக்கும் நோக்குடன் தோழி, ''தலைவ! கருநிறம் கொண்ட கார்காலமேகம் இடியுடன் மழையைப் பொழிகின்றது. இப்பருவத்தில் நீ தலைமகளின் ஒளி பொருந்திய நெற்றி பசலையுறுமாறு செலவினை மேற்கொள்ள விழைந்தனை யாமோ நின்னைப் பிரிந்து ஆற்றியிருக்கும் வன்மையுடையோமல்லோம். நின்பிரிவினை எண்ணி என் தோழியின் அழகிய மலர் போலும் கண்களும் நீர் ஒழுக நிற்கின்றன'' (ஐங்.423:1-4) என்று கூறி செலவழுங்குவித்தலும் முல்லைக்குரிய ஒழுக்கத்தைச் சுட்டுவனவாக விளங்குகின்றன.

காதாசப்தசதியில் தலைவி தன் கணவனின் குரல் கேட்டதும் அவனைக் காணும் வேட்கையில் எவ்வளவு தூரம் ஓடி வந்தாளோ அவ்வளவு தூரமும் அவன் நீங்கியமையின் தலைவியைத் தாங்கியவாறு வீட்டிற்கு அழைத்து வரவேண்டிருந்தது எனத் தலைவியின் பிரிவுத்துயரைத் தலைவனிடம் கூறினாள். (காதா:387:1-4)

மேலும் வினைமுடித்து வந்த தலைவனை வழியிடைக் கண்ட தோழி, 'தலைவ! அதோ உன் மனைவி புதுச்செவ்வாடை உடுத்தி, உன்னை மீண்டும்

சந்திக்கும் ஆசையால் உந்தப்பட்டு வீட்டை விழாநாள் போல் ஒப்பனை செய்திருக்கிறாள். தானே செய்த இனிப்புகளைத் தட்டிலேந்தி வீடுவீடாக இன்று வழங்கி வருகிறாள். (காதா.273:1-4) என்று தலைவியின் அன்புடைமையினைத் தலைவனுக்குப் புலப்படுத்தினாள்.

**தோழி தலைவிக்குக் கூறியது**

தலைவன் குறிப்பிட்டுச் சென்ற கார்ப்பருவ வரவினைத் தோழி தலைவிக்குக் காட்டி, தலைவன் இனிதே வருவார் நீ வருந்தாதே என்று தலைவியைத் தேற்றுவதாக பதினான்கு[30] பாடல்களும் பருவம் கண்டு அழிந்த தலைமகளைத் தோழி பருவமன்று என்று வற்புறுத்தியதாக ஏழுபாடல்களும்[31] பருவவரவின்கண் வரவு நிமித்தம் தோன்ற தோழி தலைமகட்கு கூறி ஆற்றுவிப்பதாக ஒருபாடலும்[32] தலைவன் பொருள்முற்றி மறுந்தந்தான் என மகிழ்ந்து தலைவியிடம் கூறுவதாக ஒருபாடலும்[33] தலைவன் சென்ற சுரம் நோக்கி தலைவி வருந்திய போது அவளை ஆற்றுவிப்பதாக பத்து பாடல்களும்[34] தலைவன் குறித்துச் சென்ற பருவம் வந்தும் தலைவன் வாராமைக்குத் தலைவி வருந்தியமையினால் தோழி அவன் வாராமைக்குரிய காரணத்தைக் கூறி ஆற்றுவித்து அறிவுறுத்துவதாக இருபாடல்களும்[35] அமைந்துள்ளன.

காதாசப்தசதியில் தலைவியின் இல்வாழ்க்கைச் சிறப்பினை வியந்துப் பாராட்டுவதாகவும் தலைவியை ஆற்றுவிப்பதாகவும் ஆறு[36] பாடல்கள் காணப்படுகின்றன.

வினைவயிற் பிரிந்த தலைவன் வருவேன் எனக் குறித்துச் சென்ற பருவம் வந்தும் அவன் வரவில்லை. பருவம் கண்டு ஆற்றாளாய தலைவியை ஆற்றுவிக்கும் பொருட்டுத் தோழி, “அகன்று விளங்கும் பொய்கையின்கண் பூக்களைக் கொய்துவந்து மெய்வருத்தம் பெற்ற நம் தோழியர் யாவரும் தம் மேனியின் வருத்தம் தீருமாறு அன்னை நம்மீது கொண்ட சினம் தணிந்து பெருமூச்சுவிட்டாள். அவள் அங்ஙனம் ஆகிய பொழுது மேகங்களும் இனிய நீரையுடைய பெரிய கடலகத்து வாயினால் உண்டு எஞ்சிய கடலின்நீர் சிறுநீர் என்னும்படி கொணர்ந்தன. மயிலின் அடிபோன்ற இலையையும் கரிய கதிராக அமைந்த பூங்கொத்துகளையும் உடைய நொச்சி வேலியிடத்து மனைக்கண் நடுவே முளைத்த முல்லைக்கொடி சென்று படர்கிறது. அவை இரண்டும் ஒருங்கே அரும்பு முதிர்ந்து மலருமாறு கார்காலம் எதிர்ந்து வந்து இன்று விடியலில் மழைபெய்தது. நம் காதலர் தொலைவில் உள்ள நாட்டில் இருப்பினும் நம்மிடம் மிகவாகிய பேரன்பினை உடையர் ஆயின் அங்கே தாம் கொண்ட வினைமுடித்தலால் அளவில்லாது ஏற்படும் புகழைக் கருதித் தாம் குறித்த

இக்கார்ப்பருவத்தின்கண் வராமல் அவ்விடத்திலேயே தங்குபவர் அல்லர்; இன்றுதான் கார்ப்பருவம் தொடங்குகிறது என்பதன் அறிகுறியாக மேகத்தின் முழங்கும் இடியினைக் கேட்டேன். ஆகையால் வருந்தாதே என வலியுறுத்தினாள்'' (நற்.115:1-11)

குறிஞ்சிக்குரிய ஒழுக்கம் முல்லையில் காணப்படுகின்றது. சான்றாக, தலைவிக்குத் தோழி, ஆயர் ஏறுதழுவினமை காட்டி, அதுகண்டு அவன் வருந்தாமல் இருக்க தாம் ஆண்டுப்பெற்ற நன்னிமித்தங்களைக் கூறினள். தம் சுற்றத்தார் கூறிய கூற்றினையும் தெரிவித்து தலைவன் பின்னும் ஒருநாள் வந்து ஏறுதழுவி நம்மை வரைந்து கொள்வான் எனக்கூறித் தலைவியை ஆற்றுவித்தனள். (கலித்.101:1-50)

காதாசப்தசதியில் திருமணத்திற்குப் பின்னர் தலைவி முகம் நிமிராமல் பார்க்கிறாள். பற்கள் தெரியாமல் சிரிக்கிறாள். வாயிலைக் கடக்காமல் நடமாடுகிறாள். எனத்தோழி வியந்து கூறுகிறாள் (காதா.402:1-4) அதுபோல்,

**''முன் னர் தடையிலா முளைப்பிற் சிரித்து**
**விளையா டிய அவ் விளங்கிழை யோளே**
**பின்னர் குடும்பப் பெருஞ்சுமை தாங்கி**
**தன்கட னாற்றும் தளைப்பட் டனளே'' (காதா.458:1-4)**

என இவ்வாழ்க்கையின் சிறப்பினைப் பாராட்டினள். மேலும் தலைவன் வினைவயிற் பிரிந்தமையின் காரணமாக வருந்திய தலைவியைத் தோழி,

**''செயல்முற் றிடுமுன் பயணி தனது**
**வீடு திரும்பக் கண்டு பீடுறும்**
**புதுக்கார் மழையிற் பூத்த முல்லை**
**வாய்திறந் தேசிரித் திடுதல் காணாய்'' (காதா.409:1-4)**

என்றுரைப்பள். வினைமுடியாமல் தலைவன் திரும்புவான் என்று கூறி ஆற்றுவித்தாள் மேற்கூறிய செய்தி முல்லையொழுக்கத்தைச் சுட்டுவதாக காதாசப்தசதியில் அமைந்துள்ளது.

**தோழி வாயில்களோடு உறழ்ந்து கூறியது**

வினைமுடித்த தலைவன் முல்லை மலர்களைச் சூடி இளையரோடு தேரேறி வந்தனன். அவன் வரவைத் தேரின் மணியொலி தெரிவித்தது. குதிரைகள் விரைந்து தேரைக் கொணர்ந்தன. தலைவி துன்பமெல்லாம் தீர்ந்து விருந்தயரும் விருப்பினளாயினள். வாயில்கள் தலைவன் குறித்த பருவம் கடந்தமையின் தலைவி அவன் வரவு அறிந்தனள் என்கிறாள். பின்

வாயில்களும் மகிழ்ந்தனர் (நற்.361:1-9) காதாசப்தசதியில் வாயில்கள் பற்றிய குறிப்பு இடம் பெறவில்லை.

**தலைவி பருவம்கண்டு புலம்புதல்**

தலைவன் மணம் புரியும் கருத்தினனாய்ப் பொருள்தேடச் சென்றான். தான் வருவதாகக் குறித்துச் சென்ற பருவம் வந்தும் தலைவன் வராததால் தலைவி மேகத்தைப் பழித்துக் கூறினாள். இந்நிலையில் இரு[37] பாடல்கள் அமைந்துள்ளன.

தலைவி மேகத்திடம் ''மேகமே! அவர் நிலை அறிவாயோ என்னுமாறு நீ இங்கு வரும் தொழில் சான்றோரின் செய்கையை ஒத்தது ஆகாது; ஒருசேர மயங்க மோதி ஒலிக்கும் நின்னுடைய குரல் வலிய இடியேறாய் முழங்கும். அவ்வொலி எங்கும் பரவிய பாம்புகள் தம் படம் குன்றுமாறு வலியடங்கச் செய்யும் அங்ஙனம் செய்வதேயன்றி மாட்சிமைப் பண்புடைய தலைவரின் நெஞ்சத்தைக் கனியச் செய்வதன்று. ஆகையால் நின் குரல் எனக்கு இனிமையைச் செய்யவில்லை'' என மனமிழந்து கூறினர். (நற்.238:6-11) இவ்வாறு காமம்மிக்க கழிபடர்கிளவியால் தலைவி வருந்துதல் முல்லை யொழுக்கத்திற்குரியதாக அமையும்.

**பாணன் கூறியது**

பிரிவாற்றாது வருந்தும் தலைவியின் துயர்தீர்க்கும் பொருட்டு பாணன் தனக்குப் பக்கமிருப்போர் கேட்குமாறு கூறுவதாக ஒருபாடல் அமைந்துள்ளது.

''பசுக்கள் ஊர்மன்றத்தே வந்து நிரம்பும்படி வரும் இந்த மாலைப்பொழுதில் கூட என்னை நினைந்து அவர் வரவில்லையெனில் இனிவரும் இரவுக்காலத்தே எந்நிலையை எய்துவேன் என்று கேட்ட தலைவியின் வினாவிற்கு விடை கூறமாட்டாது நிற்கிறேன். இவளின் துயர்தீர்க்கும் பொருட்டு யானும் என்யாழினை வருடித் தலைவனிடம் சென்றேன். சென்ற யான் விரைந்து வரும் குதிரைகளின் ஒலியைக் கேட்டேன். அங்ஙனம் விரைந்து வந்து கொண்டிருக்கும் தலைவனின் தேர்வரவினையான் கண்கூடாகக் கண்டேன்'' என்று பாணன் தலைவனது வரவினைக் குறிப்பாக உணர்த்தி தலைவியின் துயிலினைப் போக்க முனைகிறான். (அகநா.14:12-21) இல்லிருத்தலும் வினைமுற்றி மீளலுமாகிய இரண்டையும் கூறி இப்பாடல் முல்லை ஒழுக்கத்தை முழுமையாகப் படம்பிடித்துக் காட்டுகிறது.

**தோழி பாணனுக்குக் கூறியது**

தலைவனிடமிருந்து தூது வந்த பாணனுக்குத் தோழிக் கூறுவதாக மூன்று[38] பாடல்கள் பயின்று வந்துள்ளன.

தலைவன் பிரிந்தபொழுது தான் வருதற்குரிய பருவமாகக் கார்ப்பருவத்தைக் குறித்தான். அப்பருவம் வந்தும் அவன்வரவில்லை. இந்நிலையில் பாணன் தூதாகி வந்த பொழுது தோழி, ''சீறியாழ் மீட்டுவதில் தேர்ச்சியுடைய பாணனே! நும் தலைவர் குறித்த கார்ப்பருவம் வந்து இப்பொழுது நன்கு நிலைபெற்றுவிட்டது. எம் பொருட்டு இப்பருவத்தின் வருகையை அவர் உணரார் ஆனாலும் தாம் கூறிய உறுதி மொழிகள் பொய்த்தமைக்கு நாணாதார் ஆடுதலைக் கண்டு யான் நோகின்றேன்'' (ஐங்.471:1-5) எனக் கூறினாள். இது முல்லையின் ஒழுக்கத்தைச் சுட்டுவனவாகும்.

**தலைவி பாணனுக்குக் கூறியது**

தலைவியைக் காணச் சென்ற பாணன் அவள் பொருட்டுத் தலைவன் பிரிந்து உறையும் நாட்டிற்குத் தூது செல்ல விரும்பினான். அவன் விருப்பத்தைக் கேட்ட தலைவியின் கூற்றாக மூன்று[39] பாடல்கள் இடம்பெற்றுளது. ''யாழ் மீட்டுவதில் வல்ல பாண் மகனே! பலராலும் புகழ்ப்படும் சிறப்புக்களையுடைய உங்கள் குரிசிலை நினைந்து அவர் பொழுது பிரிந்துறையும் நாட்டிற்குச் செல்வதற்கு நீ விரும்பினையாயின் மிகவும் தெளிவாக, யாம் தாங்குதற்கு அரிய துன்பத்தினை எமக்குச் செய்த பொய் புகல்வதில் வல்லவரான அவர்போல் நீயும் எம்மை மறவாதிருப்பாயாக'' (ஐங்.473:1-4) எனக் கூறுவதன் மூலம் தலைவியின் ஆற்றாமைப் பண்பாகிய முல்லையின் ஒழுக்கம் புலப்படுகின்றது.

**தலைவன் பாணனைத் தூதாக விடுத்தல்**

மன்னனுக்குப் போர்த்துணையாகச் சென்ற தலைமகன், உரிய பருவத்தே மீள இயலாதவனாகி, பாணனைத் தலைவிபால் தூதுவிடுவதாக மூன்று[40] பாடல்கள் வந்துள்ளன.

பாணனைத் தூது அனுப்பிய தலைவன் ''பாணனே! எம் தலைவி தன் குளிர்ந்த மலர்போலும் நெடுங்கண்கள் பசலை பாயப்பெற்று என்மேல் கொண்ட புலவிமிக உடையவளாய், பெருந்துயரம் எய்தி, பொறுத்தற்கரிய நினைவுகளால் அல்லலுறுவாள். அவளுடைய செயலற்ற நெஞ்சிற்கு உசாத்துணையாக நீ விரைந்து சென்று சிறிது பொழுது தாழ்ப்பாயெனில் ஆங்கு எம் தேர்வருதலைத் தவறாது காண்பாய்'' (ஐங்.477:1-5) எனத் தலைவன் தலைவியை ஆற்றுவிப்பதன் மூலம் முல்லையொழுக்கம் வெளிப்படுகின்றது.

**பாணன் தலைவனிடம் வெறுத்துப்பேசுதல்**

தலைமகளுக்குத் தூதாய்ப் பாசறைக்கண் சென்ற பாணன், தலைமகனை நோக்கி, ''நம்பினாரைப்புரத்தல் தலைவராயினார்க்குக் கடன். இதனை

அறிந்தவன் தலைவனெனினும் தன்னையன்றிக் களைகண் காணாத தன் காதலியின் துயரம் கேட்ட பின்னும் அவன் உடனே புறப்படவில்லை. இவ்விரக்கமற்ற தன்மையால் தம்மையும் தலைவன் தொடர்ந்து புரப்பான் என்னும் நம்பிக்கை குறைந்தமையான் நினக்கு யாம் பாணரும் அல்லேம் எமக்கு நீயும் தலைவனும் இல்லை'' (ஐங்.480:1-5) என்றான். இவ்வாறு வெறுப்புற்றுக் கூறுவது போலத் தோன்றினாலும் பாணன் தன் தலைவனின் கடமையுணர்ச்சியையே பாராட்டினான் எனல் தகுவதாகும்.

**உழையர் கூறியது**

வினைமுற்றிய தலைவன் விரைந்து வந்து தலைவியொடு மனையுள் புகுந்து மகிழ்ந்திருந்தமையினைக் கண்ட உழையர்கள் கூற்றாக மூன்று[41] பாடல்கள் இடம் பெற்றுள்ளன. உழையர், ''தலைவன் வினைமுடித்துத் தேரில் ஏறியதைக் கண்டேன். ஏறியது கண்ட யான் வீட்டில் இறங்கியது கண்டேன். அவ்வளவு வேகமாக வினைமுடித்துத் திரும்பினான். அத்தலைவன் ஏறிவந்த தேரைச் செலுத்திய தேர்ப்பாகனைப் பார்த்துத் தலைவன் காற்றைக் குதிரையாகப் பூட்டித் தேர் செலுத்தினையா அன்றி மனத்தைக் குதிரையாகப் பூட்டித் தேர் ஓட்டினையா என்று புகழ்ந்துக் கொண்டே இல்லுள் நுழைந்தான். அவன் நுழைவால் வருந்தி இது காறும் விருந்தெதிராதிருந்த மனையுறை தலைவியோ விருந்தோம்பும் சிறப்பினைப் பெற்றாள் என்று சொல்லினர்'' (அகநா.384:6-14) இவ்வாறு உழையர் கூற்றாக அமைந்த இப்பாடலில் முல்லைக்குரிய உரிப்பொருள்களான இல்லிருந்தல் குறிப்பாகவும் வினைமுடித்துக் குறித்த பருவத்தே மீளல் விரிவாகவும் பேசப்பட்டுள்ள பாங்கு சிறப்புடையதாகும்.

**கண்டோர் கூறியது**

வினைமுடித்து மீளும் தலைவனைக் கண்டாருள் ஒருவர், ''முன்பு பாலை வழியே தேர்ச்சக்கரம் அதிரச் சென்ற தலைவன், தான் குறித்த கார்ப்பருவத்திற்குள் வினை முடித்து மீள்கின்றான். காலம் தாழ்த்தின் தலைவி வருந்துவள் என்பது கருதி விரைந்த தலைவனின் அன்பு பெரிது'' (நற்.394:1-9) என்று தலைவனின் பெருமை குறித்து மகிழ்ந்து கூறினமை முல்லையின் ஒழுக்கத்திற்குரியதாகிறது.

காதாசப்தசதியில் கண்டோர் சொல்லியதாக மூன்று[42] பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

''மிகவும் ஏழையான உழவன் ஒருநாள் சந்தைக்குப் போனான். எருது வாங்க வேண்டும் என்று அவனுக்கு ஆசை. ஆனால் கையில் பணமில்லை. சிறிது நேரம் சிந்தித்து குளிர்காலமாக இருந்தால் என்ன? தன் இல்லாளின்

கொங்கை வேது தன்குளிரைப் போக்கிவிடும் என எண்ணித் தன் கம்பனிப் போர்வையை விற்றுவிட்டு எருதுவாங்கிக் கொண்டு வீடு திரும்பினான்'' (காதா.201:1-4) இவ்வாறு உழவனின் குறிப்பறிந்து கண்டோர் கூறினர்.

**செவிலித்தாய் நற்றாய்க்குக் கூறியது**

கற்புக்காலத்து தலைவனின் மனைக்குச் சென்றுவந்த செவிலி தலைவியின் சிறப்பையும் தலைவனின் பெருமையினையும் நற்றாய்க்குக் கூறும் முறையாக பதினொரு[43] பாடல்கள் அமைந்துள்ளன. தலைவி இல்லறம் நிகழ்த்தும் சிறப்பினை, நேரில் கண்டறிந்து வந்த செவிலித்தாய், நற்றாய்க்கு நன்றாகக் காய்ச்சிய பாலை உறை ஊற்றிப் பெற்ற முற்றிய தயிரை காந்தள் மலரைப் போன்ற மெல்லிய விரல்களால் பிசைந்து குவளையைப் போன்ற மையுண்ட கண்களில் தாளிப்பினது புகை நெருங்கிப்படர இனிய புளிப்புச் சுவையுடைய குழம்பினைத் தலைவி, தானே துழாவிச் சமைத்தனள். அழுக்குற்ற அவ்விரல்களைத் தான் உடுத்தியிருந்த தூய ஆடையில் துடைத்தனள். அதனால் அழுக்கேறிய அவ்வுடையைத் துவையாமல் உடுத்திக் கொண்டனள். தான் சமைத்த உணவினைக் கணவன் உண்டற்கண் 'இனிது' என்று புகழ்ந்து கூறிய அளவில் ஒள்ளிய நெற்றியையுடைய அவள் முகம் பயின்றாரன்றிப் பிறர் அறியாதவண்ணம் நுண்ணியதாக மகிழ்ந்தாள். (குறுந்.167:1-6) என்பது முல்லைக்குரிய இல்லறத்தை வெளிப்படுத்துகிறது.

**பரத்தை கூற்று**

தலைவி தன்னைப் புறனுரைத்தாள் என்பது கேட்ட பரத்தை அவளுக்குப் பாங்காயினார் கேட்ப, ''நல்விருந்து கண்ட அளவில் இல்லத்தில் எதிர்கொண்டு போற்றும் நல்லோர் போல் வண்டுகளின் வருகையை அறிந்து ஆம்பல்கள், தங்கள் இதழ்களாகிய கதவுகளை விரித்து வரவேற்றன. தன்னுடைய காமத்தின் செவ்வி அறிந்து துய்ப்பவன் தலைவன் என்பதையும் அவனுக்கு ஏற்ப இனியளாய் இன்பம் தருபவள் தானே என்றும் பரத்தை கூறினாள். இத்தகைய செவ்வியறிந்து இன்பம் நுகரும் நெறியைத் தலைவி அறியாள் எனக்கூறி அவளை இகழ்ந்தனள். (குறுந்.370:1-5) இது மருதத்திற்குரியது. முல்லைக்கு வந்த திணை மயக்கப்பாடலாகும்.

**செவிலி தன்னுள் மகிழ்ந்து கூறுதல்**

மகள் வீட்டிற்குச் சென்ற செவிலித்தாய், தலைவியும் அவள் கணவனும் தம் மகனோடு கூடியிருந்து பாணனது யாழிசைப்பாட்டினைக் கேட்டு மகிழ்ந்திருந்த காட்சியைக் கண்டு உள்ளம் மகிழ்ந்து (ஐங்.410:1-5) தன்னுள்ளே கூறினாள். இது முல்லையொழுக்கத்தை எடுத்துரைப்பதாகும்.

**தலைவி கொழுந்தனுக்குக் கூறியது**

வானத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் கொழுந்தனிடம் உம் இல்லாளைப்பாரும் கொழுந்தனாரே எனத் தலைவி கூறி நெறி வேறுபட்ட கொழுந்தனைத் தாய்போல் திருத்துகிறாள். (காதா.434:1-4)

**பாங்கன் தலைவனுக்குக் கூறியது**

தலைவன் பிரிந்து சென்று நெடுநாள் தங்கி இருந்தான். அதனைக் கண்டு, ''இது காறும் இருந்தது சரிதான் வேனிற் காலத்தில் காதலர் மன்மதன் மலரம்புகளால் துன்புறுவர். அதனால் கட்டுப்பாடுடையோரும் கடமை தவறிவிடுவர் என்றாலும் வசந்த காலத்தை உணர்த்தும் குரவகத்தின் தனிமணம் படர்ந்தும் கூட அவள் என்றும் போலக் கற்பாற்றி இருக்கிறாள் இனியேனும் விரைந்து சென்று காதலியை அடைவாயாக'' (காதா:183:1-4) என்று பாங்கன் அறிவுரை கூறினான்.

**தலைவி தலைவனிடம் கூறுதல்**

அன்பு மாறாமல் என்றும் ஒருபடித்தாய் அமையும் ஆன்றோர் அரியர்! கடன் எப்படி நாள் தோறும் தோன்றாமல் வளர்ந்து கொண்டே போய் அவர்தம் குழந்தைகளையும் அடைகிறதோ அது போல அன்பும் அமைதல் வேண்டும் என்றாள். அதாவது உன் அன்பும் என்னிடம் வளர்ந்து என் மகவிடமும் படர்தல் வேண்டும் என்று தலைவனிடம் கூறுகிறாள். (காதா.102:1-4)

**தலைவனின் தாய் அறிவுரை**

**''இன்மையு முடைமையும் இன்பமும் துன்பமும்**
**இல்நிலை யுடன்தெரிந் திருப்பவள் பெண்ணாம்**
**மற்றவள் மனிதனைப் பற்றிய மூப்பாம்;**
**நற்றவப் புதல்வ! நன்கறிந் திடுவாய்'' (காதா.392:1-4)**

என நல்ல மணமகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று தாய் கூறுகிறாள்.

**பாலை உரிப்பொருள்**

பாலைக்குரிய உரிப்பொருள் பிரிதலும் பிரிதல் நிமித்தமும் ஆகும்.[44] தலைவன் பொருள்வயிற் பிரிதல் வேந்தர்க்கு குற்றுழிப்பிரிதல் முதலிய பிரிவினைத் தோழிக்குக் கூறுவதும் தோழிக்குக் கூறுவதற்கு முன்பே தலைவி தலைவனின் பிரிவினைக் குறிப்பால் உணர்ந்து வருந்துவதும் உண்டு. அதனைக் கண்ட தலைவன் ஆற்றுவிக்கும் பொருட்டு தனது செலவினை நிறுத்துதலும் உண்டு அவ்வாறு அன்றி தோழியே தலைவியின் நிலையினை உணர்ந்து தலைவனைச் செலவழுங்குவித்தலும் உண்டு. சில இடங்களில் தலைவன் தலைவியை உடன்போக்கு அழைத்து செல்வதும் உண்டு அதனை

அறிந்த செவிலித்தாயும் நற்றாயும் வருந்திபுலம்புவர். பொருள் வயிற்பிரியும் இடத்து தலைவன் தலைவியை நினைத்து வருந்துவதும் பாசறையின்கண் தன் நெஞ்சிடம் பிரிவுத்துயரைப் புலப்படுத்துவதும் உண்டு. தலைவன் பிரிந்து சென்ற நிலையில் தலைவனை நினைத்து வருந்துவதும் பிரிவாற்றாமையில் இறந்துவிடுவேன் எனத் தலைவி தோழியிடம் கூறுவதும் நிகழும். அந்தச் சூழலில், தோழி 'நீ ஆற்றியிருத்தலே உன்கடமை இனியும் உன் தலைவர் காலம் கடத்தமாட்டார். விரைந்து வருவர்' என்று ஆறுதல்கூறி அமைதிப்படுத்துவதுமுண்டு. இவையெல்லாம் பாலைக்குரிய உரிப்பொருளாகும். காதாசப்தசதியில் தலைவி பிரிவாற்றாமையால் வருந்துதலும் தோழி ஆற்றுவித்தலும் உண்டு. தலைவியின் நிலைக்கண்டு தலைவன் செலவழுங்குதலும் தோழி செலவழுங்குவித்தலும் உண்டு. தலைவியின் பிரிவுத்துயரைத் தோழி பாங்கனிடம் கூறுதலும் தலைவியின் பிரிவாற்றாமையினைத் தோழி தலைமகனிடம் கூறி விரைந்து வருமாறு கூறுதலும் நிகழும். தோழி தலைவியின் தலைவனின் செலவினைக் கூறியபோது அதற்கு மறுமொழியாகத் தலைவி வருந்திக் கூறுவதும் தலைவி ஆற்றிடை வருந்தம் கண்டு சொல்லுவதும் பிரிவால் வருந்திய மருமகளை மாமியார் ஆற்றுவித்தலும் தலைவியின் அன்புமிகுதியை தோழி தலைவனிடம் கூறுதலும் தலைவி தோழியிடம் தலைவனை இயற்பழித்து கூறுதலும் இயற்பழித்த தோழிக்கு இயற்பட மொழிதலும் தலைவனின் பிரிவால் வருந்து தலைவியின் நிலையினைக் கண்டோர் கூறுவதும் தலைவி மாமியிடம் தன் பிரிவாற்றமையினைக் கூறுதலும் கண்டோர் தலைமகனை இயற்பிழித்து கூறுதலும் தலைவன் வரவுணர்ந்து தலைவி மகிழ்தலும் தலைவியின் பிரிவுத்துயரை பாங்கன் தலைவனிடம் கூறுதலும் இடைச்சுரத்து தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறுதலும் உடன் வருவேன் என்ற தலைமகளுக்கு தலைமகன் நீரில்லா நீளிடையில் நேரும் துன்பங்களை எடுத்துரைத்தலும் வினைமுற்றி மீளுந் தலைமகனுக்கு நொதுமலர் கூறியதும் ஆற்றிடைக் கண்டோர் தலைமகனைத் தேற்றுவதும் பிரிவால் வருந்திய தலைமகன் நெஞ்சுக்கு கூறுவதும் தலைமகன் பருவங்கண்டு அழிதலும் தலைவனைச் செலவழுங்குவிக்குமாறு தலைவி கூறுவதும் தோழி வரவு உணர்ந்து கூறுதலும் தலைமகன் தன் ஆற்றாமையைக் கூறுவதும் பாலைக்குரிய உரிப்பொருளாக அமைந்துள்ளன.

**தலைவி தோழிக்குக் கூறியது**

தலைவி தோழிக்குக் கூறியதாக நூற்றிநாற்பத்தேழு[45] பாடல்கள் காணப்படுகின்றன. அதில் பிரிவிடை ஆற்றாளாய தலைமகள் சொல்லியதாக

நூற்றிமூன்று[46] பாடல்களும் செலவுணர்த்தியத் தோழிக்குத் தலைமகள் சொல்லியதாகப் பதினொரு[47] பாடல்களும் பிரிவின்கண் தலைமகன் அறிவு மயங்கிச் சொல்லியதாக ஒரு பாடலும்[48] பருவங்கண்டு அழிந்து சொல்லியதாக பதினாறு[49] பாடல்களும் உடன்போக்கு உணர்த்திய தோழிக்குச் சொல்லியதாக இரண்டு[50] பாடல்களும் பொருட்பிரிவுக்கு உடன்பட்ட தோழியைத் தலைவி உவந்து கூறியதாக ஒரு பாடலும்[51] செலவு குறிப்பறிந்து வேறுபட்ட தலைவி கூறியதாக நான்குபாடல்களும்[52] உடன்போயினத் தலைமகள் மீண்டு வந்துழி தோழிக்குக் கூறியதாக ஒரு பாடலும்[53] வந்துள்ளன. அதுபோல்

காதாசப்தசதியில் தலைவியின் பிரிவாற்றாமையைக் கூறுதல் தோழி தலைவியிடம் தலைவனின் செலவினைக் கூறியபோது அதற்கு மறுமொழியாகத் தலைவி வருந்திக் கூறுதல் தலைவி ஆற்றிடை வருத்தம் கண்டு சொல்லியதும் தலைவி தோழியிடம் தலைவனை இயற்பழித்து கூறுதல் இயற்பழித்தத் தோழிக்குத் தலைமகள் அவனை இயற்பட மொழிதல் தலைவி தலைவன் வரவுணர்ந்து மகிழ்தல் தோழிக்கு வன்புறை எதிரழிந்து மொழிதல் தலைவி தனது ஆற்றாமை மீதூர கூறுதல் பருவம் கண்டு அழிதல் எனத் தலைவி தோழிக்குக் கூறியதாக இருபத்தொரு[54] பாடல்கள் காணப்படுகின்றது. அதோடு தலைவி மாமியிடம் தன் பிரிவாற்றாமையினை வருந்திக் கூறுவதாக ஒரு பாடல் (காதா.108:1-4) இடம்பெற்றுள்ளது.

தலைவன் பொருள்வயிற் பிரிந்தான். பிரிவாற்றாது வருந்தும் தலைவியைத் தோழி தலைவன் வருங்காறும் ஆற்றியிருக்குமாறு வற்புறுத்தினாள். அதுகேட்ட தலைவி “வானவரம்பன் பொன்னாலான மாலையையுடையவன். நல்ல வேற்படையினை உடையவன். கடலிடத்துப் படை நடத்திப் பகைவரைக் கொன்று அழித்த வெற்றியினை உடையவன். அவனது வலிமை பொருந்திய போர் முனையிற் கலங்கிய உடைந்த மதில்களை உடைய ஓா் அரணைப் போல அச்சம் பொருந்திய வருத்தத்தால் துயிலைத் துறந்த யான் ஆதி மந்தியைப் போலக் காதலனைக் காணாத சிறுமையினால் யானும் மிக்க வருத்தமுற்றுத் துன்புற்று உழல்வேனோ? என ஆற்றியிருத்தல் தன்னால் இயலாது என்ற பொருள்படக் கூறினாள்” (அகநா.10:19)

அதுபோல் காதாசப்தசதியிலும் தலைவி ஒருத்தி “மருத்துவா் இல்லை என்றால் எப்படி நோய் பொறுக்க இயலாததாகுமோ? சுற்றத்தார் இடையில் வாழ்பவன் செல்வம் இல்லாவிட்டால் எப்படிப் பொறுத்தற்கரிய வறுமையை உணா்வானோ? பகைவா் செல்வம் வளம் மிகுதல் கண்டு பார்த்துக்

கொண்டிருப்பது எப்படி பொறுக்க முடியாதோ? அதுபோலக் காதலரின் பிரிவும் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது என்று கூறுகிறாள்'' (காதா.295:1-4)

**செலவுணர்த்திய தோழிக்கு தலைவிக் கூறியது**

உரிய காலத்தில் பெய்யும் மழை பெய்யாது ஒழிந்தமையால் தனிமையுற்ற பாலை நிலத்தில் கள்ளிச் செடியின் முற்றிய காய்கள் வெடிக்கும். அவ்வோசை கேட்ட மெல்லிய சிறகுகளையுடைய ஆணும் பெண்ணுமாய் இணைந்து வாழும் புறாக்கள் பிரிந்து ஓடும். இத்தகைய காடுகள் செல்லுதற்கு அரியன என்று கருதாமல் அருள் செய்வதற்குரியராகிய காதலர் அருள் செய்யப்படுவதற்கு உரியராகிய நம்மைப் பிரிந்து பொருளைத் தேடும் பொருட்டுச் சென்றார். ஆதலின் இவ்வுலகிற்கு உயர்வாக ஏற்றுக் கொள்ளும் பொருளாகும். உயர்வாக யாரும் ஏற்றுக்கொள்ளாதது அவ்வுலகிற்குரிய அருளேயாகும் என செலவுணர்த்திய தோழிக்குத் தலைவிக் கூறினாள். (குறுந்.174:1-4)

காதாசப்தசதியில் செலவுணர்த்தியத் தோழியிடம் தலைவி ''யார் சொன்னாலும் இனிக் கேட்க மாட்டான். கல்மனம் கொண்ட உறுதி படைத்தவன். தம்மால் இயலாததை தெய்வத்தை வேண்டி இறைஞ்சுவது போல, தலைவியும் தன்னால் செலவு தவிர்த்தல் இயலாதெனக் கருதி, இரவை நோக்கி, 'நாளை' என்று ஒரு நாள் வந்தால் தானே பிரிவான். இனி விடியாமல் இருந்தால் நாளை வராதல்லவா? ஆகையால் 'இரவே நீ விடியாமல் நெடிதாய் அமைக என்று கூறி வருந்தினாள்''. (காதா.43:1-5)

**தலைவி பருவங்கண்டு வருந்திக் கூறுதல்**

வினைவயிற் பிரிந்த தலைவன் வருவேன் எனக் குறித்த காலத்தும் வராமையால் தலைவி மனம் ஆற்றாது இருந்தனள். அவள் இளவேனிற் பருவத்தைக் காணும் தோறும் அவர் நம்மை மறந்தார் என வருந்துவதோடு, ''தம் பொழில் திறமிக்க ஓவியர் ஒளிபொருந்திய அரக்கினில் தோய்த்த எழுதுகோல் போன்றுள்ள தலையில் நுண்ணிய பஞ்சினையுடைய பாதிரி மலர்ந்தன. பாதிரியின் வெண்மையான இதழுடைய புதிய மலர்களை வண்டுகள் மொய்க்கும்படி சுமந்து தெருத்தோறும் விலை கூறிச் செல்வார் பூவிற்கும் பெண். அது கண்டும் யான் ஆற்றேன் ஆயினேன் எங்ஙனம் ஆற்றியிருப்பேன் என்றும் வருந்தியுரைத்தாள். (நற்.118:6-11) காதாசப்தசதியில்,

**''செங்கதிர் எங்கோ? திங்களும் எங்கோ?**
**பொங்கொளித் தாரகை போனது மெங்கோ?**
**காலக் கணியன் கோல வானிடை**

**நாரைக் குழுவின் ஓரைகாட் டினனே''** **(காதா.348:1-4)**

எனத் தலைவி கதிரவனாகிய தலைமகன் கார் காலமாகியும் ஊர் திரும்பாமல் எங்கே சென்றான். அவனுக்குத் துணையாகச் சென்றவரும் திரும்பக் காணோம் என்னும் குறிப்பை வெளிப்படுத்தியவாளாய் பருவம் கண்டு வருந்தினாள்.

**போக்கு உடன்பட்ட தலைவி கூறியது**

போக்கு உடன்பட்ட தலைவி தோழியை நோக்கி. ''தோழியே என் நெற்றியும் மெல்ல மெல்ல பசலை பாய்ந்தது. தளிர் போன்ற என்மேனியும் நுணுகி மெலிவுற்றது. என் துன்பமும் பலரும் அறியுமாறு விளங்கித் தோன்றியது. அதனைக் கண்ட தாயும் இற்செறித்தல், கடிந்துரைதல் நிரையப் பெண்டிர் பழிக்கூறுதல் என பல நிகழ்தமையாலும் தலைவனுடன் பாலை நிலத்தின் வழியே போக்கு உடன்பாட்டமைக்கான காரணமாகும். (அகநா.95:10-15)

மேலும் தமர் தன்னைத் தன் காதலனுக்குக் கொடுக்க மறுத்தல் கூடும் என்று அஞ்சியும் இற்செறிப்பைப் பொறாமலும் தன் கற்பைக் காத்துக் கொள்ள விரும்பித் தலைவி தன் காதலனுடன் உடன்போக்கில் ஈடுபட்டாள். ஒருத்தி அவள் பின் மீண்டும் தன்னூர்க்கு வந்த பொழுது இடைச்சுரத்தில் நிகழ்ந்தவை பற்றி வினாவினாள். தலைவியும் அவள் விரும்பியவாறு ஆண்டு நிகழ்ந்தனவற்றைக் கூறினாள். ஐயன்மார்கள் பின் தொடர்ந்த பொழுது தன் காதலன் மலையொன்றில் மறைந்து கொண்டதனைச் சொல்லி அம்மலையினை,

**''அறம் சாலியரோ! அறம் சாலியரோ!**

**வறன் உண்டாயினும் அறம் சாலியரோ'' (ஐங்.312:1-2)**

என வாழ்த்தினாள். காதாசப்தசதியில் உடன்போக்கு பற்றிய குறிப்பில்லை.

**தலைவி - தலைவனுக்குக் கூறியது**

பிரிவு பற்றிக் கூற தலைவனிடத்துத் தலைவி தன்னையும் உடன்கொண்டு செல்லும்படி கூறினள். அதுகேட்ட தலைவன் காட்டின் கடுமையையும் தலைவியது மென்மையையும் கூறினாள். அதுகேட்ட தலைவி, ''சுரம் என் அடிக்கு எளியதன்றாயினும் வழியிடை உண்ணுநீர் இல்லை என்றாலும் தங்குதற்கு நிழலைத் தரும் மரம் இல்லை என்றாலும் நின்னைப் பிரிந்து இரேன் என்று தலைவி உறுதிபட மொழிந்தனள் பிரிந்திருந்தால் இறந்துபடுவேன் என்றும் கூறினாள். கலைமானைத் தொடர்ந்து செல்லும் பிணைமானைக் காட்டித் தன்னையும் உடன் அழைத்துச் செல்லக் கூறினள் அதுமட்டுமின்றி வாழ்நாள் சிலவாதலையும் இளமை வறிதே கழிதலையும் எடுத்துக் கூறித் தன்னையும் உடன் கொண்டு செல்லுங்கள் எனத் தலைவனிடத்துக் கூறினள் (கலித்.20-25)

காதாசப்தசதியில் கோடைக்கால நடுப்பகலில் சூரிய கிரணங்களின் வெம்மை சுடுதலால் ஆற்றாது காட்டு மரங்கள் அழுவது போலச் சில்வண்டுகள் இரைச்சல் கேட்கின்றது. இத்தகைய கோடையில் என்னைப் பிரிந்து போக நினைப்பது தகுமா? என்று தலைவி தலைவனைச் செலவழுங்குவிக்கக் கூறியும் (காதா.379:1-4) தலைவன் அதனை மறுத்தான். உடன் வருவேன் என்ற தலைமகளுக்கு தலைமகன் நீரில்லா நீளிடையில் நேரும் துன்பங்களை எடுத்துக் கூறி தடுத்தான். இதனை,

**‘‘காட்டு யானை கல்லிடுக் கினிலுள**
**பாம்பின் சட்டை பாய்புன லருவி**
**எனவே கருதித் தனது தலையை**
**வீணே நனைக்கும் விதமிது காணாய்’’ (காதா.480:1-4)**

சுட்டும்.

**தலைவி வழியிடைக் கண்டோரிடம் கூறியது**

தலைமகள் தன் காதலனுடன் சுரநெறியில் சென்றபொழுது அந்தணர்களை வணங்கித் தான் மகிழ்ச்சியுடன் தன் காதலனொடு சென்றதைத் தன் தோழியர்க்குச் சொல்லுமாறு கூறினாள் (ஐங்.384:1-5) அதுபோல் உடன்போக்கு மேற்கொண்ட ஒருத்தி, தான் விரும்பிய காதலனோடு தேரேறி உடன்போக்கு மேற்கொண்டமையினை தாயிடம் கூறுமாறு வழியிடை கண்டோரிடம் கூறினாள். (ஐங்.385:1-6) காதாசப்தசதியில் இக்கூற்று இடம்பெறவில்லை.

**தலைவி மாமியிடம் தன் பிரிவாற்றாமையினைக் கூறுதல்**

தலைவனைப் பிரிந்து தலைவி தலைவன் வரவை எதிர் பார்த்துச் சலிப்புற்றாள். சொன்ன கெடுவும் தீர்ந்தது இன்னும் வரவில்லை. அவளுக்கு உலகின் மேலேயே வெறுப்பு வந்தது. உடனே மாமியிடம் உலகில் எங்காவது வஞ்சிக்கப்படாத காதல் இருந்திருக்கிறதா? அப்படியிருந்திருந்தால் அவர்கள் எப்போதாவது பிரிந்ததுண்டா பிரிந்த பின் அவர்கள் உயிரோடிருந்திருக்கிறார்களா? என்றெல்லாம் வினாவி வருந்தினாள். (காதா.108:1-4)

**தோழி - தலைவிக்குக் கூறியது**

தலைமகன் செலவு உணர்ந்து வேறுபட்ட தலைமகட்குச் சொல்லியதாக ஐந்து பாடல்களும் தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட கிழத்திக்குச் சொல்லியதாக நாற்பத்தாறு பாடல்களும் பருவங்கண்டு அழிந்த தலைமகளைத் தோழி வற்புறுத்தியதாக இரண்டு பாடல்களும் உடன்போக்கு நேர்ந்த தோழி

தலைமகட்குச் சொல்லியதாக ஏழுபாடல்களும் பொருள்வயிற் பிரிந்து நீட்டித்தான் தலைமகன் எனக் கவன்ற தலைமகட்கு வருவர் என்பது படச் சொல்லித் தோழி ஆற்றுவித்ததாகவும் பொருள்வயிற் பிரிந்த இடத்து ஆற்றாளாய தலைமகட்குத் தோழி சொல்லியதாகவும் தலைமகன் வரவு உணர்ந்து தோழி தலைமகட்கு சொல்லியதாகவும் குறித்த பருவத்தே தலைவன் வந்தமையினைத் தலைவியிடம் மகிழ்ந்து கூறியதாக பொருள் முடித்து வந்தான் என்பது வாயில்கள் வாய்க்கேட்ட தோழி தலைவிக்கு உரைத்ததாகவும் என நூறுபாடல்கள்[55] காணப்படுகின்றன. அதுபோல் காதாசப்தசதியிலும் தோழி தலைமகளை ஆற்றுவித்தல் பிரிவின்கண் வருந்திய தலைவியின் நிலைக்கண்டு தோழி வருந்துதல் பிரிவுக்காலத்தில் தான்படும் துயரத்தை அவர் உணருவாரா என்று வருந்திய தலைவிக்குத் தோழி கூறுதல் தோழி தலைவியை இடித்துரைத்தல் பருவங்கண்டு அழிந்த தலைமகளைத் தேற்றுதல் தோழி வரவு உணர்ந்து மகிழ்தல் எனத் தோழி தலைவிக்குக் கூறியதாக எட்டு[56] பாடல்கள் அமைந்துள்ளன.

**தோழி, தலைவியை ஆற்றுவித்தல்**

தலைவன் பொருளீட்டுதன் பொருட்டுத் தன்னைப் பிரிவான் என்பதைப் பிறர் வாயிலாகக் கேட்டறிந்த தலைவி மிகவும் வருந்தினாள். அதுகண்ட தோழி, ‘‘முத்துக்களைப் போன்று பொலிவுடன் திகழும் உன்னுடைய பற்கள் பொருந்திய பவளம் போன்ற நினது துவர்வாய்ப் புன்முறுவலைச் சுவைத்த நம்பெருமான் நின்னைப் பிரியவும் துணிவரோ? துணியார் துணிந்தாராயினும் நின்னுடைய செவ்வரியோடிய மையுண்ட கண்கள் உவந்து நோக்கும் நோக்கம் அவர் நின்னை நீங்கிச் செல்வதற்கு எவ்வாறு விடும்? விடாது எனவே நீ வருந்தாதே’’ (அகநா.27:9-17) என்று கூறித் தேற்றுகிறாள். அதுபோல் காதாசப்தசதியிலும் தலைவன் பிரிவதை உணர்ந்த தலைவி வருந்தி அழுதபோது, தோழி அழாதே! அவர் போகமாட்டார். நிறை குடங்களின் மீது கட்டப்பட்ட புதுமாவிலைகளும் மலர்களும் அவர் பயணத்தைத் தடுத்துவிடும். அவர் உன்னை எப்போதும் பிரியமாட்டார் (காதா.123:1-4) என்று கூறி ஆற்றுவித்தாள்.

**தோழி தலைவியை உடன்போக்கிற்கு உடன்படுமாறு கூறுதல்**

தலைமகற்குப் போக்கு உடன்பட்ட தோழி தலைமகட்குப் போக்கு உடன்படச் சொல்லினாள். அதாவது, களவொழுக்கத்தில் இருவகைக் குறியிடத்தும் இடையூறுகள் ஏற்பட்டன. எனவே தலைவன் தலைவியை யாரும் அறியாதவாறு உடன் அழைத்துச் செல்லவிரும்பினான். இக்கருத்தினைத் தோழிக்குக் கூறித் தோழியும் அதற்கு உடன்பட்டவளாய் தலைவியும்

அக்கருத்திற்கு உடம்படும் வண்ணம் “இலைவடிவிலான புதிதாக வடித்தெடுத்த சிறந்த வெண்ணிற வேலினையும் கருநிறத் தாடியினையும் உடன்போக்கிற்கு உடன்பட்ட அறிவினையும் உடைய காளை போன்ற நம் தலைவன் வளைந்த கிளைகளையும் திரண்ட அடிமரத்தினையும் உடைய வெண்கடப்ப மரத்தின் தேன்சிந்தும் மென்மையான பூங்கொத்துக்களைத் தளிருடன் கொண்டு வந்து நினது குளிர்ச்சி பொருந்திய கூந்தலில் சூட்டுவான். அத்தகைய தலைவனோடு நீ மூங்கில்கள் அழகு இழந்து அழிந்து படுமாறு மழைபெய்யாது மேகங்கள் வானத்து உயரே எழுந்து செல்லும் இடம் அகன்ற பாலையிடத்து, பெரிய வாயினையுடைய வேங்கை களிறாகிய இரை தப்ப, ஆறாச்சினம் கொண்டு முழக்கம் செய்ய அம்முழக்கம் கேட்ட கரிய பெண்யானைகள் அஞ்சி நிலைகெட்டு ஓடுதற்கு இடனான காட்டினையுடைய அரியசுர வழியில் செல்லுவதை யான் விரும்பி ஏற்றுக் கொண்டேன் என்று தோழி உடன்பட்டவளாய் தலைவியும் அக்கருத்திற்கு உடன்படும்வண்ணம் வலியுறுத்தினாள்.” (அகநா.221:5-14) காதாசப்தசதியில் உடன்போக்கு பற்றிய குறிப்பில்லை.

**பருவங்கண்டு அழிந்த தலைமகளுக்குத் தோழி கூறியது**

பொருள் ஈட்டச்சென்ற தலைவன், தலைவியிடம் இளவேனிற் பருவத்தில் மீண்டும் வருவதாகக் கூறிச் சென்றான். அப்பருவம் வந்த பின்பும் தலைவன் வராமையால் தலைவி பிரிவு ஆற்றாது வருந்தினாள். அதுகண்ட தோழி, திதியன் பகைவர் எதிர்த்து வரும் போரினை வென்று அவரைக் கொன்றொழித்த வெற்றிச் சிறப்புடைய விற்படை பொருந்திய பெரிய கையினையுடையவன். பொதியில் மலைக்குரிய செல்வன் பொன்னாலானத் தேரினையுடையவன். அத்தகைய திதியின் என்பானது இனிய வெற்றி முரசினைப் போல ஒலிக்கும் மலைவீழ் அருவிகளைக் கொண்ட காட்டினைக் கடந்து பொருளிட்டச் சென்றுள்ள நம் தலைவர், “இளையாளே! நீ இங்ஙனம் துன்பம் அடையுமாறு செய்த என் உயிர் வருந்துவதாக என மென்மை வாய்ந்த இனிய சொற்களைக் கூறிக்கொண்டு விரைந்து வருவார். எனவே அதுகாறும் ஆற்றியிருக்க என வற்புறுத்தினாள்.” (அகநா.25:15-22) காதாசப்தசதியில்

**“ஆதரித் திடுவீர்! அஞ்சுதல் வேண்டா!**
**நோய்கிர கம்முதற் பேய்பிடித் திடவிலை!**
**திடுமென முகில்கள் இடிமுழக் கிடவே**
**நெஞ்சங் கலங்கிய நேரிழை இவளே” (காதா.312:1-4)**

எனத் தலைவி தலைவனைப் பிரிந்து வாடினாள். கார்காலத் தொடக்கம். புதுமுகில்கள் வந்து புகுந்து இடித்து முழக்கம் செய்தன. நாங்கள் வந்துவிட்டோம் என்று கூறுவது போன்ற முழக்கம் கேட்டவுடனேயே தலைவன் வரவில்லையே என்ற ஏக்கம் தலைவியைப் பித்துப்பித்தாற் போலச் செய்தது. பெற்றோர், நோய் பிடித்தது, கிரகம் பிடித்தாட்டுகிறது. பேய் பிடித்தாட்டுகிறது என்று மருத்துவம் பார்க்க முயன்றனர். தோழி உண்மையான காரணத்தைக் கூறித் தலைவியின் உள்ளம் புரிந்து கொண்டு பழகச் சொல்கிறாள்.

**தோழி தலைவனின் வரவுணர்ந்து கூறுதல்**

தலைமகன் வரவுணர்ந்த தோழி தலைவிக்கு ‘‘தலைவனைப் பற்றி நினைக்கும் பொழுதெல்லாம் நினது வருத்தத்தை உடைய காமநோய்க்கு இளைப்பாறுதலாக உள்ளவர் நின் காதலர், பறவையினது பறத்தல் தன்மையைப் பெற்று விருப்பமுடைய கடிய திண்ணிய தேரை உடையவன் பாண்டியன். சொன்ன சொல் தவறாத வாய்மையாளன். வாய்மையை ஒத்து குறித்த எல்லை மீறாத நாளோடே கூடி இகழ்தல் நீங்கிய காதலர் வந்து சேர்ந்து கூடினார் என்றாள். (கலித்.35:22-25) காதாசப்தசதியில்,

**‘‘கைகால் விரல்களின் கணித்தித் துணைநாள்**
**கடந்த தினியான் கணக்கிட லெங்ஙன்?**
**என்றே பேதை இயம்பி ஏங்கி**
**உள்ளிழந் தந்தோ உருகி யழுவாள்’’ (காதா.254:1-4)**

எனத் தலைவனை நினைத்து வருந்திய தலைவியிடம் அவன் வரவுணைந்து கூறினாள்.

**பிரிவிடை வேறுபட்ட தலைவிக்குத் தோழி கூறியது**

தலைமகன் பிரிவின்கண் வேறுபட்ட கிழத்திக்கு தோழி, ‘‘உன்னுடைய துன்பமும் மெல்ல மெல்ல நீங்கும். ஒளிவிடுகின்ற கதிரவனும் பெரிய மலையின்கண் மறையா நிற்கும். நீரில்லாது வற்றிய குளத்தைத் துழாவிய விளங்கும் கொம்புகளையுடைய ஆண் யானை, குறிய உருண்டைக் கற்களுக்கு அருகில் தன்னுடைய பெண்யானையைத் தழுவி, வளைந்த கோடுகளையுடைய பெரிய புலியின் தாக்குதலினின்றும் பாதுகாக்கும். இத்தகைய கொடிய பாலைநிலத்தில் சென்றவர் யானையின் குணமும் செயலும் கண்டு வருவர் எனத்தோழி தலைவியை ஆற்றுவித்தாள். (குறுந்.215:1-7) காதாசப்தசதியில் பிரிவுக்காலத்தில் தான்படும் துயரத்தை அவர் உணருவாரா என்ற தலைவி வருந்திய போது தோழி

**“கோடை நடுப்பகல் கொளுத்தும் வெயிலிற்**
**கூடப் பிரிந்த ஆடவர் தமக்கே**
**மனத்துறை காதலி மதிமுக நிலவு**
**வெள்ளம் பாய்ந்து வெம்மை நீக்கும்” (காதா.323:1-4)**

எனத் தலைவியை நினைத்து எல்லாத்துயரத்தையும் பொருட்படுத்தாது விரைவில் வருவான் எனக் கூறி ஆற்றுவித்தான்.

**தோழி தலைவனுக்குக் கூறுதல்**

தலைவன் பொருளீட்டல் எண்ணிப் பிரியக்கருதிய சூழலில் தோழி அவன் கருத்தைக் குறிப்பால் உணர்ந்து செலவினைத் தடுத்தல் செலவழுங்குவித்தல் எனப்படும். எட்டுத்தொகை அகஇலக்கியத்தில் தோழி தலைவனைச் செலவழுங்குவித்தலாக நாற்பது[57] பாடல்கள் அமைந்துள்ளன. காதாசப்தசதியில் மூன்று[58] பாடல்கள் பயின்று வந்துள்ளன.

பொருள் ஈட்டுவதற்குத் தலைவியைப் பிரிந்து போகத் தலைவன் எண்ணியதை உணர்ந்த தோழி, தலைவனிடம் சென்று ‘‘தலைவியை விட்டு பிரிதற்கு இ∴து உகந்த பருவமன்று என்றும் ஆதலால், அக்கருத்தைக் கைவிடுக’’ என்றும் கூறிச் செலவழுங்கு விப்பாள். மேலும் தோழி ‘‘தலைவ நீவிர் பிரிந்தால் தலைவி தனது சிறிய நெற்றி பசலைபாயவும் பெரிய தோள்கள் மெலியவும் அகன்ற அல்குலில் கிடக்கும் அழகிய வரிகள் மழுங்கவும் இரவும் பகலும் தனிப்படர் மிகுதியால் மெல்லென மழை துளிர்ப்பப்போல் கண்களினின்றும் துன்பக் கண்ணீர்த் துளிகள் ஒழுகவும் துன்பம் எய்துவாள். இவற்றை எல்லாம் எண்ணிப்பாராமல் பொருளினைப் பெரிதும் விரும்பிச் செல்வது உனக்குப் பொருந்துமோ? பொருந்தாது. எனவே நீவீர் செலவுவிலக்குதலே பொருத்தமுடையது எனக்கூறிச் செலவழுங்குவித்தலும் செய்வாள். (அகநா.308:1-6) இவ்வாறு தலைவனிடம் தோழிக்குக் கூற்று நிகழும் அதுபோல் காதாசப்தசதியிலும் தோழி தலைவி தலைவன் பிரிவால் இறந்துபடுவேன் என்று நினைத்தாள். எனவே மற்ற சில பெண்கள் தலைவரைப் பிரிந்து உயிர் வாழ்கின்றார்களே அந்த ரகசியத்தை அறிய வீடு வீடாகச் சுற்றி வந்தமையினைத் தலைவனிடம் கூறி செலவழுங்குவித்தாள்.

**தலைவியின் ஆற்றாமையினை தலைவனுக்குக் கூறுதல்**

தலைவன் பிரிவின்கண் ஆற்றாளாகிய தலைவியின் நிலைமையினைத் தலைவனுக்கு கூறுவதாக ஐந்து[59] பாடல்கள் பயின்றுவந்துள்ளன. காதாசப்தசதியில் பத்து[60] பாடல்கள் அமைந்துள்ளன. தலைமகனால் பிரிவு உணர்த்தப்பட்ட தலைமகள் வருந்துகிறாள். அந்நிலையில் தோழி வேறுநாடு

செல்லும் தலைவன் நீட்டியது கூறிய பருவத்து வருதலை எண்ணி அவனை எதிர்ப்பட்டு ‘‘நீரற்ற பாலை நிலத்தே கொடிய ஆறலை கள்வர் இயங்கும் வழியில் தலைமகன் செல்ல வேண்டும் என்று செய்தி அறிந்த அளவில் வருந்தும் தலைவி, வெளியிற்போதாமல் விம்மிய சொல்லை உடையவளாய் என் முகத்தை நோக்குவாள். அவ்வளவில் அவளுடைய மலர் போன்ற கண்களிலிருந்து நல்ல மார்பின்கண் உள்ள அழகிய முலை முகட்டில் விழுந்து பரக்கும் படியாகக் கண்ணீர் மல்கிற்று. இந்நிலையில் நீ வருமளவும் அவள் எங்஖னம் ஆற்றியிருப்பாள் என்று கூறினாள்’’ (நற்.33:10-12) காதாசப்தசதியில்

**‘‘கொழுநன் பிரிவைக் கூறிய தெவரோ!**
**அவர்மனம் பாழ்பட் டழிக! அதனைக்**
**கேட்டது முதலாய் வாட்டடங் கண்ணாள்**
**நஞ்சுண் டதுபோல் நலிகின் றாளே’’ (காதா.100:1-4)**

எனத் தலைவனுக்கு பிரிவு என்னும் சொல் நஞ்சுண்டது போல் கொடியதாக உள்ளமை சுட்டப்பட்டுள்ளது.

**உடன்போக்கு அஞ்சுவித்தல்**

தலைவி விரும்பியவாறு தோழி இருவரையும் ஒருப்படுத்தி வைகிருளிலே தலைவியைத் தலைவன்பால் சேர்த்துக் கையடுத்தல் செய்து இருவரையும் வலஞ்செய்து நின்று நின் மாறுபடாத மொழியைத் தெரிந்து புகல்புக்க இவருடைய ‘‘அண்ணாந்து ஏந்திய அழகிய கொங்கைகள் தளர்ந்தாலும் பொன்போன்ற மேனியிலே கருமணி போலத் தாழ்ந்த நல்ல நெடுங்கூந்தல் நரையுடனே முடிக்கப்பெற்றாலும் இவள் நம் தழுவலுக்குப் பயன்படாமல் முதிர்ந்தாள் என்று கருதிக் கைவிடாது பாதுகாகப்பாயாக என்று அறிவுறுத்தினாள் (நற்.10:1-9)

மேலும் தலைவியை உடன்போக்கில் அழைத்துச் செல்லமறுத்த தலைவனிடம் தோழி, தனியிருப்போர்க்கு நேரும் துன்பத்தை விட உடன் இருப்போர்க்கு பாலைநிலம் இன்னாமை தருவதன்று என்பதை உணர்த்தினாள். (குறுந்.124:1-4) காதாசப்தசதியில் உடன்போக்குப பற்றிய குறிப்பில்லை.

**வாயில் மறுத்தல்**

பரத்தையிற் பிரிந்து மீண்டும் வரும் தலைவன் தலைவியின் ஊடல் தணிக்கத் தோழியிடம் அணுகினன். அவனிடம் தோழி, ‘‘தலைவியின் அழகிய முகத்தில் சுழலும் கண்கள் துன்பம் அடைந்து வள்ளிக் கொடியினால் பிணித்துக் கட்டியதுபோல் நன்மைக் கட்டிப்போகும் என்று கருதாது சிறிய பலவாகிய குன்றங்களைக் கடந்து செல்லுவாராய் நீவிர் விளங்குகின்றீர். அங்஖னம் செல்லும்

தன்மையர் தம் மனதில் கருதியதை யார் அறிவார் என்று கூறி வாயில் மறுத்தாள். (நற்.269:5-9) இது திணை மயக்கமாகும். காதாசப்தசதியில் தோழி வாயில்மறுத்தல் இல்லை. மாறாக தலைவியின் அன்பு மிகுதியைத் தோழி தலைவனுக்குக் கூறுதல் தலைமகன் ஆற்றியிருந்த தகைமையினைத் தோழி தலைமகனிடம் கூறுதல் பிரிவின்கண் தலைவனுக்கு கூறுதல் செல்வம் இன்றி வறுமையுற்ற வீடு போலவும் நீர் ஒழுக்கற்ற அருவி விழும் இடம் போலவும் பசு, மாடுகள் எனும் செல்வம் இலாத பண்ணையைப் போலவும் நின் பிரிவினால் மெலிந்த தலைவியின் முகம் பொலிவிழந்து விளங்கும் எனத் தோழி தலைவனிடம் கூறினாள் (காதா.461:1-4)

**உடன் செலவு மறுக்கும் தலைமகற்குத் தோழி கூறியது**

இது ஈரிடங்களில்[60] காணப்படுகின்றது. பொருள் தேடப் பிரிய ஒருப்பட்ட தலைவனிடம் தானும் உடன் வருவதாகத் தலைவி கூறினாள். சுரத்தின் கடத்தற்கு அருமை கூறித் தலைவன் அவ்வேண்டுகோளை மறுத்தான். அதற்கு விடையாகத் தோழி “புதிய மட்பாண்டம் போன்ற செந்நிறப் பழங்களைக் கொண்ட ஆலமரம் தன் கனிகளின் இனிமையால் தன்னை வந்தடைந்த போகில் என்னும் பறவையினைத் தன்னை விட்டுச் செல்லாமல் தடுக்கும். வேனிலால் வெப்பமுற்ற கடத்தற்கு அரிய பாலை வழிகள் தண்ணியவாகவும் இனியவாகவும் அமையும்படி எம்மையும் உடன் அழைத்துச் செல்வாயாக என்று கூறினாள்” (ஐங்.303:1-4) காதாசப்தசதியில் இக்கூற்று இடம் பெறவில்லை.

**தோழி செவிலிக்குக் கூறியது**

தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் ஈரிடங்களில்[61] காணப்படுகின்றது. தலைவன் பிரிவாற்றாது தலைவி தன் மேனி வேறுபட்டது கண்டு வருந்திய செவிலி அவ்வேறுபாட்டிற்குக் காரணம் அறியாது தலைவியை வினவினாள். அப்போது தோழி, “அன்னையே! நீவாழி! யான் சொல்வதனை விரும்பிக்கேள். என் தோழி மேனி பசலையூர நின்றாள் என அவளை ஐயுற்றுச் சினத்தால்கண் சிவந்து யாம் அஞ்சும்படி வினவுகின்றனை. இம்மெலிவினை இவள் பெறக் காரணமாவது தளிரோடு கொத்தாக அமைந்த கோங்கு மலரேயாம் என்று தலைவியின் களவினை வெளிப்படுத்தினள்” (ஐங்.366:1-5)

அதுபோல் நொது மலர் வரைவின்கண் தோழி, “வேனிற் பருவத்தில் கான்யாற்றின் மருங்கே தேரோடு வந்தவன் பெயரோடு இவள் உயிர் ஒன்றுபட்டுள்ளது எனச் செவிலியிடம் தலைவியின் களவினை வெளிப்படுத்தி அறத்தொடு நின்றாள். (ஐங்.367:1-5) காதாசப்தசதியில் செவிலி கூற்று இடம்பெறவில்லை. அக நாடகத்தில் தலைவி தலைவனோடு உடன்போக்கினை

மேற்கொள்ளும் போது தான் தலைவியின் வளர்ப்புத்தாயாகிய செவிலியைப் பெரும்பாலும் காணமுடிகிறது. காதாசப்தசதியில் உடன்போக்கு இடம்பெறாத போது செவிலி என்னும் பாத்திரமும் தேவையில்லாமற் போகிறது எனலாம். மேலும் செல்வச் செழிப்பும் கட்டுக்காவலும் உடைய குடும்பத்தில்தான் குழந்தைகளை வளர்க்கச் செவிலி தேவையாகிறாள். காதாசப்தசதி காட்டும் சமுதாயத்தில் வறுமையின் அவலங்கள் காணப்படுவதாலும் கூட்டுக்குடும்ப உறுப்பினர்களின் பொறுப்பாவதாலும் 'செவிலி' தேவையில்லாதவள் ஆகிறாள்.

**தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுதல்**

பொருளீட்டப் பிரிந்த இடத்து தலைவன் தன் நெஞ்சிற்கு கூறுவதாக ஐம்பத்தெட்டு[62] பாடல்களும் பொருளீட்டத் தூண்டிய நெஞ்சிற்கு செலவழுங்கியதாக முப்பது[63] பாடல்களும் அகஇலக்கியத்தில் பயின்று வந்துள்ளன. காதாசப்தசதியில் தலைவன் பிரிந்து சென்றவழியில் தலைவியை நினைத்து வருந்தி தன் நெஞ்சுக்குத் கூறியதாக மூன்று[64] பாடல்களும் செலவழுங்கியதாக இரு[65] பாடல்களும் காணப்படுகின்றன.

பொருளின் சிறப்பினையும் அ்.து அறம் முதலாயின பயப்பதையும் பல்லாற்றானும் எடுத்துக் கூறிப் பொருளீட்டி வருமாறு தலைவனின் நெஞ்சம் அவனைப் பெரிதும் தூண்டியது. தலைவனும் அவ்வழித் தலைவியைப் பிரிந்து பொருளீட்டச் சென்றான். இடைச்சுரத்தே செல்லுங்கால் அந்நெஞ்சம் தலைவியை நினைத்து மறுகி மீளலுற்றது. அ்.துணர்ந்த தலைவன் அந்நெஞ்சினை, ''வெல்லும் போரைச் செய்யும் சேரனது கொல்லிமலை மிகப் பழைமை வாய்ந்தது. அதன் உச்சியில் உள்ள சிறிய மூங்கிலைப் போன்ற வளைந்த முன் கையினையுடைய பெரிய தோளினையும் திதலை அணிந்த அல்குலினையும் வெண்மையான பற்களையும் உடைய தலைவியிடமிருந்து பிரியாது இருந்திருப்பின் நன்று. அதுவும் செய்தாயில்லை. தலைவியைப் பிரிகின்ற அன்று நம் கருத்தினை அறியாய் ஆயினும் இன்று நாம் செய்யவிருக்கும் பொருளீட்டும் வினையை இந்த இடைச்சுரத்தில் விலக்குவையாயின் பிறர் நகையாடத்தகும் இந்நிகழ்ச்சியை அடைவாய் அல்லையோ? என்று கடிந்துரைத்தான். (அகநா.33:10-20)

அதுபோல் தலைவியை விட்டு நீங்கிச் சென்று பொருள் ஈட்டிட விரும்பிய தலைவன் தன் நெஞ்சினை நோக்கி ''நெஞ்சமே! நீ நெடுங்காலம் வாழ்க! நீ தேடக் கருதிய பொருள் தலைவியொடு தங்கியவாறு அடைவது ஒன்றில்லை. பொருளுக்காகப் பிரிந்தாலோ இவளோடு சேர்ந்து வாழும் வாழ்க்கை கிடைக்கப்பெறாது. ஆகவே பொருளுக்காக நீ செல்வாய் ஆயினும், செல்லுக.

இல்லத்தே தங்குவாய் ஆயினும் நல்லதற்கு உரியை ஆவாய்! பொருளானது விடாத மலரையுடைய பொய்கையிடத்தில் ஓடுகின்ற மீனின் வழியைப் போலத் தாம் இருந்தவிடம் தெரியாமற் கெடும் இயல்புடையது. யானோ பெரிய கடல் சூழ்ந்த அகன்ற நிலத்தையே மரக்காலாகக் கொண்டு ஏழு மரக்கால் அளவு பெரிய நிதியைப் பெறுவதாக இருநதாலும் அந்த நிதியை விரும்பேன். ஏனெனில் கனமான காதணிகளை அணிந்த தலைவியின் ஒன்றற்கொன்று எதிர்ப்பட அமைந்த செவ்வரிகளை உடைய குளிர்ச்சி பொருந்திய கண்களின் இனிய நோக்கு என்னை அச்செயல் செய்ய விடாது அழித்தது. எனவே நான் நின்னோடு வாரேன். அப்பொருள் எத்தன்மையது ஆயினும் ஆகுக. அப்பொருள் அதனைப் போற்றுவாரிடத்தையே பொருந்துக.'' (நற்.16:1-11) என்று கூறி செலவழுங்குவித்தான். காதாசப்தசதியில்,

**"முகரும் தடவும் முத்தமிட் டின்புறும்**
**தகவே இதயந் தன்னில் ஒற்றும்**
**மெய்புள குறவே தையல் கன்னம்**
**போலும் இலுப்பைப் பூவினை யவனே! (காதா.479:1-4)**

எனப் பிரிந்து சென்ற தலைவன் வழியில் தன் காதலியின் கன்னத்தின் மென்மையை நினைவூட்டிய பூவினைக் கையில் எடுத்து முகர்வான். தொட்டு முத்தமிட்டு இன்புறுவான். தன் இதயத்தில் (நெஞ்சில்) வைத்து ஒற்றுவான். மெய்புளகமுறுவான். காதலர்கட்குக் காதலியை நினைப்பூட்டும் பொருள் கூட காதலிக்குச் சமானந்தான் எனத் தன் நெஞ்சிற்கு உரைக்கின்றான்.

அதுபோல் பொருள்தேடிப் புறப்பட்ட தலைவன் தலைவியிடம் விடைபெற வந்து அவள் முகம் பார்த்தான். முகம் வாடி வெளிறிப் போய் இருந்தது. போகும் முன்பே இந்நிலை என்றால் போன பின் என்னாவாகுமோ எனக் கருதி உளமுருகி அவள்நலம் பெற வேண்டி, செல்வது தவிர்த்தான். (காதா.384:1-4)

**தலைவன் கனாக்கண்டு சொல்லியது**

தலைமகன் தலைவியைப் பிரிந்த இடத்து கனவே! வேனிற் காலத்தில் மலரும் பாதிரிமரத்தின் இதழ்கள் உட்புறம் வளைந்த பூவில் உள்ள மயிரினைப் போன்று, மயிர் எழுந்து, படர்ந்த அழகு ஒழுகும் மாமை நிறத்தினையும் நுண்ணிய வேலைப்பாடுடைய அணிகலன்களையும் உடைய தலைவியைக் கொண்டுவந்து தந்தது போல, இனிய துயிலின்றும் எழுப்புகின்றாய். தம்துணையைப் பிரிந்தோர் நிலையை இகழார் எனப் பாராட்டி உரைத்தான். (குறுந்.147:1-5) காதாசப்தசதியில் இக்கூற்று இடம்பெறவில்லை.

**தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறியது**

வினைவயிற் பிரியுங்காலத்துத் தலைவன் தலைவியிடமும் தோழியிடமும் கூற்று நிகழ்த்துவது போன்று வினைமுடித்துத் திரும்பும்போது, தன்னுடன் வரும் தேர்ப்பாகனிடம் தலைவன் கூற்று நிகழ்த்துவது உண்டு. அப்போது, தேரை விரைந்து செலுத்தும்படி தேர்ப்பாகனைத் தூண்டுவது போல் பாலை உரிப்பொருள் தோன்றப் பாடல்கள் புனைதல் உண்டு. வேந்தற் குற்றுழிப் போர்வினைமேற் சென்ற தலைவன், அவ்வினையை முடித்த பின்னர்த் தலைவியை நினைந்து விரைந்து மீண்டுவருவான். அவ்வாறு வரும்போது பிரிவிடை வருந்திய தலைவன் தேரினை விரைந்து செலுத்த வேண்டியப்பாகனைக் கேட்பான். (அகநா.9:24-26) இவ்வாறு கூற்று நிகழ்த்துவது உண்டு. காதாசப்தசதியில் இக்கூற்று இடம்பெறவில்லை.

**தலைவன் தலைவிக்குக் கூறுதல்**

வினைமுற்றி மீண்ட தலைமகன் எம்மையும் நினைத்து அறிதிரோ? என்ற தலைமகட்குச் சொல்லியதாக நான்கு[66] பாடல்களும் உடன்போகிய தலைமகன் தலைமகளுக்குக் கூறியதாக ஒன்பது[67] பாடல்களும் பொருள்வயிற் பிரிவாரென வேறுபட்ட தலைமகட்குப் 'பிரியேன்' எனத் தலைமகன் ஆற்றுவித்ததாக மூன்று[68] பாடல்களும் பொருள்முற்றி மீண்ட தலைமகன் தலைமகளுக்குக் கூறியதாக மூன்று[69] பாடல்களும் உடன்போதுவல் என்ற தலைவிக்குக் தலைமகன் கூறுவதாகவும் ஒரு[70] பாடலும் சுரத்தருமைப் பற்றி வினாவிய தலைவிக்கு விளக்குவதாக ஒரு[71] பாடலும் அமைந்துள்ளன. காதாசப்தசதியில் உடன் வருவேன் என்ற தலைமகளுக்கு தலைமகன் சுரத்தருமைக் கூறி அவளைத் தடுத்ததாக ஒரு பாடல் (காதா.480:1-4) மட்டும் இடம்பெற்றுள்ளது.

பொருளீட்டச் சென்ற தலைவன் காலம் தாழ்த்தி வந்தமை கருதி, நீவிர் வேற்று நாட்டகத்தே பொருளீட்டிய போது, என்னை நினைத்தீரோ? என்று வருந்திய தலைவிக்கு, ''காட்டிடையே பொருளீட்டும் வேட்கையுடனே தொடங்கிய வினைமுடிய வேண்டும் என்ற எண்ணத்துடன் வேற்றுநாட்டில் தங்கியிருந்தேன். என் உடம்பு மட்டுமே வேற்று நாட்டில் இருந்ததேயொழிய அறியாமையையுடைய என் உள்ளம் எப்பொழுதும் நின்பக்கத்திலேயே இருப்பதாயிற்று. இவ்வாறு இருத்தலால் நினக்குக் கூறிய நன்மொழியை மறத்தலும் கூடுமோ? இதை அறியாது வினவினாய் என்று கூறி மகிழ்விக்கிறான். (அகநா.29:20-23)

களவொழுக்கம் இடையூறு மிகுந்தமையால் தலைவன், தலைவியின் தமர் அறியாமல் அவளை உடன் அழைத்துச் செல்கிறான். அப்போது அவளுக்கு வழியுடை வருத்தம் தோன்றாதவாறு, ''மடந்தையே! ஞாயிறு மேற்கில்

மறைந்தால் பொழுது ஒளி குன்றியது. இவ்வேளையில் மூங்கில் நிறைந்த சிறுமலையில் ஆயர்கள் பசுக்களின் கழுத்தில் கட்டிய தெளிந்த ஓசையையுடைய மணி ஒலிக்கும். எம் சிறிய நல்ல ஊர் தோன்றுகிறது உவ்விடம் பாராய். பாம்பு தன் புற்றில் செறிந்திருக்குமாறு முழங்குவதும் வலமாக எழுந்ததுமான மேகம் விண்ணிலிருந்து மழையைப் பொழியும் தழையால் காண்பதற்கு இனிதாக விளங்கும் பொழுதில் அழகுற விளங்கிய தோகையை மெல்ல விரித்து, நீலமணி போன்ற கழுத்தினையுடைய மயில் ஆடும். அவ்வாறு ஆடும் மயில்போல் மலர் புனைந்த நின் கூந்தல் வீசும் காற்று ஊதி விரிக்குமாறு சிறிது விரைந்து செல்லுக என வழியிடை வருத்தம் தோன்றாதவாறு கூறுகிறான். (நற்.264:5-9)

மேலும் தலைவன் பொருள்வயிற் பிரிய நினைப்பதனைக் குறிப்பால் உணர்ந்த தலைவியது மெய்வேறுபாட்டினைக் கண்ட தலைவன், இவ்வேறுபாட்டிற்கான காரணத்தைக் கேட்கிறான். நின்னுடைய பிரிவே என்று தலைவி கூறுகிறாள். இதனைக் கேட்ட தலைவன், 'மெல்லிய சாயலையுடைய காதலியே, இவ்வுலகத்தே அரிதாகப் பெறுவதற்கு இயன்ற பெண்மைச் சிறப்பினை உடைய நின்னிடத்தினின்றும் பிரிந்து வினைவயிற் செல்ல நினைத்தலும் கூடுமோ? எனவே நீ வருந்தாதே எனக் கூறிச் செலவழுங்குகிறான். (அகநா.75:20-23)

வினைமுற்றி மீண்ட தலைமகன் தலைவியைக் கண்டு ''செல்வச் செழிப்பு மிக்க அரசர்களின் யானைகளைப் பிணிக்கும் பொன்னால் செய்யப்பட்ட கயிற்றைப் போல, ஒளிபொருந்திய காட்டுத்தீ தொடர்ந்து மண்டிய பாலைக் காட்டில் கடமைமேல் ஆர்வமுற்று முன்னே சென்ற நெஞ்சினைத் தடுத்துக் கொணர்ந்த நின் இனிய பண்புகள் மெய்யாகவே எப்போது நினைத்தாலும் இனியவையாகும் எனத் தலைவியின் குணமேம்பாட்டைப் புகழ்ந்துரைத்தான். (ஐங்.356:1-4)

மேலும் தலைவனுடன் வருவேன் என்ற தலைவியை நோக்கி ''மாலைப்பொழுதில் தனியேயிருக்க இயலாமையின் எம்மொடு வருவதாகக் கூறுகின்றனை. பாலை வழி கொடியதாதலின் அதனில் உடன்வருதல் நினக்கும் ஆற்றொணாதது எனக் கூறி மறுத்தான். (நற்.162:5-12) அதுபோல் காதாசப்தசதியில் கோடையின் கொடுமையால் காட்டு யானையொன்று சுட்டெரிக்கும் வெயிலின் சூடு தணிக்க வேண்டி, தன் தலையில் நீர் தெளித்தக் கொள்ளும் வழக்கப்படி அது நீரைத் தேடியலைந்தது. எங்கும் காணோம். அருவியின் கல்லிடுக்கினில் மலைப்பாம்பு சட்டையுரித்திருந்தது. அது அருவி

போலத் தென்பட்டது. அது கண்ட யானை அருவிதான் என்று கருதிச் சட்டையின் கீழே தலையை நனைப்பதற்காகத் தலையாட்டிக் கொண்டிருந்தது என உடன் வருவேன் என்ற தலைமகளுக்குத் தலைமகன் ஆற்றிடை வருத்தம் கூறி மறுத்தான். (காதா.480:1-4)

அதுமட்டுமின்றி வினைமுற்றி வந்த தலைவனிடம் சுரத்தின் அருமை எவ்வாறு இருந்தது என்று வினவிய தலைவிக்கு, தலைவன், காட்டுத்தீப் பரவி அதனால் அழிவுற்றதும் கோடைப்பருவம் நீடியதால் வெம்மை மிகுந்ததும் நீண்டதும் கடத்தற்கு அரியதுமான அப்பாலை வழிகள் அரியனவே ஆயினும் நின்பால் வேட்கை மிகுதி கொண்ட எம் நெஞ்சம் நினது முயக்கத்தைப் பெரிதும் விரும்பிக் கடியவேகம் கொண்ட குதிரைகள் பூட்டிய தேரைச் செலுத்தி நின் நலத்தையே எண்ணி யாம் வந்தமையால் எளியதாயிற்று என்று கூறினான்.

**தலைவன் உழையர்க்குக் கூறியது**

பொருளீட்டற் பொருட்டுச் சுரநெறியில் செலவு மேற்கொண்ட தலைவன் உழையர்க்குக் கூறியதாக இரு[72] பாடல்கள் காணப்படுகின்றன. பாலைநிலத்தில் மழைபெய்து நிலம் தணிந்தமையினைக் கண்ட உடன்பயணிகள் நிலம் மழையால் குளிர்ந்து போனமையின் இனித்துன்பமின்றி ஏகலாம் என்றாராக, அதற்குத் தலைவன் ‘‘உழைப்பீரே! வறட்சிமிக்கமையால் காய்ந்து ஒழிந்த சோலைகளைக் கொண்ட பாலை நெறிகளைக் கடந்து வந்த எனக்கு, யான் என்மடப்பம் மிக்க காதலியைப் பிரிந்து சென்றமையால் அவை இப்பொழுது நுண்ணிய மழை பொழிந்தமையான் நறிய மலர்கள் பரவப்பெற்றுத் தண்ணியவாக மாறியிருப்பினும் தெளிவாக வெம்மையுடையவாகவே இருக்கின்றன.’’ (ஐங்.328:1-4) என்றனர். காதாசப்தசதியில் உழையர் கூற்று இடம்பெறவில்லை.

**தலைவன் தோழிக்கு கூறியது**

தலைவியை உடன் கொண்டு சென்றபோது, இடைச்சுரத்து நிகழ்ந்த செய்தியை மீண்டு வந்த காலத்துத் தலைவன் தோழியிடம் கூறுவதாக நான்கு[73] பாடல்கள் பயின்று வந்துள்ளன. காதாசப்தசதியில் தலைவன் தோழியிடம் பேசியதாகப் பாடல்கள் இடம்பெறவில்லை.

களவொழுக்கத்தின்போது இடையூறு பல ஏற்பட்டமையால், தலைவியைத் தன்னுடன் அவள்தமர் அறியாவண்ணம் அழைத்துச் சென்ற தலைவன் மீண்டும் தலைவியின் இல்லத்திற்கு வந்தபொழுது, ‘‘தோழி, பாலைநிலத்தே செல்லும்போது, யான் பாதிரிப் பூவையும் காட்டு மல்லிகைப் பூவையும் அவள் கூந்தலில் செருகி விட்டேன். பின் இனி நீ முன்னர்ச் செல் யான் உனது

பின்னழகையும் நடையழகையும் கண்டு மகிழ்வேன் என்று கூறினேன். அது கேட்டு நாணிமுகம் கவிழ்ந்து நின்றாள். அதுகண்டு நானும் முன் செல்வதைக் கைவிட்டேன் என்று தாம் பாலைநிலத்தே வந்த பொழுது இடைவழியிலே நிகழ்ந்த நிகழ்ச்சியைத் தோழிக்குக் கூறினான். (அகநா.261:1-11)

**செவிலி வருந்திக் கூறியது**

தோழி அறத்தொடு நின்ற பின்னரும் தமர் உடன்பாடாமையாலும் பிற இடையூறுகள் நிகழ்ந்தமையாலும் தலைவன் இரவின்கண், தமர் அறியாமல் தோழியின் உடன்பாட்டோடு தன்னுடன் தலைவியை அழைத்துச் செல்வான். அச்சூழலில் தலைவனுடன் சென்ற தலைவியை நினைந்து வருந்தி செவிலி அன்பால் மனம் உருகிக் கூறியதாக இருபத்தி நான்கு[74] பாடல்கள் அமைந்துள்ளன.

களவொழுக்கத்தே இடையூறுகள் பல ஏற்பட்டதால் தலைவன் தோழியின் உதவியால் தலைவியை அழைத்துச் சென்றான். இதனை அறிந்த செவிலித்தாய் "தலைவி தான் வளர்த்த முல்லைப் பூவினையும் தோழிமாரோடு விளையாடும் இடமாகிய நொச்சிமர நிழலினையும் மறந்து பிறள்மகள் ஒருவன் கூறிய பொய்யான மொழிகளை உன்மை என்று நம்பித் தன்னுடைய தளிர்க் கரங்களைவீசி, சிவந்த பாதங்களால் சிலம் பொலிக்க அவனுடன் நடந்து சென்றாள். அது மட்டுமன்றி, நான் அவளது கூந்தலை வாரிப் பின்னலிட்டு மலர்களை வைக்க உடன்பாடின்றி மறுத்தவள். தன் தலைவனுடன் சென்றவழியில் கிடைத்த குராவும் மராவும் பாதிரியும் ஆகிய நறுமணங்கமழும் மலர்களைச் சூட்டச் வேண்டித் தன்காதலன் பின்னிடும் வரை எங்ஙனம் பொறுத்து இருந்தாளோ? என்று தலைவியை நினைந்து வருந்திக் கூறுகிறாள். (அகநா.117:1-4) காதாசப்தசதியில் இது போன்ற கூற்று இடம்பெறவில்லை.

**நற்றாய் வருந்திக்கூறியது**

தலைவி தலைவனுடன் உடன்போனதை அறிந்த தாய் அவளை நினைந்து வருந்துவதாக முப்பத்தேழு[75] பாடல்கள் உள்ளன.

தலைவியை அவள் தமர் அறியாதபடி தலைவன் கொண்டுதலைக் கழிந்தமையை அறிந்த தாய், அவளை அழைத்துச் செல்லுமிடத்தே வருந்தாமல் வருத்தமுறாமல் செல்லவேண்டும் என்று எண்ணிக் கலங்குகிறாள். அவள் "முருகப் பெருமானே, உன்னை வணங்குகிறேன். எவரும் செல்லற்கரிய பாலை நிலத்தே துணிந்து போயினாள். அவ்வாறு சென்றதால் அவள் பிறள் ஒருத்தியானாள். ஆயினும் என் நெஞ்சம் அவளிடத்து மகவன்பு மிகுந்து வருந்துகிறது. எனவே அவள் சென்ற வழியில் வருந்தாவண்ணம் அளி செய்து

அழைத்துப் போக வேண்டும். இதனை நிறைவேற்றித் தருவாயாக என முருகப்பெருமானை மனுத்தினூடே வணங்கிப் பாரவுக்கடன் நேர்கிறாள் (அகநா.35:12-18) காதாசப்தசதியில் நற்றாய் கூற்று இடம் பெறவில்லை.

**கண்டோர் கூற்று**

தலைவி, தலைவனுடன் உடன்போக்கில் சென்றபோது இடைச்சுரத்தில் கண்டோர் சொல்லியதாகப் பதினொரு பாடல்களும் மகட்போக்கிய தாயது நிலைமையைக் கண்டோர் சொல்லியதாக ஒரு பாடலும் எனப் பன்னிரண்டு[76] பாடல்கள் அகஇலக்கியத்தில் பயின்றுவந்துள்ளது. காதாசப்தசதியில் இதற்கு மாறாக பிரிவின்கண் வேறுபட்ட தலைமகள் நிலைமையைக் கண்டோர் சொல்லியதாகவும் தலைமகனை இயற்பழித்ததாகவும் தலைவன் இறந்த செய்தியை தலைவி தானே அறிந்து கொண்டதனைக் கூறியதாகவும் என மூன்று[77] பாடல்கள் காணப்படுகின்றன.

தலைவி தலைவனோடு உடன்போக்கு மேற்கொண்டபோது வழியிடை கண்டார் ‘‘கழைக் கூத்தர்கள் மூங்கிலின் மேல் கட்டிய கயிற்றின் மேல் ஏறி நின்று ஆடும்போது கொட்டப்படும் பறை ஒலிபோல் வாகைமரத்தின் வெண்ணிற நெற்றுகள் மேலைக்காற்றால் ஒலி எழுப்பும். அத்தகைய கொடுமை வாய்ந்த பாலைநிலத்தின் வழியே கையில் வில்லும், காலில் வீரக்கழலும் அணிந்த ஆண்மகனோடு மெல்லிய இடையினையும் சிலம்பு அணிந்த காலினையும் உடைய பெண் சென்றாள் எனத் தலைவியை நாடிவந்த செவிலியிடம் கண்டார் வருந்திக் கூறினா். (குறுந்.7:1-6) அதுபோல் தலைவி பெற்றோா் மற்றும் உற்றாா் உறவினா் யாரும் அறியாமல் தலைவனுடன் சென்றுவிடடாள். அதனை அறிந்த தாய் வருந்திய நிலையினைக் கண்டாா், ‘‘அவள் பொருட்டு அவள் தோழியா் கூட்டமும் பொலிவிழந்து வருந்துவதாயிற்று, தாயும் என் உயிா் போவதாக என அழுது புலம்பினாள். கொண்டு வந்திட்ட மணலில் கிடந்த தன் மகளது விளையாட்டுப் பாவையை எடுத்தாள். அதன் கண்ணையும் நெற்றியையும் தடவி வளைந்த நொச்சியின் வரிவரியாகவுள்ள நிழலில் அதனைக் கிடத்தினாள். தாழியில் வளா்ந்த வாடிய குவளைமலரை அதற்குச் சூட்டி, ‘என் குடிப்பிறந்த வழித்தோன்றலே! நினது இனிய தோளினைத் தருவாயாக என்று கூறி அப்பாவையினை ஆரத் தழுவி அழுதுநின்ற தாயினது நிலைமையினை வருந்திக் கூறினா்’’. (அகநா.165:7-13)

காதாசப்தசதியில், பிரிந்த தலைவனின் மனைவி அளித்த சோற்றுருண்டையைக் காக்கை விரும்பவில்லை. காரணம் அவள் பிரிவுத்துயரத்தால் மெலிந்துவிட்டாள். அவள் கையில் இருந்த

சோற்றுருண்டையின் மீது தானாக நெகிழ்ந்த வளையல் சூழ்ந்திருப்பதைக் கண்ட காக்கை தன்னைப் பிடிப்பதற்காக இடப்பட்ட கண்ணி வலையாக இருக்குமோ என்று அந்த வளையலைக் கண்டு அஞ்சிப் பறந்தோடியது. (காதா.170:1-4) எனப் பிரிவிடை வேறுபட்ட தலைமகளின் கவினழிந்த நிலையைக் கண்டோர் கூறுவதாகப் பாடல் அமைந்துளது.

மேலும், தலைவனைப் பிரிந்து தாய் வீடு சென்ற நங்கையவள் நெடுநாள் தங்கியிருந்து விட்டு மீண்டும் தன் கணவன் ஊருக்கு வந்தாள் வரும் வழியில் தன் ஊர்க்கருகே நடுவழியிலேயே யானைகள் வந்து திரிந்து மரங்களை உராய்ந்து மதம்பட்ட தடங்களுடன் இருப்பதைக் கண்டதும் தன் கணவன் உயிருடன் இல்லை என்பதை உணர்ந்து கொண்டாள் எனக் கண்டோர் கூறினர். (காதா.106:1-5)

**பாணன் தலைவனுக்குக் கூறியது**

இளவேனிற் பருவத்தே திரும்பி வருவதாகக் கூறிச் சென்ற தலைவன் வாராமையால் ஆற்றாத தலைவி, கடந்த கால நிகழ்வுகளைச் சிந்தித்தனள். தலைவன் நம் மாட்டு அன்பில்லாதவராக இருந்தாலும் இதே இளவேனிற் காலத்தே, இவ்வூரின்கண் பண்டுதாம் விளையாடியவற்றை நினைந்து வருதல் கூடும் என்று எண்ணினள். இப்பருவ வரவைத் தலைவனிடத்தே கூறுவார் உளரோ என அது கேட்ட பாணன் பாசறையின்கண் தலைவனை நோக்கி ''மீளாத காமநோயினாலே நின் மனைவி இவ்வாறெல்லாம் புலம்பி வருந்தினள் பணிந்து நின் அழகிய திருவடியைச் சேராத பகைவர் நீ அவர்க்குக் கொடுக்கும் தண்டனையை எண்ணி, எண்ணி நடுங்குவதைப் போல, அவள் தன் உள்ளமும் நடுங்க நின்றனள். அவள் தன் அழகை மீண்டும் பெறும்படி அழகுடன் திகழும் நின் நெடிய தேரைச் செலுத்துவாயாக என்றனன்'' (கலித்.30:18-21)

**பாங்கன் தலைவனுக்குக் கூறியது**

எட்டுத்தொகை அகஇலக்கியத்தில் பாலைத்திணையில் பாங்கன் தலைவனுடன் கூற்று நிகழ்த்தியதற்கான குறிப்பில்லை. காதாசப்தசதியில். தலைவன் பிரிந்து செல்லும்போது இன்றிலிருந்து இத்தனை நாள் கடந்தவுடன் வந்துவிடுவேன் என்று கூறிச்சென்றான். தலைவியும் அவன் சொன்ன நாட்களை எண்ண ஒவ்வொரு நாளும் சுவரில் ஒரு கோடு போட்டு வந்தாள். இடையிடையே எண்ணிப் பார்ப்பாள். நாட்கள் சென்றன. தவணை நாள் கடந்து விட்டால், தலைவனும் ஏதோ கடமையால் தாமதித்து வருவானானால் தலைவி ஆற்றாமைமிக்கு இறந்து படினும் படுவாள். ஆதலினால் தவணை நாள் கடந்து விடும் என்று அஞ்சிய தோழியர் அவள் சுவரில் எழுதிய கோடுகளில்

ஒன்றிரண்டை அவ்வப்போது திருட்டுத்தனமாக அழித்துவிடுகிறார்களாம். இச்செய்தியைப் பாங்கன் அறிந்து தலைவனிடம் கூறி விரைந்து செல்க என்ற ஊக்குவித்தான் (காதா.171:1-4) எனப் பாங்கள் கூற்று இடம்பெற்றுள்ளது.

**பயணியர் கூறியது**

கடப்பமலர் கார்காலத்தலர்வன. அதன்மலர் கண்டு மணம் மோந்த இளம் வழிப்போக்கனாகிய தலைவன் தன் மனைவியை நினைத்து பிரிவாற்றாமையால் இறந்து படுவாளோ என அஞ்சி அழுதான். அது கண்டு துணைப்பயணியாகிய மற்றொருவன், ‘‘அவள் உயிரோடிருப்பாள்! அவளைக் காண வேண்டாமா? தைரியமுடன் இருக்க வேண்டும் அவளுக்கு முன்பு துயரால் நீ இறந்து படின் அவரை எப்படி காண்பாய்! அவளைக் காணவாவது துயரைத் தாங்கிக் கொண்டு ஆற்றிக் கொள்வாயாக என்று கூறினான். இதனை,

**‘‘கடப்பம் பூமணம் மோந்து கண்ணீர்**
**வடித்திவண் ஏனோ வருந்து கின்றனை!**
**இளம்வழிப் போக்க! இல்லக் கிழத்தியைக்**
**காணேவேண் டாமோ? பூணுவாய் உறுதி’’ (காதா.429:1-4)**

என்னும் பாடல் சுட்டும்.

**மருதம் உரிப்பொருள்**

மருதத்திற்குரிய உரிப்பொருள் ஊடலும் ஊடல் நிமித்தமும் ஆகும்.[78] ‘‘தோழி தலைவன் குறை தெரிந்திருந்தும் அவனுக்காகத் தலைவியிடம் குறைநயப்பக் கூறுதலும் தோழி தலைவனை வரைவுகடாவுவதும் பரத்தை காரணமாகத் தலைவி ஊடல் கொள்வதும் மருத நிலத்திற்குரிய உரிப்பொருளாகப் பொதுவாக அமைந்துள்ளன.[79]

**தோழி தலைவிக்குக் கூறியது**

புறத்தொழுக்கம் மேற்கொண்டொழுகிய தலைவன் தோழி வாயிலாகத் தலைவியைக் கூடக்கருதித் தோழியை வேண்ட தோழி உடன்பட்டுத் தலைவியிடம் சென்ற அவளைத் தலைவன் வேண்டுகோளுக்கு இணங்குமாறு கூறுவதாக எட்டு பாடல்களும் தலைவன் வரைவு மலிந்தமையின் சிறப்பினை ஊர்மேல் வைத்துத் தோழி கிழத்திக்குக் கூறுவதாக ஒரு பாடலும் என ஒன்பது[80] பாடல்கள் அமைந்துள்ளன.

காதாசப்தசதியில் தோழி தலைவியிடம் ஊடல் தீர்த்தல் தோழி அறிவுரை கூறுதல் தலைவியின் புலவி நுணுக்கத்தை விளக்குதல் தோழி தன்னுள் கூறி கொள்ளுதல் தலைவியை ஆற்றுவித்தல் தலைவியின் பிரிவாற்றாமையினை

எடுத்துரைத்தல் தலைவியை கண்டித்தல் மாமியிடம் கூறுதல் என பதின்மூன்று[81] பாடல்கள் காணப்படுகின்றன.

தலைமகன்பால் பரத்தைமையொழுக்கம் கண்டு தலைவி வேறுபட்டாள். அவளைத் தேற்றும் பொருட்டு ''முள்ளிச்செடிகள் அடர்ந்து வளர்ந்துள்ள பழையநீர் நிலைகளில் கரைகளில் வாழும் தம் மேனியில் புள்ளிகளைக் கொண்ட நண்டுகள் ஆம்பல் தண்டுகளை அறுப்பதற்கு இடமான குளிர்ந்த நீர்த்துறைகளைக் கொண்ட ஊரின் தலைவன் இனி என்பால் பரத்தையர் ஒழுக்கம் ஒருபோதும் உளதாகாது என உறுதி கூறிய பின்னும் நின்னுடைய மையுண்டகண் வேறுபட்டது எதனால் என்று கூறி, தலைவனை தலைவி ஏற்பது மனையுறை மகளிர்க்கு உரியது'' (ஐங்.21:1-4) என்ற அறிவுரையை வழங்கி ஊடலைத் தீர்த்தமையினால் இது மருத ஒழுக்கமாகும்.

காதாசப்தசதியில் தலைவி ஊடியிருந்தாள், தலைவனை இனிப்பார்க்கமாட்டேன் என்று கூறிக்கொண்டிருந்தாள். அதற்குத் தோழி ஊடல் நீடுதல் கூடாதெனக் கூறி, ''ஆற்று நீர் போவதன்றி மீண்டும் திரும்பி வராததுபோல, பகலும் இரவும் சென்றவை மீளாது. ஆகையால் இளமையில் துய்க்க வேண்டிய இன்பங்களை மானத்திலான ஊடல் கொண்டு இழந்துவிடுவது நன்றன்று. இளமையும் நெடுநாள் நிற்பதல்ல ஆகையால் உன் மானத்தை ஒருபுறம் வைத்து, தலைவனுடன் ஊடல் தீர்க'' (காதா.42:1-4) என்று அறிவுறுத்தினாள்.

**தோழி தலைவிக்கு அறிவுரை கூறுதல்**

காதாசப்தசதியில் ஊடல் கொண்டு பின் கூடும் இன்பம் பெறவிரும்பிய தலைவி வேண்டுமென்றே பொய்ப் பிழைகள் காட்டிச் சினந்தாள். இயல்பாகவே நல்லவனாகிய தலைவனுக்கு இவ்வூடல் தவறான வழிக்குச் செலுத்தும் காரணமாயிற்று, எனவே ஊடலைத் தீர்த்து நல்வாழ்க்கை வாழ்வாயாக எனத் தலைவிக்கு அறிவுரைக் கூறினாள். (காதா.253:1-4)

**தலைவியின் புலவி நுணுக்கத்தைக் கூறுதல்**

தேனீ கொட்டியதால் கீழுதடு சற்று வீங்கிய நிலையில் எதிரே வந்த வேடனைக் கண்ட அவன் மனைவி ஊடல் கொண்டு வேறொரு மரத்தினடியில் போய் நின்று கொண்டாள் (காதா.477:1-4) எனத் தலைவியின் புலவி நுணுக்கத்தைத் தோழி எடுத்துரைக்கிறாள்.

**தோழி தன்னுள் கூறுதல்**

கணவன், மனைவி இருவரும் கொண்ட கூடல், ஊடல் நிலைகளைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு நிற்கும் விளக்கு எண்ணெய் தீர்ந்து விட்டதைக் கூட அறியாமல் விழி மூடாமல் எரிந்து கொண்டே இருக்கிறது (காதா.415:1-4) எனத் தோழி தன்னுள்ளே கூறிக்கொண்டாள்.

**தோழி தலைவியை ஆற்றுவித்தல்**

புலவியினால் மீண்டு கலவியுறும் போது புதிய இன்பம் தோன்றும் என்பது உண்மைதான். அதற்காக அளவிறந்த சினம் காட்டுவதனால் உள்ள காதலும் அழிந்து போக நேரும். ஆகையால் புலவி நீட்டிக்காது புணர்கவெனத் தோழி தலைவிக்குக் கூறி ஆற்றுவித்தாள். (காதா.400:1-4)

**தோழி தலைவியின் பிரிவாற்றாமையினைக் கூறுதல்**

**“நினைக்காண் வேட்கையின் நின்குரல் கேட்டதும்**
**எத்துணை அடியெர்த் தெடுத்துவந் தனளோ**
**நினைக்கா ணாது நேரிழை மயங்க**
**அத்துணை அடிவரை தாங்கிடச் சென்றாள்” (காதா.388:1-4)**

எனத் தலைவன் குரல் கேட்டதும் அவனைக் காணும் வேட்கையுடன் எவ்வளவு அவன் நீங்கியமையின் தலைவியைத் தாங்கியவாறு வீட்டிற்கு அழைத்துச் சென்றனர் எனத் தலைவியின் பிரிவாற்றாமையினைத் தோழி கூறினாள்.

**தோழி தலைவியைக் கண்டித்தல்**

தலைவன் தலைவியர் ஊடல் ஒரு அளவுக்குத்தான் இருக்க வேண்டும். அளவுக்கு மீறினால் அது தீமையாய் முடியும். சில தலைவியர் அதனை உணர்வதில்லை. அப்படிப்பட்ட தலைவியைத் தோழி “காலில் வீழ்ந்தும் தலைவனை மதிக்கவில்லை. இனிதாகப் பேசும் போதும் கடுஞ்சொல் பேசினாய், அதுசரி அவர் வீட்டை விட்டுச் சினத்துடன் செல்லும் போதாவது கடுக்க வேண்டாமா? யாருக்கு லாபம்? புலவி கூர்வதன் நோக்கமே அவன் பிறரை நாடாது தன்னை நயத்தல் வேண்டும் என்பதற்குத் தானே? அவனையே இழந்துவிட்டால் அப்புலவியால் யாது பயன்” (காதா.345:1-4) என்று தோழி தலைவியிடம் அவள் தவற்றைச் சுட்டிக்காட்டுகிறாள்.

**தோழி மாமியிடம் கூறுதல்**

தலைவன் தலைவியை வெறுத்துப் பிரிந்தமையினைத் தோழி மாமியிடம்

**“நெடுநாட் பரிவெனும் அடிவேர் விட்டுச்**
**செருக்குடன் வளர்ந்த சீர்கெழு நட்பின்**
**காதல் மரந்தான் எதுற் றிழிந்து**

வீழ்ந்ததும் காதில் விழவே இல்லை" (காதா.344:1-4)

எனத் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி மாமியிடம் உலகியல் உரைப்பாள் போல் இகழ்ந்துரைத்தாள்.

**தோழி தலைவற்குக் கூறியது**

தலைவி தலைவனின் பரத்தமை ஒழுக்கம் காரணமாய் வருந்தி ஊடியிருந்தாள். அப்பொழுது பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைவன் தோழியை வாயில் வேண்டியதாக இருபத்தி மூன்று பாடல்களும் வாயில் நேர்தலாக ஐந்து பாடல்களும் காணப்படுகின்றன. மேலும் வரைவு கடாயதாக இரு பாடல்களும் வரைவு நீட்டித்த வழி தோழி தலைமகற்குக் கூறியதாக ஒரு பாடலும் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி தன்னுள்ளே சொல்லுவாளாய் ஒரு பாடலும் பகற்குறி நேர்ந்த தலைமகற்கு குறிப்பினால் குறியிடம் பெயர்த்துச் சொல்லுதலாக ஒரு பாடலும் பாணன் வாயிலாகப் புக்கவழித் தலைமகற்குச் சொல்லுவதாக ஒரு பாடலும் வரையாது ஒழுகும் தலைமகன் இரவுக்குறி வந்துழித் தோழி கூறுவதாக ஒரு பாடலும் பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் யாரையும் அறியேன் என்றாற்குத் தோழி சொல்லியதாக ஒரு பாடலும் சிறைப்புறமாக உழவர்க்குச் சொல்லுவளாய்த் தோழி செறிப்பறிவுறீஇயது ஒரு பாடலும் தலைவனின் புறத்தொழுக்கம் பற்றி கூறுவதாக பதினொரு பாடலும் குறை வேண்டிய தலைமகனை சேட்படுத்துவளாய் ஒரு பாடலும் என மொத்தம் ஐம்பத்தெட்டு[82] பாடல்கள் சங்க அகஇலக்கியத்தில் காணப்படுகின்றன.

காதாசப்தசதியில் தோழி வாயில் நேர்தல் தலைவியின் நிலையை தலைவனுக்குக் கூறுதல் தலைவனிடம் முன்னிலைப் புறமொழியாகக் கூறுதல் அறிவுரை கூறுதல் என ஏழு[83] பாடல்கள் தோழி தலைவனுடன் கூற்று நிகழ்த்துவதாகக் காணப்படுகின்றது.

பரத்தைக் காரணமாகப் பிரிந்த தலைவன் தோழியை தலைவியின் ஊடல் தீர்க்க வாயிலாக வேண்டினாள். அதற்கு "ஊரனே என்னைக் கைவிட்டுப் பரத்தைக்கே அருள் செய்க. நின்னைக் காணும்போது நேரும் இனிமையொன்றே எனக்குப் போதும் என்று மறுத்தும் சினந்தும் கூறினாள்" (நற்.230:1-10)

காதாசப்தசதியில் தலைவி தலைவனிடம் புலவி கூர்ந்தாள். தலைவனுக்கு வாயிலாகச் சென்ற தோழி அவளின் சினந்தவிர்த்து மகிழ்வித்தாள். எனினும் தலைவனிடம் உன் வேண்டுகோளின்படி நான் தலைவியிடம் தூது சென்றேன். உன் அன்பின் பெருக்கை விவரித்துச் சொன்ன பிறகு அவள் நெடுநேரம் உன் பிழைகளை எண்ணி எண்ணி இரு கை விரல்கள் போதாத அளவிற்கு நினைந்து நினைந்து புலம்பியழுதாள். இவ்விதம்

தலைவனிடம் கூறி அவள் மனத்துயர் ஆற்றி இனிமேல் இத்தகைய மனத்துயர் தரவேண்டாம் எனக் கூறினாள் (காதா.233:1-4)

அதுமட்டுமின்றி தலைவி சினந்திருந்த போது தலைவன் அவளைக் கடிந்து அதட்டினான். அது கண்ட தோழி, ''ஆடவர் தம் ஆட்சி மனப்பான்மையை மறந்து அடிமை போலத் தூழ்ந்து அவள் சினந்தவிர்த்து மனம் மகிழ்வித்தல் வேண்டும். அப்போது தான் அவளது அன்பைப் பெறமுடியும். அப்படியில்லாதார் பேருக்கு மணாளனாக இருப்பாரன்றி மனமிசைந்தவராக இரார்'' (காதா:81:1-4) என்று அறிவுறுத்தினாள்.

**தோழி பாணனுக்கு வாயில் மறுத்தல்**

தோழி பாணனுக்கு வாயில் மறுப்பதாக ஆறு[84] பாடல்கள் இடம்பெற்றுள்ளன. ஆனால் காதாசப்தசதியில் இக்கூற்று இடம் பெறவில்லை. பரத்தையின் பிரிவால் பிரிந்த தலைமகன் தலைவியின் ஊடல் தணியப் பாணனை வாயிலாக விடுக்கிறான். வந்த பாணன் கேட்டு உணருமாறு தோழி, தலைவியை நோக்கி, ''நின் காதலன் கூறும் பரத்தையருள் ஒருத்தி பெண்தன்மை அறியாப் பெதும்பைப் பருவத்தினள். அவள் ஊசலாடாது அழுவதை ஆற்றுவித்து மீண்டும் ஊசலாடுமாறு செய்ய அறியாதனாய் அமைகிறான். அவள் அழுது ஊடியதாலே இங்கு வந்தான்'' (நற்.90:1-12) எனச் சினந்து கூறினாள். இது மருதத்தின் ஒழுக்கத்தைச் சுட்டுவதாக அமைந்துள்ளது.

**தோழி தலைமகன் வாயில்களுக்கு உரைத்தது**

தோழி வாயில்களை மறுத்தலாக இருபாடல்கள்[85] உள்ளன. ''தலைவன் பரத்தையர் வீட்டிலிருந்து வாயில்களை அனுப்பினான். அவர்களுக்குத் தோழி ''நீண்ட பூவையுடைய நாணலின் உள்ளே துறையை உடைய திரண்ட தண்டினுள் சிறுமை வாழ்வினரான குற்றேவல் மகளிர் கண்ணுக்கிடும் மையினைப் பெய்து வைக்கும் பூக்கள் மலிந்த ஊரின் தலைவனை எண்ணி இவள் தாமரை மலர்போலும் கண்கள் பசலையுற்றன. இனி அவன் வருந்தினால் பயனில்லை'' (ஐங்.16:1-4) என்றுகூறி வாயில் மறுத்தாள்.

**தோழி விறலிக்கு வாயில் மறுத்தது**

தலைவியின் ஊடலைத் தீர்க்கத் தலைவன் விறலியைத் தூது அனுப்பினான். தோழி இவ்விறலியே தலைவனைப் பரத்தையிடத்துச் சேர்ந்தவள் என்னும் கருத்துடன் இரு[86] பாடல்கள் பயின்றவந்துள்ளன.

தலைவன் விறலியை தலைவிக்குத் தூதாக விடும்போது தோழி ஆயத்தாரிடம் ‘‘விறலி தனக்கு நிகராக வேறொவரையும் கூற முடியாது இவள் திருவிழாக் கொள்ளும் இடமெல்லாம் பொலிவுறும். இவள் நம் காதலனை இன்றும் வேறொரு பரத்தையிடத்துத் தூது சென்று செலுத்தாதபடி பாதுகாக்க வேண்டும். மலையினது வேலுக்குப் பகைவர்திரள் அஞ்சி ஓடினாள் போல் விறலி கருதுவதும் நம் எதிர்ப்பின்றேல் கைகூடும். எனவே தலைவனைப் பாதுகாப்போம் என ஆயத்தாரைக் கூவி அழைத்தான்’’ (நற்.170:1-9) இவ்வாறு வாயில் மறுத்தல் மருதத்தினை ஒழுக்கத்தை நன்கு விளக்கும்.

**தலைவி கூறியது**

தலைவி தோழிக்குக் கூறியதாக நாற்பத்தொரு பாடல்களும் பாணனுக்கு வாயில் மறுத்ததாக எட்டுப் பாடல்களும் விறலிக்கு வாயில் மறுத்ததாக ஒரு பாடலும் நொதுமலர் வரைவுழித் தோழிக்கு அறத்தொடு நிற்றலாக ஒரு பாடலும் தலைமகள் தன்னுள் சொல்லியதாக இரண்டு பாடல்களும் வாயில்களுக்குச் சொல்லியதாகப் பத்துப்பாடல்களும் தலைவனுக்குச் சொல்லியதாக நாற்பத்தி மூன்று பாடல்களும் என நூற்றி ஆறு[87] பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

அதுபோல் காதாசப்தசதியில் தலைவி தன் அன்புடைமையைத் தலைவனுக்குக் கூறியதாகவும் தலைவி தன் நெஞ்சோடு கூறியதாகவும் தலைவன் மற்றொரு மனைவியுடன் வாழ்வதுகண்டு வருந்திக் கூறுவதாகவும் தலைவி தன் வருத்தத்தை மாமியிடம் கூறுவதாகவும் தலைவி தலைவனுடன் ஊடலின்கண் சொல்லியதாகவும் தலைவி வாயில் மறுத்ததாகவும் வாயில் நேர்ந்தமையினைத் தோழியிடம் கூறுவதாகவும் தலைவி தோழியிடம் தன் ஆற்றாமையினைக் கூறியதாகவும் தலைமகள் பெருமிதத்துடன் கூறியதாகவும் ஊடல் தீர்த்தமைக்கான காரணத்தைத் தோழியிடம் கூறியதாகவும் தலைவி தோழிக்கு இயற்பட மொழிதலாகவும் ஊடல் தீர்த்த தலைவி தலைவனிடம் சொல்லியதாகவும் தலைவனைக் கடிந்துரைத்தலாகவும் ஊடலின்கண் தோழியிடம் வருந்தியதாகவும் தலைவனை இயற்பட மொழிதலாகவும் இயற்பழித்தலாகவும் வாயில் மறுத்தமையினைத் தோழியிடம் கூறியதாகவும் ஊடல் தீர்த்த தலைவி தலைவனிடம் சொல்லியதாகவும் தலைவனைக் கண்டித்தலாகவும் பிரிவின்கண் தோழியிடம் வருந்தியதாகவும் புலவி நுணுக்கத்தைத் தலைவி தலைவனுக்கு முன்னிலைப் புறமொழியாகக் கூறுவதாகவும் பரத்தையிற் பிரிந்த தலைமகனின் இன்மொழிகேட்டு தலைவி கூறுவதாகவும் ஊடல் தணிக்கும் தோழியை நோக்கித் தலைவி வன்புறை

எதிரழிந்து மொழிந்ததாகவும் பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனிடம் கூறுவதாகவும் என் இருபத்திமூன்று[88] பாடல்கள் காணப்படுகின்றன.

**தலைவியது ஊடல்**

தலைவன் பரத்தையரொடு சென்று நீராடினான். அதனை அறிந்த தலைவி நேற்று பரத்தையொடு நீராடி மகிழ்ந்தாய். இன்று இங்கு வந்து மார்பிலுள்ள அழகிய முலையிடத்துத் தோன்றிய தேமலையும் மாசற்ற கற்பினையும் உடையவளே! என் புதல்வன் தாயே என்று வஞ்சனையுடைய பொய்யான வார்த்தைகளைப் பலகாலும் பணிந்து கூறி எம் முதுமையை இகழாதே என ஊடியதாகவும் (அகநா.6:1-22) பரத்தையர் சேரியில் தங்கியிருந்து விட்டு வீடு திரும்பிய தலைவன் தன்பால் ஊடியிருந்த தலைவியை நோக்கி 'யான் பரத்தையர் யாரையும் அறியேன் என்றான். அதற்கு தலைவி "பொற்றொடி அணிந்த நம் புதல்வனைப் பொன்னாலான அணிகலன்களைத் தாங்கிய கூரிய பற்களையுடைய நின் பரத்தை அவன் தெருவில் சிறுதேர் உருட்டிக் கொண்டு தனியனாய் நிற்பதைக் கண்டு நின் உருவ ஒப்புமை கருதிப் போற்றி, காண்பார் யாரும் இல்லாமையால் அவனைச் சென்றடைந்து மிக மகிழ்ச்சியுற்று என் உயிரே வருவாயாக எனப் பூண் அணிந்த இளைய முலையிடத்து அணைத்துக் கொண்டு நின்றவளைக் கண்டேன். கண்டயான், நின்ற நிலையினின்றும் மீண்டும் பெயர்ந்தேன் அல்லேன், விரைந்து வந்து அவனைத் தழுவிக் கொண்டேன். 'குற்றமற்ற இளமகளே ஏன் மயங்கினாய் இவனுக்கு நீயும் தாயாகுவை என அவளிடம் கூறினேன். தாம் செய்த களவுக் குற்றத்தை உடன்பட்டு நிற்பாரைப் போல நாணி முகங்கவிழ்ந்து நிலத்தைக் கீறி நின்றாள். அவளுடைய நிலையினைக் கண்ட யான் வானத்தில் காணுதற்கரிய அழகுத் தெய்வமாகிய அருந்ததியை ஒப்பாகும். அவள் நின்மகனுக்குத் தாயாதல் ஒக்கும் என விரும்பின்றே. எனவே பொய் கூறாது ஒழிக என்றாள் (அகநா.16:1-18, நற்.20:1-11)

மேலும் தலைவன் பல பரத்தையரை அடுத்தடுத்து வதுவையிற் கூடினான் என்பதறிந்த தலைமகள், அவன் இல்லம் திரும்பிய பொழுது ஊடினாள். இதனை மறைத்தல் அரிது எனவுணர்ந்து இனி இவ்வாறு நிகழாது எனத் தலைவன் உறுதி கூறிய பொழுது தலைவி "நறிய வடுக்களைக் கொண்ட மாமரத்தின் நன்கு முற்றிக் கீழே வீழும் இனியபழம் நெடிய நீர்நிறைந்த பொய்கையில் 'துடும்' என்னும் ஒலியுடன் விழுதற்கு இடனான, வள்ளன்மை மிக்க மத்தி என்பானது கழார் முன்றுரை போன்று அழகுடைய நல்லோர் பலரை நாடிச் சென்று பெற்று வதுவை செய்து கொள்ளலை நீ வழக்கமாகக்

கொண்டனை. அங்ஙனமாக நின் சொல்லை நம்புவது யாங்ஙனம்? என்று கூறி ஊடியதாகவும் (ஐங்.61:1-5) பரத்தையரை நீங்கி வந்த தலைமகனை ஏற்றுக் கொள்ளுமாறு வாயில்கள் சொன்னதற்கு இணங்கியும் தன்னுடைய ஆற்றாமைக்கு ஆட்பட்டும் அவனை ஏற்றுக்கொள்ள நினைத்த தலைவி மேலும் அவன் பரத்தையர்க்கே அன்பு செய்தான் எனக் கேட்டு மனம் நொந்து ஊடியதாகவும் ஐங்குறுநூறு (12:1-4) சுட்டுகின்றது.

காதாசப்தசதியில் தலைவன் தன்மாட்டு முன்போல் அன்பில்லை என்று தலைவி புலந்தாள். தலைவன் 'பிறர்கூற்றை நம்பாதே! நான் எப்போதும் போலவே அன்புடன் இருக்கின்றேன் என்று கூறினான். அதற்குத் தலைவி, 'பிறர் சொல்வது கிடக்கட்டும். உன் மனச்சாட்சியே சொல்லாதா? மேலும் நீ தேறுதல் கூறும் முறையே உன் அன்பின் குறைவைப் புலப்படுத்துகிறது என்று பரத்தமையை கூறி ஊடினாள். (காதா.167:1-4)

**தலைவனிடம் வருந்திக் கூறுதல்**

பரத்தையிடம் சென்று மீண்டு வந்த தலைவனைத் தலைவி ''என் வளையை நெகிழச் செய்த உம்மைத் தழுவவும் செய்யேன்'' ஊடியிருத்தலும் செய்யேன்; என்று தன்னை அயலாளாகக் கொண்டு மனம் வருந்தியுரைத்தாள்'' (அகநா.340:1-10)

காதாசப்தசதியில் தலைவி தலைவனிடம் 'நன்னெறியை விட்டு நீங்கி நீ செய்யும் தவறுகளை விட அதை மறந்து எம்மிடம் பொய் கூறுகிறாயே. இனிமையாகப் பேசி ஏமாற்றப் பார்க்கிறாயே அதுதான் அதிக வருத்தத்தைத் தருகின்றது என்று கூறி வருந்துகிறாள். (காதா.289:1-4)

**தலைவி வாயில் மறுத்தல்**

தலைவன்பால் தூதாக வந்த விறலிக்கு நம் தலைவனின் அச்செயலினை யான் வெறுத்தேன் பகைவரைக் கொல்லும் போரினையுடைய வேளிர்கட்கு உரிய ''வீரை'' என்னும் இடத்திலுள்ள துறையின் முன்னிடத்தே நீண்டு குவிந்து கிடக்கும் வெண்ணிற உப்பின் பெருங்குவியல், பெருமழையின் ஓடு நீர்க்கு உடைந்தாற்போல என்பெருத்த மென்மையான தோள்களும் மெலிந்தன. வளையல்கள் நெகிழ்ந்து கழன்று வீழ்ந்தன என்று கூறி வாயில் மறுத்ததாகவும் (அகநா.206:10-16) பின் தலைவியின் ஊடலைத் தீர்க்கும் பொருட்டு பாணனைத் தூதாக விடுத்தனன். பாணன் தலைவியின்பாற் சென்று, தலைவன் தவறிலன் எனக்கூறி மாயப்பொய் பலகூறும் பரத்தைமைச் செயலுடைய எம் தலைவனது வாய்மொழியினை எம்மைப் போல ஒருத்தி உண்மையென நம்பிப் பரத்தையருள்

உள்ளாள் போலும் காற்று அலைக்க அசையும் மழைத்துளி வீழப்பெற்ற மலர்போல, அவள் கண்கள் நீரினை மார்பிடத்துத் துளிர்க்க, கண்கள் பசலையுற்றுத் தோழியர் கூட்டமும் உற்றார், உறவினரும் மயங்கி நிற்க, தாயர் பல்லாற்றானும் பேணிப் பாதுகாத்து வளர்த்த அழகிய பெண்மை நலத்தைப் பேணாது இழப்பாளாகிய அப்பேதை தானும் யாரோ? அவள் இரங்கத்தக்கவள் ஆவாள். அவள்பால் நீ வாயில் வேண்டிச் செல்க எனக் கூறி வாயில் மறுத்து ஊடினாள்'' (அகநா.146:1-12)

மேலும் தலைவன் தலைவியை மீண்டு சார்வதற்குத் தோழியை வாயிலாகக் கொண்டான். தோழியும் காதலரின் தவறுகளைப் பொருட்படுத்தலாகாது என்று அறிவுறுத்தினாள். அதற்குத் தலைவி ''ஆறு சிறிய கால்களையும் அழகிய சிறகுகளையும் உடைய தும்பி நூறு இதழ்களையுடைய தாமரைப்பூவில் இட்ட முட்டைகளை அழிக்கின்ற மூங்கிலைப் போன்ற உள்ளே துளையினை உடைய வேழத்தை உடைய நீர்த்துறையினை அடுத்துள்ள ஊரனை இடைவிடாது எண்ணியதனால் என்னுடைய முன்கையில் செறிக்கப்பட்ட ஒளியுடைய வளையல்கள் நெகிழ்ந்து கழன்றோடுகின்றன என்று கூறி வாயில் மறுத்து ஊடினாள்'' (ஐங்.20:1-5) இவ்வாறு விறலி, பாணன், தோழி எனத் தலைவன் பொருட்டு தூதாக வந்தவர்களுக்குத் தலைவி வாயில் மறுத்தாள் என்ற செய்தி புலனாகிறது.

காதாசப்தசதியில் பரத்தையரிடம் சென்று வந்து தலைவன் வாயில் மறுத்த தலைவியிடம் மன்னிக்குமாறு வேண்டினான். அதற்கு அவள், ''இதற்கு முன் செய்த பிழைகளைப் பொறுப்பதா? இனிமேற் செய்யப்போகும் பிழைகளைப் பொறுப்பதா? இன்று செய்த பிழை பொறுப்பதா? எதை மன்னிப்பது? என்று சினந்து கூறி அழகிருந்தும் அறமும், நாணமும் இல்லையே என்று இடித்துரைத்து வாயில் மறுத்தாள். (ஐங்.80:1-3) மேலும்,

**''புகழ்மிகு மறிவும் பொற்புறு குணங்களும்**
**உடைய மாந்தரின் உறுபகை மேலாம்!**
**இகழ்மிகு மிழிதகை யியல்புடை யோரின்**
**நட்பு நமக்கே வெட்கம் தருமே! (காதா.226:1-4)**

என்று கூறி வாயில் மறுத்தாள்.

**தலைவி நெஞ்சோடு கூறுதல்**

பரத்தையரை நீங்கி வந்த தலைமகனை ஏற்றுக் கொள்ளுமாறு வாயில்கள் சொன்னதற்கு இணங்கியும் தன்னுடைய ஆற்றாமைக்கு ஆட்பட்டும்

அவளை ஏற்றுக் கொள்ள நினைத்த தலைவி, மேலும் அவன் பரத்தையர்க்கே அன்பு செய்தான் எனக்கேட்டு மனம் வெதும்பியமையினை,

**''கரைசேர் வேழம் கரும்பின் பூக்கும்**
**துறை கேழ் ஊரன் கொடுமை நன்றும்**
**ஆற்றுக தில்ல, யாமே;**
**தோற்க தில்ல, என் தட மென் தோளே'' (ஐங்.12:1-4)**

என்னும் பாடல் சுட்டும். அதுபோல் காதாசப்தசதியில் ''பாழும் மனமே! அவனைப் பிரிந்து வாழ இயலாதென்று நீ எரிந்து போனாலும் எரிந்து போ! கரிந்தாலும் கரிந்துபோ! உடைந்து போனாலும் உடைந்து போ! இனி அந்தப் பண்பிலாளனை மீண்டும் ஏற்றுக் கொள்ள மாட்டேன். இன்றுடன் அவனை முற்றும் துறந்தேன் எனத் தலைவனின் தவறான ஒழுக்கம் கண்டு சினந்த தலைவி தன் மனத்திற்குக் கூறினாள்.'' (காதா.326:1-4) இவ்வாறு இருவகை இலக்கியத்திலும் மருதத்திற்குரிய உரிப்பொருள் சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**நெய்தல் உரிப்பொருள்**

நெய்தலுக்குரிய உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமுமாகும்.[89] இரவுக்குறி வரும் தலைவனைப் பகற்குறி வா என்றலும் பகற்குறி வருவானை இரவுக்குறி வா என்றலும் களவுக்காலத்தே கூடிப்பிரியும் காலம் கூடத் தலைவி தாங்கமாட்டாள் எனத் தோழி கூறலும் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றலும் தலைவனை வரைவு கடாவுதலும் தலைவன் வரைவொடு வந்தமையைத் தோழிக் கூறலும் ஊர்அலர் தூற்றுதலும் தலைவி வருத்தம் மிக்குப் பேசாப்பொருளுடன் பேசுதலும் தலைவன் தன் நெஞ்சுடன் ஆற்றாமை மீதூரப் பேசுதலும் இடித்துரைத்த பாங்கனுக்கு மறுத்துக் கூறுதலும் என்னும் நிலையில் நெய்தல் உரிப்பொருள் அமைந்துள.

**தோழி தலைவனுக்குக் கூறியது**

இரவுக்குறி வரும் தலைவனுக்குத் தோழி சொல்லியதாக எட்டு பாடல்களும் பகற்குறி வரும் தலைவருக்குத் தோழி சொல்லியதாகப் பதினைந்து பாடல்களும் இரவுக்குறி வந்த தலைவனுக்குப் பகற்குறி நேர்ந்ததாக இருபாடல்களும் இரவுக்குறி நேர்ந்ததாக எட்டு பாடல்களும் மறுத்து வரைவு கடாவியதாக இரு பாடலும் தலைமகன் சிறைப்புறத்தானாக அலர் அச்சம் கூறியும் செறிப்பு அறிவுறித்தியும் வரைவு கடாவியதாக அறுபத்தெட்டு பாடல்களும் வரைவிடை வைத்து நீங்கும் தலைவனுக்குக் கூறுவதாக இருபாடல்களும் அமைந்துள்ளன.

அதுமட்டுமின்றி புறத்துத் தங்கி வந்த தலைமகனுக்குக் கூறியதாக ஒரு பாடலும் வாயில் நேர்தலாக இருபாடலும் மறுத்ததாக மூன்று பாடல்களும் என நூற்றிஒன்பது[90] பாடல்கள் காணப்படுகின்றன. காதாசப்தசதியில் தோழி தலைவனிடம் தலைவியின் இரங்கல் நிலையைக் கூறியதாக ஒருபாடல் (காதா.422:1-4) இடம்பெற்றுளது.

**இரவுக்குறி மறுத்தல்**

வளைவாகிய கால்களையுடைய முதலை, தான் உள்ள வழியில் பிற உயிர்கள் இயங்குதலை ஒழிக்கும். இத்தகைய கடற்கரைச் சோலையையுடைய அழகிய பெரிய நீர்த்துறையின்கண், திரளாகிய மீன்களையுடைய கரிய கழியை நீந்திக் கடந்து நீ இவள்பால் விருப்பம் உடைமையால் வருகின்றாய் ஆனால் நின் வலியறிய மாட்டாத அறியாமையால் நின் வருகையை உவந்து ஏற்பவளாகத் தலைவி உள்ளாள் அதனால் யான் மகவடிவு இல்லாது ஒட்டிப்பிறந்த இரட்டைக்குழவிகளுள், ஒரு குழவி நஞ்சு உண்ட வழி, அந்நஞ்சு மற்றொரு குழவிக்கும் பரவிக் கொல்லும் எனத்தாய் அஞ்சுவது போல, என் மனதும் அச்சம் கொள்கின்றது என இரவுக்குறி மறுத்தாள் (குறுந்.324:1-7)

**பகற்குறி சுட்டல்**

தலைவன், தலைவியை மணந்து கொள்வதில் கருத்தின்றி நாள்தோறும் இரவின்கண் வந்து சென்றான். அதுகண்ட தோழி, “அலைகளையுடைய குளிர்ந்த கடலாகிய சுரத்தில் திரிந்து வருந்திய திண்மையான படகின் விளக்கொளியில் தான் பிடித்துவந்த பலவகைமீன் இனங்களை என் அண்ணன்மார்க்குக் காட்டுவதற்கு என் தந்தையும் இரவில் வீட்டிற்கு வருவார். என் தாயும் நீருண்ணும் குளிர்ச்சி பொருந்திய துறையில் உள்ள தெய்வத்தைத் தன் தோழிமாருடன் தொழுது வழிபடுவாள் என இரவுக்குறியில் உளதாகிய ஏதங்களைத் தோழி எடுத்துக்காட்டி, இரவுக்குறி மறுத்து, பின் நீயும் தேன் சொரியும் கூந்தலையுடைய தலைவியின் அழகிய நெற்றியைத் தடவி, கோங்கினது அரும்பு போன்ற குவிந்த இளைய முலையையுடைய மார்பகத்தே இனிதே துயின்று அவளைக் கூடி இன்புற்றுச் செல்வதற்கு விரும்புவாயானால், வண்டுகள் படிந்தாடும் மலர்ந்த பூக்களை உடைய செருந்தி மரம் உள்ள வெண்மையான மணம் பரந்த முடுக்கில், பூக்கள் நிறைந்த புன்னை மரங்களையுடைய அழகிய குளிர்ச்சி பொருந்திய சோலைக்கு வருவாயாக எனப் பகற்குறி சுட்டினாள் (அகநா.240:5-15)

**பகற்குறி வந்த தலைமகற்குத் தோழி இரவுக்குறி நேர்ந்தது**

தலைவியை மணந்து கொள்ளும் கருத்தின்றித் தலைவன் நாள்தோறும் பகற்குறியின்கண் வந்து அவளோடு அளவளாவிச் சென்றான். தலைவியை மணந்து கொள்ளச் செய்யும் பொருட்டு தோழி, ‘பல்வேறு மலர்களையுடைய குளிர்ச்சி பொருந்திய சோலையில் பகற்குறியிடத்தே பகற்பொழுதெல்லாம் எம் தலைவியோடு அளவளாவிப் பொழுதுபோக்கிய நீ, இம்மாலைக்காலத்து அவளை விட்டுப் பிரிந்து சென்றால் அவள் தனிமைத் துன்பத்தால் மிகவும் வருந்துவாள். அதனால், நெடிய தேரினைத் தொலைவில் நிறுத்தி தாளம் தப்பாது அடியிட்டுச் செல்லும் மாட்சிமைமிக்க தொழில்திறம் அமைந்த நின்குதிரைகள் இவ்வூர் மக்கள் உறங்கும் யாமத்தில் கனைத்து ஒலியெழுப்புதலைத் தவிர்ப்பாயாக! குன்றின் மீதிருந்த மெதுவாக இறங்கி வரும் களிறு போல நீயும் குவிந்து கிடக்கும் மணற்குன்றுகளைக் கடந்து வருக! பல்வேறு மீன்களை உண்ணும் நாரையுடன் பனைமீது அன்றில் தங்கியிருக்கும் முற்றத்தின்கண், பொன் போன்ற நிறமுடைய நறுமலர்கள் உதிர்ந்து பரவிக்கிடக்கும் புன்னை மரங்கள் கொண்ட சோலையில் யாம் குறித்துச் சொல்லிய இரவுக்குறியிடத்தே இரவின்கண் வருவாயாக’’ என்று கூறுவதன் மூலம் நெய்தல் உரிப்பொருளாகிய இரவிடைப் பிரிந்துவாழ முடியாத துயரநிலை வெளிப்படுகின்றது. (அகநா.360:10-19)

**பகற்குறி இரவுக்குறி மறுத்தல்**

பகற்குறியில் வந்து களவில் ஒழுகும் தலைவனிடம் தோழி, ‘இவன் தன் காம மிகுதிபோல் இது காலைப்பொழுது என்று கருதியிரான். நீ அவளிடம் காட்டும் அன்பைப் பெரிதும் போற்றுவள். இவளுக்கு அருள் செய்யும் வகையில் பல மலர்களையுடைய கடற்கரைச் சோலைக்குப் பகலிலும் வருகின்றாய். இத்தகைய இனிய பண்புடைய களவொழுக்கம் தலைவிக்கும் இனியது செய்யும். எனினும் இவள் ஊரில் எழும் அலரால் அரிய காவலுக்குட்பட்டு இச்செறிப்புறுவாள். அதனால் நீ இனி இரவில் வருக என்றாள். இவ்வூர் சுறாமீனினம் மிகுந்ததும் நீர்நிறைந்ததுமான கடற்பரப்பையுடைய நீர்த்துறையினை உடையது. இத்துறையும் துஞ்சாத கண்களுடன் விளங்கும் பழிச்சொல் மிகக் கூறும் கொடிய மாதரையும் கொண்டது எனக் கூறி வரைந்து கொள்ளுமாறு வேண்டினாள். (நற்.223:1-9)

இவ்வாறு தோழி தலைவனுக்கு இரவுக்குறி மறுத்து பகற்குறி நேர்தலும் பகற்குறி மறுத்து இரவுக்குறி நேர்தலும் இருவகைக் குறியும் மறுத்து வரைவுகடாவுதலும் உண்டு. ஆனால் காதாசப்தசதியில் இவ்வகையான கூற்றுகள் காணப்படவில்லை. எனினும் அதற்கு மாறாக,

**“பக்குவ மாய பருவ முற்றதும்**

**களஞ்சேர் வேனெனும் கவலை கொண்டு**

**மென்பனி படிந்த சென்னெல் இதுவே**

**தலைகுனிந் தழுதிடும் நிலையினைக் காணாய்” (காதா.432:1-4)**

எனப் பனிக்காலத்தில் அதிகாலையில் கதிர் முற்றியதால் தலைகுனிந்த செந்நெல்லில் முத்துப்போன்ற பனித்துளிகள் படிந்திருக்கும். அறுவடைக்குரிய பருவம் வந்ததும் நெல் அடிக்கும் களம் வந்து சேர்வேன் என்று நினைந்து செந்நெல் தலைகுனிந்தழுவது போலத் தோன்றுகிறது எனத் தோழி அறுவடைக்காலம் நெருங்குகிறது என்றும் தலைவியின் துயரை நினைவுறுத்திக் களத்துமேட்டில் கலந்தின்புறுமாறு கூறுகிறாள். இவற்றால் தலைவியின் இரங்கல் நிலையும் தோழி பகற்குறி சுட்டியமையும் புலனாகிறது.

**தோழி வரைவு கடவுதல்**

களவு வெளிப்பட்ட நிலையில் வரைதல், களவு வெளிப்படும் முன்னர் வரைதல் என்ற இரண்டனுள் களவு வெளிப்பட்ட பின்னரும் தலைவன் வரையாது, பொருள்வயின் பிரிந்து திரும்பி வந்த நிலையில் தோழி எதிர்ப்பட்டு, தலைவியது ஆற்றாமையை எடுத்துக்கூறி வரைந்து கொள்ளக் கடாவினாள்.

ஊரவர் அலர் எடுத்துத்தூற்றவும் நீ அவளை நினையாது இருக்கின்றாய், நீ அவளைப் பிரிந்தமையின், மிகுகின்ற தன் வருத்தம் உடைய காமநோயையும் என்னிடம் கூறாது மறைத்தாள். எடுத்துரைக்கும் பேரழகு பெற்ற தன் அழகு கெடும்படி மனங்கலங்குதலின் பீர்க்கம் பூவை அடுக்கி வைத்தாற் போன்று, பிறை போன்ற நுதல், மென்தோல், நெடிய பெருங்கண் போன்றவை அவளது பிரிவுத் துயரைப் புலப்படுத்திவிட்டன. ஆகவே விரைந்துச் சென்று வரைந்து கொள்வாயாக (கலித்.124:5-21) என்றாள்.

**தலைவனை இழிந்துரைத்தல்**

தலைவனின் புறத்தொழுக்கம் கண்டதோழி, தலைவனை நோக்கி, “தலைவி இவளுடைய பெரிய மென்மையான தோள்கள் மணற்பரப்பிலுள்ள ஞாழல் மரங்களில் பறவைகள் ஆரவாரம் செய்தற்கு இடனான அகன்ற கடற்றுறையின்கண் ஒரு காலத்தில் நினக்கும் இனிமை செய்தன. அத்தோள்களே சிலகாலம் கழித்துத் தலைவனுக்கு வெறுப்பைத் தந்தது” (ஐங்.143:1-3) என இழிந்துரைத்துக் கூறினாள்.

**குறைநேர்தல்**

தோழியின் உதவியோடு தலைமகளைக் கூடக்கருதிய தலைமகன் அவளை உதவுமாறு வேண்டினான். அதற்கு உடன்படாத தோழியிடம் அவன்

மீண்டும் குறையிரந்த போது அவனுக்கு தோழி, "தெள்ளிய நீரைக் கொண்ட உப்பங்கழிகளில் செந்நிற இறால் மீன்கள் அகப்படும் குளிர்ந்த கடற்கரைக்குத் தலைவனே! கடற் சங்கினை அறுத்துச் செய்த ஒளிமிக்க வளைகளையும் கொழுவிய அடர்ந்த கூந்தலையும் ஆய்ந்து எடுக்கப்பட்ட குறுந்தொடிகளையும் உடைய இளநங்கையை நீ விரும்புவது உண்மையாயின் அவளை உடன் மணந்து கொள்வாயாக" (அகநா.310:5-17) என்று கூறினாள்.

**வரைவிடை வைத்து நீங்கும் தலைவனுக்குக் கூறியது**

பொருள் ஈட்டி வருவதற்காகப் பிரியும் தலைவனிடம் தோழி, வெண்ணெல் தந்து உப்பைப் பெற்று விலைகூறும் உமணர் ஆங்காங்குத் தங்கிச் செல்வர். ஆங்காங்கு வணிகப்பொருட்டாக அவர் தங்கும் சிற்றூர்களை விட்டு அவர்கள் நீங்கும் போது ஊரினர் துயர் உறுவர், சின்னாள் பழகிய நிலையில் இவ்வாறு வருத்தம் ஏற்படுவதாயின் உயிரொன்றிய காதற்பிரிவு எத்தகைத்து என நினையாய் ஆதலின் நீ மடவை எனக் கூறினாள். மேலும் மீனை மிகுதியாகத் தின்ற செருக்கால் நெய்தல் மலரை மிதிக்குமாறு நீயும் பொருள் வேட்கையால் இவள் உயிர் வாடவிடுதல் தகாது எனவும் அறிவுறுத்தினள் (நற்.183:1-11)

**வாயில் மறுத்தல்**

தலைவன் பரத்தையரோடு உறவு கொண்டு தலைவியைப் பிரிந்திருந்தான். அவன் பரத்தையரிடத்துத் தூதுவிடுத்து அவர்களின் ஊடல் தீர்த்துக் கூடுவதில் ஆர்வம் கொண்டிருந்தான். அவன் தன் தூதுவர்களைத் தலைவியிடமும் அனுப்பி அவள் ஊடல் தீர்த்துக் கூட விரும்பி அதற்குத் தோழி உதவியை நாடினான். தலைவன் பரத்தையரோடு கொண்ட உறவை நன்குணர்ந்த தோழி, வெள்ளைக் கொக்கின் குஞ்சு இறந்ததாக, அக்குஞ்சின் தாயைக் கண்டு ஆறுதல் கூற விரும்பிச் சென்ற மடப்பம் கொண்ட நடையை உடைய நாரை, துயரத்தால் துடித்தமையால் அதன் உடலிலிருந்து வீழ்ந்த சிவந்த மறுக்கள் கொண்ட இறகுகள் தெள்ளிய நீரைக்கொண்ட கழியிடத்தே பரந்து செல்லுதற்கு இடமான துறைவன், தலைவிமேல் அன்புடையன் என்று நீவிர் சொல்வது எனக்கும் உடன்பாடே. ஆயின் என் அன்னை போலும் தலைவியின் மனத்திற்கு அஃது உடன்பாடானதன்று என்று வாயில் மறுத்தாள். (ஐங்.156:1-5)

**வாயில் நேர்தல்**

பரத்தையிடம் சென்று வந்த தலைவனைத் தலைவியுடன் எதிர்க் கொண்ட தோழி, அறியாத தலைவியிடம் நீ காட்டும் அருள்பெரிது. ஆயினும், அழகுடைய விரிந்த பிடரிமயிரால் பொலிவுற்றதும் குதிரைகளுடைய இப்படைகளையுடைய நன்னன் தோற்றோடச் செய்து பகைமன்னரின் மகளிர்தம்

கூந்தலைக் கொய்து கயிராகத் திரித்தனன். அவன் அங்ஙனம் செய்த கொடுமையை விட நீ தலைவியைப் பிரிந்த செயல் மிகக் கொடுமையாயிற்று. ஆதலால் நின் வலிமையான தகைமையை நான் மறந்து போகின்றேன் என்று கூறி வாயில் நேர்ந்தாள். (நற்.270:1-11)

காதாசப்தசதியில் வரைவுகடாவுதல் குறைநேர்தல் வாயில் மறுத்தல் வாயில் நேர்தல் என்பன போன்ற கூற்றுகள் எதுவும் இடம் பெறவில்லை.

**தோழி தலைவிக்குக் கூறியது**

களவொழுக்கத்தே தோழியை மதியுடம்படுத்த தலைவன் தோழியின் பின்னின்று தன்னைத் தலைவியோடு கூட்டுவித்தல் வேண்டும் என்று குறைநேர்ந்தான். அவனுக்கு இரங்கித் தலைவியிடம் வந்து தலைவன் விருப்பத்திற்கு இணங்குமாறு கூறியதாகவும் தலைவன் குறியிடத்து வந்தும் தோழி அதனை அறியாதவள் போலத் தலைவியிடம் அன்பிலாளன் எனக்கூறி வரைவுகடாவுவதாகவும் காப்பு மிகுதிக்கண் தோழி தலைமகட்குக் கூறியதாகவும் தலைவியை ஆற்றுவித்தலும் விரிச்சி பெற்றுப் புகன்ற தோழி, தலைவிக்குக் கூறியதாகவும் உடன்போக்கு வலிந்தமையும் தலைவன் தலைவியை வரைந்து கொள்வதற்கு வரும் செய்தியினைக் கூறுவதாகவும் திருமணத்திற்குப் பின்னர் அவ்வூர் அலர் அடங்கியமையைக் கூறியதாகவும் பரத்தையர் மனைக்கண் பின்னாள் தங்கி பின்பு ஆற்றாமையே வாயிலாக வந்த தலைமகனை எதிர்ப்பட்ட தோழிதலைமகட்குக் கூறியதாகவும் அகஇலக்கியத்தில் நெய்தல் திணை உரிப்பொருள்கள் அமைந்துள்ளன.

காதாசப்தசதியில் தோழி தலைவிக்காக இரங்கிக் கூறுதல் தலைவியை ஆற்று வித்தல் உடன்கட்டை ஏறியதைக் கண்டு வருந்தியதாகவும் நெய்தல் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

**தோழி குறைநயப்பக் கூறுதல்**

தலைவனுக்குக் குறைநேர்ந்த தோழி, தலைவியிடம் வந்து, அன்றொருநாள் நமது துறைவன் தனது தேரினைத் தொலைதூரத்தில் நிறுத்திவிட்டுத் தன்னந்தனியனாய்க் குறுகக் குறுக நடந்து வந்து நமது ஊர் யாதென்று வினாவிச் சென்றான். நேற்றோ நீர் உண்ணும் துறையிடத்து, அகன்ற இலையினை உடைய நாவல் மரத்தின் அடியில் வீழ்ந்து கிடந்த கனியினை அதன் அழகு சிதையுமாறு இழுத்துச் சென்று, தாழையின் வேர்ப்பக்கத்தில் தன் வரையிலுள்ள தன்னால் விரும்பப்படும் பெண் ஞெண்டிற்குத் தரும் ஓர் ஆண் நண்டினைச் சுட்டிக்காட்டி, 'இதுவன்றோ சிறந்த இல்லறப்பண்பு' என்று கூறிச் சிறிதுநேரம் சிந்தித்துப் பார்த்தவனாய் மீண்டு

சென்றான். இன்றும் நம் தலைவனது தேர் காணப்படுகிறது. நாம் அவனை எதிர் கொண்டு வரவேற்று ஏற்றுக்கொள்ள வில்லையாயின், பெரிதும் நாணம் உடையவள் ஆதலின், நாம் அவன்பால் அன்பிலம் எனக்கருதி மீண்டும் சென்றுவிடுவான் போலும். நான் இந்த வெண்ணிற மணற்குன்றின் பின்னால் ஒளிந்து கொள்கிறேன். நீ உன் கருத்தைக் கூறுவாயாக என்று தலைவன் விருப்பத்திற்கு இணங்கி குறைநயப்பக் கூறினாள். (அகநா.380:1-13)

அதுபோல் தலைவன் பகற்குறியிடத்தே வந்து நின்றான். அவனது வரவினை அறியாதவள் போன்று தோழி, 'நீதான் பகற்பொழுதெல்லாம் எம்மொடு கூடி விளையாடி இரவில் வீட்டிற்குச் சென்றால். 'தந்தையால் காவல் இடப்படுவேன் என்று கூறுகின்றாய், அப்படியானால், கடல் தெய்வம் போல நீ இங்கேயே நில், நானும் உன்னுடன் நிற்கிறேன். அலர் உண்டானால் பரவாயில்லை என்று தலைவியின் பிரிவாற்றாமையையும் காவல் மிகுதியையும் கூறித் தலைவனுக்கு வரைதல் வேண்டுமெனவும் உணர்த்தினாள். (அகநா.370:1-9)

**தலைவியிடம் வருந்திக் கூறுதல்**

தலைமகள் இற்செறிக்கப்பட்டு காவல் மிகுதியால் தலைவனைக் காண இயலாது வருந்தினாள். அதுகண்ட தோழி, தலைவியை நோக்கி, ''ஊர் துயில்கின்றது துணையானோர் யாருமில்லை. அவரை அடையாதபடி இற்செறிவுற்றதுடன் அயற்புறமும் காவல் உடையதாகியதுடன் அயற்புறமும் காவல் உடையதாகி விளங்கும். மேலும் ஊர்க்காவலர்தம் மணி ஒலித்தவண்ணம் உள்ளது. யான் இறந்துபடுநாள் இதுவே தானோ என வருந்தியுரைத்தாள்.'' (நற்.132:1-11)

**தலைவியை ஆற்றுவித்தல்**

தலைவன் தலைவியின் காதலைப் பலர் பழிச்சொல் தூற்றினர். அதனைப் பொறுக்க இயலாமல் வருந்திய தலைவியிடம் தோழி, 'நம்முடைய ஊர் எல்லாவளமும் உடையது. துறையும் இனிமையுடையது. மழைபெய்யாமல் வறண்டு போனால் கழிநீரிடத்து முள்ளிச் செடியின் மலர்கள் உதிரப்பெற்று, பரந்துகிடந்த சேறெல்லாம் ஒரு சேரக் காய்ந்து கருமையான அந்த சேற்றிடமெங்கும் வெண்மையான உப்புவிளையும் இத்தகைய பெருமையுடையது நம்மூர். இவ்வளங்கள் நிறைந்து நம்மூரிடத்துள்ள நம் கடற்கரைச்சோலை ஒன்று மட்டுமே ஊரார் தூற்றும் பழியினைப் பெற்றிருக்கின்றது. அப்பழி என்னவெனில், கருமையான கிளைகளை உடைய புன்னையின் மலர்களில் உள்ள தேனைப்பருகி விட்டே கரிய வண்டுகள் மயக்கத்தில் நல்ல நிமித்தமாக ஒலிக்கும். ஆனால் காதலராகிய அவர் வருகின்ற நெடிய தேரின் இனிமையான

ஓசையைக் கேட்பது தான் அரிதாக இருக்கின்றது. அப்பழி மட்டும் இல்லாதிருந்தால் நம்மூரும் சோலையும் இனியனவாக இருத்தல் போல, அவர் வந்து சேர்ந்துவிட்டால் அதுவும் நமக்கு இனியதாகத் தோன்றும் என்று ஆற்றுவித்தாள். (நற்.311:1-11) அதுபோல, தலைவனின் பிரிவை எண்ணி வருந்தி நிற்கும் தலைவியிடம் தோழி, தலைவன் மீண்டு வருதலை உணர்த்தும் நன்னிமித்தங்களைக் கூறினாள். அதாவது பரதவர் குடிச்சிறுவர் மீன் பிடிக்கும் திமில்களில் ஏறிச்சென்று சுறாமீன்களையும் பிற மீன்களையும் கொணர்வர். அத்தகைய பாக்கத்தில் கல்லென்ற ஆரவாரம் மிக்க தலைவன் தேர்வந்து நிற்கும் எனத் தோழி தலைவிக்குக் கூறினாள். மேலும் சிறார் விரைந்து இயங்கி மீன்வேட்டம் செய்யுமாறும் கரைக்குத் திரும்புமாறும் போலத் தலைவனும் பொருள்தேடி விரைவில் வருவான் என்று கூறி ஆற்றுவித்தாள். (நற்.111:1-10) காதாசப்தசதியில், ‘‘தலைவனின் வீழ்ச்சியும் மறைவும் நெஞ்சை விட்டகலாத நெடுந்துன்பக் காட்சிகளாகி விட்டன யார் வந்து துயரத்தை ஆற்றினாலும் அது ஆறுதலாகத் தெரியவில்லை வீழ்ச்சிக்கான கரணியத்தை அறிந்து கொள்ள அவள் உள்ளம் அவாவுகிறது என்பதைத் தோழி புரிந்து கொண்டாள். ஒருவன் புகழேணியின் கொடுமுடியில் இருக்கும்போது இரு கரணியங்களால் வீழ்ச்சியடைகிறான் எடுத்த செயல் முடியுமுன்பே தன் தகுதியை விளம்பரப்படுத்துவது பணிமுடிந்தவுடனே தன் வெற்றியை அறிவித்து விழா கொண்டாடுவது தோழி இக்கரணியங்களைச் சொன்னபோது அவளுக்கு இருளில் ஒரு மின்மினி வெளிச்சம் தெரிவதுபோல் சில உண்மைகள் புலப்பட்டன. இதனை

**‘‘குன்றன்ன மனிதனைக் கூட நொடியில்**
**குன்றச் செய்யும் குறையிரண் டுளதே**
**செய்யாச் செயலைச் செப்பித் திரிதலும்**
**செய்த செயலைச் செப்பலு மாமே’’ (காதா.215:1-4)**

சுட்டும். இவ்வாறு தோழி தலைவியை ஆற்றுவித்தாகக் கூறப்பட்டுள்ளது.

**உடன்போக்கு வலிந்தமை கூறல்**

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொள்ள வேண்டும் எனக் கருதினாள். தோழி அது புலப்படுமாறு தலைவியிடம், நம்மூரில் உள்ள பெண்டிர் சிலராகவும் பலராகவும் தெருக்களில் கூடி நின்று கடைக்கண்ணால் குறித்துக் காட்டியும் சுட்டுவிரலை மூக்கில் வைத்துப் பழிச்சொல் கூறியும் இருந்தனர். அப்பழி மொழிகளை நம் அன்னை கேட்டு மெய்யெனக் கொண்டாள். அதனால் சினம் மிகுந்து சிறிய கோலினை ஏந்தி அது

சுழலும்படியாக வீசி அடித்தனள். இவற்றால் நான் மிகவும் துன்புற்றேன். கழியருகே உள்ள சோலையின் புதிய மலர் தீண்டியதால் பூமணம் வீசுகின்றதும் நல்ல நிறம் பொருந்தியதுமான பிடரிமயிரையுடைய விரைந்து செல்கின்ற செலவினையுடைய குதிரைகள் நன்கு இயன்ற தேரில் பூட்டப்பட்டுள்ளன. அத்தேரினை விரைந்து செலுத்தியபடி நம் துன்பம் நீங்குமாறு நள்ளிரவில் நம் தலைவனாகிய கொண்கன் வருவான். அங்ஙனம் வரும் தலைவனோடு நீ செல்ல நான் கருதினேன். எனவே உடன்போக்கு மேற்கொள்வாயாக பின் இவ்வூர் என்ன செய்யும் அலர் கூறி ஒழிந்து போகட்டும் என வற்புறுத்திக் கூறினாள். (நற்.149:1-10)

**தலைவன் வரைவு மலிந்தமையினைக் கூறுதல்**

களவொழுக்கமே விரும்பி வரைதலில் கருத்தின்றி வந்துசென்ற தலைவனால், அலர் மிகுதியாயிற்று. அதனால் தோழி வரைந்து கொள்ளுதல் வேண்டுமெனத் தலைவனிடம் வேண்டினாள். அவனும் உடன்பட்டு வரைதற்கு வருகின்றமையைத் தோழி, ‘ஒல்லென ஒலிக்கும் ஆரவாரத்தோடு ஏவல் இளையரோடு வலிய வாயினால் பிறர் பழிதூற்றும் ஆரவாரமுடைய சிறிய இவ்வூர் மக்கள் கண்கூடாகக் காணுமாறு முன்பு போல மறைவேதும் இன்றி இன்று பகற்பொழுதிலேயே தலைவனுடைய தேர்வருவதாயிற்று என்று தலைவியிடம் தலைவன் வரைவொடு வந்தமையைக் குறிப்பால் கூறி மகிழ்விப்பபாள். (அகநா.160:15-18)

**தோழி மகிழ்ந்து கூறுதல்**

தலைமகன் வரைந்து எய்திய பின்றை தோழி தலைமகளிடத்து, ‘வீட்டைக் கடந்து சென்று தங்கினாலும் அலராகும் என்று கூறப்படவும் நம் தலைவருடன் சென்று கானலிலே தங்கிய களவொழுக்கம் நீங்கும் படி, முற்பிறப்பில் செய்த நல்வினையின் பயனாக, அவரோ கடல்தந்த குளிர்ந்த நெய்தல் பூக்களுடன் ஏனைய பூக்களையும் சூடிக்கொண்டு நின்னை மணந்து கொள்ளத் தேரேறி நம்மிடையே வரலானார். வந்த தலைவர், நின்னை மணந்து கொண்டு செல்லுதலைக் கண்ட ஊர்மக்கள் அலர் கூறுவதை விடுத்து வாயடங்கி வாளாவிருந்தனர். அவ்வாறு அவர்கள் மேற்கொண்ட புதுமைப் போக்கு நமக்குப் பெரிதும் நகையினை உண்டாக்குவதாகும் என்று கூறினாள்.

**தோழி செவிலிக்குக் கூறியது**

தலைவனுடைய பிரிவினைத் தாங்கவியலாத தலைவியின் மெய் வேறுபாடடைகின்றது. அதை அறிந்த செவிலி, இவளுக்கு இம்மெய் வேறுபாடு எதனால் உண்டாயிற்று? என்று வினவத் தலைவியின் குறிப்பறிந்த பின்னர்த்

தோழி அவள் கற்புக்கடம் பூண்டவள் என்பதைச் செவிலிக்குக் வெளிப்படுத்துவதாக பதினாறு[91] பாடல்கள் அமைந்துள்ளன.

தலைவி ஒரு காளையொடு காதலால் பிணைப்புண்டு அவன் பிரிவால் உடல் மெலிந்ததனை அறியாது, தலைவியின் தமர் அவள் மெலிவுக்குத் தெய்வக் குற்றமே காரணம் எனக் கருதிப் பூசை முதலியன செய்ய ஏற்பாடு செய்தமையறிந்த தோழி, "அன்னையே! குளிர்ச்சியும் நறிய மணமும் கொண்ட இதழ்கள் நெகிழப்பெற்ற மலர்ந்த ஒளிமிக்க நெய்தல் பூவை, வெண்ணெல்லை அறுவடை செய்யும் வினைஞர் விலக்கிவிட்டு, நெல்லை மட்டும் அறுத்தற்கு இடனான நெய்தல் நிலத்தின் தலைவனே தெளிவாக எம் பல்இதழ்களை உடைய குவளை மலர்போலும் மையுண்ட கண்கள் நீரால் நிரம்பி வழியக் காரணமானவன் எந்தத் தெய்வமும் அன்று எனத் தன் தாய்க்கு உண்மையை வெளிப்படுத்திக் தலைவியின் கற்பைக் காத்தாள்" (ஐங்.190:1-4)

**தோழி பாணனுக்குக் கூறியது**

தோழி தலைவனின் பிரிவற்றமையால் வருந்தும் தலைவியின் நிலையினைப் பாணனுக்குக் கூறுவதாக நான்கு[92] பாடல்கள் பயின்று வந்துள்ளன.

தலைவன் பரத்தையர் சேரியிடத்திருக்கத் தலைவி பிரிவாற்றாது வருந்துகிறாள். அவ்வருத்தத்தைப் பிறர் அறியாவண்ணம் மறைந்தொழுகுகின்றாள். அதுகண்ட தோழி, தலைவியது நிலைமையைத் தலைவனுக்குத் கூறும்பொருட்டுப் பாணனிடம் "பிரிவாற்றாது பெரிதும் வருந்தித் தன்கண்ணில் நீர் நிறைந்திருந்தும் அதனை மறைத்து, தோழி இரவின்கண் நமது வீட்டுத் தோட்டத்தில் நிற்கின்ற பனையில் உறைகின்ற வளைந்த அலகையுடைய அன்றில்கள் தம்முள் இணைந்து ஒன்றுதலைச் சிறிதுநேரம் பிரிந்தாலும் துயிலாது எனப்பிறி தொன்றனைக் கூறி அவற்றின் வருத்தத்திற்கு நான் என் செய்வேன் என்று கூறித் தன்பிரிவாற்றாமையைத் தலைவி மறைக்கின்றாள்" (அகநா.50:10-14) என்று தோழி கூறுகின்றாள்.

**தோழி வாயில்வந்தார்க்குக் கூறியது**

தலைவியின் ஊடலை நீக்கி அவளைக் கூட விரும்பிய தலைவன் தன் தூதுவர்களை அனுப்பினான். தலைவனும் அவர்களுடன் வந்து புறத்தே நின்றான். அப்போது தோழி அவன் கேட்கும் வகையில் வாயில்வந்தார்க்கு, "வெள்ளைக் கொக்கின் குஞ்சு இறந்ததாக அதன் தாய்க்கு ஆறுதல் கூறும் பொருட்டுச் சென்ற மடப்பம் பொருந்திய நடையைக் கொண்ட நாரை, தன் அலகினால் கோதிய பொழுது உதிர்ந்த இறகுகளைக் காற்றால் குவிந்த மணற்குன்றுகளிடத்தே மக்கள் பெறத்தக்க துறைவன் நட்புறவை நீண்ட

கூந்தலையுடைய என்தோழி விரும்புவாளோ? விரும்பாள்'' (ஐங்.151:1-5) என வாயில்மறுத்துக் கூறினாள் (ஐ.151:1-5)

**தலைவியின் இரங்கல் நிலையைத் தோழி கூறுதல்**

வீடே விழாக்கோலம் பூண்டிருக்கிறது. மாவிலைத் தொங்கல்களும் கழுகுப்பாறையும் தென்னங்குலைகளும் தொங்கும் பசுமையான பந்தலும் பட்டாடை உடுத்தி முத்தும் மணியும் பதித்த அணிகலன்களைப் பூண்டு பகட்டாக வரும் விருந்தினரும் பாட்டும் இன்னியமும் அவ்வீட்டின் விழாவை ஊராருக்கெல்லாம் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன. ஆனால் ஒரே ஒருகுறை எல்லாருடைய கண்ணிலும் படுகிறது. அந்த வீட்டின் தலைவி எங்கே? காணோமே! விழா ஆரவாரத்தில் அவளிருக்கும் இடமே தெரியவில்லை. அவள் விழாவில் முதன்மையிடம் பெற வேண்டியவள். பிறரிடம் பொறுப்பை ஒப்படைத்து விட்டு வீட்டின் ஒருபுறத்தில் ஒதுங்கியிருக்கிறாள். என்ன காரணமெனில் பக்கத்து வீட்டுக்காரி, அவள் கணவன் தொலைநாட்டிற்குச் சென்று இன்னும் திரும்பி வராததால் வாடிக் கண்ணீர் உகுத்துக் கொண்டிருக்கிறாள். அவள் இவளுக்கு உயிர்த்தோழி, எனவே தன் தோழி வருத்த முற்றிருக்கும் போது தான் மட்டும் எப்படி விழாக் கொண்டாடுவது என்று ஒதுங்கி நிற்கிறாள். இது தலைவியின் அன்பு நிலையைச் சுட்டுவதாகத் அமைந்துள்ளது. (காதா.71:1-4)

**தலைவி தோழிக்குக் கூறியது**

தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்த வழி, மிகுதியின்கண்; வரைவு நீட்டித்தவழி; பருவங்கண்டு அழிந்த நிலையில் தலைவன் சிறைப்புறத்தானாக நிற்க, தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவழி பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு வன்புறை எதிரழிந்து, இரவுக்குறி உணர்த்திய, ஆற்றுவித்த, ஐயுற்ற தோழிக்குக் கூறுவதாகவும் தலைவன் வரைவோடு வந்தமைக்கண்டு மகிழ்ந்து கூறுவதாகவும் தலைமகனின் புறத்தொழுக்கம் உளதாகிய வழியும் வாயில் மறுத்துப் கூறியதாகவும் வாயில் நேர்விக்கும் தோழிக்குக் கூறியதாகவும் தோழி இயற்பழித்த வழியும் மாலைப் பொழுதை நோக்கிக் கூறியதாகவும் என ஐந்திணைகளில் தலைவி தோழியிடம் கூறுவதாக நூற்றிஆறு[93] பாடல்கள் அமைந்துள்ளன. காதாசப்தசதியில் தலைவி வருந்திக் கூறியதாகப் பாடல்கள் இடம்பெறவில்லை.

மகன்றில் பறவை ஆணும் பெண்ணுமாய் இணைபிரியாது வாழ்வது. சிறிது பிரிந்தாலும் துயராற்றாது. அதுபோல் களவில் தலைவனோடு தான் கொண்ட நட்பு என்றாள் தலைவி. எனினும் தலைவன் பிரிந்தபோது அவரின்

வேறாக ஓா் உயிர் ஈர் உடலில் வாழ்வது போன்ற இழிவு நோ்ந்துவிடும் என்றாள். (குறுந்.57:1-6)

மேலும் சிறைப்புறத்தே வந்துநின்ற தலைவனைத் தோழி அறியாதவள் போலத் தலைவிக்குச் சிலகூற, அதனைக் கேட்ட தலைவி, ‘‘தோழி என் நெஞ்சம் நெகிழ்ந்து உருகும்படி என்னிடத்தும் பெரிய துன்பத்தைச் செய்த அன்பில்லாதவன் கூறிய அறிவுரைகளை மெய்யென்று கொண்டு யானும் விரும்பினேன் இனி அத்தகையவனை நம்பி ஒரு பயனும் இல்லை என்று வருத்தமுடன் கூறினாள்’’. (அகநா.260:13-15)

**காமம் மிக்க கழிபடா் கிளவி**

இருவகைக் குறியிடத்தும் வந்தொழுகிய தலைமகன் இடையில் வராமல் தடைப்பட்ட கூட்டத்தால் தலைவி வருந்தினள். மணம்புரியும் கருத்தினளாய் வேட்கை மீதூர நின்ற நாரையை விளித்து ‘‘நாராய் உன் துறைவனுக்கு நான் மாலைப்பொழுதில் வருந்தும் தன்மையை அவனுணருமாறு சொல்வாயாக என்று கூறும்போதும் (நற்.54:1-11) தலைவனுடைய பிரிவாற்றாமையால் வருந்திய தலைவி தனது வேட்கை மிகுதியாலே ஒரு நண்டினை நோக்கி, ‘‘நண்டே எம்பெருமானிடம் சென்று ஐய! நள்ளிரவு யாமத்திலும் பல நாளும் நின்பால் வந்து நின் துன்பத்தைத் தவிர்த்த என்தோழி இப்பொழுது உன்னைக் காணாமல் வருந்துகின்றாள். ஆதலின் நீ சென்று அவளது வருத்தத்தைப் போக்குவாயாக என்று எடுத்துக் கூறுவாயாக’’ (அகநா.170:8-16) என்று கூறும்போதும் நெய்தல் நிலத்திற்குரிய இரங்கல் உரிப்பொருள் வெளிப்படுகின்றது. சங்க அகஇலக்கியத்தில் ஆறிடங்களில்[94] சுட்டப்பெற்றுளது.

**தலைவி தலைவனுக்குக் கூறியது**

தலைமகன் பரத்தைமாட்டுப் பிரிந்தவழி ஆற்றாளாகிய தலைமகள், அவனைக்கண்ட வழி அவ்வாற்றாமை நீங்குமாறு,

> **‘‘இம்மை மாறி மறுமை ஆயினும்,**
> **நீ ஆகியா் எம் கணவனை;**
> **யான் ஆகியா் நின் நெஞ்சு நேர்பவளே’’ (குறுந்.49:3-5)**

என்றுரைப்பர். தலைவன் தலைவியரின் அன்புடைமை பிறவிதோறும் தொடரும் என்பது ஈண்டுக் கூறப்பட்டுள்ளது. இம்மை மறுமை பற்றிய சிந்தனை சங்க கால மக்களிடம் காணப்பட்டமை இப்பாடலால் அறியப்படுகின்றது. இவ்வாறு பிரிவில் வருந்தும் தலைவியின் இரங்கல் நிலைகுறித்து நான்கு[95] பாடல்கள் காணப்படுகின்றன.

**தலைவி பாணனுக்குக் கூறியது**

தலைவியின்பால் தூதாக வந்த பாணனுக்கு வாயில் மறுப்பதாகப் பதினொரு[96] பாடல்கள் வந்துள்ளன. தலைவி மகவை ஈனுங்காலத்துத் தலைவன் பரத்தையிற் பிரிந்தான். அவள் நெய்யாடிய பின் ஊடல் நீக்கப் பாணனை வாயிலாக அனுப்பினான். பாணனிடம் தலைவி ‘‘தலைவன் நமக்கு அயலவன் ஆயினான். காதற்பரத்தை அவன் மனைவியே என்பதை இவ்வூர் அறிந்துவிட்டது. எனவே அதனை மறைத்துப் பேசாதே எனக்கூறி வாயில் மறுத்தாள்.’’ (நற்.74:7-11)

**தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியது**

தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவதாக பத்துப்[97] பாடல்கள் அமைந்துள்ளன. களவொழுக்கத்தின்கண் தலைவி விளையாட்டயரும் காலத்தே அவளை அணுகி அவளோடு சொல்லாட்டம் நிகழ்த்தி அவள்கண்களில் காமக் குறிப்பினைக் கண்டு மீளுந்தலைவன், ‘‘தலைவி மணலால் சிற்றிலிழைத்து மணலில் மேல் குவிந்து கிடக்கின்ற புன்னைப் பூந்தாதினைப் பொன் என்று அச்சிற்றிலில் முகந்து கொண்டுப் போய் வைத்துக் கொண்டு தன்பால் இரந்து வருகின்ற இரவலராக நடிக்கின்ற தோழிகளுக்கு அள்ளி வழங்கிக் கொண்டிருக்கிறாள். இவ்வாறு விளையாட்டாக இவள் செய்கின்ற இந்த அறத்தையே நீ எம்மோடு கூடி எம்மில்லத்தில் இருந்து செய்வாயாயின் அதனால் உனக்கு ஏதும் குற்றமுண்டோ என்று தன் நெஞ்சுக்குள் கூறிச் செல்கின்றான்’’. (அகநா.230:5-10)

**தலைவன் பாங்கனுக்குக் கூறியது**

தலைவன் தன் மெய்வேறுபாட்டிற்குரிய காரணத்தைப் பாங்கனிடம் கூறுவதாக ஆறு[98] பாடல்கள் அமைந்துள்ளன. காதாசப்தசதியில் இடம் பெறவில்லை.

தலைவனது மெய்வேறுபாடு கண்ட பாங்கன், இது எதனால் உண்டாயிற்று என வினவ, அவனுக்குத் தலைவன், ‘‘வெள்ளிய கல்லுப்பினை விலைக்கூறிச் செல்லும் இளமையுடைய உமணர் பெண்ணொருத்தி நாழி வெள்ளிய கல்லுப்பு என்று சேரியின்கண் பண்ட மாற்றாக விலைகூறிப் போதலாலே, அக்குரலைக் கேட்டு நாய்கள் சினந்து குரைக்க அதனால் அச்சமுற்ற அவ்வுமணப் பெண்ணின் கயல்மீன்கள் இரண்டும் போரிட்டாற் போன்ற கயல்வழிகளால் தான் எனக்கு இவ்வேறுபாடு உண்டாயிற்று’’ (அகநா.140:1-10) எனப் பாங்கனிடம் தனது ஆற்றாமையை வெளிப்படுத்தினான்.

**தலைவன் தோழி கேட்ப கூறியது**

தலைவன் தோழி கேட்பக் கூறுவதாக எட்டு[99] பாடல்கள் காணப்படுகின்றன. குறையுறவுணர்தல் முதலானவற்றால் தன்னை நாடி வந்த தலைவன் நிலையைத் தோழி உணரும் காலத்துத் தலைவன் அவளை இரந்து பின்னின்றான். பின் நின்று அவன் தலைவியிடத்து வைத்த காதலினால் பெறும் துன்பத்தைத் தோழி உணரும் வகையில், “பரதவர் மகளைக் காணும் முன்புலவு நாறும் இக்கடற்கரையூர் இனிதாக இருந்தது. இப்பொழுது அங்ஙனமின்றி இரங்கத்தக்கதாயிற்று என வருந்தியுரைத்தான்”. (நற்.101:1-9) அதுபோல் தலைவன் தான் விரும்பிய தலைவியை அடைய முடியாத நிலையில் மடலேறுவதாகத் தோழியிடம் கூறுவான். (கலித்.138:13-31) காதாசப்தசதியில் இதுபோன்ற கூற்றுகள் இடம்பெறவில்லை.

**தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறியது**

வினைமேற்சென்ற தலைமகன் அவ்வினையை முடித்துத் திரும்புகின்றான். தேரினைப் பாகன் விரைவாகச் செலுத்த வேண்டும் எனக் கருதுகின்றான். அதனைக் குறிப்பாக, முன்பு நிகழ்ந்த செயல் ஒன்றனைச் சுட்டி, “பாக! கடற்கரையிடத்து நண்டைப் பிடிக்க ஆற்றாது தளரும் இளமையும் பேதைமையும் உடையவள் தலைவி. அவளிடத்து வினைமேற் செல்லுதலைக் கூறிய போது. அவள் மறுமொழிப் பேசாது மிகவருந்தி, ஞாழல் மரத்தின் பூங்கொத்துக்களைப் பறித்து உதிர்த்தாள். இவ்வளவு மடமையுடையவர்களைக் காண விரைவது நம் கடமையன்றோ? எனவே அதற்கேற்ப விரைக எனத் தலைவன் தூண்டினான். நன்கு விரைந்தோடி வளை சேருமாறு யானும் விரைந்து இல் சேர வேண்டும் என வற்புறுத்தினான். (நற்.106:1-9) காதாசப்தசதியில் தேர்ப்பாகன் பற்றிய கூற்று இடம்பெறவில்லை.

**தலைவன் தலைவிக்கும் கூறியது**

தலைவன் தலைவியைப் பாராட்டிக் கூறுவதாக நான்கு[100] பாடல்கள் இடம்பெற்றுள்ளன. காதாசப்தசதியில் தலைவன் தலைவியிடம் கூறுவதாக ஒரு பாடல் (காதா.122:1-5) காணப்படுகின்றது.

இடந்தலைப்பாடு கொண்டு கூடுமாறு சென்று தலைவன் தலைவியை நோக்கி, “ஒளிபொருந்திய அணிகலன்களை உடைய ஆயமகளிரோடு கூடிப் பாவையைக் கொண்டு விளையாடும் ஆட்டத்தையும் ஆடாமல் மலர்ந்த மலர்கள் விளங்கும் கடற்கரைச் சோலையின் ஒரு பக்கத்தே நின்றாய்! நீ யாரோ? உன்னைத் தொழுது கேட்கின்றேன். நோக்கியவர்களால் கெடாத நிலத்தினை உடையாய்! நீதான் தெளிந்த ஆலையையுடைய பெரிய கடற்பரப்பின்கண்

விரும்பி உறையும் கடல் தெய்வமோ? கரிய உப்பங்கழியின் அருகில் நிலைபெற நின்றனையோ? வேறு யாவளோ? மடந்தையே! நீயே சொல்வாயாக'' என்று கூறினேம். அவ்வாறு கூறியதற்கு விடையாக முள்ளைப் போன்ற கூரிய பற்களிலிருந்து நகை தோன்றியது. இரண்டு இமைகள் பொருந்திய மையுண்ட கண்களும் பனிபரந்தன. ஆகவே யாம் முன்பு தழுவிய இவளே இப்போதும் அம்முகக் குறிப்புக் காட்டினள் என உணர்ந்தேன் (நற்.155:1-9) என்று கூறி அவள் அழகைப் பாராட்டினான். அதுபோல் காதாசப்தசதியில்,

**“இன்ப துன்பத் திணைந்துளஞ் ஞான்றும்**
**அன்பு பொருந்தும் மன்பதை வாழ்க்கை**
**உடைய கிழவன் கிழத்திய ருள்ளே**
**முதலில் இறந்தோர் வாழ்ந்தோ ராவர்**
**மற்றவர் வாழ்வே மரண மாமே” (காதா.122:1-5)**

என இவ்வாழ்க்கைச் சிறப்பினைக் கூறினான்.

**தலைவன் சான்றோரை நோக்கிக் கூறுதல்**

நற்குணமும் நல்லெண்ணமும் உடையவர்கள் சான்றோர். அவர்களை நோக்கி தலைவன், ‘‘முல்லை அரும்பை ஒக்கும் ஒளி விளங்கும் பற்களையும் இனிய நகையினையும் உடைய மாதராள் அழகால், அவளிடத்தும் பற்றுக் கொண்டது. என்நெஞ்சு, உள்ளத்தைச் சுட்டு எரிக்கின்ற காமத்தீ என் அரிய உயிர் போகாது எஞ்சும் வகையில் நின்று சுடுகின்றது. யான் எங்ஙனம் ஆற்றுவேன் என்றான் காமமாகிய பொறுத்தற்கரிய நோய் அறுதியாக நெருப்புதான். ஒத்த இழையினை உடையாள் அதற்குப் பரிகாரமாகத் தந்த இம்மடல்மா அறுதியாக அதற்கொரு நிழலாக இருந்தது என்றான். என்னுடைய வருத்தத்தை நீவிர் அறிந்தீராயிற் சான்றீர் என்றான். மேலும், அரசன் தான் தவம் செய்தலினின்றும் நீங்கி, துறக்கத்தின் சேறலை வழுவுதலினாலே, ஆன்றோர் அவ்வழுவுதலினின்றும் அரசனை மீட்டுத் தவம் செய்வித்து, உயர்ந்த நிலவுடைய சுவர்க்கத்திலே போகச் செய்து துயர் தீர்த்தாற் போல, என் துயரத்தினது தன்மையைப் போக்குதலும் நுமது தலையாய கடனாகும் என்று கூறினான். (கலித்.139:24-37)

**தலைவன் கண்டோருக்குக் கூறியது**

சான்றோர் திங்களைப் பாம்பு சென்று மறைக்குங்காலை, அதன் வருத்தத்தைத் தீர்க்க மாட்டாயிரானும் அதனிடத்தும் அன்புக்காட்டித் துன்புறுவர். அதுபோல, இனிய சாயலையுடைய ஒண்தொடியாளின் நோய் செய்யும்

நோக்கில் அகப்பட்ட கண்ணாற்கண்டு வைத்தும் இவ்வூரார் கண்ணோட்டமும் செய்தல் இலர். (கலித்.140:17-20)

இவ்வாறு தலைவன் மடல்ஏற முற்பட்ட நிலையிலும் ஊரில் உள்ளார் தான்படும் துன்பத்தை அறிந்தும் அறியாதவர்கள் போல பாராமுகம் நோக்கிச் செல்கின்றீர்களே என்று நேரிடையாகவே சாடினான்.

**பாங்கன் தன்னுள் சொல்லியது**

இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் தன் தோழன் உதவியுடன் தன் காதலியைக் கூட விரும்பிய தலைவன் அவனுக்குத் தலைவியைச் சந்திக்கும் இடத்தினைச் சுட்டினான். அச்சுட்டிய இடத்திலே தலைவியைக் கண்ட பாங்கன், ‘‘தொண்டிப் பட்டனத்தின்கண் வளரும் குளிர்ச்சியும் நறுமையும் கொண்ட நெய்தல் மலர்களால் மணம் கமழ்கின்ற பின்னப்பட்ட கரிய கூந்தலை உடைய இந்நங்கையின் விழியால் தாக்குண்டோர் அனைத்துயிர்களும் இனிய துயில் கொள்ளும் நாகம் போலத் துயர் அடைவது உறுதியாம் எனத் தனக்குள்ளே சொல்லி வியந்தான்’’.(ஐங்.173:1-4)

**கண்டோர் கூறியது**

சங்க அகஇலக்கிய நெய்தல் திணையில் கண்டோர் கூறியதாக ஒன்பது[101] பாடல்களும் காதாசப்தசதியில் ஒரு பாடலும் (காதா.141:1-4) இடம்பெற்றுள்ளன.

பிரிவின்கண் ஆற்றாத தலைவி மாலைப்பொழுது கண்டு வருந்திக் கூறிய வழி, மிகவும் ஆற்றாளாய இடத்து தலைவன் வரவும் தலைவியது அக மலர்ச்சியும் கண்ட கண்டார், ‘‘ஆற்றுதற்கோர் இடமின்றி அலைத்தலைச் செய்யும் பொல்லாங்கே செய்யும் மாலைக்காலத்தில் வெறுப்புக்கொண்ட வருத்தம் தீரும்படியாகக் காதலர் விரைந்து வந்தார். நாற்படையும் இளைத்த அரசன் இளைத்த பருவத்தே அவன்மேல் நின்ற கடிய பகை விரைந்து நீக்கி நீங்காமல் நின்று காத்து நடத்தும் நல்ல அரசன் வந்து தோன்றப் பகை கெட்டது போல இருளை அகத்தே ஒளித்துக் கொண்டு மாலை இல்லாமல் போயிற்று என்று மகிழ்ந்துரைத்தனர்’’ (கலித்.120:20-25)

அதுபோல் தலைவியை இரந்து பின்னின்ற தலைவன், தலைவியின் பெற்றோர், தலைவியைத் திருமணம் செய்து கொடாத நிலையில் தலைவன் மடல் ஏறினன். இதனைக் கண்ட தலைவியின் தமர், ‘‘பகைவரிடத்துப் போர்த் தொழில் வல்ல வழுதிக்கு அஞ்சி, அரிய திறைப்பொருளைப் பகைவர், தாமே கொண்டுவந்து கொடுக்குமாறு போலக் குடிக்குப் பழுதாகும் என்றஞ்சி, அவளை அவ்விடத்தே கொடுத்தனர் ஈதோ மகட்கொடை இருந்தவாறு என்னை எனக் கண்டார் வியந்து கூறினர்’’. (கலித்.141:22-25) காதாசப்தசதியில்

**“மறைந்த காதல் மனைவி யில்லாப்**
**பாழும் இல்லம் பார்க்கும் துயர்கெட**
**பணியிலா விடினும் பாமரன் அந்தோ!**
**புலம்தனை விட்டுப் புறப்படா திருப்பான்” (காதா.141:1-4)**

என மனைவியை இழந்த பாமரனின் இரங்கல் நிலையைக் கண்டோர் எடுத்துரைத்தனர்.

**வாயில்கள் தம்முள் சொல்லியது**

தலைவன் பிரிவினால் ஆற்றாத தலைவியின் நிலையைக் கண்ட வாயில்கள் கூறியதாக இரு[102] பாடல்கள் அமைந்துள்ளன.

தலைவன் பிரிவால் மாலைப்பொழுதைக் கண்டு ஆற்றாத தலைவி, “கரை காணமுடியா நடுக்கடலிலே, மரக்கலம் அழுந்துகின்றவன், திரைகள் கொண்ட வந்துதர, ஒரு தெப்பத்தைப் பெற்றுத் தீதில்லையாம்படி பிழைத்தாற் போலக் காதலர் விரைந்து புகுதர, நிரைதொடி அணிந்தாளது துயரம் விரைந்து நீங்கிற்று அதனைக் காணீர்” (கலித்.134:24-27) என வாயில்கள் தம்முள் கூறின.

**கைக்கிளை**

தலைவன், தலைவி ஆகிய இருவருள் ஒருவரிடத்தில் மட்டும் தோன்றும் காமத்தையே கைக்கிளை என்பர். சுருக்கமாகச் சொன்னால் கைக்கிளை என்பது ஒருதலைக்காதல் ஆகும். கை என்பது சிறுமை எனப்பொருள்படும். கிளை என்பது உறவு எனப் பொருள்படும் சிறுமையான உறவு அல்லது பெருமையில்லா உறவு என்பது கைக்கிளையின் பொருளாகும்.

இத்தகைய கைக்கிளைக் காமம் என்பது இறுதிவரை ஒருதலைக்காதலாகவே இருந்து விடுவதன்று. தலைவனுடைய வேட்கையைத் தலைவி பின்னர்ப் புரிந்து கொண்டு உடன்படும்போது அது நல்ல காதலாக மலரும். ஆகவே கைக்கிளையைக் காதலின் தொடக்கம் எனவும் கொள்வார்கள் அன்பின் ஐந்திணையில் களவுக் காதலுக்கு முன்பு கைக்கிளை நிகழ்வது இயல்பு என நம்பியகப் பொருள் கூறுகிறது.[103]

தலைவன் ஒருவன் கைக்கிளைக் காதல் கொள்வது ஆண்பாற் கைக்கிளை எனப்படும். அதுபோலவே தலைவி ஒருத்தி கைக்கிளைக் காதல் கொள்வது பெண்பாற் கைக்கிளை எனப்படும். அதுபோலவே தலைவி ஒருத்தி கைக்கிளைக் காதல் கொள்வது பெண்பாற் கைக்கிளை எனப்படும் ஆனால் அது இலக்கணமாகச் சொல்லப்படவில்லை.

**“காமம் சாலா இளமை யோள்வயின்**
**ஏமம் சாலா இடும்பை எய்தி**

**நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால்**
**தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்**
**சொல் லேதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்**
**புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே"[104]**

எனத் தொல்காப்பியனார் கைக்கிளை ஒழுக்கத்தைச் சுட்டுகின்றார்.

"அகத்திணைக் கைக்கிளை என்பது காமப் பருவத்தை இன்னும் எய்தாத பெதும்பை பெண்ணைத் தோற்றத்தால் குமரியென மயங்கிப் பருவம் வந்த இளைஞன் அறியாதே தென்னும் புலப்படுத்திய காதல் முகிழ்ப்பை மட்டும் கூறியமைவது என்று வினக்கம் தருவார் வ.சுப.மாணிக்கனார்.[105] ஆனால் "காமஞ்சாலா இளமையோள் என்ற தொடருக்குக் காமப்பருவம் வாராத வயதுக்கு வாராத பெண் என்பது பொருளல்ல. தலைவி வயதுக்கு வந்தவள் தலைவன் தன்னை காதலிக்கின்றாள் என்பதை அறியாதவள் தலைவி அறியாத நிலையில் தலைவியை நினைத்துத் தலைவன் தன்னெஞ்சுக்குக் கூறும் காதலே கைக்கிளைக் காதல்[106] என்பர் நா.ஆறுமுகம்.

அதுபோல் கைக்கிளைக்கண், காதலைத் தானே சொல்லிக் கொள்ளுதலன்றிக் காதலிமாட்டுப் பயன்கொள்ளக் கருதுவதில்லை எனவும் பயன்கொள்ளின் அது பெருந்திணைப் பாற்படும்.

ஒருதலைக் காதலான கைக்கிளைப் பாடல்கள் சங்க அகஇலக்கியங்களில் மிகவும் குறைவு குறுந்தொகையில் ஒரு பாடலும் கலித்தொகையில் குறிஞ்சிகலியில் நான்கு பாடலும் முல்லைக்கலியில் இரண்டு பாடலும் கைக்கிளைக்கு உரியனவாக உள்ளன. குறிஞ்சிக்கலியில் 59-வது பாடல் கைக்கிளைக்கான கருத்தினை உணர்த்தினும் நச்சினார்க்கினியர் அதனை கைக்கிளையாகக் கூறவில்லை

குறிஞ்சிக் கலிப்பாடல்கள் தலைவியை முன்னிலைப்படுத்தித் தலைவன் பலவாறு பேசுவதாகவும் அங்ஙனம் பேசும் தலைவனுக்குத் தலைவியிடமிருந்து மறுமொழி ஏதும் பெறப்படாத நிலையில் மடலேறுவேன் என்று கூறுவதாகவும் அமைந்துள்ளன. இதனை,

**"ஒறுப்பின், யான் ஒறுப்பது நுமரை; யான், மற்று இந்நோய்**
**பொறுக்கலாம் வரைத்து அன்றிப் பெரிதாயின், பொலங்குழாய்!**
**மறுத்து இவ்வூர் மன்றத்து மடல்ஏறி,**
**நிறுக்குவென் போல்வல் யான்; நீ படு பழியே" (கலித்.58:20-23)**

என வரும் பாடலடி புலப்படுத்துகின்றது. இதில் தலைவியிடம் காமக்குறிப்புகள் எதுவும் காணப்படாத நிலையினை அறிந்து கொள்ளமுடிகிறது. அதுபோல்

தலைவன் பாங்கனால் குறை முடித்துக் கொள்ள விரும்பி அவனை அணுகிய வழி, பாங்கன் காமம் என்பதை சிறிதும் அறியாதவனிடம் நீ கொண்ட காமம் அறிவில்லாமையைக் கொண்டது வெறுக்கத்தக்கது எனக் கூறித் தலைவியிடம் கொண்ட காமத்தைத் தவிர்வாயாக என அறிவுரைக் கூறினான் (குறுந்.78:1-6)

**காதாசப்தசதியில் கைக்கிளை**

காதாசப்சதியில் பத்து[107] பாடல்கள் கைக்கிளையைக் சுட்டுகின்றன. நீராடிய பெண்ணை நோக்கித் தன் காதல் துயரைத் தீர்க்க வேண்டுமெனத் தலைவன் கேட்கிறான் பேதைப் பெண்ணின் அழகினைக் கண்டு ஒரு தலைவன் மயங்குகிறான் அதுபோல்,

**“கண்டதும் இன்புறத் கண்விருந் தாகி**
**கரம்பட் டதும்மனங் கரையச் செய்யும்**
**கலைநிறை மதியுரை காதலன் தானும்**
**வேட்டதும் கிடைக்க மாட்டாள் தோழி” (காதா.338:1-4)**

எனத் தலைவி ஒருத்தி காதலனின் அருள் கிடக்காமல் வருந்துகிறாள். மேலும் பூவிற்கும் பெண்ணின் அழகைப் பருகும் நோக்கில் இளைஞர்கள் பூவிலை கேட்டு நிற்கின்றனர். (காதா.454:1-4,455:1-4) இவ்வாறு தலைவியின் அழகைப் பாராட்டி அவளுடைய காதலுக்காக ஏங்கிய தலைவனையும் விற்கும் பெண்ணைச் சூழ்ந்து கொள்ளும் இளைஞர்களையும் கைக்கிளைத் திணையில் காணமுடிகிறது.

**பெருந்திணை**

**“ஏறிய மடல்திறம், இளமை தீர்திறம்**
**தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்**
**மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்**
**செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே”[108]**

என்று தொல்காப்பியனார் பெருந்திணைக்கு இலக்கணம் கூறுகின்றார். தேவநேயப் பாவணர் “இருதலையுங் காதலுள்ளவிடத்தும் முதியோளோடு கூடுதலும் கூட்ட இடையீடுபாட்டால் ஏற்படும் காமப்பித்தமும் கழிநெஞ்சழிவும் பெருந்திணை”[109] என்பர். “உரையாசிரியர்கள் ஏறிய மடல் ஆண்களுக்குரியது என்று கூறுகின்றனர். தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறத்தையும் மிக்க காமத்து மிடலையும் பெண்குளுக்குரியது என்று இளம்பூரணரும் வ.சு.மாணிக்கமும் கூறுகின்றனர். நச்சினார்க்கினியர் மிக்க காமத்து மிடலை வலிதிற் புணர்தல், ஆண்குளுக்குரியது என்று கூறுகின்றார்.”[110] கலித்தொகையில் பதினெட்டுப் பாடல்கள் பெருந்திணையைச் சுட்டுகின்றன.

**‘‘மையில் மதியின் விளங்கு முகத்தாரை**

**வெளவிக் கொளலும் அறனெனக் கண்டன்று’’ (கலித்.62:14-15)**

என்றும்

**‘‘அறனு அது கண்டற்றாயின் திறனின்றிக்**

**கூறுஞ் சொற் கேளான் நலிதரும்; பண்டு நாம்**

**வேறு அல்லம் என்பதொன் றுண்டால் அவனொடு**

**மாறு உண்டோ நெஞ்சே! நமக்கு’’ (கலித்.62:16-19)**

என்றும் வரும் தலைமகன், தலைமகள் கூற்றுக்கள் ‘மிக்க காமத்து மிடல்’ என்னும் தொல்காப்பியத் துறையின்கீழ் வந்த பெருந்திணைக் காதலை விளக்கி நிற்கின்றன.

**“அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**

**குடிவரை யில புறத்து என்மனார் புலவர்”[111]**

என்னும் தொல்காப்பியத்துறை வழி வந்த பெருந்திணைப் பாலொன்று மருதக்கலியில் இடம்பெற்றுள்ளது. அதாவது,

**“கொக்கு உரித்தன்ன கொடு மடாய்! நின்னை யான்**

**புக்கு அகலம் புல்லின், நெஞ்சு ஊன்றும்; புறம் புல்லின்**

**அக்குளுத்து புல்லலும் ஆற்றேன்; அருளீமோ;**

**பக்கத்துப் புல்லச் சிறிது” (கலித்.94:18-21)**

**“மரக் கோட்டம் சேர்ந்து எழுந்த பூங்கொடி போல,**

**நிரப்பம் இல் பாக்கை தழீஇயினர், எம்மைப்**

**புரப்பேம் என்பாரும் பலரால், பரத்தை என்” (கலித்.94:23-25)**

**“ ---------------------------- காவின் கீழ்ப்**

**போதர்; அகடு ஆரப் புல்லி முயங்குவேம்” (கலித்.94:40-41)**

மேற்கூறிய பாடலடிகள் அடியோராகிய கூனி யொருத்திக்கும் அவளுக்கேற்ற குறளன் ஒருவனுக்கும் நடைபெற்ற உரையாடலில் காணப்படும் நாணமற்ற மொழிகளாகும்.

முல்லைநிலத்து ஆயர் புனத்தில் புகாவுய்த்துக் கொடுப்பதற்கும் கலத்தொடு செல்வதற்கும் தினைக்காலூள் கன்று மேய்ப்பதற்கும் ஏவலாட்களை அமர்த்திக் கொள்வர். (கலித்.108:31-33) அவர்களைத் தலைமக்களாகக் கொண்டு வரும் முல்லைக் கலிப் பாடல்கள் எல்லாம் பெருந்திணைக் காதலைக் கூறுகின்றன. அதுபோல் நெய்தற்கலியில் தலைமகன் (கலித்.138:1-31) மடலேறுதலைப் பற்றி நான்கு பாடல்களும் தலைமகள் பெருங்காமத்தை ஊரறிய

உரைத்தலைப் பற்றி ஆறு பாடல்களும் பெருந்திணைக் காதலைக் கூறுகின்றன. காதாசப்தசதியில் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதியும் பற்றிப் பதின்மூன்று[112] பாடல்கள் அமைந்துள்ளன.

பருத்திச் செடிகள் மண்டிவளர்ந்த புலத்தில் மறைவாகக் காதலனோடு கூடலாம் எனத் தலைவி கூறுவதும் மாதவிடாய்க் காலத்தில் கணவன் மனைவியை விழைவதும், உடன்கட்டை ஏறும் பெண்களின் அழகையும் இளமையையும் ஊர்த்தலைவன் உற்று நோக்குவதும் எந்திரம் ஓட்டுபவனிடம் உழவனின் மனைவி காமக்குறிப்புடன் பேசுவதும் மாமியின் கள்ள உறவும் தலைவி ஒருத்தி ஒடித்து கெடச் செய்தமையால் சினம் கொள்ளுதலும் தலைவி ஒருத்தி மருத்துவனிடம் மையல் கொண்ட தலைவி, தோழியர் அவளுக்குத் தேள் கொட்டியதாகப் பொய் கூறி கணவன் முன்னே கள்ளக்காதலனிடம் தலைவியை அழைத்துச் செல்லுதலும் பெருந்திணையாக காதாசப்சதியில் அமைந்துள்ளது.

இளமை தீர்திறம்

தலைமகன் முதியனாகித் தலைமகள் இளையளாதலும் தலைமகள் முதியாலாகித் தலைமகன் இளையளாதலும் இவ்விருவரும் இளமைப் பருவம் நீங்கிய வழி அறத்தின் மேல் மனம் நிகழ்தலின்றிக் காமத்தின்மேல் மனம் நிகழ்தலும் இளமை தீர்திறம் எனப்படும். பொருள் தேடிச் சென்ற தலைவன் குறித்த பருவம் வராமைகண்டு தலைவி ஆற்றாமை மிகுதியால் தோழிக்குத் தன் நிலையைக் கூறுவதான பாடல்கள் இளமைதீர்த்திற்கு சான்றாக கூறப்பட்டுள்ளது. அவ்வகையில் ஐந்து[113] பாடல்கள் சங்க அகஇலக்கியத்தில் பயின்றுவந்துள்ளது.

காதாசப்தசதியில் இளமை தீர்திறம் பற்றி இரு பாடல்கள் காணப்படுகின்றது.

**“சாவினை மேவும் சமய முற்றேன்**
**மெய்யே யாயினும் விளம்பு கின்றேன்**
**புனித தாபிப் பூம்புதர் இன்றும்**
**இனிதே கண்களை ஈர்க்கும் அன் றெனவே”** **(காதா.202:1-4)**

எனக் காதாசப்தசதியில் வயது முதிர்ந்தவர்களைப் பார்த்து இளைஞர்கள் அவர்களின் இளைமைத் காதலை பற்றித் தெரிந்து கொள்ளும் பொருட்டு வினாவுதல் சுட்டப்பெற்றுள்ளது. அதுபோல் முதிய பெண்டிர் இளமைக்காலத்தில் இருந்து விளையாடிய தோழிகள் இன்று இல்லை. அடர்த்தியான புதர்கள் அழிந்து காய்ந்து கட்டைகள்ான் என் போல் நிற்கின்றன. நானும் முதுமை அடைந்து விட்டேன். வேரோடு அழிந்துவிட்டேன் என்று சலிப்புறம் கவிதையும் காதாசப்தசதியில் பதிவு செய்யப்பட்டுள்ளது. (காதா.195:1-4) இவ்வாறு இரண்டு

பாடல்களிலும் வயது முதிா்ந்த நிலையில் காணப்படும் ஆண், பெண்கள் இளமைக்கால இன்பங்களை நினைவு கூறும் மனநிலையில் இருப்பவா்க்ள என்பதை சித்திரிக்கின்றது. ஆனால் சங்க இலக்கியத்திலும் இளமையில் இருந்து கொண்டு முதுமையை நினைத்து வருந்துவதாக பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

**தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்**

தலைவன் பிரிந்த நிலையில் தோழி தலைவியை ஆற்றுவிப்பாள் அல்லது தலைவி தனக்குத் தானே ஆறுதல் அடைவாள். ஆனால் தலைவி காமம் மிகுதியின் காரணமாக தேறுதல் அடையாமல் தனக்கு ஏற்படும் துன்பத்தை மற்றவா் அறியும்படி எடுத்துரைப்பது என்று தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் சிறப்பிக்கப்படுகின்றது. கலித்தொகையல் ஆறு[114] பாடல்கள் காணப்படுகின்றன.

**“புரிவுண்ட புணா்சியுள் புல்லாரா மாத்திரை**
**அருகுவித் தொருவரை அகற்றலில் தெரிவாா்கண்**
**------------------------------------------------------------------------**
**கலங்கிய நீா்போல் தெளிந்து நலம்பெற்றாள்**
**நல்லெழின் மாா்பசைன் சாா்ந்து”** **(கலித்.142)**

எனத் தலைவி தோழிகளுடன் விளையாடும் போதும் மகிழ்கின்ற போதும் தன் பல்லின் நுனி தெரியாமல் மகிழ்ச்சியை முகத்திலும் கண்ணிலும் காட்டுவாள். இன்று பலரும் அறியதன் ஆற்றாமையை நாணத்தை விட்டுக் கூறுகின்றாள். என்னைத் துன்புறுத்தும் காமமும் ஊராாின் பலிச்சொல்லும் என்னுயிரைக் காவடியாகக் கொண்டு இருபுறமும் பாரமாகத் தொங்கி என்னை நழுவிக்கின்றன. என்னுயிா் நீங்கும் முன் என்னைக் காப்பீராக என்று புலம்பி அழுகின்றாள். பகலும் இரவும் பயனின்றி கழிகின்றது என்று நெடிது நினைந்து நொந்து பெருமூச்சுவிட்டாள். அந்த நிலையில் ஓா் இரவில் அவள் அருகில் ஒருவன் அன்போடு அமா்ந்திருந்தான். அவன் அவளுடைய மாா்பைத் தழுவியதால் தேற்றங் கொட்டையினால் தெளிவாக்கப்பட்ட தண்ணீரைப் போல துன்பம் நீங்கி இன்பமடைந்தாள். யாமும் இவா்கள் ஒருவரின் ஒருவா் வேறல்லா் என்று மெல்லத் தெளிந்து கொண்டோம் என்று கண்டோா் கூற்றாகத் தலைவியின் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் கூறப்படுகின்றது. “இளம்பூரணரும் நச்சரும் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறத்திற்கு இப்பாடலை உதாரணமாகக் காட்டுகின்றனா்”[115] என்பா் பெ.சுமதி.

“நச்சா் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் குறிப்பிடும் நெய்தல் கலிப்பாடல்கள் நெய்திலின் உாிப்பொருளான இரங்கலும் இரங்கல்

நிமித்தத்தையும் பற்றியவையாகவும் காணப்படுகின்றது. வ.சுப.மாணிக்கம் கூறுகின்ற நிலையில் மிகுகாமத்தை வெளிப்படத்துவதாகவும் க.ப.அறவாணன் குறிப்பிடுகின்ற நிலையில் இரங்கள் நெய்தல் உரிப்பொருளாகவும் காணப்படுகின்றது"[116] தலைவன், தலைவி தன் இல்லத்தில் இருக்கின்ற நிலையில் மற்றொரு பெண்ணைத் தேடி செல்கின்ற தலைவனின் செயலை தேறுதல் ஒழிந்த காமத்து மிகு திறமாகக் கொள்ளலாம்.

**"பிணங்குஅரில் வள்ளை நீடுஇலைப் பொதும்பில்**

**----------------------------------------------------------------------**

**வீறுசால் அவையத்து ஆர்ப்பினும் பெரிதே" (அகநா.256)**

எனத் தலைவன் பரத்தையோடு நிவையையில் ஊடிய நிலையில் தலைவன் தோழியிடம் வாயில் வேண்ட மறுக்கிற்ற நிலை மருத ஒழுக்கமாகும். இவ்வாறு சங்க அகஇலக்கியங்கள் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறத்தைப் ஆண்களுக்கு உரியதாகக் சுட்டுகின்றது. காதாசப்தசதியில் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் பெண்களுக்கு உரியதாக காமத்து மிகுதிறம் பெண்களுக்கு உரியதாக ஆறு[117] பாடல்கள் எடுத்துரைக்கின்றது.

தலைவி தன் மாமன், மாமியுடன் விட்டிலிருக்கிறாள். அப்போது வழப்போக்கன் ஒருவன் தலைவியின் வீட்டுத் திண்ணையில் தூங்குவதற்கு வருகின்றான். அந்த புதியவனைத் தலைவி தன் கடைக்கண் பார்வையால் பார்க்கின்றாள். இதைப்பார்த்த தலைவியின் மாமன் அப்புதயிவனைத் திண்ணையில் படுக்கக்கூடாது என்ற தடுக்கின்றான். எனினும் அவ்வழிப் போக்கம் நகருவதாக இல்லை. இதில் தலைவி அவ்வழிப்போக்கினைப் பார்த்த பார்வை ஆற்ற முடியாதக் காமத்தின் வெளிப்பாடு ஆகும், என்பதை

**"செவ்வரிக் கடைக்கணுள் சிறிதுஅரை விழியின்**
**காணும் மருமகள் காட்சி கண்டு**
**இல்லக் கிழவன் எதிர்த்தும் படுத்தான்**
**வாயில் தன்னில் வழிப்போக் கன்தான்" (காதா.214:1-4)**

சுட்டும். இவ்வாறு காதாசப்தசதியில் ஆண்கள் பரத்தையைத் தேடிச் செல்வது போன்று பெண்களும் மற்றொரு ஆடவனைத் தேடிச் செல்கின்றனா். இது அவர்களின் ஆற்றாத காமத்தின் வெளிப்பாடாகும். இது போன்ற பாடல்கள் சங்க இலக்கியத்தில் இல்லை. அதனால் சங்க இலக்கியத்தில் தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் ஆண்களுக்கு உரியது என்றும் காதாசப்தசதியில் பெண்களுக்கும் உரியது என்பதற்கான சான்றகள் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

## தொகுப்புரை

குறிஞ்சிக்குரிய உரிப்பொருள் புணர்தலும் புணர்தல் நிமித்தமும் ஆகும். தலைவன் களவின்பமே பெரிதும் கருதி இருவகைக் குறியிடத்தும் மாறி மாறி இடைவிடாது வந்து நிற்றலும் தோழி அவனுக்குத் தலைவியை அன்னை இற்செறித்ததன்மையையும் வெறியாட்டு எடுக்க முயன்றமையையும் அலர் எழுந்தமையையும் கூறி விரைவில் வரைந்து கொள்க என்று கூறும் வகையில் அக இலக்கியத்தில் தோழி கூற்று அமைந்துள்ளது. காதாசப்தசதியில் தோழி தலைமகனுக்குத் தலைவியின் ஆற்றாமை கூறுதல், தலைவியின் நலம்பாராட்டுதல், செறிப்பறிவுறுத்துதல், தலைவியின் காதலைத் தலைவனுக்குக் கூறுதல், வரைவு நீட்டித்த இடத்து விரைந்து வரைந்து கொள்ளுமாறு கூறுதல், தலைவன் இரவுக்குறி வாராமையால் தோழி தலைவியின் நிலையைக் கூறுதல், முன்னிலைப் புறமொழியாகத் தலைவனை இயற்பழித்தல், ஆற்றிடை அச்சம் கூறித் தலைவனைத் தெருட்டுதல், வரைவு கடாவுதல் தமர்தரும் தலைநாளிரவில் தலைமகனுக்குக் குறிப்பாய் புலப்படுத்துதல், தலைவனை இயற்படமொழிதல், தலைவனை நாடுதல் என அகஇலக்கியத்தில் தோழி கூற்று அதிகமாகக் காணப்படுகின்றது. காதாசப்தசதியிலும் தோழிகூற்றே அதிகமாக இடம்பெற்றுள்ளது.

அகஇலக்கியத்தில் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றல் போன்று தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்றலுமுண்டு. அதுபோல், காதாசப்தசதியிலும் தலைவி காதலருமையையும் காதலன் அருமையையும் தோழியிடம் கூறி அறத்தொடு நிற்றல் காணப்படுகின்றது.

காமம் மிக்க கழிபடர் கிளவியாகிய வருத்தத்தால் தலைவி புலம்பிக் கூறுதல், தோழி தலைவியை ஆற்றுவித்தல், அல்லகுறிப்பட்டுத் தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவது, தலைவன் பாங்கனிடம் கூறுதல், போன்ற குறிஞ்சிக்குரிய உரிப்பொருள் சில காதாசப்தசதியிலும் பயின்றுவந்துள்ளது.

இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லையாகும். தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுதல், வினைவயிற்பிரிந்து சென்ற தலைவன் வேற்று நாட்டுப் பாசறையின்கண் நின்று தான் மீண்டுவருவதாகக் கூறிய பருவம் வந்தும் வாராமையினை நினைத்து வருத்துவதும் தேர்ப்பாகன் தலைவனுக்குக் கூறுவதும் தலைவன் அஃறிணைப் பொருட்களை நோக்கி கூறுவதும் வினைமேற் செல்லும் தலைவனை நினைத்து தலைவி வருந்துவதனை அறிந்த தலைவன் அவளை ஆற்றுப் படுத்துவதும் குறித்த பருவத்திற்கு முன்னரே வந்து தலைவியை மகிழ்விப்பதும் பாணனைத் தூதாக விடுப்பதும் வாயில்கள் பற்றிய குறிப்பும் காதாசப்தசதியில் இடம்பெறவில்லை. ஆனால் முல்லைக்கலியில் காணக்கூடிய கண்டோர் கூற்று இடம்பெற்றுள்ளது.

ஊடலும் ஊடல் நிமித்தமும் மருதத்திற்குரிய உரிப்பொருளாகும். காதாசப்தசதியில் தோழி தலைவியின் ஊடல் தீர்த்தல், அறிவுரை வழங்குதல், ஆற்றுவித்தல், கண்டித்தல், தலைவனுக்கு வாயில்நேர்தல், தலைவனுக்கு அறிவுரை வழங்குதல் என மருதத்திற்குரிய உரிப்பொருள் சில காதாசப்தசதியில் அமைந்துள்ளது.

நெய்தலுக்குரிய உரிப்பொருள் இரங்கலும் இரங்கல் நிமித்தமும் ஆகும். எட்டுத்தொகை அகஇலக்கியத்தில் இரவுக்குறிவரும் தலைவனைப் பகற்குறி வா என்றலும் பகற்குறி வருவானை இரவுக்குறி வா என்றலும் களவுக்காலத்தே கூடிப்பிரியும் காலம் கூடத் தலைவி தாங்கமாட்டாள் எனத் தோழி கூறலும் தோழி செவிலிக்கு அறத்தொடு நிற்றலும் தலைவனை வரைவு கடாவுதலும் தலைவன் வரைவொடு வந்தமையினைத் தோழி கூறலும் ஊர் அலர்தூற்றுதலும் தலைவி வருத்தம் மிக்குப் பேசாப் பொருளுடன் பேசுதலும் தலைவன் ஆற்றாமை மீதூர நெஞ்சோடு கூறுதலும் இடித்துரைத்த பாங்கனுக்கு மறுத்துக் கூறுதலும் என நெய்தல் உரிப்பொருள் அமைந்துள்ள காதாசப்தசதியில் தோழி தலைவிக்காகக் கூறுதல், தலைவியை ஆற்றுவித்தல், உடன்கட்டை ஏறியதைக் கண்டு வருந்துதல் என நெய்தல் திணைப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலைக்குரிய உரிப்பொருளாகும். காதாசப்தசதியில் தலைவியின் பிரிவாற்றாமையைக் கூறுதல், தோழி தலைவியிடம் தலைவனின் செலவினைக் கூறுதல், ஆற்றுவித்தல், தலைவி ஆற்றிடைத் துன்பம் குறித்து வருந்துதல், தலைவனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்படமொழிதல், தலைவி தலைவன் வரவுணர்ந்து மகிழ்தல், தலைவி மாமியிடம் தன் பிரிவாற்றமையினைக் கூறுதல் எனப் பாலை உரிப்பொருள் சில பயின்றுவந்துள்ளன. உடன்போக்குப் பற்றிய குறிப்பில்லை.

தலைவன், தலைவி ஆகிய இருவருள் ஒருவரிடத்தில் மட்டும் தோன்றும் அன்பை கைக்கிளை என்றும் பொருந்தாக்காமத்தை பெருந்திணை என்றும் அழைப்பர். கலித்தொகையில் காணப்படுவதுபோல் காதாசப்தசதியிலும் கைக்கிளை பெருந்திணைப்பாடல்கள் அதிகமாகக் காணப்படுகின்றன.

## சான்றெண் விளக்கம்

1. இளம் (உரை),தொல்.பொருள்.அகத். நூ.960:1
2. அட்டவணை 1
3. மேலது 2
4. மேலது 3
5. அகநா.82:11-18, 52:1-15; ஐங்.201:1-4
6. அட்டவணை 4
7. காதா.194:1-4, 188:14, 381:1-4, 385:1-4, 390:1-4, 405:1-4, 447:1-4
8. அகநா.58:10-14, 298:15-23
9. காதா.375:1-4, 465:1-4, 491:1-4
10. நற்.102:1-9; அகநா.398:7-21
11. காதா.356:1-4, 405:1-4
12. அட்டவணை 5
13. காதா.125:1-4, 284:1-4, 416:1-4, 437:1-4, 437:1-4, 469:1-4, 483:1-4, 482:1
14. அகநா.62:11-16, 212:15-23, 258:10-15, 322:10-15, 338:15-21, 342:10-13, 372:15-16; ஐங்.298:1-4, 299:1-5, 288:1-4
15. நற்.61:1-11, 8:1-10, 192:1-12;குறுந்.300:1-8;ஐங்.281:1-4;அகநா.142:20-26, 152:20-24, 162:20-25, 198:15-17, 208:20-24, 162:20-25,198:15-17, 208:20-24, 262:15-18
16. நற்.39:5-11; குறுந்.62:1-5, 70:1-5, 116:1-4, 120:1-4, 142:1-5, 165:1-5, 182:1-7, 199:1-8, 312:1-8
17. காதா.154:1-4, 176:1-4
18. அட்டவணை 6
19. இளம் (உரை), தொல்.பொருள்.அகத். நூ. 960:1
20. அட்டவணை 7
21. மேலது 8
22. நற்.169:1-10; ஐங்.416:1-5, 417:1-5
23. அட்டவணை 9
24. ஐங்.477:1-5, 478:1-5, 479:1-5
25. அட்டவணை 10
26. பெ.மாதையன், அகத்திணைக் கோட்பாடும் சங்க அகக் கவிதை மரபும், ப.35
27. நற்.181:1-13; ஐங்.500:1-5; அகநா.104:1-7, 13-17, 184:1-4, 314:13-22
28. ஐங்.423:1-4, 424:1-4, நற்.266:1-9
29. காதா.393:1-4, 382:1-4, 273:1-4, 387:1-4

30. நற்.115:1-11, 367:1-12; குறுந்.258:1-7; ஐங்.461:1-5, 465:1-5, 468:1-5, 469:1-5, 496:1-5, 497:1-5, 498:1-5, 499:1-5, 466:1-5, 467:1-5; அகநா.4:12-17
31. நற்.99:1-6, 248:1-9, 316:1-10; குறுந்.66:1-5, 251:1-7, 287:1-8, 382:1-6
32. குறுந்.275:1-8
33. நற்.89:1-11
34. ஐங்.431:1-3; முதல் 440:1-3 வரை
35. ஐங்.463:1-5, 464:1-5
36. காதா.107:1-5, 245:1-4, 370:1-4, 458:1-4, 402:1-4, 409:1-4
37. நற்.238:6-11, 289:2-9
38. ஐங்.471:1-5, 472:1-5, 475:1-5
39. ஐங்.473:1-5, 474:1-5, 476:1-5
40. ஐங்.477:1-5, 474:1-5, 476:1-5
41. அகநா.324:1-3, 354:11-14, 384:6-14
42. காதா.201:1-4, 243:1-3, 166:1-4
43. குறுந்.167:1-6, 242:1-6; ஐங்.401:1-5, 402:1-4, 403:1-5, 404:1-4, 405:1-4, 406:1-4, 407:1-4, 408:1-4, 409:1-4
44. இளம் (உரை), தொல்.பொருள்.அகத். நூ. 960:1
45. அட்டவணை 15
46. மேலது 16
47. நற்.296:1-9; குறுந்.20:1-4,174:1-7, 207:1-7;அகநா.119:10-20, 147:8-14, 157:10-14, 187:15-24,217:14-20, 305:10-16, 355:10-14
48. அகநா.273:9-17
49. நற்.118:6-11, 214:1-2, 302:1-10; குறுந்.216:1-7, 254:1-7; ஐங்.341 முதல் 350 வரை, அகநா.277:15-20
50. குறுந் 149:1-6; அகநா.95:6-15
51. நற்.73:5-11, 79:1-10, 177:5-10, 224:1-4
52. ஐங்.312:1-4
53. காதா.15:1-6,114:1-4, 118:1-5, 308:1-4, 295:1-4, 87:1-4, 142:1-5, 408:1-4, 410:1- 4, 386:1-4, 321:1-4, 43:1-5, 419:1-4, 85:1-3, 118:1-5, 435:1-4, 488:1-4, 85:1-3,118:1-5, 435:1-4, 488:1-4, 383:1-4, 348:1-4, 333:1-4, 350:1-4
54. அட்டவணை 17
55. காதா.123:1-4, 323:1-4, 312:1-4, 360:1-4, 100:1-4, 254:1-4, 186:1-4, 173:1-4

56. அட்டவணை 18
57. காதா.123:1-4, 6:1-3, 44:1-4
58. நற்.33:10-12, 37:1-11, 109:6-10, 318:1-9; குறுந்.363:1-6
59. காதா.221:1-4, 162:1-4, 156:1-4, 121:1-5, 131:1-4, 407:1-4, 164:1-4, 461:1-4,322:1-4, 100:1-4
60. ஐங்.303:1-4, 305:1-4
61. ஐங்.366:1-5, 367:1-5
62. அட்டவணை 19
63. மேலது 20
64. காதா.479:1-4, 485:1-4, 430:1-4
65. காதா.23:1-4, 384:1-4
66. ஐங்.395:5-9, 396:1-5; அகநா.29:20-23, 39:20-25
67. நற்.9:12, 76:1-9, 202:5-11, 264:5-9, 363:5-10; ஐங்.361:1-5,363:1-4, அகநா.99:10-12, 257:15-21
68. நற்.166:5-10, 256:5-11; அகநா.75:20-23
69. குறுந்.209:1-7; ஐங் 355:1-5, 356:1-4
70. நற்.162:5-12
71. அகநா.360:1-5
72. ஐங்.328:1-4, 329:1-5
73. குறுந்.277:1-8; ஐங்.324:1-5, 325:1-4; அகநா.261:1-11
74. அட்டவணை 21
75. மேலது 22
76. அட்டவணை 23
77. காதா.106:1-4, 170:1-4, 412:1-4
78. இளம்(உரை),தொல்.பொருள்.அகத். நூ.960:1
79. இரா.செகதீசன், தொல்காப்பியப் பொருளதிகார வழி அகநானூறு ஓர் ஆய்வு, ப- 17
80. நற்.180:1-9; குறுந்.34:1-7;ஐங்21:1-4,24:1-5,25:1-4,26:1-4,27:1-4, 98:1-4; அகநா.356:1-20
81. காதா.42:1-4, 253:1-4, 257:1-4, 157:1-4, 477:1-4, 415:1-4, 497:1-4,400:1-4, 388:1-4, 345:1-4, 403:1-4, 316:1-4, 344:1-4
82. அட்டவணை 11

83. காதா.233:1-4, 266:1-4, 208:1-4, 81:1-4, 82:1-4, 11:1-4, 262:1-4

84. நற்.50:1-11, 90:1-12, 380:1-12, 200:1-11; குறுந்.85:1-6, 139:1-4

85. குறுந்.61:1-6, ஐங்.16:1-4

86. நற்.170:1-9, 310:1-11

87. அட்டவணை 2

88. காதா.73:1-4, 252:1-4, 287:1-4, 354:1-4, 390:1-4, 358:1-4, 80:1-3, 213:1-4, 131:1-4, 226:1-4, 285:1-4, 137:1-4, 163:1-4, 124:1-4, 119:1-4, 339:1-4, 180:1-4, 24:1-5, 113:1-4, 391:1-4, 401:1-4, 343:1-4, 413:1-4

89. இளம் (உரை), தொல்.பொருள்.அகத். நூ. 960:1

90. அட்டவணை 13

91. மேலது 14

92. நற்.127:3-9, 167:6-11, 291:1-9; அகநா.50:10-14

93. அட்டவணை 15

94. நற்.54:1-11; குறுந்.92:1-5, 118:1-5, 122:1-4; அகநா.170:8-14

95. குறுந்.49:1-5, 175:1-7; ஐங்.157:1-5, 10:1-5

96. நற்.74:7-11; ஐங்.131:1-3, 132:1-3, 136:1-3, 137:1-3, 133:1-3, 134:1-3, 135:1-3, 138:1-3, 139:1-3, 140:1-3

97. நற்.319:1-11, 342:1-10; குறுந்.128:1-5, 376:106; ஐங்.174:1-5, 195:1-4, 197:1-4; அகநா.230:5-10, 280:9-14, 390:5-17

98. குறுந்.184:1-7; ஐங்.172:1-4, 191:1-5; அகநா.130:12-14, 140:1-10, 390:8-17

99. நற்.101:1-9, 349:1-10, 152:1-9, 187:1-10; ஐங்.176:1-4,178:1-4, 185:1-4; கலித்.138:1-4

100. நற்.155:1-9; ஐங்.171:1-4, 175:1-4, 188:1-4

101. கலித்.120:20-25, 141:22-25, 142:59-66, 143:57-60, 144:68-73, 145:60-66, 146:51-55, 147:62-71, 148:21-24

102. கலித்.130:18-21, 134:24-27

103. நாற்கவிராச நம்பி (உரை), அகப்பொருள் விளக்கம், 28

104. இளம் (உரை), தொல்.பொருள்.அகத். நூ. 996

105. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், பக்.218

106. நா.ஆறுமுகம், கலித்தொகை ஓர் ஆழ்வாய்வு, ப.109

107. காதா.72:1-4, 103:1-4, 332:1-4, 462:1-4, 338:1-4, 499:1-4,261:1-4,329:1-4, 286:1-4, 433:1-4

108. இளம் (உரை), தொல்.பொருள்.அகத். நூ.997

109. க.த.திருநாவுக்கரசு, தமிழர் திருமணம், ப.16

110. பெ.சுமதி, சங்க இலக்கியம் காதாசப்தசதியில் பெருந்திணைக் கோட்பாடுகள் ஒப்பியல் பார்வை, ப.111

111. இளம் (உரை), தொல்.பொருள்.அகத். நூ. 969

112. காதா.33:1-4, 138:1-4, 136:1-4,191:1-4, 421:1-4, 227:1-4, 353:1-4, 182:1-4, 493:1-4, 200:1-5, 272:1-4, 288:1-4, 210:1-4

113. நற்.64, 126; ஐங்.463; அகநா.234; கலித்.94

114. கலித் 142,3,4,5,6,7

115. பெ.சுமதி, சங்க இலக்கியம் காதாசப்தசதியில் பெருந்திணைக் கோட்பாடுகள் ஒப்பியல் பார்வை, ப.134

116. மேலது ப.136

117. காதா.200:1-4, 214:1-4, 248:1-4, 292:1-4, 417:1-4, 490:1-4

## இயல் - 5

## எட்டுத்தொகை அகஇலக்கியங்கள் காதாசப்தசதி - பண்பாட்டுக் கூறுகள்

தமிழ் இலக்கியம் ஈராயிரம் ஆண்டு பழமையுடையது. இதில் சங்க இலக்கியம் அகம், புறம் என அமைந்து தமிழர்தம் வாழ்வியலை எடுத்தியம்புகிறது. அதுபோல் தெலுங்கு இலக்கியமாகிய காதாசப்தசதியில் ஆந்திர மக்களின் வாழ்வியல் சித்திரிக்கப்பட்டுள்ளது. மொழிவாரி மாநிலமாகப் பிரிப்பதற்கு முன், அனைத்து மக்களும் திராவிடர்களாக வாழ்ந்து வந்ததற்கு அடையாளமாக இரு இலக்கியங்களிலும் வாழ்வியல் நெறிகள் காணப்படுகின்றன. எனவே இவ்விரு தொகை இலக்கியங்களிலும் காணலாகும் பண்பாட்டுப் பதிவுகளை எடுத்துரைப்பது இவ்வியலின் நோக்கமாகும்.

**பண்பாடு**

பண்படுதல் என்ற சொல்லிலிருந்து தோன்றிய சொல் பண்பாடாகும். ஒரு இனத்தாரின் பழக்கவழக்கங்கள் நாகரிகம் உடையதாக மாறி அது பண்பட்டு முழுமையுறும் போது அவ்வினம் பண்பாடுடைய இனமாகப் போற்றப்படுகின்றது. பண்பாடு என்பது மனித குல வளர்ச்சியின் முழுமை அடைந்த நிலையைக் குறிப்பதாகும்.

கல்சர் (ஊரடவரசந) என்ற ஆங்கிலச் சொல்லிற்கு பண்பாடு என்று பொருள். பண்பாட்டு மானிடவியல் என்ற நூலில் பக்தவக்சலபாரதி, ‘‘பண்பாடு என்பது தனிமனித ஒழுக்கத்தையும் அவனது வட்டம் கடந்து குழுவாழ்க்கையையும் சமுதாயத்தின் அல்லது வரும் பகுதியின் முதன்மைப் பண்பாடாகும் என்கிறார்[1].

**நாகரிகம் - பண்பாடு இடையேயுள்ள வேறுபாடுகள்**

‘‘நாகரீகம் என்பது திருந்திய வாழ்க்கை. அது எல்லாப் பொருட்களையும் தமக்கே பயன்படுத்துவது. பண்பாடு என்பது திருந்திய ஒழுக்கம். அது எல்லாப் பொருட்களையும் தமக்கும் பிறருக்கும் பயன்படுத்துவது என்பர் தேவநேயப்பாவானர்[2].

இப்பண்பாடு காலத்திற்குக் காலம், நாட்டிற்கு நாடு, இனத்திற்கு இனம் வேறுபட்டுள்ளது. உள்ளம் செம்மையானதாகச் சிறந்ததாகத் தூய்மையான எண்ணம் கொண்டதாக இருந்தால் தான் உயர்வான சிந்தனை தோன்றும்.

**பண்பாடு குறித்து அறிஞர்களின் சொல்லாய்வு**

மனிதன் கற்றுணர்ந்த நடத்தை முறைகளைக் குறிப்பது பண்பாடு எனக் கருதப்படுகின்றது. மக்களால் ஆக்கப்பெற்ற இந்த ஊடகத்தைக் கொண்டே

மக்கள் தங்கள் தேவைகளை நிறைவு செய்து கொள்கின்றனர். தமிழின் மிகப்பழமையான இலக்கண நூலான தொல்காப்பியம் பண்பாடு என்பது பண்பு என்ற சொல்லினால் உணரப்படும் குணம் எனப்பொருள்படும் என்கின்றது.

**“பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல்” (கலித்.133:8)**

எனக் கலித்தொகை சுட்டும். மேலும் பண்பு என்பதற்கு ஒழுங்கு எனப் பொருள் கூறுகின்றது அபிதான சிந்தாமணி. அதுபோல் ‘‘மக்களின் சிந்தனை வெளிப்பாடே பண்பாடு என்பது நர்மதாவின் தமிழ் அகராதியின் விளக்கமாகும்.’’[3]

நாட்டுப்புறவியல் துறை ஆய்வாளர் சு.சக்திவேல் அவர்கள் ‘‘மனிதனது நடத்தைகள், நடத்தை நெறிகள் மனித நிறுவனங்கள், மனிதனின் குணவிசேடங்கள் ஆகியவை பண்பாடாகும் என்கிறார்.[4] அதுமட்டுமின்றி ‘‘மக்களின் அறிவுநலம், ஒழுக்க உயர்வு கொள்கை நலம், பண்புநலம், வாழ்க்கை நலம் ஆகியன மென்மேலும் திருந்திய நிலையே பண்பாடு என்பர் அ.தட்சிணாமூர்த்தி[5]

**காதல் வாழ்க்கை**

பழந்தமிழர் தம் வாழ்க்கை அகம், புறம் என்ற இரு கூறுகளையுடையது. அதில் அகம் என்பது காதல் ஒழுக்கத்தையும் இல்லற ஒழுக்கத்தையும் சுட்டுவனவாகும். காதல் என்பது இருவர் கருத்து ஒருமித்த ஆதரவு பெற்ற இன்பம். இருமனம் ஒன்றுபட்ட பின்னே திருமணம் நடைபெறும். இதனை தொல்காப்பியர்

**‘‘அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**
**கடிவரை இலபுறத் தென்மனார் புலவர்’’[6]**

என்று சுட்டுகிறார்.

**“ஆயர் மகன் ஆயின் ஆய மகள் நீ யாயின்**
**நின் வெய்யன் ஆயின் அவன் வெய்யை நீ யாயின்**
**நின்னை நோதக்கதோ இல்லைமன் நின் நெஞ்சம்**
**அன்னை நெஞ்சு ஆகப் பெறின்” (கலித். 107:20-23)**

என்ற பாடலில் காதல் என்பது அன்னையினுடைய அல்லது குடும்பத்தாருடைய விருப்பங்களைப் பொறுத்து உருவாவதில்லை. ஓர் ஆயமகள், ஆயமகனைக் காதலிப்பதில் எந்தக் குற்றமும் இல்லை என்று விளக்குகின்றது. அதாவது பசுக்கூட்டங்கள் மேய்க்கக் கூடிய உழைக்கும் வாழ்க்கை வாழ்ந்து கொண்டிருக்கும் மக்களிடையே கூட உணர்வு ஒத்த காதலுண்டு என்பதாகும். அதுபோல் தெருவில் மோர்விற்று அதில் கிடைக்கும் வருவாயில் வாழ்க்கை நடத்தக் கூடிய பெண்ணிடத்து ஒருவன் காதல் கொள்வது வினைவலர்

மருங்கினும் அன்பின் ஐந்திணைக் காதல் உண்டு என்பதற்குச் சான்றாகின்றது (கலித்.108:26-29) இவ்வாறாகக் காதல் என்பது எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. அவற்றிடை வேறுபாடு கிடையாது என்பது மேற்கூறிய கருத்து உணர்த்துகின்றது. காதாசப்தசதி பாடல்களில் புராணக் தெய்வங்களின் காதல் நிகழ்ச்சிகளும் இதிகாச மாந்தர் குறித்த மனவுணர்வுகளும் இடம்பெற்றுள்ளன. மானிடக் காதல் உணர்வுகள் அவர்களின் மீது ஏற்றிப் போற்றி இன்புறும் பாங்கு இப்பாடலில் இடம் பெற்றுள்ளது.

**திருமணம்**

மனிதனுக்கு மனிதனால் நடத்தப்படும் ஒரு வகைச் சடங்கு திருமணமாகும். எல்லோரும் பங்குகொள்ளும் ஒரு பொதுநிகழ்ச்சியாகவே திருமணம் கருதப்பட்டது.

"திருமணம் என்ற சொல்லை திரூமணம் எனப்பிரிக்கலாம். மணம் என்பதே தமிழரின் பழைய மரபுதான். ஒரு கன்னிப் பெண்ணின் கூந்தலிலே மலர் சூட்டி அவளை ஊரும் உறவும் அறியத் தன் மனத்திற்கு இனியாளாக, வாழ்க்கைத் துணைவியாக ஒருவன் ஏற்றுக் கொள்வதனாலே தான் மணம் திருமணம் என்ற பெயர்கள் அச்சடங்கிற்கு ஏற்பட்டன. இவ்வாறு கணவனும் மனைவியுமாய் வாழத் தொடங்கும் நிகழ்ச்சிக்குத் திருமணம் என்று பெயர் வைத்தமை எண்ணி மகிழ்தற்குரியதாகும். திருவென்னும் சொல் அழகு, செல்வம், செம்மை, சிறப்பு முதலிய பொருள் பொதிந்த சொல்லாகும். சுருங்கக் கூறின், கண்டோரால் விரும்பப்பெறும் தன்மை விளங்கும் இடமெல்லாம் திருவும் பொலிகின்றதென்று சொல்லலாம். மணமென்னும் சொல் நறுநாற்றத்தைக் குறிக்கும். பெரும்பாலும் இயற்கையில் மணங்கமழ்வது மலர்களே ஆகும்"[7] ஆகவே மணமென்பது மணமக்களின் மனவொத்ததாகும். வாழ்வு முழுவதும் மணம் பெற்றுத் திகழ்வதற்கு ஏதுவான இந்நிகழ்ச்சியை மணம் என்று பெயரிட்டமை ஏற்புடைத்தாகும்[8]

ஞா.தேவநேயன் "ஓர் ஆடவனும் ஒரு பெண்டும் கணவனும் மனைவியுமாக இல்லறம் நடத்த இசைந்து ஒன்று சேருவதே மணமாம். மணத்தல் கலத்தல் அல்லது கூடுதல் மணவாழ்க்கைக்கென்றே இறைவன் மக்களை ஆணும் பெண்ணுமாய்ப் படைத்திருப்பதாலும் அதனிடத்து மிகுந்த அறப்பொறுப்புள்ளமையாலும் அது ஆயிரங்காலத்துப் பயிர் ஆகையாலும் வாழ்க்கைத் துணைவர் இருவரும் தெய்வத்தின் முன் அல்லது தெய்வத்தின் பேரில் பலராகிய ஆணையிட்டுக் கூடுவதாலும் மணம் தெய்வத்தன்மை பெற்றுத் திருமணம் எனப் பெற்றது[9] என்கிறார்.

மேலும் திருமணம் என்பது ‘‘ஓர் ஆடவனும் ஒரு பெண்ணும் இணைந்து வாழ்வதற்காகச் சமுதாயத்தால் ஏற்படுத்தப்பட்ட வினைமுறை’’[10] என்றும் குறிப்பிடப்பெறுகிறது.

**தமிழர் திருமணம்**

தமிழர் திருமணமுறை களவு கற்பு என இருவகைப்படும். இதில் களவுமணம் என்பது பெற்றோர், உற்றார், உறவினர், ஆகியோர் அறியாமல் ஓர் ஆணும் பெண்ணும் மறைவில் மணமக்களாக வாழ்தல். இவ்வாறு ஊரார் அறியாமல் உறவினருக்குத் தெரியாமல் நடத்தும் வாழ்வே களவு மணமாகும். இந்த களவுச் செய்தி பெண்ணின் பெற்றோருக்குத் தெரிந்ததும் பெண்ணை வீட்டைவிட்டு வெளியே செல்ல அனுமதிக்கமாட்டார்கள்.

தலைவன் உறவினர் மூலம் பெண்கேட்கச் செய்வான். இதற்குக் கற்புமணம் என்று பெயர். இவ்விருவகை மணத்தைத் தொல்காப்பியர்

**‘‘வெளிப்பட வரைதல், படாமை வரைதல் என்று**

**ஆயிரெண் டென்ப வரைதல் ஆறே’’**[11]

என்று கூறுவர். எனவே களவுமணம் நடைபெறாமல் கற்புமணம் நடைபெறுவதில்லை என்பதற்கு இந்நூற்பாவே சான்றாகும்.

**திருமண முறைகள்**

சங்க கால மக்களின் திருமணமுறைகள் அவர்தம் பண்பட்ட வாழ்க்கைக்கு அடையாளமாகத் தோன்றுகின்றன எனத் தொல்காப்பியர் கரணம் பற்றிக் கற்பியலில் ஐந்து நூற்பாக்களில் கூறியுள்ளார். எனினும் திருமணமுறைகள் பற்றிக் குறிப்பிடவில்லை. சங்க அகஇலக்கியங்கள் திருமண முறைகள் குறித்துச் சிறப்பாக எடுத்துரைக்கின்றன.

இல்லற வாழ்க்கையில் திருமணச்சடங்கு புகுந்தற்கான காரணத்தைக் தொல்காப்பியர், ‘‘சடங்குகள் இல்லாமல் ஆணும் பெண்ணும் சேர்ந்து இல்லறம் நடத்தி, மக்கட்பேற்றைப் பெற்றுத் தங்கள் மரபை வளர்த்திருக்கலாம். ஆனால் சமூகத்தில் எல்லா மனிதர்களும் நன்னெறிகளில் ஒழுகுவார்கள் என்று கருதமுடியாது. யாராவது ஓரிருவர் தங்கள் வாழ்க்கை நெறிகளில் பிழைபட ஒழுகி அதன் காரணமாகச் சமுதாயத்தில் ஒருவிதப் குறையை உண்டாக்கியிருப்பார்கள். எனவே தான் புதுவிதமான மாற்றங்களைச் சமுதாயம் ஏற்படுத்திக் கொள்வது அவசியமானது. அந்த வகையில் களவொழுக்கத்து வாழ்ந்து வந்தவர்களில் சிலர் பொய்த்தனர். ஓரிருவர் பிழையாக ஒழுகி ஒருவரைக் கைவிட்டு மற்றொருவரோடு வாழ்ந்திருந்தனர். அதனை மாற்றவே

முன்னோர் இத்தகைய சடங்குகளில் மூலமாகத் திருமணத்தை உறுதிப்படுத்தினர்"[12] என்று கூறுகிறார்.

**திருமண சடங்கு முறை**

களவு மணம் புரிந்த தலைமக்கள் ஊரறிய மணம் செய்து கொள்வது கற்புமணமாகும்.

**"தாயர் என்னும் பெயரே வல்லாறு**
**எடுத்தேன் மன்ற, யானே**
**கொடுத்தோர் மன்ற, அவள் ஆயத்தோரே" (ஐங்.380:1-3)**

என்ற பாடலில் தலைவியின் பெற்றோர், சுற்றத்தார் முன்னிலையில் தலைவியை உரிய ஆடவனுக்கு மணமுடித்துக் கொடுப்பது பண்டைய வழக்கமாக இருந்தமை புலனாகிறது. அதுபோல் இருமுது குரவரும் சான்றோர் முதலானோரும் தொன்றுதொட்டு வரும் முறைப்படி திருமணம் நடத்தினர் என்ற செய்தியை அகநானூறும் (171:15-17) விளக்குகின்றது.

**"தொல்புகழ் நிறைந்த பல்பூங் கழனி**
**கரும்புஅமல் படப்பைப் பெரும்பெயர்க் கள்ளூர்**
**திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய**
**அறனி லாளன், அறியேன் என்ற**
**திறனில் வெஞ்சூள் அறிகரி கடாஅய்,**
**முறிஆர் பெருங்கிளை செறியப் பற்றி**
**நீறுதலைப் பெய்த ஞான்றை,**
**வீறுசால் அவையத்து ஆர்ப்பினும் பெரிதே" (அகநா.256:14-21)**

என்ற பாடல் கரணம் தோன்றியதற்குச் சான்றாக விளங்குகிறது. அதாவது, இளம் பெண்ணின் நலத்தைத் துய்த்து அவளோடு இரண்டறக் கலந்து பழகிய ஒருவன் அவனைக் கைவிட்டு நழுவிப் போனான். அதனால் சினம் கொண்ட சமுதாயம் அவளைக் கண்டித்துத் திருத்த முயன்றதையும் ஏமாற்றிவிட்டு ஓடிய அவ்வாடவனை மரத்தில் கட்டித் தலையில் நீற்றைக் கொட்டி ஊரார் அறியத் தண்டனைக் கொடுத்ததைச் சுட்டுகிறது. இவ்வாறு உருவாகிய பிழைகளால் தான் திருமணச்சடங்கு ஏற்பட்டது என்கிறார் தொல்காப்பியர்.

**திருமண வகைகள்**

சங்க கால மக்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தவர் எனினும் அவர்கள் வாழ்ந்த சூழலுக்கு கேற்ப திருமண முறைகளை களவு, கற்பு என்ற இரு பிரிவுகளில் அடக்கினர். இதனை,

1. **உடன்போக்கு மணம்**
2. **களவு மணம்**
3. **மடலேறி மணமுடித்தல்**
4. **தொன்றியல் மரபின் மன்றல்**
5. **பரிசங்கொடுத்து மணத்தல்**
6. **சேவை மணம்**
7. **ஏறுதழுவி மணமுடித்தல்**
8. **போர்நிகழ்த்தி மணமுடித்தல்**
9. **துணங்கையாடி மணத்தல்**
10. **பலதார மணம்**

என பத்துவகையாகப் பிரித்துரைப்பர்''[13] சசிவல்லி.

**களவுமணம் உடன்போக்கு மணம்**

உடன்போக்கு மணமும் களவு மணமும் இருவகையாகக் கூறப்படினும் அடிப்படையில் ஒன்றாகவே அமைகின்றது. எனினும் பிறர் அறியாமல் ஓர் ஆணும் பெண்ணும் மறைவில் மணமக்களாக வாழ்தல் களவுமணமாகும்.

**களவு வெளிப்படுவதற்கு முன்வரைதல்**

களவு வெளிப்படுவதற்கு முன் வரைதல் என்பது தலைமகன் தலைவியை உடன்கொண்டு சென்று தன்னூரில் மணப்பதும் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாட்டுடன் மணப்பதும் பகற்குறி இரவுக்குறிகட்குப் பின் தோழியால் வரைவு கடாவப்பெற்று மணத்தலும் இதனுள் அடங்கும். இத்தகைய களவு வெளிப்படுவதற்கு முன் வரைதலில் தலைவிக்கு உடன்பாடு இல்லை என்பர் இறையனார் களவியலுரையாசிரியர்.[12] ''களவு வெளிப்படா முன்னுற வரைதல் என்பது பலரானும் சிலரானும் அறியப்பட்டது. இவ்வொழுக்கம் என்னும் கருத்து எய்தா முன்னம் வரைதல் என்றவாறு இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்னே தெருண்டு வரைதலும் உரியன்; அங்குத் தெருளானாய்விடின் தோழியை இரந்து பின்னின்று அவள் தனையுறாத் தகைமை செய்யத் தெருண்டு வரைதலும் உரியன்; அங்குத் தெருளானாய் விடின்; மதியுடன்படுத்து, இரந்து பின்னின்ற நிலைமைக்கண் தோழி சேட்படுப்பத்தெருண்டு வரைதலும் உரியன். அங்குத் தெருளானாய்விடின் தோழியிற்கூட்டம் கூடியாதல், செறிப்பறிவுறுக்கப்பட்டாதல், இரவுக்குறியது ஏதம் காட்டாவாதல், வரைவுகடாவப்பட்டாதல் தெருண்டு வரைதலும் உரியன்; ஈதெல்லாம் களவு வெளிப்படா முன்னுற வரைதல் விகற்பமெனக் கொள்ளப்படும்.''[14]

இனி, ‘‘வெளிப்பட்ட பின்றை வரைதல் விகற்பமின்று எனக் கொள்ளப்படும். அவற்றுள் களவு வெளிப்படா முன்னுற வரைதல் சிறப்புடைத்து. இது தனக்காகாமையால் வரைந்தமையிற் சிறப்பின்று எனக்கொள்க. இது களவு வெளிப்பாடு அன்றென்று மறுத்துக் களவு வெளிப்படா முன்னுற வரைதல் அறத்தொடு நிலை நிகழாமுன் வரைதல் என்றவாறு’’[15] என்றுரைப்பர்.

இவ்வாறு ‘‘ஒருவருடன் ‘‘பழகி அவருடனேயே சென்று குடும்ப அமைப்பிற்குத் தம்மை உட்படுத்திய பெண்கள் காணப்படுவதன் மூலம் சங்க காலச் சமுதாயத்தில் பெண்களுக்கிருந்த சுதந்திர மனப்பான்மையையும் தன்னம்பிக்கையையும் அறிய இயலும்.’’[16]

**பிரிவு**

களவுக் காலத்தும் கற்புக்காலத்தும் தலைவன் ஓதல், பகை, தூது, பொருள், அறப்புறங்காவல் முதலான காரணங்கட்காகப் பிரிவான். அதிலும் களவு வெளியாவதற்கு முன்வரையும் நிகழ்ச்சியில் தலைவன் தலைவியை மணம் பேசி அவள் சுற்றத்தாரை வேண்டும்போது அவர்கள் மிகுந்த பரியங்கேட்பதால் அதை நிறைவேற்றுவிப்பதற்காகத் தலைவன் தலைவியைவிட்டுப் பிரிவான், இப்பிரிவு ‘வரைப்பொருட்பிரிவு’ என்று வழங்கப்பெறும். இங்ஙனம் பிரிந்து சென்றவன் பொருளை ஈட்டிக்கொண்டு மணமுரசு ஒலித்துப்பெண் பேசுவிப்பான். களவொழுக்க நிலையில் தலைவனிடம் பொருள்வயிற்பிரிதலும் வேந்தர்க்குற்றுழிப்பிரிதலும் காவற்பிரிதலும் நிகழுமேயன்றி ஏனைய ஓதற்பிரிவும் பகைவயிற்பிரிவும் தூதிற்பிரிவும் நிகழாது என்று கூறுவர் தொல்காப்பியர். இதனை,

**வெளிப்படை தானே கற்பினோ டொப்பினும்**
**ஞாங்கர்க் கிளந்த மூன்று பொருளாக**
**வரையாது பிரிதல் கிழவோர்க் கில்லை’’**[17]

என்னும் நூற்பா விளக்கும்.

**‘‘நன்றா கின்றால் தோழி நம் வள்ளையும்**
**ஒன்றி நாம் பாட மறைநின்று கேட்டு அருளி**
**மென்தோட் கிழவனும் வந்தனன் நுந்தையும்**
**மன்றல் வேங்கைக் கீழிருந்து**
**மணநயந் தனன் அம் மலைகிழவோற்கே’’ (கலித்.41:40-44)**

என்ற பாடலில் தலைவன் தலைவியது திருமணம் களவு வெளிப்படா முன்னரே பெற்றோர் நடத்தும் திருமணமாக அமைந்துள்ளமையினைக் காணலாம். அதாவது தோழியும் தலைவியும் பாடிய வள்ளைப் பாட்டு ஒளிந்து நின்ற

தலைவன் நெஞ்சத்தைத் தாக்க, அவன் களவு நீளாது மணமுடித்தலே தகும் என்று மணம் பேச ஏற்பாடு செய்தான். தலைவியின் தந்தையோ அங்ஙனம் மணம் பேசிவந்த தலைவனிடம் தன் மகளுக்கு உறவுண்டு என்பதை அறியாத நிலையிலேயே தலைவனது விருப்பத்திற்கு இசைவு தெரிவித்தனன். இந்நல்லிசைவால் தோழி பெருமகிழ்ச்சி அடைந்தாள். இதில் கிழவனும் வந்தனன், நுந்தையும் மணம் நயந்தனன்'' என்ற அடி களவு வெளிப்படாமையினைச் சுட்டும்.

**களவு வெளிப்பட்ட பின்வரைதல்**

தலைவி அறத்தொடு நின்றதை அனைவரும் ஏற்றுக்கொண்ட பின் மணந்து கொள்ளுதல் களவு வெளிப்பட்டபின் வரைதலாகும்.

**“எந்தையும் யாவும் உணரக் காட்டி**
**ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்**
**மலைகெழு வெற்பன் தலைவந் திரப்ப**
**நன்றுபுரி கொள்கையின் ஒன்றாகின்றே” (குறுந்.374:1-4)**

என்பது பெற்றோர்க்குக் களவை வெளிப்படுத்தி மணந்து கொண்டமையினைச் சுட்டுகின்றது. அதுபோல், உடன்போக்கின் இறுதியில் தலைவியின் சுற்றத்தார் அவள் சென்ற இடத்தைத் தேடிச் சென்று தலைவனை அணுகி அவனைத் தம் ஊரகத்தே வந்து திருமணம் செய்து கொள்ளுமாறு வேண்டுவர் (ஐங்.399:1-5) என்பதை எடுத்துரைக்கின்றது. மேலும் இம்மண நிகழ்ச்சிக்கு முன்னர் சிலம்புகழி நோன்பு என்பதொரு சடங்கு செய்தல் பண்டைய மரபாக இருந்தது. இதனை இறையனார் களவியலுரையாசிரியர்,

''தலைமகன் தன்னகத்தே வதுவைக் கலியாணம் எடுத்துக்கொண்டான் என்பது கேட்ட நற்றாய் ‘ஒழிந்த கலியாணம் செய்யினும் நம்மகத்தே வதுவைக் கலியாணம் செய்ய நேருங்கொல்லோ காளையைப் பயந்தான் என்று கூறுவர்''[18] இதனை,

**''சிலம்பு கழீஇய செல்வம்**
**பிறருழைக் கழிந்த என் ஆயிழை அடியே” (நற்.279:9-10)**

என்ற பாடல் விளக்கும். இங்ஙனம் தலைவன், தலைவியை அவள் தமர் அறியாமல் உடன் அழைத்துச் சென்று மணம் செய்து கொள்வது முற்காலத்தில் அறநெறியாகவே கருதப்பெற்றது. இதனை

**''கொடுப்போர் இன்றியும் கரணம் உண்டே**
**புணர்ந்துடன் போகிய காலை யான”[19]**

எனத் தொல்காப்பியர் கூறியுள்ளார். எனினும் களவு வெளிப்பட்ட பின் தலைவியின் சுற்றத்தார் உடன்பட்டுக் கொடுத்தலே அந்நாளில் பெருவழக்காக இருந்தது என்பது குறிப்பிடத்தக்கது.

**மடலேறி மணத்தல்**

பெண்ணின் தந்தை அவளது காதலனுக்குப் பெண்ணைத் தரவில்லையெனில் மடலூர்ந்து பெறுதல் மரபு. மடலேறுதல் என்பது தலைவன் பூனைப்பூவையும் ஆவிரம் பூவையும் எருக்கம் பூவையும் ஒரு சேரத் தொகுத்துத் தலையில் சூடிக்கொண்டு, பனைமடல் கருக்கால் செய்யப்பட்ட பொய்க்குதிரையின் மேல் கால் தசைகள் அறுத்துக் குருதி கசியும்படி ஏறித் தன் பெயரையும் தலைவியின் உருவத்தையும் எழுதி தெருமுனையில் தனது கருத்தினைச் சொல்வான். அதுகண்டு அவளது தந்தை தம் குடிக்குப்பழி உண்டாகும் என்று எண்ணி தனது பெண்ணை அவனுக்கு மணமுடித்து வைப்பான். (கலித்.141) இம்முறையினை அக்காலத்தவர்கள் நாணமற்ற செயல் என்று வெறுத்தனர். (குறுந்.182:1-7) சிலர் அவனது அழகினைப் பாராட்டினர். (கலி.140:5-6) இவ்வாறு மடலூர்ந்து மணமுடிக்கும் மரபு இருந்தமை எடுத்துரைக்கப்படுகின்றது. மேலும்,

**“ஆராக் காமம் அடூஉநின்று அலைப்ப,**
**இருவரை வீழ்நரின் நடுங்கி” (அகநா.322:3-4)**

என களவுக்காதலர் இணைந்து வாழ இயலாத நிலையில் தற்கொலை புரிந்து கொண்ட செய்தி குறிப்பாக உணர்த்தப் பெற்றுள்ளது. இவற்றால் காதல் வாழ்வில் ஏமாற்றம் அடைந்த நிலையில் தம்மை அழித்துக் கொள்ளவும் துணிந்த நிலை புலப்படுகின்றது.

இத்தகைய மடலேறுதல் பற்றி நற்றிணை (143,152, 342, 377) குறுந்தொகை (14,17,32,173,180) கலித்தொகை (பெருந்திணைக்குரிய பாடல்கள் 138, 139, 140, 141) ஆகிய நூல்களில் செய்தி உள்ளது. அகநானூற்றிலும் காதாசப்தசதியிலும் மடலேறுதல் குறித்த செய்திகள் இடம்பெறவில்லை. தலைவன் தலைவியைப் பெற மடலேறும் அளவிற்குச் செல்லவில்லை என்பதன்மூலம் ஆந்திர நாட்டரிடம் காதலித்தவளையே மணந்து கொண்டு இல்லறம் நடத்த வேண்டும் என்னும் வரன்முறை இல்லை என்பது இதனால் அறியப்படுகின்றது.

**சிலம்புகழி நோன்பு**

சங்க காலத்தில் பெண்குழந்தைகளுக்கு காலில் சிலம்பு அணியும் வழக்கம் இருந்தமையினை,

**“சீர்கெழு வியன் நகர்ச் சிலம்புநக இயலி**
**ஓரை யாமொடு பந்துசிறிது எறியினும்,**
**வாராயோ என்று ஏத்தி பேரி இலைப்**
**பகன்றை வால்மலர் பனிநிறைந்ததுபோல்**
**பால்பெய் வள்ளம் சால்கை பற்றி,**
**என்பாடு உண்டனை ஆயின் ஒருகால்,**
**நுந்தை பாடும் உண் என்று ஊட்டிப்**
**பிறந்ததற் கொண்டும் சிறந்தவை செய்து யான்**
**நலம் புனைந்து எடுத்த என் பொலந்தொடிக்**
**குறுமகள்”(அகநா.219:1-9)**

என்னும் பாடல் விளக்கும். இச்சிலம்பினை கன்னிமைச் சிலம்பு என்பர். (அகநா.385) திருமணம் முடிவான பிறகு ஒரு நன்னாளில் அச்சிறு சிலம்பினை வயது முதிர்ந்த இல்லத்தரசியர் சிலர் ஒன்றாகக் கூடி நீக்குவர் (ஐங்.399:1-5) இது சிலம்புகழி நோன்பு என்பர். இவ்விழாவானது மணமகளின் இல்லத்தின்கண் நிகழும் (நற்.279:7-11) உடன்போக்கு நிகழுமிடத்து இச்சடங்குகள் தலைவன் மனைக்கண்ணும் நிகழ்த்துதல் உண்டு என்பதனை,

**‘‘நும் மனைச் சிலம்பு கழீஇ அயரினும்**
**எம் மனை வதுவை நல் மணம் கழிக’’ (ஐங்.399:1-2)**

என்ற பாடல் வரிகள் விளக்கும். இவற்றின் மூலம் சிலம்புகழிதல் என்பது திருமணமான பெண்ணிற்கு அடையாளமாகவும் ஒரு சமுதாயச் சடங்காகவும் விளங்கியமை உணரமுடிகின்றது.

மேலும் திருமணம் முடிந்த பிறகு பெண்கள் வேறுவிதமான சிலம்பினை அணிந்துள்ளனர். கண்ணகியின் காற்சிலம்பும் பாண்டிமாதேவியின் பொற்சிலம்பும் சான்றாகும். காதாசப்தசதி சிலம்புகழி நோன்பு பற்றிக் கூறவில்லை மாறாக,

**‘‘சேவடி விழுங்கால் சிலம்பிற் சிக்கிய**
**காதலன் கூந்தல் கார்குழல் எடுத்தல்**
**சினந்தணிந் தளளெனச் செப்பிய தன்றே’’ (காதா.159:1-3)**

என்ற பாடல் திருமணம் ஆன பின்னரும் மகளிர் சிலம்பணிந்திருந்ததைச் சுட்டுகிறது.

**பரிசங் கொடுத்து மணத்தல்**

சங்க கால மக்களிடம் காணப்பட்ட திருமண முறைகளில் ஒன்று பரிசங்கொடுத்து மணத்தலாகும். அதாவது மணமகளின் பெற்றோர் கேட்கும் பரிசுத்தொகையினைக் கொடுத்து மணத்தல் பரிசங்கொடுத்து மணத்தல்

எனப்படும். இதற்கு முலைவிலை, சிறுவளைவிலை, பரியம், பாசிழைவிலை என்று பல பெயருண்டு.

**“இருப் பிடம் படுத்த வடுவுடை முகத்தர்**
**கடுங் கண் கோசர் நியம மாயினும்**
**உறு மெனக் கொள்ளுகுநர் அல்லர்**
**நறுநுத லரிவை பாசிழை விலையே” (அகநா.90:11-14)**

**“-----------------------------தண்டுறை யுரன்**
**சிறு வளை விலை யெனப் பெருந் தேர் பண்ணி எம்**
**முன் கடை நிறீஇச் சென்றிசினோனே” (நற்.300:4-6)**

என்ற இரு பாடல்களில் தலைவிக்கு ஈடான பரிசுத்தொகைள் இல்லை. தலைவியை உயர்ந்தவளாகச் சுட்டுகிறது. அதுபோல் தலைவியின் அழகில் மயங்கிய தலைவன் பரிசத்திற்கு ஈடாக ஒரு நாட்டையே நல்கினான் (ஐங்.147:3) என்பதைச் சுட்டுகின்றது.

‘‘இப்பரிசும் கொடுக்கும் பழக்கம் இந்தியப் பழங்குடி மக்களிடம் இன்னும் காணப்படுகின்றது. இது மக்களின் பணியைப் பெற்றோர் அடைய முடியாததால் வாங்கப்படும் ஈட்டுத் தொகையாகக் கருதப்படுகிறது. இதன் தொடர்ச்சி மலையின மக்களிடம் இன்னும் காணப்படுகின்றது. ஆனால் பெண்ணின் விருப்பம் பற்றிப் பேசப்படாதது குறிப்பிடத்தக்கது. பொருளுக்கு மதிப்புக் கொடுக்கும் இன்றைய நிலை அற்றை நாளின் எச்சமேயாகும் என்ற முடிவைத் தருவதாக உள்ளது’’[20] என்பர் கே.பி. அழகம்மை.

**தொன்றியல் மரபின் மன்றல்**

பெற்றோர் மணம் முடித்து வைத்தல் தொன்றியல் மரபின் மன்றல் எனப்படும்.

**“நனைவிளை நறவின் தேறல் மாந்தி**
**புனைவினை நல்இல் தருமணல் குவைஇ**
**பொம்மல் ஓதி எம்மகள் மணன் என**
**வதுவை அயர்ந்தனர் நமரே” (அகநா.221:1-4)**

**“உரும்இசைப் புணரி உடைதரும் துறைவற்கு**
**உரிமை செப்பினர் நமரே” (குறுந்.351:4-5)**

**“மண்ணி மாசு அற்றநின் கூழையுள் ஏற அவன்**
**கண்ணி தந்திட்டது எனக் கேட்டு, ‘திண்ணிதா,**
**தெய்வமால் காட்டிற்று இவட்கு என, நின்னை அப்**

**பொய்இல் பொதுவற்கு அடை சூழ்ந்தார் தந்தையொடு**
**ஐயன்மார் எல்லாம் ஒருங்கு"** **(கலித்.107:30-35)**

என்ற பாடல்கள் தொன்றியல் மரபின் மன்றலைச் சுட்டுகின்றது. "இம்மணமுறை பழங்குடி மக்களிடம் இன்றும் காணப்படுகிறது"[21]

**சேவை மணம்**

பெண்ணின் பெற்றோர்க்கு பல உதவிகளைச் செய்து மணத்தல் சேவைமணம் எனப்படும். இதனை,

**"......................................... ஆய்தொடிக் குறுமகள்**
**நலஞ்சால் விழுப்பொருள் கலம்நிறை கொடுப்பினும்**
**பெறலருங் குரைய ளாயின் அறங் தெரிந்து**
**நாமுறை தேஎம் மரூஉப் பெயர்ந்து அவனொடு**
**இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழந்தும்**
**பெருநீர்க் குட்டம் புணையொடு புக்கும்**
**படுத்தனம் பணிந்தனம் அடுத்தனம் இருப்பின்**
**தருகுவன் கொல்லோ தானே விரிதிரைக்**
**கண்டிரள் முத்தங் கொண்டு ஞாங்கர்த்**
**தேனிமிர் அகன்கரைப் பகுக்குங்**
**கானலாம் பெருந்துறைப் பரதவன் எமக்கே" (அகநா.280:4-14)**

என்னும் அடிகள் சுட்டும். அதாவது தலைவன் ஒருவன் தான் விரும்பும் பெண்ணொருத்தியின் தந்தைக்கு உப்பை விற்றுக் கொடுத்தலும் அவருடன் தோணியில் சென்று மீன்பிடித்து உதவி செய்தலும் அவரை எப்பொழுதும் வணங்கி நிற்றலும் செய்வதால் தன்மேல் இரக்கம் கொண்டு தன் மகளை மணம் செய்து கொடுப்பர் என நினைப்பான். இவ்வாறு பெண்ணின் பெற்றோர் உதவி செய்து மணக்கும் சேவை மணம் சங்க காலத்தில் நிகழ்ந்தமையை இதன் மூலம் அறிய இயலும்.

"இதில் பெண்ணின் விருப்பம் பற்றி அறிய வாய்ப்பில்லை. தென்னிந்திய பழங்குடிகளிடம் இச்சேவை மணம் நிலவுவதாகக் கிருஷ்ணஐயர் குறிப்பிடுவர்"[22]

**ஏறுதழுவி மணத்தல்**

சங்கத் தொகைநூல்களுள் ஒன்றாகிய கலித்தொகையின் முல்லைக்கலியில் இந்நில மக்களின் வீரவிளையாட்டாக ஏறுதழுவுதல் கூறப்படுகிறது. "ஏறுதழுவல் என்பதனை ஜல்லிக்கட்டு, காளைவிரட்டு, மஞ்சுவிரட்டு என்றும் சுட்டலாம். முல்லை நிலத்திலே வாழ்ந்த

செல்வப்பெருங்குடி மக்கள் தங்கள் வீட்டில் பெண்குழந்தை பிறந்தால் தங்கள் மந்தையிலே உள்ள காளைக்கன்று ஒன்றைத் தனியே பிரித்துச் செல்வமாக வளர்க்கத் தொடங்குவார்கள். ஏறுதழுவலுக்காக வீட்டிலே அருமையாக வளர்வாள் பெண். மந்தையிலே காளை செல்வமாக வளரும். மங்கைக்குப் பருவம் வந்தவுடன் இந்த காளையை அடக்கி வெற்றி கொண்டவன் எவனோ அவனுக்கு இவளை மணம் செய்து கொடுப்பேன் என்று அப்பெண்ணின் தந்தை பறையறைந்து செய்தி தெரிவிப்பான். அதுகேட்ட அப்பெண்ணின் காதலனும் முன்வந்து காளையைத் தழுவி அடக்கி வெற்றி கொள்வான். பின் காதலியைப் பரிசாகப் பெற்று மணமுடிப்பான்''[23] இதனை ஏறுதழுவி மணத்தல் என்று முல்லைக்கலி சுட்டும். இவ்ஏறுதழுவி மணத்தல் முல்லைக் கலியில் (101, 102, 103, 104) நான்கு பாடல்களில் காணப்படுகிறது.

**''தொழிஇஇ, ஒருக்குநா மாடுங் குரலையுள் நம்மை**
**அருக்கினான் போல் நோக்கி அல்லல் நோய் செய்தல்**
**குருஉக்கட் கொலை யேறு கொண்டேன் யானென்னுந்**
**தருக்கன்றோ ஆயர் மகன்;**
**நேரிழாய்! கோள் அரிதாக நிறுத்த கொலை யேற்றுக்**
**காரி கதனஞ்சான் பாய்ந்த பொதுவதற்கே**
**ஆர்வுற் றெமர் கொடை நேர்ந்தார் அலரெடுத்த**
**ஊராரை உச்சி மதித்து'' (கலித்.104:69-76)**

என்பதில் ஏறுதழுவி வெற்றி பெற்ற தலைவனைக் கண்டு தலைவி மகிழ்ந்து குரவைக் கூத்தாடினமை எடுத்துரைக்கப்படுகிறது.

**''கொல் லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும்**
**புல்லாளே ஆயமகள்'' (கலித்.103:63-64)**

என்பது முல்லை நிலத்து ஆயர்தம் மணவாழ்வின் உயர்நிலைக் கொள்கையாகும். ''இம்மணவினை நீலகிரியில் வாழும் தோதுவர்களிடமும் பண்டைக் காலத்தே வழக்கில் இருந்தது எனப் பரமசிவானந்தம் குறிப்பிடுவர். ஆனால் சங்க இலக்கியச் செய்திகள் காதலித்து வெற்றி பெற்றானைத் திருமணம் செய்து கொண்ட நிலையை மட்டும் பேசுகின்றனவே தவிர அவன் தோற்றால் அவள்நிலை பற்றிக் குறிப்பிடவில்லை''[24]

**திணைக் கலப்பு மணம்**

ஒரு திணைக்குரியோர் மற்றொரு திணையில் வாழ்வோரைக் காதலித்து மணப்பது திணைக் கலப்பு மணமாகும்.

**“நெல்லும் உப்பும் நேரே ஊரீர்!**
**கொள்ளீ ரோவெனச் சேரிதொறும் நுவலும்**
**அவ்வாங் குந்தி யமைத் தோளாய் நின்**
**மெய்வாழ் உப்பின் விலைஎய் யாம்” (அகநா.390:8-11)**

என நெய்தல் மகளுக்கும் முல்லை மகனுக்கும் நிகழும் காதலைப் புனைவதால் இது திணைக்கலப்பு மணமாகும். அதுபோல் நெய்தல் நிலத் தலைவிக்கும் குறிஞ்சி நிலத் தலைவனுக்கும் ஏற்படும் காதலும் (அகநா.140) திணைக்கலப்பு மணத்தில் அடங்கும்.

**துணங்கையாடி மணத்தல்**

**“பொன்கோல் அவிர்தொடித் தற்கெழு தகுவி**
**எற்புறம் கூறும் என்ப; தெற்றென**
**வணங்குஇறைப் பணைத்தோள் எல்வளை மகளிர்**
**துணங்கை நாளும் வந்தன” (குறுந்.364:3-6)**

என்ற பாடல் பரத்தையரோடு தலைவன் ஆடும் துணங்கை கூத்தினைச் சுட்டுகின்றது.

**பலதாரமணமுறை**

தலைமகன் தன் முதல் மனைவி இருக்கும் பொழுதே தன் தகுதிக்கு ஏற்பத்தன் குலத்தாள் ஒருத்தியை இரண்டாம் மனைவியாக ஏற்று அவளை இல்லத்திற்கு அழைந்து வந்தபோது முதல்மனைவி அவளை மகிழ்ந்து ஏற்றுக் கூறியமையினை,

**“நன் மனை அருங்கடி அயர,**
**எம் நலம் சிறப்ப யாம் இனிப் பெற்றோளே” (ஐங்.292:4-5)**

என்னும் அடிகள் சுட்டும். ஒருவன் பல மனைவியருடன் வாழ்ந்ததற்குச் சங்க இலக்கியச் சான்றுகள் இல்லை. எனினும் தலைவன் மனைவியைத் தவிர்த்துக் காதல் பரத்தையோடும் காமக்கிழத்தியோடும் வாழ்ந்தான். ஒருவன் ஒருத்தியோடு வாழ்வது சிறந்தது என்ற குறிக்கோளை முன் வைத்து இலக்கியம் படைக்கப்பட்ட அக்காலத்தில் அரசரும் செல்வரும் ஒருத்திக்கு மேற்பட்டோரை மணந்திருந்தனர். ஆனால் அகநானூற்றில் பலதார மணமுறை காணப்படவில்லை. தமிழர்க்குரிய ஒருதார மணமுறையே காணப்படுகிறது.

காதாசப்தசதியில் பல மனைவியருடைய தலைவன் அனைவரையும் திருப்திப்படுத்த கண்ணோட்டத்துடன் நடந்து கொண்டதை,

**“கண்ணோட் டத்தால் கலந்த போதே**
**இத்துணை இன்பமெம் இதயத் துறுமேல்**
**வஞ்ச மின்றி மனமிசைந் தேகும்**
**அவர்தம் இன்பம் அளவிடற் காமோ? (காதா.76:1-4)**

என்ற பாடல் பலதாரமணத்தைச் சுட்டுகின்றது. அதுபோல் தலைவன் தலைவியை மறதியாகத் தான் விரும்பும் வேறொரு பெண்ணின் பெயரால் அழைத்துவிட்டான். அங்கிருந்த தோழிகள் அவனைக் கண்டித்த போது தலைவி,

**“அவள்பெயர் கொண்டெனை அழைத்தி டட்டும்**
**அவரிடம் தவறென யாதும் கூறேல்**
**எங்கா கினும்தம் இதய மொன்றி**
**இன்புற் றாலே எமக்குப் போதும்” (காதா.113:4)**

என்று கூறுவது தலைவி தலைவன் மீதுகொண்ட அன்பினைப் புலப்படுத்தும்.

**மறுமணம்**

சங்க அகஇலக்கியம் மறுமணம் பற்றிச் சுட்டவில்லை. ஆனால் காதாசப்தசதியில் முதல் மனைவி இறந்த பின் அவளது அணிகலன்களை இரண்டாம் மனைவிக்கு அணிவிக்கக் கருதிய தலைவனைச் சுட்டுகின்றது (காதா.143:1-3)

**மணமனை அலங்கரித்தல்**

திருமணக்காலத்தில் மணமக்கள் வீட்டுச் சுவர்களுக்கெல்லாம் செம்மண்பூசி, வீட்டில் புதுமணல் பரப்பி, மாலைகளைத் தொங்க விட்டு, மகிழ்ச்சியோடு மணமனையினை அழகு படுத்தினமையினை,

**“புனைமாண் இஞ்சி பூவல் ஊட்டி**
**மனைமணல் அடுத்து மாலை நாற்றி**
**உவந் தினிது அயரும் என்ப” (அகநா.195:3-6)**

என்ற பாடல் விளக்கும். அதுபோல் திருமணம் நடைபெறும் வீட்டில் சங்கொலியும் பறையொலியும் முழக்கப்படுவதை,

**“பறைபட பணிலம் ஆர்ப்ப இறை கொள்பு” (குறுந்.15:1)**

என்னும் பாடலடி சுட்டும்.

**காலம்**

“மழை, மிகுகுளிர், மிகுபனி இல்லாத காலமே மணவினைக்கு ஏற்றது. தவிர உழவர்களுக்கு அக்காலத்தில் ஓய்வும் கிடைக்கும். தை முதல் ஆவணி வரைதான் இந்த ஓய்வு கிட்டும். உழவர்களின் பொருளாதார நிலையும்

நன்னிலையில் இருக்கும்.[25] பெரும்பாலும் திருமணம் வளர்பிறையில் நடைபெறும் (அகநா.2:17) வேங்கை மலரும் பருவத்தில் திருமணம் நடைபெறும் (கலி.38:25-26) என்றும் அக இலக்கியங்கள் திருமணம் நடைபெறும் காலத்தைக் கூறுகின்றன.

**''கனை யிருள் அகன்ற கவின்பெறு காலை**
**கோள் கால் நீங்கிய கொடுவெண் திங்கள்**
**கேடில் விழுப் புகழ் நாள் தலைவந்தென'' (அகநா.86:5-7)**
**''அம்கண் இருவிசும்பு விளங்கத் திங்கட்**
**சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்து'' (அகநா.136:4-5)**

என்னும் பாடலடிகள் பண்டைத் தமிழர் திங்களும் உரோகினியும் கூடிய நாளில் திருமணம் செய்தமையினை எடுத்துரைக்கின்றது. மேலும் ''நெடுவெண் திங்களும் ஊர் கொண்டன்றே'' (அகநா.2:17) என்ற அடியும் இதனை விளக்கும்.

**இடம்**

தலைவியின் வீட்டார் மகட்கொடைக்கு இசைந்த பின்னர் தலைவியின் வீட்டிலேயே திருமணம் நடைபெற்றதை,

**''சிறியோற் கொத்தவென் பெருமடத் தகுவி**
**.........................................................................**
**மேயினாற் கொல்லென நோவல் யானே'' (அகநா.369:21-26)**

என்ற பாடல் விளக்கும். அதாவது வளமிக்க தன் மனையில் நடக்கவேண்டிய தன்மகளின் சிலம்புகழி நோன்பு வறுமைமிக்க தலைமகனின் வீட்டில் நடக்க நேர்ந்ததை எண்ணித் தாய் வருந்துவதன் மூலம் தலைவியின் வீட்டிலேயே திருமணம் நடைபெற்றமை புலனாகும்.

ஆந்திரநாட்டிலும் திருமணம் மணமகள் இல்லத்தில் நடைபெற்றதாகவும் மணம் முடிந்த நான்காம்நாள் காதலியை விட்டுக் காதலன் தன் ஊர்க்குப் பிரிந்து சென்றுவிட்டு மீண்டும் நன்னாளில் அழைக்கவருவான். அதன்பின்னர் இருவரும் சேர்ந்து தனிக்குடித்தனம் நடத்த மணமகன் ஊருக்கு செல்வர் என்னும் கூற்றின் வழி திருமணம் தலைமகள் இல்லத்தின்கண் நடைபெற்றிருப்பதை அறிய முடிகிறது. (காதா.482:4)

**திருமண உறுதிவிழா**

மணமகளின் பெற்றோர் திருமணத்திற்கு முன்னர்ச் செய்யப்படும் திருமண உறுதிவிழாவை நிகழ்த்தியதை,

**“நனைவிளை நறவின் தேறல் மாந்தி**

**புனைவினை நல்இல் தருமணல் குவைகு**

**பொம்மல் ஓதி எம்மகள் மணன் என**

**வதுவை அயர்ந்தனர் நமரே” (அகநா.221:1-4)**

என்னும் அடிகள் உரைக்கும்.

**தெய்வத்தை வணங்குதல்**

**“நல்இறை மெல்விரல் கூப்பி**

**இல்உறை கடவுட்கு ஆக்குதும் பலியே” (அகநா.282:17-18)**

என்பதில் திருமணத்தை முன்னிட்டு இல்லுறைத் தெய்வத்தை வணங்கினர்.

**திருமணம்**

திருமணம் நடக்கும் நாளை வதுவை நாள் என்றழைப்பர். இதனை

**“எண்ணுமுறை நிறுத்த பண்ணி னுள்ளும்**

**புதுவது புனைந்த திறத்தினும்**

**வதுவை நாளினும் இனியனால் எமக்கே” (அகநா.352:15-17)**

என்னும் அடிகள் சுட்டும். மேலும்

**“கனை இருள் அகன்ற கவின்பெறு காலை**

**கோள் கால் நீங்கிய கொடு வெண் திங்கள்**

**கேடு இல் விழுப் புகழ் நாள் தலைவந்தென” (அகநா.86:5-7)**

என்பதில் வளர்பிறை நாளில், சூரிய உதய காலத்தில், தீய கோள்களின் சேர்க்கையின்றி நாள்கோள் சேர்ந்திருக்கும் காலமே திருமணத்திற்கு உரிய காலமாகக் கொள்ளப்படுகிறது.

அதுமட்டுமின்றி வயது முதிர்ந்த நல்ல பெண்கள் தம்தலையிலே தண்ணீர்க்குடத்தை ஏந்தி நின்றனர். அந்த நீர்க்குடங்களை முன்னும் பின்னுமாக மாற்றி மாற்றிக் கொடுத்தனர். பிள்ளை பெற்ற நான்கு பெண்கள் அந்த நீர்க் குடங்களை வாங்கி மணமகனை நீராட்டினர். நீராட்டும் போது,

**“கற்பினின் வழாஅ நற் பல உதவிப்**

**பெற்றோற் பெட்கும் பிணையை ஆக” (அகநா.86:13-14)**

என வாழ்த்தினர். அதுபோல் திருமணத்தின் போது மங்கல வாழ்த்துப்பாடுதல் ஆந்திர நாட்டாரிடம் காணப்பட்டது. மகளிர் பலர் கூடி மங்கல வாழ்த்துப் பாடலைப் பாடும்போது மணப்பெண் விரும்பி கேட்டுக் கொண்டிருக்கிறாள். ஓரிடத்தில் தலைவன் பெயரை இணைத்து வாழ்த்துப் பாடலைப் பாடியபோது மணப்பெண் நாணம் கொண்டு தலைகுனிகின்றாள்.

(ஆந்.அகநா.7:42) அதேப்போல் மணமகன் தன் திருமணவாழ்த்துப் பாடலைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்ததை (ஆந்.அகநா.7:43) எடுத்துரைக்கின்றது. மேலும் திருமணம் என்ற பந்தத்தில் நுழையக்கூடிய பெண்ணை அலங்காரம் செய்வது மரபு. இத்தகைய மரபு ஆந்திரநாட்டு மக்களிடமும் காணப்பட்டது (ஆந்.அகநா.6:69) பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

**திருமணத்தில் வாத்தியம்**

திருமணச் சடங்கில் சுற்றத்தார் அனைவரும் பங்கு கொள்வர். சுற்றமும் நட்பும் சூழத் திருமணம் தொடங்கப்படும் போது முழவு முதலிய இன்னிசைக் கருவிகள் முழங்கப்பட்டது. இதனை,

**"முழவுமுகம் புலரா விழவுடை வியல்நகர்**
**மணன்இடை யாகக் கொள்ளான்" (அகநா.397:3-4)**

என்ற பாடலடிகள் விளக்கும்.

**காப்பு நூல் அணிவித்தல்**

மணமகளின் சுற்றத்தார் விருப்பமுண்டாகக் கூடி இவட்கு மெல்லிய மலரையுடைய வாகை மரத்தினது புல்லிய புறத்தையுடைய கவைத்த இலையை அங்குள்ள முதிர்ந்த கன்றால் கறிக்கப்பட்ட, பள்ள நிலத்திலே படர்ந்த அறுகம் புல்லினது மழைபெயலால் தோன்றிய கழுவிய நீலமணி போன்ற நிறமுடைய இதழ்களையுடைய கிழங்கின் கண்ணுள்ள நறுமணமிக்க அரும்புகளோடு விரவித் தொகுத்த வெள்ளி காப்பு நூலை அணிந்து தூய திருமண உடையால் அழகு பெறும் படிச்செய்து, மழை பெய்தல் போன்ற ஒலியையுடைய புதுமணல் மிக்க மணப்பந்தலிலே திருமணச் சின்னமாகக் கருதப்படட 'இழை' அணிவித்து விழாக் கொண்டாடியதன் காரணமாக மணமகள் உடலில் அரும்பிய வியர்வையை விசிறியால் வீசி நீக்கி, அவளைத் தலைவனுக்கு அளித்தார்கள் (அகநா.136:8-17) என்பதன் மூலம் திருமணத்தில் காப்புநூல் அணிவித்தல் புலனாகிறது.

சங்க நூல்களில் அகநானூற்றுப் பாடல்கள் (86,136) இரண்டு மட்டுமே பண்டைத் தமிழரின் திருமண முறையை விரிவாகக் கூறியுள்ளன. "இம்மணமுறையே தமிழரின் தன்னேரிலாத தனியுரிமை உடைய திருமண முறையாகும். இது மிகுதொல் பழங்காலத்தே தமிழகத்து நிலவிய ஈருயிர் ஒன்று சேர் ஒருயிர்க்கிழமை எனப்படும் திருமணமாகும்."[26] இவ்விரண்டு பாடல்களின் சடங்குகளிலும் பார்ப்பனர் இடம்பெறவில்லை. மந்திரம் ஒலிக்கப்படவில்லை. தீவலம் செய்தலோ, அம்மி மிதித்தலோ, அருந்ததி காட்டலோ இல்லை என்பதை நோக்குதல் வேண்டும். ஆரியச் சடங்குகள்

ஏதுமில்லாமல் தமிழர்க்குரிய முறைப்படித் திருமணம் நடந்தமையை உணரமுடிகிறது. ஆனால் கலித்தொகையில் இவை முழுவதும் காணப்படுகிறது. எனவே க.வெள்ளைவாரணன் 'எரிவலம் வருதல் ஒத்துடை யந்தணராலன்றி ஏனைய தமிழ் மக்களால் மேற்கொள்ளப் பெறாத சடங்கென்பது நன்கு புலனாகிறது என்பர்[27]

திருமணம் சடங்குகளின் போது செந்தீயை வளர்த்து அதனை வலம் வரும் பழக்கம் எவ்வாறு தமிழர்களிடையே தோன்றியது என்பதற்கு பண்டிதா் அ.க. நாயுடு அவர்கள் "குளிர்மிகுந்த வடநாட்டில் குளிரைப் போக்கி வெப்பம் உண்டாக்குவதற்காகத் தீயை வளர்த்துக் கொண்டு அத்தீயைச் சுற்றிலும் இருந்து கொண்டு வெப்பம் தந்த மகிழ்ச்சியால் திருமணம் செய்வர். முன்னர் வடக்கே குளிர்நாட்டில் குளிரைப் போக்குவதற்காக வளர்த்த தீ பின்னர் தெற்கே வெப்ப நாட்டில் வெப்பத்தை உண்டாக்கி விட்டது. இது காலை வெப்பநாட்டுத் தமிழர்க்கு மட்டுமன்று. குளிர்நாட்டு ஆரியர்க்கும் தீயை வளர்க்க வேண்டிய அவசியம் திருமணத்தில் இல்லை. பழக்கத்தில் மூழ்கிய அறியாமை ஓர் பக்கம், திருமணக் கரணத்தீயை வளர்க்கின்றது. அதற்குக் கற்பனைக் கடவுளரும் அவரைப் பற்றிய பொருளறியாச் சொற்றொடர்களும் துணை செய்கின்றன"[28] என்பர்.

**இடையர்களின் திருமணமுறை**

முல்லை நிலத்து இடையர்கள் தங்கள் வீட்டில் புதுமணலைப் பரப்பினர். இல்லத்திற்குச் செம்மண்ணைப் பூசி எருமையின் கொம்பைத் தெய்வமாக வைத்து வழிபட்டுப் பின்பு மணமகனுக்கும் மணமகளுக்கும் மணம் முடித்தனர். இதனை,

**"தருமணல் தாழப் பெய் தில்பூவ லூட்டி**
**எருமைப் பெடையோ டெமரீங் கயரும்**
**பெருமண மெல்லாந் தனித்தே யொழிய**
**வரிமணன் முன்றுறைச் சிற்றில் புனைந்த**
**திருநுத லாயத்தார் தம்முட் புணர்ந்த**
**ஒரு மணந் தானறி" (கலித்.114:12-17)**

என்னும் பாடலடிகள் விளக்கும். அதுமட்டுமின்றி மணநாளன்று இடையர்கள் செம்மறியாட்டின் முற்றிய தயிராகிய உலையில் வரகரிசியோடு ஈயலைவிட்டுச் சமைத்த விருப்பம் தரும் சோற்றின் மேல் பசுவின் வெண்ணெய் கிடந்து உருக அதனைப் பெய்து ஏவலரை முன்பு உண்பித்தனர். மணவீட்டில் மனைவி விருந்தயர மணமகன் விருந்துண்டான் அகநானூறு (394) சுட்டுகிறது.

**ஓமம் வளர்த்தல்**

**“..........................நாமும்**

**நெய்பெய் தீயின் எதிர்கொண்டு**

**தான் மணந்தனையம் என விடுகம் தூதே” (குறுந்.106:4-6)**

என்று கபிலர் திருமணச் சடங்கில் ஓமம் வளர்த்தலைக் குறிப்பிட்டுள்ளார். அதுபோல்

**“காதல் கொள் வதுவைநாள் கலிங்கத்துள் ஒடுங்கிய**

**மாதர்கொள் மாண்நோக்கின் மடந்தைதன் துணையாக**

**ஓதுடை அந்தணன் ஏரிவலம் செல்வான் போல்” (கலித்.69:3-5)**

என்று மருதனிளநாகனாரும் சுட்டியுள்ளார்.

**குடும்பம் - பெயர்க்காரணம்**

குடும்பம் என்பதற்கு, “திருமணத்தின் மூலம் பிணைக்கப்பட்டு ஒரு குடியிருப்பில் கணவன், மனைவி, தாய், தந்தை, மகன், மகள், தம்பி, தங்கை போன்ற உறவுமுறைகளுடன் பொதுப்பண்பைப் படைத்தும் பாதுகாத்தும் வளர்ச்சியுறுவதே குடும்பம்”[29] எனக் கலைக் களஞ்சியம் விளக்கம் தருகிறது[27].

பொதுவாக குடும்பம் எல்லாச் சமூகங்களிலும் உள்ள அடிப்படையான அமைப்பு. குடும்பத்தினின்று உறவு ஏற்படுகின்றது. சமூகத்தின் பல்வேறு பிரிவுகளுக்கும் குடும்பம் அடிப்படையானது. இக்குடும்பம் சமூக வழக்காலும் சமயத்தாலும் கட்டுப்படுத்தப்படுகிறது. எனத் தமிழ்க்களஞ்சியம் சுட்டுகிறது[30].

தமிழிலக்கியத்தில் ‘குடும்பம்’ என்ற சொல்லை முதன்முதலில் கையாண்டவர் திருவள்ளுவர் (1029) சங்க இலக்கியத்திலோ தொல்காப்பியத்திலோ குடும்பம் என்ற சொல் இடம் பெறவில்லை. ஆனால் மனை இல், இல்லம், குடி ஆகிய சொற்கள் குடும்பம் என்ற பொருளைத் தருகின்றது.

**அக இலக்கியத்தில் குடும்பம்**

சங்க அக இலக்கியங்களில் குலம் (அகநா.184:1-2) (கலி.104:5, 105:7) குடிமக்கள் (அகநா.324:8,77:6) கலித்.34:14,78:6 ஊர் (நற்.285:7) குடியிருப்பு (நற்.108:4,135:4,285:7) ஆகிய சொற்கள் குடும்பம் எனும் பொருளில் இடம் பெற்றுள்ளது. மேலும்

**“கொண்ட கொழுநன் குடி வறன் உற்றென” (நற்.110:10)**

**“தாள் இலான் குடியே போல், தமியவே தேயுமால்” (கலித்.149:9)**

என்னும் அடிகள் குடும்பம் என்னும் பொருள்படும் குடியினைச் சுட்டுகிறது.

திணை என்பது குடும்பம் எனும் பொருள்படும் என்பதனை, ‘‘திணை என்ற சொல்லுக்கு ஆரம்பத்தில் குழு (கணம்) குடும்பம், குடியிருப்பு, என்ற பொருளுண்டு என்று குறிப்பிட்டுள்ளார்’’[31]. தமிழ் வீர நிலைக்காலம் பற்றி ஆராய்ந்த க.கைலாசபதி. திணைநிலைப் பெயர் என்பதற்கு உரைகூறும் சேனாவரையர், ‘‘அது வகுப்பு அல்லது சாதியைக் குறிக்கும் ஒரு பெயர் என்கிறார். குடும்ப இனவழித் தொடர்புகளும் பழமையும் விடாமல் பெருமையாகக் கூறக் கொள்ளப்படும் வீரநிலைச் சமூகத்தில் இக்குறிப்புகள் தெளிவாக உள்ளன எனத் திணை என்பதற்கான பொருட்களில் குடும்பம் என்பதும் ஒன்று எனச் சுட்டியுள்ளார்’’[32].

ஆகவே திணை என்பது பின்னாளில் ஒழுக்கம் எனும் பொருளுக்கு மாறி வந்தாலும் அதுவும் ஆரம்பகாலத்தில் குடும்பம் எனும் பொருளோடு தொடர்புடையதாக இருந்ததை மேற்கண்ட அறிஞர்தம் கருத்துரைகள் தெளிவுபடுத்துகின்றன.

**கூட்டுக்குடும்பம்**

ஒரு இலக்கிய உருவாக்கம் குறிப்பிட்ட இலக்கை மட்டும் அடிப்படையாகக் கொண்டு படைக்கப்பெறும். ஒரு குடும்பம் பாடப்பெறும் பொழுது அக்குடும்பச் சூழல் முழுவதும் பாடப்படவேண்டும். பதிவு செய்யப்படவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. இலக்கை நோக்கிய கதைமாந்தர் மட்டும் பாடப்பெறும் என்றவகையில் சங்க அக இலக்கியம் கூட்டுக்குடும்பத்தைச் சுட்டவில்லை என்று கருதக்கூடாது. சங்க இலக்கியம் காட்டும் தரவுகள் போதுமானதாக இல்லை. போர் என்பது அரசு சார்ந்த குடும்பங்களை மையப்படுத்திய நிலையிலேயே குறிப்பிட்ட திணைசார்ந்த கூட்டுக்குடும்பமும் இருந்திருக்கலாம் ஆனால் பதிவு செய்யவில்லை.

**தனிக்குடும்பம்**

தாய், தந்தை, மகன் சார்ந்தது தனிக்குடும்பமாகும்.

**‘‘புறவு அணி நாடன் காதல் மடமகள்**
**ஒண் நுதல் பசப்ப நீ செலின் தெண் நீர்ப்**
**போத வீழ் தாமரை யன்னநின்**
**காதல் அம் புதல்வன் அழும் இனி முலைக்கே’’ (ஐங்.424:1-4)**

என்னும் பாடல் தனிக்குடும்ப அமைப்பைச் சுட்டுகிறது. அதுபோல்

**‘‘முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்’’ (குறுந்.167:1-6)**

என்ற பாடலும் தனிக்குடும்பத்தைச் சுட்டுகிறது. இத்தகைய தனியுடைமையின் பெருக்கம் நிலவுடைமையின் ஆதாரம் என்பதால் தனிக்குடும்ப உருவாக்கத்திற்கு அடிப்படையாகும்.

**இல்வாழ்க்கை**

சங்க காலத் தமிழ்மக்கள் மனிதனுடைய வாழ்க்கை மதிப்பும் பயனும் வாய்ந்ததாக அமைய வேண்டும் என்பதில் பேரார்வம் காட்டினர். அதற்குரிய சிறந்த கருவி இல்வாழ்க்கை என்பதை அவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர். இதனாலேயே தான் அவர்கள் படைத்த இலக்கியத்தில் வீடும் வாழ்க்கையும் பின்னிப் பிணைந்துள்ளன. ஆடவனும் பெண்ணொருத்தியும் கருத்தொருமித்து இணைந்து வாழ்வதே இல்வாழ்க்கையாகும். ''இல்வாழ்க்கையில் ஈடுபடுவதற்குத் தேவைப்படும் அன்பைப் பெருக்குவதற்குரிய வாயிலாக உந்துதல் சக்தியாகக் காதல்வாழ்க்கையை அன்பின் ஐந்திணை வழி வளரும் இல்வாழ்க்கை பெரிதும் போற்றப்பட்டது''[33]

கற்பின் அருமைப்பாட்டை உணர்ந்த சான்றோர்கள் தெய்வத்தன்மை பொருந்தியது கற்பு என்றும் கற்பொழுக்கத்தில் சிறப்புற்று விளங்கிய மகளிரைக் 'கற்புக்கரசியர்' என்றும் போற்றினர் (திரு.61) அதுபோல் மகளிருக்கு ''உயிரினும் சிறந்தது நாணம்; நாணத்தை விட சிறந்தது குற்றமற்ற கற்பொழுக்கம்'' என்றும் அறிவுறுத்தப்பட்டது (தொல்.கள.23) மேலும் இல்லத்தரசியைக் குடும்பவிளக்காக, மனைக்கு விளக்காகிய 'வாள்நூதல்' என்றும் சிறப்பித்தனர் (குறுந்.135:1)

**இல்வாழ்க்கையின் சிறப்பு**

இவ்வாழ்க்கைக்கு அடிப்படை அன்பு, அறம் எனலாம். இதனை வள்ளுவர்

**''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
**பண்பும் பயனும் அது''**[34]

என்கிறார். இத்தகைய கணவன், மனைவி உறவு பிறவிதோறும் தொடர்வதாகும். முற்பிறவியில் கணவன், மனைவியாக இருந்தவர்களே ஊழின் வலிமையால் மீண்டும் இணைந்து வாழ்வதே இல்வாழ்க்கை ஆகும். என்பதனை,

**''இம்மை மாறி மறுமை யாயினும்**
**நீயா கீயரென் கணவனை**
**யானாகியர் நின்நெஞ்சு நேர்பவளே'' (குறுந்.49:3-5)**
**''சாதல் அஞ்சேன் அஞ்சுவல் சாதல்**

**பிறப்புப் பிறிதாகுவ தாயின்**

**மறக்குவேன் கொல் லென் காதலன் எனவே" (நற்397:7-9)**

என்னும் கூற்றுகள் இல்வாழ்க்கையின் சிறப்பை எடுத்துரைப்பதாகும். இவ்வாறாக இல்வாழ்க்கையில் ஈடுபடும் பொழுதுதான் அறம் செய்தல், விருந்து போற்றுதல் போன்ற இல்லற கடமைகளைச் செம்மையாகச் செய்யமுடியும்.

**"மறி இடைப் படுத்த மான் பிணை போல**
**புதல்வன் நடுவணன் ஆக, நன்றும்**
**இனிதுமன்ற அவர் கிடக்கை; முனிவு இன்றி**
**நீல் நிற வியலகம் கவைஇய**
**ஈனும் உம்பரும் பெறவருங்குரைத்தே" (ஐங்.401:1-5)**

என்ற பாடல் இல்லறம் என்னும் நல்லறத்தை மேற்கொள்ளும் தலைவனும் தலைவியும் ஒத்த அன்பினராய்க் கூடி தம் புதல்வனோடு மகிழ்ந்திருந்தமையினைச் சுட்டுகின்றது.

**இல்லற கடமைகள்**

இல்வாழ்பவன் தென்புலத்தார், தெய்வம், விருந்து, சுற்றத்தார், தான் என்ற ஐவகையோரையும் பாதுகாப்பதை தான் கடமையாகக் கொண்டு ஒழுதல் வேண்டும். (குறுந்.255:6-8)

**"நிரம்பா வாழ்க்கை" (அகநா.125:2)**

என்பது முற்றுப்பெறாதார் வாழ்க்கை. அதாவது தலைவனும் தலைவியும் இல்லறம் நடத்தும் காலத்தே துறவறம் நடத்துவதற்காக அவற்றை கூறும் நூல்களைக் கற்றுத் தெளிந்து, பின்னர் துறவு பூண்டு மெய்யுணர்ந்து அறம், பொருள் இன்பத்தின் சிறந்த வீட்டின்பம் பெறுதலே இல்லறத்தின் பயனாகும் என இல்லற கடமைகள் சுட்டப்பட்டுள்ளது. மேலும்

**"அறம்தலைப் பிரியாது ஒழுகலும், சிறந்த**
**கேளிர் கேடுபல ஊன்றலும், நாளும்**
**வருந்தா உள்ளமொரு இருந்தோர்க்கு இல்" (அகநா.173:1-3)**

என அறநெறியினின்றும் தவறாது இல்வாழ்க்கை நடத்துவதும் சிறந்த சுற்றத்தாரின் பல்வகைத் துன்பங்களைத் தாங்குவதும் இல்லறக் கடமையாகும்.

அதுபோல் வறியோர்க்கு அவர் வேண்டியதொன்றைக் கொடுத்தல், விருந்து எதிர்கோடல் போன்ற இல்லற கடமைகளை இனிதே ஆற்றி உயர்ந்தல் வேண்டும் (அகநா.187:3-5)

**“இரப்போர் ஏந்துகை நிறையப் புரப்போர்**
**புலம்பு இல் உள்ளமொடு புதுவதந்து உவக்கும்**
**அரும்பொருள் வேட்டம்” (அகநா.389:11-13)**
**“இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்**
**அசையுநர் இருந்தோர்க்கு அரும் புணர்வு ஈன்ம்” (நற்.214:1-2)**
**“நட்டோர் ஆக்கம் வேண்டியும் ஒட்டிய**
**நின் தோர் அணி பெற வரற்கும்**
**அன்றோ தோழி அவர் சென்ற திறமே” (நற்.286:7-9)**

என்னும் செய்யுட் பகுதிகள் தம் சமுதாயக் கடனை ஆற்றுதலில் ஆர்வமுடையவர் பண்டைய ஆடவர், பெண்டிர் என்பதனைப் பறைசாற்றுகிறது. அதுபோல் பொருள் தேடச் சென்றவன் வருமளவு வறுமையில் தலைவி துயரமுற்றாள். இதை விட மிகுந்த துயரம் தந்தது தம் இல்லத்திற்கு வந்த விருந்தினர். உறவினர் ஒன்றும் பெறாமல் செல்வது தான் (காதா.68:1-4) எனக் கூறுவதன் மூலம் ஆந்திரர்களின் இல்லற கடமை புலனாகிறது.

**மனையாளின் மாண்பு**

“மனையின்கண் இருந்து அறம் புரியும் உரிமையும் கணவனைப் பேணுதலும் சமையல் செய்தலும் பிள்ளைகளை வளர்த்தலும் கணவனில்லாத போது வீட்டைக்காத்தலும் பெண்டிர்க்கு இயற்கையாய் அல்லது இறைவனால் வகுக்கப்பட்ட பணியென்பது பண்டைத் தமிழர் தம் கருத்தாகும்”[35].

தலைவனது வாழ்க்கைக்குத் துணையாய் நின்று ஒன்றுபட்டு வாழும் மனைவியைத் திருவள்ளுவர் ‘வாழ்க்கைத் துணைநலம்’ என்னும் பெயரால் சிறப்பிக்கின்றார். மேலும் குடும்பத் தலைவியினை இலக்கியங்கள் மனைவி (நற்.121:11) மனையோள் (நற்.77:6) (குறுந்.164:5) மனைகெழு மடந்தை (அகநா.316:1) மனைகெழு பெண்டு (அகநா.203:18) என்று பலவாறு சுட்டுகின்றது.

இல்லத்திற்கு வேண்டிய பொருள்களையெல்லாம் கணவன் ஈட்ட வேண்டுமென்பதும் மனைவியும் குழந்தைகளும் இன்பமாக வாழ வேண்டுமென்பதையும்

**“வினையே ஆடவர்க் குயிரே வாள்நுதல்**
**மனை யுறை மகளிர்க் ஆடவர் உயிர் (குறுந்.135:1-2)**

என்னும் அடி விளக்கும். அதுபோல் அகநானூறு (31:15) குறுந்தொகை (11:7, 127:17, 211:8) ஆகிய நூல்களும் இதனை எடுத்துரைக்கின்றன.

இவற்றால் பெண்டிர்க்கு குடும்பப் பொருளாதாரத்தில் பங்கில்லை என்று எண்ண முடியாது. பெரும்பான்மை பொருளீட்டல் ஆணிற்கு உரியதாகவும் சிறுபான்மை பெண்ணிற்குரியதாகவும் விளங்குகிறது. மேலும் மனைவி தன் கணவனை,

**''---------------------------------------- காதல்**

**நல்கார் நயவார் ஆயினும்'' (குறுந்.60:5)**

**''அவரே வாரார்'' (ஐங்.48:3)**

**''ஓரீஇ யொழுதும் என்றை (குறுந்.203:5)**

என்று பன்மை கிளவி கொண்டு கணவனை அழைத்தல் மனைவியின் மரியாதைக்கு உரியவன் கணவன் என்பதைப் புலப்படுத்தும்.

**''இன்னா செயினும் இனிது தலை யளிப்பினும்**

**நின் வரைப்பினள், என்தோழி'' (குறுந்.397:6-7)**

என்ற பாடலடி கணவனுடைய முழுமையான ஆட்சிக்குட்பட்டவளாக மனைவி விளங்கியமையினை உணர்த்துகின்றது.

**இல்லறமாண்பு**

இல்லற வாழ்க்கையினை நல்லறமாக்கும் மாண்பினையுடையவளாகிய தலைவி, தனக்கு விளையும் துன்பத்தினை மறைத்து தலைவனின் புகழைக்காப்பவள்.

**''சிறிய சொல்லிப் பெரிய புலம்பினும் (அகநா.144:8)**

என்ற அடி துன்பமானது சொல்லக்கூடிய அளவினைக் கடந்தாலும் அதனைக் குறைவாகச் சொல்லும் பக்குவமுடையவள் தலைவி என்பதைச் சுட்டுகிறது. அதுபோல் தமக்கு உண்டான துன்பத்தைத் தன் புதல்வனிடம் மறைத்துப் புன்முறுவல் காட்டியதனை,

**''பொன்னுடைத் தாலி என் மகன் ஒற்றி**

**வருகுவை ஆயின், தருகுவென் பால் என**

**விலங்கு அமர்க் கண்ணள் விரல் விளி பயிற்றி'' (அகநா.54:18-20)**

என்னும் பாடல் எடுத்துரைக்கின்றது. அதுமட்டுமின்றி வினைமேற் சென்ற தலைவன் வருகைக்காகக் காத்திருக்கும் தலைவி அவன் வராதிருப்பினும் நலமாக இருந்தால் போதும் என எண்ணக்கூடியவளாகவும் இருந்தாள். (அகநா.184) இவற்றின் மூலம் தலைவி தலைவன்பால் கொண்ட அன்பும் இல்லறப் பண்பாடும் பொறுப்புணர்வும் வெளிப்படுகின்றது. ஆந்திரநாட்டு கற்புடை மகளிர்க்குக் கணவனே தெய்வம் என்பதனை,

**“முதுமைப் படினும் உருவெழில் கெடினும்**

**வறுமைப் பட்டு வாடி னாலும்**

**கற்புடை மகளிர் பொற்புடை மனத்தில்**

**கொழுநர்பால் நேயம் செழுமை யுறுமே” (காதா.245:1-4)**

என்னும் பாடல் சுட்டும். அதுபோல் இசை பாடுபவனின் தாளலயத்திற்கேற்ப நடனமாடுபவள் அசைந்தாடுவது போல தலைவனின் இசைவிற்கேற்ப நடமாடுபவள் தலைவி (காதா.251:1-4) எனக் கூறுவதன் மூலம் தலைவனுக்கு அடிபணிந்து செல்ல கூடியவளாகத் தலைவி விளங்கியமை புலனாகிறது.

**“-------------------------------------பிறர்வின வுங்கால்**

**தேடிஎவ் விடைதான் செப்புவ தறியேன்” (காதா.287:3-4)**

என்பதில் தலைவி தலைவனின் தவறான ஒழுக்கத்தைப் பிறரிடம் வெளிப்படுத்துவது பண்பற்றது என எண்ணி தனக்குள் தானே புலம்பவதையும் காணலாம். ஆணைவிடப் பெண்ணிற்குக் குடும்ப வாழ்க்கையில் பல்வேறு உரிமைகளும் கடமைகளும் இருந்தன. கற்பு நெறியில் வழுவாது நின்று இல்லறத்தை இனிது நடத்திய பெண்களைப் பெருமையுடன் தமிழ் அகஇலக்கியமும் ஆந்திர அகஇலக்கியமும் போற்றியுள்ளது என்பதை மேற் கூறிய செய்திகள் புலப்படுத்தும்.

**இல்வாழ்க்கையில் தலைவியின் பண்பாடு**

கொண்ட கொழுநன் குடி நலிவுற்று இருந்தாலும் தம் பிறந்தகத்தாரிடம் புகுந்தகத்தைப் பற்றி உயர்வாகப் பேச வேண்டும் என்ற தலைவியின் பண்பாட்டினை

**‘‘அன்னாய், வாழி! வேண்டு, அன்னை! நம் படப்பைத்**

**தேன் மயங்கு பாலினும் இனிய - அவர் நாட்டு**

**உவலைக் கூவற் கீழ**

**மான் உண்டு எஞ்சிய கலிழி நீரே” (ஐங்.203:1-4)**

என்னும் பாடல் சுட்டும். அதுபோல் வறுமை நிலையுற்ற கணவனின் குலப் பெருமையினைக் காக்க தலைவியானவள் பிறந்த வீட்டுச் சொந்தம் தம் இல்லம் வருவதை வெறுத்ததை,

**‘‘குலப்பெரு மைதனை நிலைநிறுத் திடவே**

**வறிய மாணாளன் மானம் காப்ப**

**செல்வச் செருக்குடன் இல்லம் வரும்தன்**

**உற்றா ரிடமே செற்றம் கொண்டாள்” (காதா.36:1-4)**

என்னும் பாடல் விளக்கும். இவற்றால் எப்பகுதியில் வாழ்ந்தாலும் பெண்களின் உணர்வு தன் கணவன் குடும்பத்தையே பற்றி நிற்கும் என்னும் உண்மை புலப்படுகின்றது.

**வறுமை நிலையில் பண்பாடு**

தந்தையின் இல்லில் பொற்கிண்ணத்தில் உணவு உண்டவள் இப்பொழுது குடும்ப வறுமையினால் ஒருபொழுது உண்டு, ஒரு பொழுது உண்ணாத நிலையில் இருந்தாள் இதனை,

**‘‘கொண்ட கொழுநன் குடி வறன் உற்றென**
**கொடுத்த தந்தை கொழுஞ் சோறு உள்ளான்**
**ஒழுகு நீர் நுணங்கு அறல் போல**
**பொழுது மறுத்து உண்ணும் சிறு மதுகையளே’’ (நற்.110:10-13)**

என்ற பாடல் சுட்டும். அதுபோல்

**‘‘ஒரோஒகை தம்முள் தழீஇ ஒரோஒகை**
**ஒன்றன் கூறாடை உடுப்பவரே யாயினும்**
**ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை’’ (கலித்.18:8-10)**

என்ற பாடல்கள் குடும்ப வறுமையைப் பெற்றோர்க்கு மறைந்து வாழ்வதே சிறந்த பண்பாடாகும் என்கிறது. கருவுற்ற பெண் தன் குடும்ப நிலை காரணமாக தன் விருப்பங்களை வெளியிடாமல் மனதில் அடக்கிக் கொண்டாள். (காதா.242:1-4) அதுபோல்,

**‘‘வறுமைப் பட்டோன் வாழ்க்கைத் துணைவி**
**மீண்டும் மீண்டும் வேண்டுவ தென்என**
**நெருக்கிக் கேட்பநன் நீர்தான் என்றாள்**
**மணாளன் துயர்ப்படல் மனம்வா ராதே’’ (காதா.370:1-4)**

என்ற பாடலும் குடும்ப வறுமையில் தலைவியின் மாண்பினைச் சுட்டுகின்றது. மேலும் கணவனின் இன்பத்தில் மட்டும் பங்கு கொள்பவள் நல்ல மனைவியல்லள். அவன் துன்பத்திலும் இன்ப காண்பவளே நற்குடிப்பெண்ணாவள். (கலித்.6:10-11)

இல்லறத்தில் நிற்போர் ஆற்ற வேண்டிய கடமைகள் பல. காம இன்பம் ஒன்று மட்டும் வாழ்வின் நோக்கமாதல் இல்லை. தலைவன் காமத்தால் தன் கடமைகளில் நெகிழ்ந்தானாயினும் தலைவி அவனுக்கு அறிவுரை கூறுதலும் கடமைகளை நடுவுநிலைமையுடன் சிந்திக்கும் ஆற்றலுடனும் விளங்க வேண்டும். (குறுந்.181:6-7) அன்பு என்பது நெருங்கிப் பழகாவிட்டால் குறையும் என்பது

சாதாரண மக்களின் பண்பு. நற்குடிப் பெண்களுக்கு அடிக்கடி காணாவிடினும் குன்றாது என்பது ஆந்திரர்கள் கொண்ட கொள்கையாகும் (காதா.73:1-4)

**விருந்தோம்பல்**

பண்டைத் தமிழர் போற்றிய அறங்களில் ஒன்று விருந்தோம்பலாகும். தொல்காப்பியர் பெண்ணிற்கு இலக்கணம் கூறுகையில்,

**''கற்பும் காமும் நற்பால் ஒழுக்கமும்**

**விருந்து புறத்தருதலும் கிழவோள் மாண்புகள்''**[36]

என்பர். அதுபோல் திருவள்ளுவர் விருந்தோம்பலுக்கெனத் தனித்ததோர் அதிகாரம் வகுத்துள்ளார்.

**''இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி**

**வேளாண்மை செய்தற் பொருட்டு''**[37]

என ஒருவன் இல்வாழ்க்கை வாழ்வது விருந்தோம்புதல் பொருட்டு என்றும்

**''பரிந்தோம்பிப் பற்றற்றேே மென்பார் விருந்தோம்பி**

**வேள்வி தலைப் படாதார்''**[38]

என்று விருந்தோம்பலை ஒரு வேள்வியெனச் சிறப்பித்துள்ளனர்.

பரிமேலழகர் விருந்தினரைப் ''பண்டு அறிவுண்மையின் குறித்து வந்தாரும் அஃதிண்மையின் குறியாது வந்தாரும்''[39] என இருவகையினராகக் கூறியுள்ளார். மேலும் ''விருந்து தானே புதுவது மேற்றே''[40] எனக் கூறியிருப்பதன் மூலம் சங்க காலத்தில் விருந்தினர் முன்பின் அறியாத அயலார் என்பதும் அவர்களைப் பேணுவது ஒரு சமூகக்கடமை என்பது உணரமுடிகிறது.

சங்க அகஇலக்கியத் தலைமக்கள் விருந்து பேணும் விருப்புடையராகப் படைக்கப்பட்டுள்ளனர். **''விருந்து விதுப்புறூஉம் பெருந்தோட் குறுமகள்''** (நற்.361:9) என்றும் **''அல்லி லாயினும் விருந்து விரினுவக்கும் முல்லை சான்றே கற்பின் மெல்லியற் குறுமகள்''** (நற்.142:9-10) என்றும் ஆடவர் தம் மனைவிமார்களின் விருந்தோம்பல் பண்பினை சிறப்பித்துள்ளனர். அதுமட்டுமின்றி தன்னுடைய மனை விருந்து ஒழிவறியாத சிறப்புடையதெனப் பெருமைப்படும் ஆடவரையும் காணமுடிகிறது. இதனை,

**''விருந்து ஒழிவு அறியாப் பெருந்தண்பந்தர்**

**வருந்தி வருநர் ஓம்பி'' (அகநா.353:17-18)**

சுட்டும்.

தன் கணவன் விருந்தினரைப் பேணுதற்குத் தேவையான செல்வத்தை எளிதில் பெற்றுத் திரும்ப வேண்டுமென்று எண்ணும் பெண்ணொருத்தினை,

**“செழுநகர் நல்விருந் தயர்மார் ஏமுற**

**விழுநிதி எளிதினின் எய்துக” (அகநா.205:13-14)**

கூறுகின்றது. அதுபோல் விருந்தினராய் வரும் புதியவரை எதிர்கொண்டு வரவேற்று இனிதாகப் பேசி அவரைப் பற்றி அறிந்துக் கொண்டு, வழியிலுள்ள ஏதங்களையும் பொழுது சாய்ந்தமையையும் எடுத்துச் சொல்லித் தம்மில்லத்தில் தங்கிச் செல்லுமாறு வேண்டுவதும் அவரை உறவினராகவே கருதுவதும் தமிழர்மரபு (அகநா.300:13-22) என உலோச்சனார் விளக்கியுள்ளார். காதாசப்தசதியில் இவ்விருந்தோம்பல் சிறப்பினை,

**“பிரிவும் வறுமையும் பேதுறச் செய்யா**

**விழைந்து வந்துதம் விருப்பம் பெறாது**

**எந்தமர் மீள்தல் நொந்திடச் செயுமே” (காதா.68:1-3)**

என வறுமைக் காரணமாக விருந்தினர்களுக்கு எதுவும் கொடுக்காமல் அவர் மீள்வதே துயரம் தரும் மனவேதனை எனத் தலைவி கூறுவதன் விருந்தோம்பலின் இன்றியமையாமை உணரப்படுகிறது.

**ஊடல் தீர்க்கும் வாயில்**

தொல்காப்பியர் தலைவன் தலைவியரின் ஊடல் தீர்க்கும் வாயில்களாகப் பன்னிருவரை குறிப்பிடுவர். அதுபோல் அகஇலக்கியம் கணவனும் மனைவியும் ஊடல் கொண்டிருக்கையில் விருந்தினர்வரின் ஊடல் தீர்ந்து அவர்களைப் பேணும் கடமையில் ஈடுபவர். எனவே விருந்தினர் ஊடல் தீர்க்கும் வாயில்களாயினர். இதனை,

**“விருந் தெதிர் கொள்ளவும் பொய்சூள் அஞ்சவும்**

**அரும்பெறற் புதல்வனை முயங்கக் காணவும்**

**ஆங்கவிந் தொழுகு மென் புலவி” (கலித்.75:27-29)**

என்னும் பாடல் விளக்கும். தன் மனைவியின் ஊடலைத் தீர்க்க விருந்தினரை தலைவனையும் (நற்.120:10-12) விருந்தினரைப் பேணும் பொறுப்பு மிகுதியால் கணவனொடு ஊடுதற்குரிய காரணமிருந்தும் அதற்கு நேரமில்லாத தலைவியையும் (நற்.280:9-10) அகஇலக்கியங்கள் சுட்டுகின்றன. எனினும் காதாசப்தசதியில் விருந்தினர் ஊடல் தீர்க்கும் வாயிலாகச் சுட்டப்பெறவில்லை.

**தலைவியின் விருந்தோம்பல் பண்பு**

விருந்தோம்புதலுக்கு இரவுப் பகல் என்ற நேரமில்லை. எந்நேரத்தில் விருந்தினர் வரினும் அவர்களை முகமலர்ச்சியுடன் வரவேற்று விருந்தோம்புபவளே சிறந்த இல்லத்தரசி என்பதனை,

**“எல்லி வந்த நல்சை விருந்திற்கு**
**கிளர் இழை அரிவை! நெய் துழந்து அட்ட**
**விளர் ஊன் அம் புகை எறிந்த நெற்றி**
**சிறு நுண் பல் வியர் பொறித்த**
**குறு நடைக் கூட்டம் வேண்டுவோரை” (நற்.41:6-10)**

என்ற பாடல் விளக்குகின்றது. அதுபோல் கார்காலத் தொடக்கத்தில் நல்ல குளிராக இருக்கும் காலைவேளையில் பிச்சை என்று கேட்டுவந்தவர்களுக்கு வெண்சோற்றோடு செம்பு நிறைய வெந்நீரைத் தந்து உபசரித்துள்ளதை (குறுந்.277:4-5) குறிப்பிடுகின்றது.

மேலும் இரவு நேரத்தில் வாயிற் கதவினைத் தாளிடுவதற்கு முன்பு தெருத் திண்ணையில் யாராவது புதியவர், விருந்தினர் அமர்ந்துள்ளனரோ என பார்த்து அவர்களை உண்பிக்கும் பொருட்டு உள்ளே வரவேற்றல் குறுந்தொகையில் (118:1-5) சுட்டப் பெற்றுள்ளது.

**விருந்தோம்பல் பண்பு**

பண்டைத் தமிழர் விருந்தினர்க்குக் கொடுக்கும் விருந்தும் பொருளிலும் ஒரு பண்பாட்டினை மேற்கொண்டுள்ளனர். சிறிய தலையினையுடைய செம்மறி ஆட்டினது பழுப்புநிறம் வாய்ந்த முற்றிய தயிரை, புதுக்கொல்லையில் விளைந்த வரகினது குத்தல் அரிசி கார்மழையினால் புற்றிலிருந்து வெளிப்பட்ட ஈசல், இவற்றை இட்டுச் சமைத்த இனிய புளிப்பு சுவைமிக்க சோற்றின் மீது சிவந்த பசுவின் வெண்ணெய் சேர்த்து விருந்தினருக்குக் கொடுத்தார். பின் களாப்பழங்களையும் விளாம்பழங்களையும் உணவாகக் கொடுத்துள்ளனர். (அகநா.394) இவை பண்டை தமிழரின் விருந்தோம்பல் பண்பினை நன்கு புலப்படுத்தும்.

**பகிர்ந்துண்ணுதல்**

பகிர்ந்து உண்ணும் பண்பு தமிழர்க்குரிய சிறந்த பண்பாகும். மலைச்சாரலிலே கானவனால் அம்பு எய்து வீழ்த்தப்பட்ட முள்ளம் பன்றியின் கொழுத்த இறைச்சியை, அவன் மனைவியாகிய கொடிச்சி மகிழ்ச்சியுடன் எடுத்துக் கொண்டு வருவாள். அந்த இறைச்சியைக் காந்தள் செடிகள் அழகாகப் பூத்திருக்கின்ற சிற்றூரிலே உள்ள பலர்க்கும் பகுத்துக் கொடுப்பதை,

**“கானவன் எய்த முளவு மான் கொழுங் குறை**
**தேம் கமழ் கதுப்பின் கொடிச்சி, கிழங்கொடு**
**காந்தள்அம் சிறுகுடிப் பகுக்கும்**
**ஒங்கு மலை நாடன் நின் நகையினானே” (நற்.85:8-11)**

என்னும் பாடல் விளக்கும். அதுபோல் ஆயர்கள் மாடு மேய்க்கப் புறப்படும்போது உணவினை மூங்கில் குழாயில் இட்டு மாட்டின் கழுத்தில் கட்டிக்கொண்டு காட்டு வழியே செல்வர். அங்கு யாரும் பசியோடு வந்தால் தாம் மட்டும் உண்பதற்கு வைத்திருக்கும் உணவினை அவர்களுக்குப் பகிர்ந்துக்கொடுப்பர்.(அகநா.311:9-12)

**"பகுத்துண்டு பல்லோர் ஓம்புதல் - நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை"[41]**

என்பதற்கு இலக்கணமாகத் தலைவி விளங்குதல் சுட்டத்தக்கது. காதாசப்தசதியிலும் விருந்தோம்பல் பண்பு காணப்படுகின்றது. இதனை

**''பிரிவும் வறுமையும் பேதுறச் செய்யா**
**விழைந்து வந்துதம் விருப்பம் பெறாது**
**எந்தமர் மீள்தல் நொந்திடச் செயுமே" (காதா.68:1-3)**

என்ற பாடல் சுட்டும். அதாவது பொருள்வயிற் பிரிவில் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் இல்லத்தில் அவன் வருமளவும் வறுமை வாட்டிக் கொண்டிருக்கின்றது. அத்தகைய வறுமைநிலையிலும் உறவினர்கள் ஒன்றும் பெறாது செல்கின்றனரே என்ற இல்லத்தரசியின் கலக்கம் விருந்தோம்பல் சிறப்பைக் காட்டுகின்றது. மேலும் திருவிழா நாட்களில் விருந்து கொண்டு உபசத்தலை,

**"திருநாட் கிடித்த அரிசிமாப் பொடியே**
**சிதறி வீழ்ந்த செறிமுலை யிணைகள்**
**முககம லத்தின் முன்னிழ லாடும்**
**அரச அன்னம் என்னஆங் குளதே" (காதா.471:1-4)**

என்ற பாடல் பதிவு செய்கின்றது. இவ்வாறாக இரு இலக்கியங்களுமே விருந்தோம்பலில் சிறந்து விளங்கிய பண்பாட்டு நிலையினைக் காட்டுகின்றன. அறவோர்க்களித்தல், அந்தணர்ஓம்பல், துறவோர்க்கெதிர்தல், தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடல், ஆகியவை அக்காலத்தில் விருந்தோம்பல் பண்பாக இருந்தமையினை இவ்வியல்களின் புலனாகிறது.

**பழக்க வழக்கங்கள்**

''தனிமனிதனிடம் இயல்பாக வந்தடைந்த நடத்தைகள் பழக்கம் எனப்படுகின்றன. ஆரம்ப நிலை பழக்கம் மக்களிடையே நிலைத்தன்மை பெறுகின்ற பொழுது வழக்கமாகி விடுகின்றது. ஒன்றைப் பழகப் பழகப் பயிற்சி இன்றியே எளிதாகி விடுகின்ற நிலையானது வழக்கம் என்று அழைக்கப்படுகின்றது. இனக்குழுவில் பலருடைய மனவெழுச்சி உணர்ச்சியுடன்

இணைந்து நிற்பது வழக்கம் என்று கூறும் சமூகவியலாளர்களின் கருத்து ஏற்புடையதாகத் தோன்றுகிறது"[42] என்பர் காந்தி. மேலும் "பழக்கம் என்பது தனிமனிதனையும் வழக்கம் என்பது சமுதாயத்தைச் சார்ந்தது என்றும் மரபு என்பது சமுதாயம் விதிக்கும் கட்டுப்பாடு என்பதனைத் தொல்காப்பியர் நாடக வழக்கு, உலகியல் வழக்கு என்ற இருவழக்கினை எடுத்துக் காட்டியுள்ளார்"[43] இவ்வாறு பழக்கம், வழக்கம் என்பவற்றோடு மரபு என்ற சொல்லையும் சேர்த்து நச்சினார்க்கினியர் கூறியுள்ளார்.

**இறை வழிபாடு**

"தமிழில் எப்பொழுது இலக்கியம் தோன்றியதோ அப்பொழுதே தமிழர்களிடம் கடவுள் நம்பிக்கை தோன்றியது. அவர்கள் தனித்தனிக் குடும்பங்களாக வாழத் தொடங்கியதும் தெய்வ நம்பிக்கை ஏற்பட்டது. பயமும் இயற்கை நிகழ்ச்சிகளால் ஏற்பட்ட அச்சமுமே தெய்வ நம்பிக்கையை உண்டாக்கின இதன் காலத்தைக் குறிப்பிட முடியாது"[44]. தொல்காப்பியர் காலத்தில் பல தெய்வ வழிபாடுகள் இருந்ததை,

**"தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவி"[45]**

எனத் தெய்வங்களின் பெயர்களைக் குறிக்கும் சொற்களும் நான்கு நிலத்து மக்களும் நான்கு தனித்தனித் தெய்வத்தை வணங்கி வந்தமையினையும் தொல்காப்பியர் குறிப்பிடுவர்.[46]

மேலும் "தேவர் இமையோர் என்ற சொற்கள் தொல்காப்பியத்திலே வருகின்றன. இவைகள் பல தெய்வங்களைக் குறிக்கும் சொற்களாகும். இச்சொல் கடவுளர், கடவுள் என்றும் குறித்து வந்தன. கடவுள் வாழ்த்து என்பதற்கு 'அமரர் வாழ்த்து' என்றும் பொருள் கொண்டனர்.[47]

மேலும் வழிபாடு என்பதற்கு பின்பற்றி ஒழுகுதல் என்று பெயர். அதாவது இறைவனின் அருள்நெறிகளைப் பின்பற்றி ஒழுகுவதே வழிபாடாகும். இதனை,

**"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப**
**பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து**
**பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே"[48]**

என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

**வேலன் வழிபாடு**

களத்தினை அமைத்து, மலர் மாலைகள் சூட்டி, வளம் பொருந்திய கோவிலிலே வேலனைப் புகழ்ந்து பாடுவது வேலன் வழிபாடாகும். இத்தகைய

வேலன் வழிபாடே பண்டைக்காலத்தில் வெறியாட்டு என்று அழைக்கப்பட்டமையினை,

**“களம் நன்கு இழைத்து கண்ணி சூட்டி**
**வள நகர் சிலம்பப் பாடி பலி கொடுத்து**
**உருவச் செந்தினை குருதியொடு தூஉய்**
**முருகு ஆற்றுப்படுத்த உரு கெழு நடு நாள்” (அகநா.22:8-11)**

சுட்டும். அதாவது தாம் மேற்கொண்ட செயல் நல்லமுறையில் நிறைவேற வேண்டும் என்பதற்காக வேன்மகனாகிய பூசாரியோடு சேர்ந்து வெறியாலை நிகழ்த்துவது வெறியாட்டாகும். அதுபோல் கடவுளுக்கு காணிக்கை செலுத்தும் முறையினை,

**“கள்ளும் கண்ணியும் கையுறை யாக**
**நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்**
**நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி” (அகநா.156:13-15)**

விளக்கும்.

**நடுகல் வழிபாடு**

**“பிடிமடிந் தன்ன குறும் பொறை மருங்கின்**
**நட்ட போலும் நடாஅ நெடுங்கல்**
**அகலிடம் குயின்றே பல்பெயர் மண்ணி**
**நறு விரை மஞ்சள் ஈரம் பூறம் பொலிய**
**அம்பு கொண்டு அறுத்த ஆர்நர் உரிவையின்**
**செம் பூங் கரந்தை புனைந்த கண்ணி**
**வரி வண்டு ஆர்ப்பச் சூட்டிக் கழற்கால்**
**இளையர்பதிப் பெயரும் அருஞ்சுரம்” (அகநா.269:6-3)**

**“நடுகல் பீலி சூட்டி துடிப் படுத்துத்**
**தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும் (அகநா.35:8-9)**

என்ற இருபாடல்களும் கல்நடுதல் தொடர்பாகப் பல்வேறு பழக்கவழக்கங்களைச் சுட்டுகின்றன. அதாவது, கல்லில் இறந்தோர் பெயரைப் பொறித்தலும் அவருடைய அருஞ்செயல்களை எழுதுதல், பின்னர் அக்கல்லுக்கு மயிலிறகு மலர்களைச் சூட்டுதலும் கள், பாற்சோறு படைத்தலும் பூவும் நெல்லும் தூவி வழிபடுதலும் நடுகல் வழிபாட்டின் சிறப்பினை சுட்டுவனவாகும்.

**மர வழிபாடு**

சங்க கால மக்களிடம் இயற்கை வழிபாடானது அதிகமாக இருந்தது. மரங்களைத் தெய்வமாக வழிபட்டமையினை,

**“தெய்வம் சேர்ந்த பாரரை வேம்பில்**

**கொழும்பு ஆ எறிந்து குருதி தூஉம்” (அகநா.309:4-5)**

என்ற பாடல் விளக்கும். அதாவது வெட்சி மறவர்கள் தெய்வம் தாங்கியுள்ள வேப்ப மரத்தின் அடியில் கொழுப்பை உடைய பசுவினைக் கொன்று அதனுடைய குருதியைப் பலியிட்டு வணங்கி வந்தனர் என்று கூறுவதன் மூலம் பழங்காலத்தில் மரவழிபாடு இருந்தமை புலனாகின்றது.

**தைந்நோன்பு வழிபாடு**

தைத்திங்களில் கன்னிப்பெண்கள் நீராடி நோன்பு இருத்தல் தைந்நீராடல் அல்லது தைந்நோன்பு என்றழைக்கப்படும்.

**“தைஇத் திங்கள் தண் கயம் படியும்**

**பெரும் தோள் குறுமகள்” (நற்.80:7-8)**

என்ற பாடலடி இதனை சுட்டும். இது இளம் பெண்களால் நிகழ்த்தப்படும் வழிபாடு ஆகலின் பாவை நோன்பு என்பர். இதனை,

**“வண்டற் பாவை உண் துறைத் தரீஇத்**

**திரு நுதல் மகளிர் குரவை அயரும்” (அகநா.269:19-20)**

சுட்டும். அதுபோல்

**“கொடிச்சி காக்கும் அடுக்கற் பைந் தினை**

**முந்து விளை பெருங் குரல் கொண்ட மந்தி**

**கல்லாக் கடுவனொடு நல் வரை ஏறி**

**அங்கை நிறைய ஞெமிடிக் கொண்டு தன்**

**திரை அணற் கொடுங் கவுள் நிறைய முக்கி**

**வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்” (நற்.22:1-6)**

என்ற பாடல் தைந்நோன்பின் சிறப்பினைச் சுட்டுகின்றது. கன்னிப்பெண்கள் இறைவனை வேண்டி நோன்பு நோற்று நோன்பின் நிறைவு நாளன்று நீராடுவது தைந் நீராடலாகும். மேலும் சிறந்த கணவரைப் பெறவேண்டும் எனும் நோக்கத்தோடு இந்நோன்பு மேற்கொள்ளப்பட்டதை,

**“தையின் நீராடிய தவந்தலைப் படுவாயோ” (கலித்.59:13)**

என்ற பாடலடி விளக்குகின்றது. இந்நோன்பு குறித்து “தை மாதம் முதல் நாள் அன்று மேற்கொள்ளப்பட்ட புனித நீராடல் ஒருவகைத் திருநாளாகும். சங்க

காலத்தில் கடைசிப் பகுதியிலேயே இந்த விழா வழக்கிற்கு வந்ததாகவும் இது சமயத் தொடர்பான விழா என்பதும் புலனாகிறது. திருவாதிரைத் திருநாளோடு தொடர்புடைய விழாவாக பரிபாடல் (11) கூறுகிறது. மேலும் பிற்காலத்திய மார்கழி நோன்புடன் தைந்நீராடல் திருவிழா பெரிதும் தொடர்பு உடையதாகக் காணப்படுகிறது''[49] என்பர் க.த.திருநாவுக்கரசு. **பிறைதொழுதல்**

அக்காலம் முதல் இக்காலம் வரை பிறை வழிபாடு என்பது இந்து மதத்தவர் அன்றி இஸ்லாமியர்களும் வழிபாடு செய்யும் மரபு காணப்படுகின்றது. இவ்வழிபாடானது மணமாகாத பெண்கள் தங்களுக்கு விரைவில் மணமுடிய வேண்டும் என எண்ணிப் பிறையைத் தொழுதனர். இதனை,

**''புள்ளித் தொய்யில், பொறிபடு சுணங்கின்**
**ஒள்இழை மகளிர் உயர்பிறை தொழூஉம்**
**புல்லென் மாலை''** **(அகநா.239:8-10)**

என்ற பாடல் விளக்கும். அதாவது ஒளி மிகுந்த அணிகலன்களை அணிந்த பெண்கள் மாலைநேரங்களில் பிறையினைத் தொழுதனர் என்ற செய்தி அறியப்படுகின்றது.

**மாலைநேரத்தில் விளக்கேற்றுல்**

நாள்தோறும் கதிரவன் மறையும் அந்தி நேரமாகிய மாலைவேளையில் வீட்டின் முற்றத்தில் மகளிர் மணி விளக்கேற்றி நெல்லும் மலரும் தூவி வழிபட்டமையினை

**''புலம்பு வந்து இறுத்த புன்கண்மாலை**
**இலங்கு வளை மகளிர் வியல்நகர் அயர**
**மின்நிணம் தொகுத்த ஊன்நெய் ஒண்சுடர்**
**நீல்நிறப் பரப்பில் தயங்கு திரை உதைப்ப''** **(நற்.215:3-6)**

என்ற பாடல் சுட்டும். அதுபோல் மாலைப்பொழுதில் நெய்ஊற்றிக் கொளுத்திய விளக்கேற்றுதலும் (குறுந்.398:1-4) ஒளிபொருந்திய வளையல்களை அணிந்த பெண்கள் இல்லங்களில் வெண்மையான திரியினைக் கொளுத்தி விளக்கை ஏற்றுதலும் (அகநா.47:10) அகஇலக்கியங்களில் விளக்கப்பட்டுள்ளன. மேலும் மதிலிடத்தில் இராப்பொழுதில் விளக்கை ஏற்றுதல் (அகநா.114:9-10) உண்டு.

காதாசப்தசதியில் தலைவனைப் பிரிந்த தலைவியிடம் பக்கத்து வீட்டுப்பெண் மாலையில் விளக்கேற்ற அவளது விளக்கினை கேட்டபோது பிரிவு வேதனையால் தலைவிக்கு உண்டான கண்ணீர் விளக்கை நனைத்துவிடுமோ என்றெண்ணி தம் முகத்தை திருப்பிக்கொண்டு விளக்கைக் கொடுத்தமையினை,

**"கணவனை நினைந்து கண்ணீர் மல்கி**
**வீழுமென் நஞ்சி மிடற்றினைத் திருப்பி**
**பிரிந்த தலைவி எரிவிளக் கினையே**
**அடித்தவர்க் களிக்கும் அவலம் பாராய்" (காதா.186:1-4)**

எடுத்துரைக்கின்றது. இவற்றால் மாலைப் பொழுதில் வெளிச்சத்திற்காகவும் தெய்வ வழிபாட்டிற்காகவும் வீடுகளில் விளக்கேற்றுவர் என்பது பண்பாடாகக் கடைப்பிடிக்கப்பட்டமை புலனாகிறது.

**முக்கண்ணன்**

சிவபெருமானின் உடல் சிவந்த வானம் போலும் அவனது வெண்மையான கூரிய பற்கள் வானத்திலுள்ள பிறைசந்திரன் போலும் உள்ளன. நெருப்புக்கிளைத்து எரித்தாற் போன்ற விரிந்த முறுக்குண்ட சடையுடையவன். தேவர்களும் முனிவர்களும் பிறரும் அறியவியலாத பழமைமிக்கவன். ஒளி பொருந்திய வரிப்புலியின் தோலை உடுத்தியவன். நீலகண்டன், கொன்றைமலர் மாலையன், பூணூல் அணிந்த மார்பன், பகைவரை அழிக்கும் குந்தாலிப் படையைக் கையில் கொண்டவன். உமையொரு பாகன், தோல்வியே இல்லாத அவனுக்கு முத்தலைச் சூலப்படை உண்டு. அவனது வாகனம் ஆனேறு ஆகும் என சிவபெருமானின் தோற்ற பொழிவை அகநானூறு (கடவுள் வாழ்த்து 1-5) சுட்டுகின்றது. அதுபோல்,

**"தொடங்கற்கண் தோன்றிய முதியவன் முதலாக**
**அடங்காதார் மிடல்சாய, அமரர் வந்து இரத்தலின்,**
**மடங்கல் போல், சினைஇ, மாயம் செய் அவுணரைக்**
**கடந்து அடு முன்பொடு, முக்கண்ணான் மூஎயிலும்**
**உடன்றக்கால், முகம்போல் ஒண்கதிர் தெறுதலின்**
**சீறு அருங் கணிச்சியோன் சினவலின் அவ்எயில்**
**ஏறு பெற்று உதிர்வன போல், வரைபிளந்து, இயங்குநர்"**
**(கலித்.2:1-7)**

என சிவபெருமானின் புராண செய்தி கூறுவதன் மூலம் அக்கால மக்களிடம் சிவ வழிபாடு இருந்ததை புலனாகின்றது. அதுபோல் காதாசப்தசதிப் பாடல்களில் புராணத் தெய்வங்களின் காதல் நிகழ்ச்சிகளும் இதிகாச மாந்தர் குறித்த மனவுணர்வுகளும் இடம் பெற்றுள்ளன. மானிடக் காதல் உணர்வுகளுடனும் ஊடல் உணர்வுகளுடனும் தெய்வங்களைப் போற்றி வழிப்பட்டுள்ளனர். இதனை,

**“புலவியிற் சிவந்த பொலங்கொள் மலைமகள்**
**நிலவுறழ் முகமது நீரிற் படிய**
**அந்தி வணக்கத் தரன்தன் கையில்**
**செந்தா மரையைச் சேர்த்தன னென்னத்**
**தோற்றும் அஞ்சலிக் காற்றுவம் வணக்கம்” (காதா.1:1-5)**

என்ற பாடல் சுட்டும். அதுபோல் அந்தி மாலையில் சிவன் காயத்திரி மந்திரத்தை உச்சரிக்கக் கையில் நீரை ஏந்தியபோது அதில் உமையின் உருவம் தெரிய அவன் காயத்திரி மந்திரத்தை மறந்துவிட உதடுகள் மட்டும் முணுமுணுத்து கொண்டிருந்தன (காதா.503) என்பதன் மூலம் காதல் உணர்வுகள் வெளிப்படுகின்றது.

மேலும் உமையும் கங்கையும் சிவனுக்கு மனைவியர் ஆயினும் உமையே காதாசப்தசதியில் சிறப்பிடம் பெறுகிறாள். சிவன் உமையின் திருமண நிகழ்ச்சியின்போது அவள் அச்சத்தைப் போக்கத் தன் பாம்பணிகளை ஒதுக்கி வைத்தான் (காதா.61) என்பது மனைவியின் உள்ளம் அறிந்து ஒழுகும் கணவனாகச் சிவன் விளங்கினமைப் புலனாகின்றது. அதைப்போல் சிவன் உமையோடு கூடுவதற்காக அவளுடைய ஆடைகளைக் களைய, அதனால் நாணமுற்ற உமை அவன் தன் மேனியைக் காணாதவாறு தன் இரு கைகளாலும் அவன் இரு விழிகளையும் மூடினாள். அவனது மூன்றாவது கண்ணாகிய நெற்றிக்கண்ணை முத்தமிட்டு மறைத்தாள் (காதா.361) என்பது நாணமும் அறிவுத்திறனும் உடையவளாக உமை விளங்கினாள் என்பதை சித்திரிக்கின்றன. இவ்வாறு சிவன் உமை இவர்களின் காதல் நிகழ்ச்சிகளைக் கூறுவதன் மூலம் சிவனைக் காலையிலும் மாலையிலும் வணங்க வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துகின்றன.

**கண்ணன் வழிபாடு**

கண்ணனைக் கொல்லுதற்கு ஒரு அசுரன் குதிரை வடிவமாக வந்தான். அவன் கம்சனால் ஏவப்பட்டவனாவான். அக்குதிரையின் வாயைப் பிளந்து அவ்வசுரனைக் கொன்றான் கண்ணன். (கலித்.103) அதுபோல் கண்ணன் தன்னை எதிர்த்துப் போர்புரிந்த மல்லரை மாளச் செய்தான். அதனால் பகைவர்கள் யானையின் மேல் ஏறி வந்து கண்ணனை எதிர்த்தனர். அந்த யானையின் நெற்றியிலே சக்கராயுதத்தை அழுந்தும்படி வீசி அப்பகைவர்களைப் பயந்தோடும்படி செய்தான். (கலித்.134) இத்தகைய புராண செய்திகள் கலித்தொகையில் காணப்படுகின்றது.

**“வண்புனல் தொழுநை வார்மணல் அகன்துறை**

**அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்**

**மரம்செல மதித்த மாஅல் போல” (அகநா.59:4-6)**

என்ற பாடலில் திருமால் கண்ணன் அவதாரத்தில் ஆயர்பாடியில் ஆயர்மகளிருடன் கூடி, ஆடி விளையாடினான். அவர்களுக்குப் பற்பல இன்பத் தொல்லைகளையும் இழைத்தான். யமுனை ஆற்றில் நீராடிய ஆயர் மகளிர் துகில்களைக் கவர்ந்தும் அவர் பொருட்டுக் குருந்த மரத்தை வளைத்தும் அவன் புரிந்த ஆடலை மதுரை மருதனிளநாகனார் சுட்டுகின்றார்.

அதுபோல் காதாசப்தசதியில் கண்ணனின் காதல் விளையாட்டுகள் சுவைப்படக் கூறப்படுகின்றன. அதாவது கண்ணனிடம் மையல் கொண்ட ஒருத்தி குரவைக் கூத்தாடிய ஆய்ச்சியின் கன்னத்தில் தெரிந்த கண்ணனின் உருவத்தை அவள் ஆட்டத்தைப் பாராட்டுவது போல் முத்தியிட்டாள் (காதா.103) என்றும் புழுதி படிந்த இராதையின் கண்களை வாயால் ஊதுவது போலக் கண்ணன் அவள் கன்னத்தில் முத்தமிட்டான் என்று ஒருத்தி தன் தலைவனிடம் அவனும் தன்னிடம் கண்ணன் போல் அன்புடையவனாக இருத்தல் வேண்டும் (காதா.79) என்றும் கண்ணன் மணவயதை அடைந்த நிலையிலும் கண்ணனிடம் காதல் கொண்ட ஆய்ச்சியர் தங்கள் காதலுறவை யசோதைக்குச் சொல்லாமல் மறைத்துவிட்டனர் (காதா.390) என்றும் சுட்டப்பெறும் நிகழ்ச்சிகளின் மூலம் ஆய்ச்சியர் கண்ணனிடம் கொண்ட காதலையும் கண்ணன் இராதையிடம் கொண்ட காதலையும் அறியமுடிகின்றது. இவற்றால் இருநாட்டினரிடமும் கண்ணன் வழிபாடு இருந்தமைப் எடுத்துரைக்கப்படுகின்றது.

**மன்மதன் வழிபாடு**

இளவேனில் காலத்தே காமவேளுக்கு விழா எடுக்கும் பழக்கம் பண்டை நாளில் இருந்தமையினை,

**“..............................நடுக்கம் செய்பொழுதாயின்**

**காமவேள் விழவாயின்” (கலித்.27:23-24)**

என்ற அடி சுட்டுவதன் மூலம் மன்மதனாகிய காமன் வழிபாடு சங்க காலத்தில் இருந்தது அறியப்படுகின்றது. காதாசப்தசதியில் கார்காலத்தில் மலரும் கடம்ப மலர்களை வில்லில் வைத்து மன்மதன் எய்வதால் தலைவனைப் பிரிந்த தலைவி வருந்துகிறாள் (காதா.148) அதுபோல் மாந்தளிர் பிரிந்து வாடும் காதலர்களுக்கு மன்மதனின் கையிலுள்ள அம்பு குருதி தோய்ந்தக் கொலைவாளாக உள்ளது (காதா.447) என கடம்பமலர், மாந்தளிர் மலர்களுடன் மன்மதனின் அம்பும் சுட்டப்பெற்றுள்ளது. (காதா.91,271,308, 354, 371)

**“எதிரினில் குறையிரந் தேகும் காதலன்**
**இதயங் கலங்கிய இணைவிழிப் பார்வை**
**எமக்கே மன்மதன் எய்கணை யாகும்!**
**மற்றவர்க் கெதுவோ மதித்திட மாட்டேன்” (காதா.175:1-4)**

எனத் தலைவியின் அருள்பெறாது மீளும் தலைவனின் பார்வை மன்மதனின் கொடிய கணைப்போன்றது என்று விளக்கப்பட்டுள்ளது,

இவ்வாறு மன்மதன் மக்களின் காதல் உணர்ச்சியினைத் தூண்டுபவனாகவும் மலரம்புகளை உடையவனாகவும் வழிபடுவார்க்கு இன்பவாழ்வை நல்குபவனாகவும் காதாசப்தசதியில் சித்திரிக்கப்பட்டுள்ளான்.

**திருமால் திருமகள் வழிபாடு**

முல்லை நிலக்கடவுளாகிய திருமாலைப் பரம்பொருளாகக் கொண்டு வழிபட்டு வந்த முறை தமிழ் மக்களின் வழக்கங்களில் ஒன்றாகும். இவரை மால், மாயோன் விண்ணவன், நெடியோன், நெடிமுடி அண்ணல் என்றும் பல பெயர்களால் அழைப்பர்.

**‘‘வண்புனல் தொழுநை வார்மணல் அகன்துறை**
**அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்**
**மரம்செல மதித்த மாஅல்போல்” (அகநா.59:4-6)**

என்ற பாடல் சுட்டும்.

அதுபோல் திருமால் வாமன உருவமாக வந்து மாபலியிடம் மூன்றடி மண் தானமாகப் பெற்றார். உடனே திருவிக்கிரம அவதாரம் எடுத்து உலகம் மூன்றையும் ஓரடியால் அளந்தார் (கலித்.124) என்றும் சக்கரப்படையையும் மார்பில் இலக்குமியையும் கையில் வலம்புலிச் சங்கையும் உடையவர் என்றும் வேங்கை மரத்தின் அழகிய காட்சிக்கு உவமையாக அழகிய புள்ளிகள் பொருந்திய மதத்தத்தோடு விளங்கும் இருயானைகள், இரு பக்கங்களிலும் நின்று தம் துதிக்கைகளால், பூவொடு கூடிய நீரினைச் சொரியத் தாமரை மலரின் அழகிய அல்லியில் வீறுபெற்று விளங்கும் திருமகள் காட்சியினையும் கபிலர் சுட்டுவதன் மூலம் பின்னெடுங்காலமாகத் திருமால், திருமகள் வழிபாடு தமிழர்களிடம் இருந்துள்ளதனை அறியமுடிகின்றது.

மேலும் திருமகள் திருமாலின் மார்பில் உள்ளாள் (காதா.130) என்பதோடு திருமகள் அழகான பெண்ணுக்கு ஒப்பிடப்படுவதையும் (காதா.314) அவளுடைய நகில்கள் விந்திய மலையில் படிந்துள்ள மேகத்திற்கு ஒப்பிடப்படுவதையும் (காதா.490) அறியும் போது ஆந்திரர்களிடமும் திருமால் திருமகள் வழிபாடு இருந்தமைப் புலனாகின்றது.

**வாமனன் வழிபாடு**

திருமாலை வணங்க வேண்டும் என்ற கருத்து அவனுடைய வாமனாவதார நிகழ்ச்சியால் சுட்டப்படுகிறது. அதாவது திருமால் குறளனாகத் தோன்றி நெடுமாலாக உயர்ந்த நிகழ்ச்சி சிறியதாக இருந்த நகில் பெரியதாக வளர்ந்தற்கு உவமைப்படுத்தப்பட்டுள்ளது, (காதா.440) இத்தகைய அவதாரத்தைக் கலித்தொகை (124) சுட்டுகின்றது.

**பலராமன் வழிபாடு**

திருமாலின் அவதாரங்களில் ஒன்று பலராமன். இவர் கலப்பையினை படையாகக் கொண்டிருப்பதால் நாஞ்சிலான் (கலித்.36:1) என்று அழைக்கப்படுவார்.

> **''ஒரு குழை ஒருவன் போல்; இணர் சேர்ந்த மராஅம்**
> **பருதிஅம் செல்வன்போல் நனை ஊழ்த்த செருந்தியும்**
> **மீன் ஏற்றுக் கொடியோன் போல்; மிஞறு ஆர்க்கும் காஞ்சியும்**
> **ஏனோன்போல், நிறம் கிளர்பு கருலிய ஞாழலும்**
> **ஆன் ஏற்றுக் கொடியோன் போல், எதிரிய இலவமும் ஆங்கு,**
> **தீது தீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோல'' (கலித்.26:1-6)**

என்ற பாடல் மரங்கள் பூத்து நிற்றலுக்குத் தெய்வங்களை உவமையாகப் கூறுவதன் மூலம் தமிழகத்தில் பலராமன், சூரியன், மன்மதன், சிவன் சாமன் முதலான வழிபாடுகள் எடுத்துரைக்கப்படுகின்றன. இத்தகைய வழிபாடு குறித்து காதாசப்தசதி சுட்டவில்லை.

**தேவர் வழிபாடு (இறைவன்)**

> **"காதலி மெல்லிதழ்க் கனிவா யூறல்**
> **வானவர் துய்த்திடும் வாய்ப்பிலை போலும்**
> **கடல்கடைந் தேனோ கடுந்துவர்ப் பட்டே**
> **அடுதந்தேடி அலைந்தனர் வீணே'' (காதா.452:1-4)**

எனக் காதலியின் கனிவாய் ஊறலாகிய அமுதத்தைத் துய்க்கும் பேறின்மையால் தேவர்கள் கடலைக் கடைந்து துன்புற்றார்கள் என்ற தலைவியின் நலம் புனைந்துரைக்கும் இடத்து தேவர் வழிபாடு சுட்டப்படுகின்றது.

**கதிரவன் வழிபாடு**

> **"செஞ்சுடர்க் கடவுளை அஞ்சலிப் புதுபோல்**
> **யாரை யோநீ ஆர்வுடன் வணங்கினை**
> **கடைக்கண் குறுநகை கலந்து போற்றும்**
> **நடைமுறை யெங்கும் நான்கண் டிலனே'' (காதா.276:1-4)**

என்ற பாடலடி கதிரவனை வணங்கும் முறையினை எடுத்துரைக்கின்றது. இவற்றால் ஆந்திரர்களிடம் கதிரவனை வணங்கும் சூரிய நாமசுகார வழிபாடு இருந்தது அறியப்படுகின்றது.

**அருந்ததி வழிபாடு**

**“வடமீன் போல் தொழுது ஏத்த வயங்கிய கற்பினாள்” (கலித்.2:21)**

எனக் கலித்தொகை அருந்ததி வழிபாட்டை விளக்குகின்றது. ஆனால் காதாசப்தசதி இத்தகையதோர் வழிபாட்டை கூறவில்லை.

**கொற்றவை வழிபாடு**

வீரத்திற்கும் சீற்றத்திற்கும் வெற்றிக்கும் செழிப்பிற்கும் காரணமாகும் தெய்வம் கொற்றவை செழிப்பிற்கும் காரணமாகும் தெய்வம் கொற்றவை என்பது பழந்தமிழரின் நம்பிக்கையாகும். பாலைநில மக்கள் தங்களுடைய தொழில்வழி கடவுளாகக் கொற்றவையை வழிப்பட்டனர். இத்தாய் தெய்வத்தை பழையோள், கானமர் செல்வி, கொற்றவை, சூலி, காடுறைகடவுள், தோற்றி முதலிய பெயர்களால் சுட்டினர். மலைப்பக்கத்தில் உள்ள வெற்றி பொருந்திய கொற்றவைக்குப் பலிக்கடன் நேர்ந்து கொள்ளுதல், காப்புநாண் அணிதல், நிமித்தம் பார்த்தல், விரிச்சி கேட்டல் முதலான நம்பிக்கை (குறுந்.218:1-4) இருந்தமை புலனாகின்றது.

**“வார்கழல் பொலிந்த வன்கண் மழவர்**
**பூந்தொடை விழவின் தலைநாள் அன்ன” (அகநா.187:7-8)**

என்ற பாடல் கொற்றவை என்னும் போர்த் தெய்வ வழிபாட்டை உணர்த்துகின்றது. இதன் மூலம் தாய்தெய்வ வழிபாடு தமிழர்களிடம் இருந்தமை விளக்கப்பட்டுள்ளது. ஆனால் காதாசப்தசதியில் கொற்றவை வழிபாடு சுட்டப்பெறவில்லையெனினும் அதற்கு மாறாக

**“காளை மடியக் கழுத்தனி மணியை**
**முற்றுற மந்தையைச் சுற்றிய தலைவன்**
**அம்பிகை கோயிலுக் கா்ப்பணித்திட்டான்” (காதா.143:1-3)**

எனற அம்பிகை வழிபாடு இருந்தமை புலனாகிறது.

**தெய்வ நம்பிக்கை**

**“தொன்று உறை கடவுள் சேர்ந்த பராரை” (நற்.303:3)**

எனத் தம் குலத் தெய்வத்தையும் ஊர்ப்பொதுத் தெய்வத்தையும் பனையிலேற்றுவித்து வணங்கி வருவதும் மரத்தில் கடவுள் உரைவதாக எண்ணுதலும் (குறுந்.87:1) கலித்.101:14-1) விரைவில் திருமணம் நிகழ மலைதெய்வத்தை வணங்குதலும் (கலித்.39:27) தன் நிலை உயர்தல் வேண்டிக்

கடவுளை வேண்டுதலும் (கலித்.44:16) சங்க அகஇலக்கியம் கூறுவதன் மூலம் தொடக்க காலத்தில் கடவுள் நம்பிக்கை இருந்தது எடுத்துரைக்கப்பட்டுள்ளது. காதாசப்தசதியில் இத்தகையதோர் வழிபாடு குறித்து சுட்டப்பெறவில்லை.

**விழாக்கள்**

விழாக்கள் பழங்கால மனிதனின் கூட்டுச் சடங்கில் இருந்து தோன்றியனவாகும். ஒரு நாட்டு மக்களுடைய கலாச்சாரம், பண்பாடு, பாரம்பரியம், நம்பிக்கைகள், பழக்க வழக்கங்கள் முதலானவற்றை அறிய விழாக்கள் துணைபுரிகின்றன. தெய்வங்களை முன்னிறுத்தி நடைபெறுபவை ஆகையால் திரு என்ற அடைமொழியினை ஏற்று திருவிழாக்கள் என்றழைக்கப்பட்டது. ஏனைய அனைத்தும் விழாக்கள் எனப்படும்.

**கார்த்திகைத் திருவிழா**

**“குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து,**
**அறுமீன் சேரும் அகல்இருள் நடுநாள்,**
**மறுகு விளக்கு உறுத்து, மாலைதூக்கிப்**
**பழவிறல் மூதூர்ப் பலருடன் துவன்றிய**
**விழவு” (அகநா.141:7-11)**

என்ற பாடலில் கார்த்திக்கைத் திருநாளைக் கொண்டாடிய முறை காணப்படுகின்றது. அதாவது, சிறிய முயலாகிய களங்கம் தன் மார்பிலே விளங்கும்படி முழுமதி தோன்றும் உரோகிணி சந்திரனுடன் சோந்திருக்கும். இத்தகைய கார்த்திகை நாள் இரவில் வீதியிலே விளக்கேற்றி வைப்பா். மலா் மாலைகளைத் தொங்கவிடுவா். பழமையான சிறந்த ஊா்களிலே மக்கள் பலரும் கூடி விழாக் கொண்டாடுவா் என்பதே இவ்வரிகளில் அமைந்திருக்கும் பொருளாகும். இதனால் பண்டைத் தமிழ் மக்கள் கார்த்திகை விழாக் கொண்டாடியமையினை அறியலாம். அதுபோல் கார்த்திகையடன் முழுநிலவு கூடும் கார்த்திகை மாதத்தில் விளக்குகள் ஏற்றி வழிபடும் மரபு நற்றிணையில் உவமையாகச் சுட்டப்பெற்றுள்ளது. (நற்.202.9-11)

**“சுடா்நெடுங்கொடி” (அகநா.11:5)**

என்ற அடி மகளிா் கூட்டமாகக் கூடி கார்த்திகை விளக்கேற்றியதைச் சுட்டுகின்றது. ஆனால் காதாசப்தசதியில் இவ்விழா இடம்பெறவில்லை.

**பங்குனி விழா**

உறையூா், பகைவா்கள் வென்று அடிக்கின்ற வீரமுரசினையும் போா் வெற்றியையும் உடைய சோழரது, இனிய கரும்புமிக்க கள்ளினை உடைய ஊராகும். அவ்வூடத்தே பெருகிவிடும் நீர் உடைத்திட இடித்துவிடும்

கரைகளையுடைய காவிரிப்பேரயாற்றின் அழகிய வெண்மையான மணலையுடைய மணங்கமழ்கின்ற குளிர்ச்சி பொருந்திய சோலையில் உத்திரமும் நிறைமதியும் கூடிய நன்னாளில் பங்குனி உத்திரவிழா நடைபெறும் என்பதை,

**“இன்கடுங் கள்ளி உறந்தை ஆங்கண்**
**வருபுனல் நெரிதரும் இகுகரைப் பேரியாற்று**
**உருவ வெண்மணல் முருகுநறு தண்பொழில்**
**பங்குனி முயக்கம் கழிந்த வழிநாள்” (அகநா.137:6-9)**

விளக்கும். அதாவது உறையூர் மக்கள் ஒன்று கூடி விடியும் வரையும் விழாக்கோலம் பூணுவதை புலப்படுத்துகிறது. அதுபோல் காதாசப்தசதியில் மக்களின் வாழ்வை சுவையாக்க விழாக்கள் பல கொண்டாடப்பட்டமை எடுத்துரைக்கப்பட்டுள்ளது.அந்த வகையில் கோதாவரி நதிகரை அருகில் அமைந்த கிராமங்களின் விழாவாகப் பங்குனிப் பொங்கல் விழா கொண்டாடப்பட்டது. இதனை,

**‘‘பங்குனி விழாவில் படுபிழையின்றென**
**எவனோ சேற்றை எடுத்தெறிந் திடவும்**
**முலைத்தடம் புரண்டே அலைத்தெழும் வியர்வின்**
**கரைந்த போயபின் கழுவுத லேனோ” (காதா 300:1-4)**

சுட்டும்.

**நீர்விழா**

புனலாட்டு விழா எனப் போற்றப்படும் நீர்விழா சங்க கால மக்களிடையே சிறப்பிடம் பெற்று திகழ்கின்றது. இது நீராடும் நீத்துறைபால் நீர்ப்பெருக்கம் அதிகமாக இருக்கும்போது நீராடி மகிழ்வதனை நீர்விழா என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன.

**‘‘மலிபுனல் பொருத மருதோங்கு படப்பை**
**ஒலிகதிர்க் கழனி கழாஅர் முன்றுறைக்**
**கலிகொள் சுற்றமொடு கரிகால காண**
**தண்பதங் கொண்டு தவிர்ந்த இன்னிசை” (அகநா.376:3-6)**

என்று நீர்விழாவின் போது கழார் என்னும் ஊரின் முன்பு கரிகால் வளவன் ஆரவாரம் மிக்க தன் சுற்றத்துடன் புனலாட்டு விழாவினைக் கண்டு மகிழ்ந்த வண்ணம் இருந்தமை சுட்டப்பெற்றுள்ளது. காதாசப்தசதியில் இவ்விழா பற்றி குறிப்பில்லை.

**பொங்கல் விழா**

> **“பெய்து புலம் திறந்த பொங்கல் வெண்மழை**
> **எ஼குஉறு பஞ்சித் துய்ப்பட் டன்ன**
> **துவலை தூவல் கழிய அகல்வயல்**
> **நீடுகழைக் கரும்பின் கணைக்கால் வான்பூக்**
> **கோடைப் பூளையின் வாடையொடு”** (அகநா.217:1-5)

என்ற பாடலில் பொங்கல் என்னும் சொல் மழை பெய்து ஓய்ந்த மேகத்திற்கு அடைமொழியால் வழங்கப்பட்டுள்ளது. ஆகவே ஐப்பசி தொடங்கி அடைமழையிலும் குளிர்காற்றிலும் வருந்திய மக்கள் பொங்கி எழுந்த மேகத்தைக் கண்டு பொங்கல் வந்தாச்சு என்ற ஆரவாரம் செய்வார்கள். இவ்வாறு சங்க கால மக்கள் அறுவடைவிழாவாகப் பொங்கல் விழாவைக் கொண்டாடினமை புலனாகின்றது. காதாசப்தசதியில் இவ்விழா சுட்டப்பெறவில்லை.

**உள்ளிவிழா**

கொங்குநாட்டுப் பகுதியில் வாழ்ந்த அக்கால மக்கள் உள்ளிவிழாக் கொண்டாடினா். கொங்கர்கள் இடையிலே மணியைக் கட்டிக்கொண்டு ஆரவாரத்துடன் தெருவில் கூத்தாடுதல் உள்ளிவிழாவாகும். இதனை,

> **“எவன்கொல் வாழி தோழி கொங்கர்**
> **மணியரை யாத்து மறுகின் ஆடும்**
> **உள்ளிவிழவின் அன்ன**
> **அலராகின்றது பலர்வாய்ப் பட்டே”** (அகநா.368:16-19)

என்ற பாடலடிகளால் அறியலாம். மேலும் வீரர்களின் கலைப்பயிற்சிக்கான தொடக்கவிழாவான பூந்தொடைவிழாவும் (அகநா.187:7-9) ஓர் அரசன் தன்படைத் தலைவா்க்கு எடுக்கும் பேருணவு விழாவாகிய பெருஞ்சோற்றுவிழாவும் (அகநா.266:10-14) சோழ நாட்டில் கொண்டாடப்படும் உறந்தை விழாவும் (அகநா.369:13-16) பாண்டிய நாட்டு பரதவா்கள் கொற்றைத் துறைமுகத்தில் எடுக்கும் கடல்விழாவும் (அகநா.350:10-13) காதாசப்தசதியில் சுட்டவில்லை.

**இந்திர விழா**

சங்க இலக்கியத்தில் ஐங்குறுநூறு மட்டும் இந்திரவிழா பற்றி கூறுகின்றது. விழாவின்போது ஊர்த்தலைவா் பரத்தையரைத் தொகுத்து கொணர்ந்து ஆடல் பாடல் நிகழ்த்திய செய்தியினை,

> **“இந்திர விழவிற் பூவின் அன்ன**
> **புன் தலைப் பேடை வரி நிழல் அகவும்**
> **இவ்வூர் மங்கையா்த் தொகுத்து, இனி**

**எவ்வூர் நின்றன்று - மகிழ்ந - நின்தேரே?'' (ஐங்.62:1-4)**

சுட்டும். எனினும் இவ்விழாவின் பல்வேறு கூறுகளை சிலப்பதிகாரம் மிக விரிவாகக் கூறுகின்றது. காதாசப்தசதியில் இவ்விழா பற்றிய குறிப்பில்லை.

**இயற்கை வழிபாடு**

காதலன் நலம் வேண்டி மழையையும் கணிச்சியையும் காற்றையும் வழிபட விரும்பிய தலைவிக்கு அறக்கடவுளே உதவுவா் (கலித்.16:6-22) எனக் கலித்தொகை சுட்டுவதன் மூலம் சங்ககாலத்தில் இயற்கை வழிபாடு இருந்தமை புலனாகிறது.

**சூரசன்மன் விழா**

**''கல்மிசை மயில் ஆல, கறங்கி ஊர் அலர் தூற்ற,**
**தொல் நலம் நனிசாய நம்மையோ மறந்தைக்க**
**ஒன்னாதார்க் கடந்து அடுஉம், உரவு நீர் மாகொன்ற**
**வென்வேலான் குன்றின் மேல் விளையாட்டும் விரும்பார் கொல்?**
**(கலித்.27:13-16)**

எனத் திருப்பரங்குன்றத்தில் நடைபெற்ற சூரசன்மன் விழாவினைக் கலித்தொகைக் குறிப்பிடுகின்றது.

**காமன் விழா**

**''உறல்யாம் ஒளிவாட, உயர்ந்தவன் விழவினுள்**
**விறல் இழையவரோடு விளையாடுவான் மன்னே'' (கலித்.30:13-14)**

என மன்மதன் விழாவில் தலைவன் பரத்தையரோடு விளையாடி மகிழ்ந்தமையினை சுட்டுகின்றது. அதுபோல் இளவேனில் காலத்தில் இவ்விழா எடுக்கும் வழக்கம் (கலித்.27:23-24) இருந்துள்ளது.

**''காதற் கொழுநன் மாதுடன் இருந்தும்**
**மாண்புடை விழவிற் பூண்புனை யாளே**
**அடுத்துள இல்லத் தமைந்த வறிய**
**மடத்தகை நல்லாள் பிரிவாற்றிடவே'' (காதா.37:1-4)**

என்ற பாடலில் காமன்விழா சுட்டப்பெற்றுள்ளது. அதாவது தலைவியானவள் கணவனுடன் இருந்தும் அணிகலன்களை அணியாமல் இருந்தமைக்கு காரணம் பக்கத்துவீட்டு பெண் கணவனைப் பிரிந்து துன்புறுகின்றாள். எனவேதான் அணிகலன்களை அணிந்து அவள்முன் சென்றால் மேலும் வருந்துவாள். ஆகவே அணிகலன்களை அணியாமல் காமன் விழாவை கொண்டாடிய தலைவியின் மாண்பு இப்பாடலில் எடுத்துரைக்கப்படுகின்றது.

**வசந்த விழா**

வசந்த விழாவில் காதலர்கள் வண்ணப்பொடிகளை காதலா் மீது தூவி விளையாடி மகிழ்வது மரபு. இதனை,

> **“காதலன் மேல்சு கந்தச் சந்தனப்**
> **பொடி தூவிடக்கைப் பிடியிற் கொணரக்**
> **கண்டதும் தழைத்த களிநெடுக்கின் வியா்வை**
> **கொட்டி வழியக் குழம்பா கியதே” (காதா.258:1-4)**

எனக் காதாசப்தசதி சுட்டுகின்றது. அகஇலக்கியங்களில் இவ்விழா பற்றிய குறிப்பில்லை.

**நம்பிக்கை**

சங்க கால மக்கள்தம் வாழ்க்கை முறைகளில் சில மரபுகளைப் பின்பற்றி வாழ்ந்து வந்தனா். அவற்றுள் ஒன்று நம்பிக்கையாகும். இந்நம்பிக்கைக் குறித்து “மனித வாழ்வில் நிகழும் ஊறுகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாத நிலையில், மனிதமனம் சிலவற்றைப் படைத்துக் கற்பித்து கொள்கின்றது. அவையே நம்பிக்கைகளாக உருப் பெறுகின்றன”[50] என்று காந்தி குறிப்பிடுகின்றாா். அதுபோல் “நம்பிக்கை என்பது ஒரு உணா்ச்சி. இது எண்ணத்தின் இயக்கத்தோடு கலந்து வரப்பெற்று நிலைத்த போது அது ஒரு மனநிலை என்று சொல்லப்படுகின்றது. அந்த மனதில் தொடா்ந்து நீடித்த உரமடைந்த போது அது உள் மனத்தின் உதவியைப் பெறுகின்றது. இந்த நிலையில் அதற்கு மகத்தான சக்தி உண்டாகின்றது.”[51] என்பா் இரா.ஜெகதீசன். நம்பிக்கைகளாவன, விரிச்சி கேட்டல், நிமித்தம் பாா்த்தல், பல்லி ஒலித்தல், குறி கேட்டல், கண் துடித்தல், சூளுரைத்தல், பேய் நம்பிக்கை, காக்கை கரைதல், கனவு நம்பிக்கை எனப் பல வகையான நம்பிக்கைகளை அக்கால மக்கள் கொண்டிருந்தமையினை அகஇலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

**விரிச்சிக் கேட்டல்**

பின்வருவதை முன்னரே தெரிவிப்பது விரிச்சியாகும். இதனை நற்சொல்கேட்டல் என்று கூறுவா். தலைவன், தலைவியை விட்டு பிரிந்து சென்றான். அவன் வருவதாகச் சொல்லிச் சென்ற பருவம் வந்தும் அவன் வரவில்லை. அதனால் வருந்திய தலைவியை நோக்கி தோழி நமது பக்கத்து வீட்டு பெண் வேறொருத்தியிடம் உரையாடும் போது அவன் இப்பொழுதே வருவான் என்று கூறினாள். அது நமக்கு நல்விரிச்சியாகும் (நற்.65:1-9) எனத் தோழி கூறுவதும்

**"விடர்முகை அடுக்கத்து விறல் கெழுக" (குறுந்.218:1)**

என்பதும் அக்கால மக்கள் விரிச்சிகேட்கும் நம்பிக்கை இருந்தமையினை எடுத்துரைக்கிறது.

**நிமித்தம் பார்த்தல்**

ஆறறிவு படைத்த மனிதனைக் காட்டிலும் ஐந்தறிவு படைத்த விலங்கினங்களும் பறவைகளும் பின்னா் விளையப்போவதை முன்னறியும் சக்தி பெற்றவையாகும். இதனை நிமித்தம் பார்த்தல் அல்லது சகுனம் பார்த்தல் என்பா்.

**நல்லநாள் கெட்டநாள் பார்க்கும் வழக்கம்**

ஒரு காரியத்தைத் தொடங்கும் முன் நல்லநாள், கெட்டநாள் பார்க்கும் பழக்கம் பண்டைய மக்களிடம் இருந்தமையினை,

**"மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்**
**துறந்த ஒழுக்கம் கிழவோர்க்கு இல்லை"**[52]

எனத் தொல்காப்பியம் சுட்டும். நாள் நிமித்தம் என்பது திங்களோடு உரோகிணி கூடிய நாளை நன்னாளாகக கருதிக் கடமை புரிதலும் சனிமீன் புகைதலும் ஞாயிறு வேறு திசைகளில் தோன்றுதலும் ஏரிகொள்ளி விழுதலும் தீ நிமித்தங்களாக பண்டையோர் கருதினமையினை,

**"அங்கண் இருவிசும்பு விளங்கத் திங்கள்**
**சகடம் மண்டிய துகள்தீா் கூட்டத்து**
**கடிநகா் புனைந்து கடவுட் பேணி**
**படுமண முழவொடு பரூஉப்பணை இமிழ**
**வதுவை மண்ணிய மகளிா்" (அகநா.136:4-8)**

என்ற பாடல் விளக்கும். அதுபோல் தீய கோள்களின் தொடர்பு நீங்கப்பெற்ற வளைந்த வெள்ளிய திங்களைக் குற்றமற்ற சிறந்த புகழினை உடைய உரோகிணி எனும் நாள்மீன் அமைந்த காலத்தில் மன்றல் நிகழ்ந்தது என்று அகநானூறு (86:5-7) எடுத்துரைக்கின்றது. மேலும் மகளிா்தம் கை வளை இறுகினால் அதனை நல்ல நிமித்தமாக எண்ணியதை,

**"சுரிவளைப் பொலிந்த தோளும் செற்றும்" (குறுந்.260:3)**

என்ற பாடலடி சுட்டும். காதாசப்தசதி பயணம் செய்தவற்குத் தகாத நாட்களாகச் செவ்வாய், கரிநாள், வாரசூலை, அட்டமி, நவமி (காதா.20:3-4) முதலிய நாட்களைச் சுட்டிக் கூறுவதன் மூலம் நல்ல நாள் நிமித்தம் பார்க்கும் வழக்கம் இருநாட்டு மக்களிடமும் இருந்தமை மேற்கூறிய செய்திகளின் வழி புலனாகிறது.

**புள்நிமித்தம்**

சங்க இலக்கியத்தில் புள் என்னும் சொல் பறவைகளையும் நிமித்தங்களையும் குறிக்கின்ற பொதுச்சொல்லாகும். நிமித்தங்களைக் குறிக்கின்ற இடத்துப் பொதுவாக நிமித்தங்களைக் குறிப்பதாயும் பறவைகளால் உண்டாகும் நிமித்தங்களை மட்டும் குறிப்பதாயும் அமைந்துள்ளது.

**"அணங்குடை முந்நீர் பரந்த செறுவின்**
**உணங்குதிறம் பெயர்ந்த பெண்கல் அமிழ்தம்**
**குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்**
**படையைத் தெழுந்த பெருஞ்செய் ஆடவர்" (அகநா.207:1-4)**

என உப்பினை எடுத்துச் செல்லுவோர் நன்னிமித்தம் பார்க்கின்ற வழக்கத்தினை உடையவராய் இருந்தனர். மேலும் பறவாத போது பறந்த குருகும் பூவாதபோது பூத்த புதரும் செறியாத போது செறிந்த வளைகளும் தலைவன் வரவு குறித்த நன்னிமித்தங்களாய் கூறப்படும் (குறுந்.260:1-3)

அதுமட்டுமின்றி துணையோடு கூடியிருக்கும் அன்றில் பறவை கூவினால் பிரிந்த தலைவன் திரும்பி வருவான் என்ற நம்பிக்கையும் (குறுந்.177:3-7)

**''புள்ளும் தொழுதுறைவி" (அகநா.351:1)**
**"புனைவினை நல்இல் புள்ளும் பாங்கின்" (அகநா.341:3)**
**"புள்ளும் ஓராம் விரிச்சியும் நில்லாம்" (குறுந்.218:3)**
**"வேதின வெரிநின் ஓதி முதுபோத்து**
**ஆறுசெல் மாக்கள் புள் கொள" (குறுந்.140:1-2)**

என்ற பாடல் வரிகளும் தலைவி புள்நிமித்தம் பார்த்தமையினைச் சுட்டுகின்றன. காதாசப்தசதி ஒரு மான் இடமிருந்து வலமாகச் செல்வதைச் சகுனத் தடையாக குறிப்பிடுகின்றது. (காதா.23) எனவே சகுனம் பார்க்கும் பொருள் வேறுபட்டிருந்தாலும் சகுனம் பார்க்கும் வழக்கம் இருநாட்டாரிடமும் ஒத்துள்ளது என்பது அறிய இயலும்.

**மர நிமித்தம்**

மரத்தை அடிப்படையாகக் கொண்டு பல நம்பிக்கைகள் சமுதாயத்தில் நிலவுகின்றன.

**"செம்பரல் முரம்பில் சிதர்ந்த பூழி**
**நல்நாள் வேங்கைவீ நன்களம் வரிப்ப" (அகநா.133:3-4)**

என்ற பாடலடி மரத்தையும் மலர்களையும் நிமித்தப் பொருளாகக் கொண்டமையினைச் சுட்டும். மேலும் ஆமா புல் மேய்தல், ஓந்தியைக்

காணுதல், யானை துதிக்கையை நிலத்தில் வைத்து துஞ்சுதல் எனப் பல நிமித்தங்களை அக இலக்கியங்கள் கூறுகின்றன எனினும் ஆந்திரநாட்டு அகஇலக்கியமாகிய காதாசப்தசதியில் இத்தகைய நிமித்தம் பற்றி சுட்டவில்லை.

**பல்லி ஒலித்தல்**

பண்டைக் காலம் முதல் மனிதன் இயற்கையோடியைந்து வாழ்ந்து வருகின்றான். இத்தகைய இயற்கை மாறுதலுக்கு ஏற்ப மனித மனமும் மாறுபடுகின்றது. எனவே மனித வாழ்வில் பல நம்பிக்கைகள் தோன்றலாயின. அவற்றுள் ஒன்று பல்லி சொல்லுதலாகும்.

**''மையல் கொண்ட மதன்அழி இருக்கையள்**
**பகுவாய்ப் பல்லிப் படுதொறும் பரவி**
**நல்ல கூறுஎன நடுங்கி'' (அகநா.289:14-16)**

**"இடூஉ ஊங்கண் இனிய படூஉம்**
**நெடுஞ்சுவர்ப் பல்லியும் பாங்கில் தேற்றும்" (நற்.246:1-2)**

என்ற இரு பாடல்களும் பல்லியின் சகுனம் கேட்பதை சுட்டுகின்றன. மேலும் இந்த பல்லி சொல்வதற்கு பலன் உண்டென்பதனை,

**"பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன**
**நல்எழில் உன்கணும் ஆடுமால் இடனே" (கலித்.11:22-23)**

என்னும் பாடல் விளக்கும். அதுபோல் நாற்பக்கத்திலிருந்து பல்லி ஒலிப்பது தலைவன் வரவை அறிவிக்கும் நன்னிமித்தங்களாகும் (அகநா.9:18:20) என்னுமிடத்தும் பல்லி சொல்லுவதற்குப் பலன் உண்டு என்பதை உணரமுடிகின்றது.

மேலும் தீ நிமித்தமாகப் பல்லி ஒலிக்குமிடத்து மன்னரும் கூடத் தாம் மேற்கொண்ட முயற்சியினைக் கைவிடுவர். (அகநா.387:13-15) இத்தகைய பல்லி ஒலிக்கும் சகுனம் காதாசப்தசதியில் இடம்பெறவில்லை. ஆனால் கோடை கால நடுப்பகலில் காட்டு மரங்கள் அழுவது போலச் சில்வண்டு இரைச்சல் இடுவது அபசகுணமாகச் சுட்டப்பெற்றுள்ளது. (காதா.379:1-4)

**குறிகேட்டல்**

சங்க காலத்தில் குறிகேட்கும் பழக்கம் மிகுதியாக இருந்தது என்பதை அக இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. தன் மகள் காமநோய் உற்றதை அறியாத தாய், அந்நோய் வந்ததற்குரிய காரணம் அறியும் பொருட்டுக் கட்டுவிச்சையை அழைத்துக் குறிகேட்பதும் உண்டு, இந்த குறி கேட்கும் பழக்கம் சங்க கால மக்களிடம் இருந்தமையினை,

**“அகவன் மகளே அகவன் மகளே**

**மனவுக் கோப்பு அன்ன நல் நெடுங் கூந்தல்**

**அகவன் மகளே பாடுக பாட்டே**

**இன்னும் பாடுக பாட்டே அவர்**

**நல்நெடுங்குன்றம் பாடிய பாட்டே” (குறுந்.23:1-5)**

என்ற பாடல் சுட்டும். அதுபோல் குறிசொல்லும் மாதரை மனையகத்துக் கொணர்ந்து வைத்து முற்றத்திலே பிடி நெல்லையிட்டுப் பிரம்பிட்டு வழிபாடு செய்த அந்நெல்லை நன்றாக எண்ணி எஞ்சியவை ஒன்னிரண்டு மூன்றனவும் முருகணங்கெனவும் நான்காயின் பிறிதொரு நோயெனவும் கூறும் நிமித்தமும் உண்டு. (நற்.288:6-10) மேலும்,

**‘‘-------------------------------------------------“முதுவாய்ப்**

**பொய் வல் பெண்டிர் பிரப்பு உளர்பு இரீஇ,**

**‘முருகன் ஆரணங்கு’ என்றலின், அதுசெத்து” (அகநா.98:9-11**

எனக் குறிகேட்டல் வழக்கத்தை வெறிபாடியகாமக்கண்ணியார் பாடலடி எடுத்துரைக்கின்றது. காதாசப்தசதி குறிகேட்டல் பற்றி சுட்டவில்லை.

**கண்துடித்தல்**

கண்துடிப்பது கொண்டு நன்மை, தீமை நம்பிக்கை சங்க கால மக்களிடம் இருந்து வந்தது.

**“நல் எழில் உண்கணும் ஆடுமால் இடனே” (கலித்.11:22)**

எனப் பெண்களுக்கு இடதுகண், இடதுதோள் துடித்தால் நன்மை உண்டாகும் என்றும் வலதுகண், வலது தோள் துடித்தால் தீமை உண்டாகும் என்றும் சுட்டுகின்றது. மேலும் ஆண்களுக்கு வலதுகண், வலதுதோள் துடித்தால் நன்மையும் வெற்றியும் இடதுகண், இடதுதோள் துடித்தால் தீமையும் உண்டாகும் என மக்களிடம் இருந்த மற்றொரு நம்பிக்கையை கலித்தொகை சுட்டுகின்றது. அதுபோல்

**“நுண் ஏர் புருவத்த கண்ணும் ஆடும்” (ஐங்.218:1)**

என்று கண்துடித்தல் பற்றி விளக்கப்பட்டுள்ளது.

**“துடிக்கும் இடக்கண்ணே! தொடர்பயன்ஆக**

**இப்பொழு திங்கே இனியன் வருமெல்**

**வருத்தம் தீர வலக்கண் மூடி**

**நீண்ட நேரம் நின்னைக் கொண்டே**

**கண்டு மகிழ்வேன் காதலன் தனையே” (காதா.118:1-5)**

என இடதுகண் தலைவன் வருவான் என்பதை அறிவித்ததால் தலைவனைக் காணும்போது வலக் கண்ணை மூடிக்கொண்டு இடக்கண் மட்டும் கண்டு நெடுநேரம் பார்த்து இன்புறச் செய்வேன் என்ற தலைவி கூறுவதாக காதாசப்தசதி சுட்டுவதன் மூலம் இருநாட்டு மகளிரிடமும் இடது கண் துடிக்கும் நம்பிக்கை இருந்தமைப் புலப்படுகின்றது,

**சூளுரைத்தல்**

ஒன்றன்மேல் சத்தியம் செய்தல் சூளுரைத்தல் என்பர். சங்க மக்களிடம் சூளுரைத்தல் நம்பிக்கை இருந்தமையினை,

**"..................................................நீ**

**தோள்புதிது உண்ட ஞான்றை**

**சூளும் பொய்யோ, கடல்அறி கரியே"(அகநா.320:12-14)**

எடுத்துரைக்கும். அதாவது கடல் தெய்வம் சான்றாக உரைத்த சூள் பிழைப்பது தகுதியன்று என்று கூறுவதன் மூலம் சூளுரைத்தல் அறியப்படுகின்றது. அதுபோல் ஆந்திரநாட்டு மக்களிடம் பல சூளுரைகள் நிகழ்ந்திருந்தமையினை காதாசப்தசதி சுட்டுகின்றது.

**கனவு நம்பிக்கை**

கனவில் காணும் காட்சிகள் சில நன்மையாகவும் தீமையாகவும் முடியும் என்று அக்கால மக்கள் நம்பினர். இந்நம்பிக்கை ஆடவர்களிடம் உண்டு. பின்னர் நிகழப்போவதை முன்னரே உணர்த்தும் வகையில் கனவுகள் அமையலாம் என்று பண்டைக்கால மக்கள் நம்பினர். தலைவனை நினைத்து தலைவியும் தலைவியை நினைத்து தலைவனும் கணவு கண்டு வருந்தும் நிலையினை,

**"நுண்பூண் மடந்தையைத் தந்தோய் போல,**

**இன் துயில் எடுப்புதி கனவே" (குறுந்.147:3-4)**

என்ற பாடலால் அறியலாம். கனவில் கண்ட செய்திகள் நனவில் பலிப்பதுண்டு (128) எனக் கலித்தொகை சுட்டுகிறது. காதாசப்தசதியில் இந்நம்பிக்கை பற்றிய குறிப்புகள் இடம்பெறவில்லை.

**பேய் நம்பிக்கை**

சங்க கால மக்கள் பேய்கள் உள்ளதென்று நம்பினர். அவற்றால் தீங்கு நேரும் என்ற அச்சமும் கொண்டனர்.

**"அணங்கும் பிணியும் அன்று" (குறுந்.136:2)**

என்ற அடி இதனைச் சுட்டும். மேலும் வலிய வாயை உடைய பேய் வளமைமிக்க பழைமையான ஊரிடத்தே தெய்வத்திற்கு வழிபாட்டோடு இடப்படும்

ஊன் விரவிய பலிச்சோற்றை உண்ணுதற்காகத் தான் வாழும் பாழான மன்றத்தை இடித்துக் கொண்டு எழும் (நற்.73:1-4) இவை ஊரினா் யாவரும் துயில் கொள்ளும் இரவுப்பொழுதில் காற்றைப் போல இயங்கும் (நற்.255:1) அதுமட்டுமின்றி பெண்கள் காதல் நோயால் துன்புறும்போது அதை அறியாமல் பேய் பிடித்ததாக நினைத்து, பேயை ஓட்ட வேலனுக்கு ஆடு வெட்டி வழிபடுவதும் அதன் குருதியைத் தலைவியின் நுதலில் நீவுதல் (குறுந்.362:1-3) போன்றவை பேய் நம்பிக்கையின் பிரதிபலிப்பே ஆகும். காதாசப்தசதியில்,

**''ஆதரித்திடுவீா்! அஞ்சுதல் வேண்டா!**

**நோய்கிரகம்முதற் பேய்பிடித் திடவிலை''** **(காதா.312:1-2)**

என்ற பாடலடி மூலம் பேய் நம்பிக்கை வெளிப்படுகின்றது.

**காக்கைக்கு பலிஉணவிடுதல் - கரைதல்**

காக்கைக்கு உணவு உண்ணுவதற்கு முன் உணவிடும் பழக்கும் இன்றும் ஊா்ப்புறங்களில் உண்டு. ஈமச்சடங்குகள் செய்த பின்னும் இறந்த நினைவுநாளான திதியின் போதும் அமாவாசை நோன்பின் போதும் காக்கைக்கு உணவிடும் வழக்கம் உண்டு. காக்கை கரைந்தால் விருந்தினா் வருவா் எனச் சங்ககால மக்கள் நம்பினா். விருந்தினா் வரும்படி கரைந்த காக்கைக்கு மக்கள் வெண்ணெய் அரிசியில் ஆக்கிய சோற்றுடன் நெய் கலந்து கலங்களில் தருவா். என்பதனை,

**"பல் ஆ பயந்த நெய்யின், தொண்டி**

**முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெந்சோறு**

**எழு கலந்து எந்தினும் சிறிது என்தோழி**

**பெருந்தோள் நெகிழ்ந்த செல்லற்கு**

**விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே" (குறுந்.210)**

சுட்டும். அதுபோல் செல்வம் பொருந்திய அகன்ற மனையில் வரும் விருந்தினரை வரவேற்றுப் போற்றுவதற்காக பொன்னாலாகிய தொடியுடைய மகளிா் உணவு சமைத்தனா். அவா்கள் அவ்வுணவில் கவனம் எடுத்து முற்றத்தில் காக்கைக்குப் பலியாக இட்டனா். (நற்.258:3-6)

**"மாசுஇல் மரத்த பலி உண் காக்கை" (நற்.281:1)**

என்னும் பாடல் அடியும் காக்கைக்கு பலிச்சோறு இடுதலைச் சுட்டுகின்றது. இத்தகைய பலிச்சோறு இடும் வழக்கம் ஆந்திரா்களிடன் காணப்பட்டமையினை,

**"பிரிந்த தலைவி பிண்டம் இடுங்கால்**

**கைவளை நெகிழ்ந்து பையென வீழ**

**நடுவண் உளபல நச்சா தகன்று**

**கண்ணியென் றஞ்சிக் காகம் பறக்கும்" (காதா.170:1-4)**

விளக்கும்.

**ஊராட்சி முறை**

அரசவை, ஊரவை போன்ற அமைப்புகள் அக்காலத்தில் இருந்தன. தரமிக்க சான்றோர்கள் அறம் கூறும் அவையத்தில் நீதி வழங்கினர். குடவோலை முறையில் தேர்தல் நடந்ததை,

**"குடிபதிப் பெயர்ந்த சுட்டுடைமுதுபாழ்**

**கயிறு பிணிக்குழிசி ஓலைச் கொண்மார்" (அகநா.77:6-7)**

என்ற பாடல் விளக்கும். அதாவது குடத்திற்குள் உள்ள முத்திரை இடப்பட்ட சீட்டுக்களை எடுப்பதன் மூலம், தேர்தலில் தேர்வு செய்ப்பட்டு ஊராட்சி முறை மேற்கொள்ளப்பட்டது. பெரிய நீர் நிலைகளைக் காப்பதற்கு நீர்நிலைக்காப்பாளர் (அகநா.252:11-14) இரவுப் பணியில் அமர்த்தப்பட்டு வந்தனர்.

காதாசப்தசதி சிற்றூர் வாழ்வையை சிறப்பாக சித்தரிக்கின்றது. வேளாண் தொழில் சார்ந்த மக்கள் இவ்விலக்கியத்தில் இடம்பெறுகின்றனர். நெல்லும் சணலும் பருத்தியும் எள்ளும் உற்பத்திப் பொருள்களாக உள்ளன. அவற்றை வாங்கி விற்றுப்பொருள் ஈட்டும் வணிகர் பற்றிய குறிப்பு ஒன்றும் இன்மையால் பண்டமாற்று முறையே வாணிப முறையாக அமைந்திருந்தது என்றும் மக்கள் வாழ்க்கை சிற்றுர் அளவில் முடங்கிக் கிடந்தது என்றும் கருதலாம். ஊர்த்தலைவனின் பராமரிப்பில் சிற்றூர் வாழ்க்கை சீராக நடைபெற்றது. உப்பிற்குப் பதில் நெய்யே உணவில் முக்கிய இடம்பெற்றதை (காதா.262:4-16) எண்ணும் போது சிற்றூர் வாழ்க்கை தன்னிறைவுடன் இருந்தது எனலாம். பெரிய நகரங்களையோ பேரில்லங்களையோ காதாசப்தசதி கூறவில்லை. தேரைபற்றிய குறிப்பும் வேறு வாகன வசதி பற்றிய குறிப்பும் காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

**மகளிர்தம் விளையாட்டும் பொழுதுபோக்கும்**

"விளையாட்டாவது விரும்பியாடும் ஆட்டம். மக்கள் நிலைத்த குடும்ப வாழ்க்கை வாழத் தொடங்கிய காலத்திலிருந்து விளையாட்டு வினை உலகில் நிகழ்ந்து வந்திருக்கின்றது. வேலை செய்யாத பருவத்தில் அல்லது ஓய்வு நேரத்தில் சிறுவர் பெரியோரின் செயலை அல்லது இயற்கை நிகழ்ச்சியை நடித்து மகிழ்ந்த திறமே விளையாட்டுக் தோற்றமாகத் தெரிதலால், அது முதன்முதலில் சிறுவரிடையே தோன்றிற்றெனக் கொள்ளுதல் தவறாகாது."[53] என்பர் ஞா.தேவநேயன்.

மேலும் "விளையாட்டின்றி எதுவும் இல்லை என்று கூறுமளவுக்கு அது வாழ்வோடு பின்னிப் பிணைந்துள்ளது என்றும் பொழுதுபோக்கிற்காகத் தன்னுடைய உடம்பை நடவடிக்கைக்கு உட்படுத்துவதைக் குறிக்கும்"[54] என்பர் கே.பி.அழகம்மை. எனினும் சங்க கால மகளிர் குழுவாகவும் தனியாகவும் விளையாட்டுகளை விளையாடி மகிழ்ந்துள்ளார். பந்தாடுதல், செம்மூதாடல் அலவனாட்டல், கழங்காடுதல், ஊஞ்சல் ஆடுதல், ஓரைவிளையாட்டு, கடல்விளையாட்டு, சிற்றில் இழைத்தல், நாரை ஓட்டிவிளையாடுதல், நீர் விளையாட்டு, பாவை விளையாட்டு மற்றும் குரவைக்கூத்து போன்றவை சங்க கால மகளிர் விளையாட்டுகளாகும்.

**பந்தாடுதல்**

பந்தாடுதல் குறித்து அக இலக்கியம் ஏழு[54] இடங்களில் சுட்டுகின்றது.

**"கொண்டல் மா மழை குடக்கு ஏற்பு குழைத்த**
**சிறு கோல் இணர பெருந் தண்சாந்தம்**
**வகை சேர் ஐம்பால் தகை பெற வாரி**
**புலர்விடத்து உதிர்த்த துகள் படு கூழைப்**
**பெருங் கண் ஆயம் உவப்ப, தந்தை**
**நெடுந் தேர் வழங்கும் நிலவு மணல் முற்றத்து,**
**பந்தொடு பெயரும் பரிவிலாட்டி" (நற்.140:1-7)**

என்ற பாடல் தலைவி தன் தந்தையின் நெடிய தேர் இயக்கும் வெண்மணல் பரவிய முற்றத்தில் பந்துவிளையாட சென்றதனைச் சுட்டிகின்றது. அதுபோல்,

**"பாலும் உண்ணாள், பந்துடன் மேவாள்" (குறுந். 396:1)**
**"பந்து ஆடு மகளிரின் படர்தரும்" (ஐங்.295:5)**
**"பந்தர் வயலை பந்து எறிந்து ஆடி" (அகநா.275:3)**

என்ற பாடலடிகளும் மகளிர் பந்து விளையாடிய செய்தியினை எடுத்துரைக்கின்றது. எனினும் ஆடவர் பந்து விளையாடினமைக்கான குறிப்பில்லை. ஆனால் இன்று விளையாடுகின்றனர்.

**செம்மூதாடல்**

செம்மூதாடல் பற்றி நற்றிணையில் ஓரிடத்தில் குறிப்புளது.

**"கடுஞ் செம்மூதாய் கண்டும் கொண்டும்**
**நீ விளையாடுக சிறிதே" (நற்.362:5-6)**

எனத் தலைவன் உடன்போக்கில் தம்பலப்பூச்சிகளை பார்த்தும் பிடித்தும் விளையாடுக எனக் கூறுவது தலைவயின் தனிவிளையாட்டாக அமையும்.

**அலவனாட்டம்**

அலவன் என்பது நண்டாகும். நீரில் இருக்கும் நன்டினைப் பிடித்து விளையாடுவது அலவனாட்டம் குறித்து சங்க அகஇலக்கியத்தில் நான்கிடங்களில்[55] சுட்டப்பெற்றுள்ளது. இதனை,

**“புலவுத் திரை உதைத்த கொடுந்தாட் கண்டல்**
**சேர்ப்பு ஏர் ஈ அளை அலவன் பார்க்கும்”** **(நற்.123:9-10)**
**“செக்கர் நண்டின் குண்டு அளைகெண்டி”** **(அகநா.20:4)**
**“ஓரை மகளிர் ஓராங்கு ஆட்ட**
**ஆய்ந்த அலவன் துன்புறு துணைபுரி”** **(குறுந்.316:5-6)**

போன்ற பாடலடிகள் உணர்த்தும்.

**கழங்காடுதல்**

கழங்கு என்பது ஒருவகை செடியின் காயாகும். இக்காய்களை மேலே எறிந்து புறங்கைகளில் ஏந்தி விளையாடுவதாகும். தற்காலத்தில் இவ்விளையாட்டை தட்டாங்கல் என்றும் அழைப்பர். இக்கழங்கு குறித்து அகநானூறு ஏழிடங்களில்[56] சுட்டுகின்றது.

**“ஆய்த்தொடு கழங்கு ஆடினமை**
**இனந்துணை ஆயமொடு கழங்கு உடனாடினும்** **(அகநா.17:2)**

என்ற பாடல் மகளிர் கழங்காடுதலையும்

**“கழங்கின திட்பம்”** **(அகநா.195:5)**

என்ற பாடலடி கழங்கு குறிபார்ப்பதற்குப் பயன்பட்டதனையும் எடுத்துரைக்கின்றது. இவ்வாறு மகளிர் சோர்வு வரும்பொழுது புத்துணர்ச்சி அடைய கழங்காடினர் என்பது மேற்கூறிய செய்திகளின் வழி அறியப்படுகின்றது.

**ஊஞ்சல் ஆடுதல்**

மகளிர் மிகவும் மகிழ்ச்சியோடு ஆடுகின்ற ஆட்டம் ஊஞ்சல் விளையாட்டாகும். அகஇலக்கியத்தில் ஊஞ்சல் ஆடுதல் குறித்து ஐந்து பாடல்கள் இடம்பெற்றுள்ளன. மகளிர் தாழை விழுதுகளாலான கயிற்றினால் ஞாழல் மரத்தினது உயர்ந்த கிளைகளில் கட்டி ஊஞ்சல் விளையாடினர் என்பதை

**“ஞாழல் ஓங்கு சினைத்தொடுத்த கொடுங்கழித்**
**தாழைவீழ் கயிற்றுஊசல் தூங்கி”** **(அகநா.20:5-6)**

என்ற பாடல் விளக்கும். அதுபோல் அசோக மரத்தினது கிளைகளிலும் ஊஞ்சல் கட்டி விளையாடினமையினை,

**“ஒண்தொடி மகளிர்க்கு ஊசலாக**

**ஆடுசினை ஒழிந்த கோடுஇணர் கஞலிய**

**குறும்பொறை அயலாது நெடுந்தாள் வேங்கை” (அகநா.368:4-6)**

சுட்டும். மேலும் பல மரக்கிளைகளில் கயிறு கட்டி ஊஞ்சல் ஆடிய நிலையை அக இலக்கியம் குறிப்பிடுகின்றது.

**ஓரை விளையாட்டு**

தோழியர் குழுவாக சேர்ந்து விளையாடும் ஓரைவிளையாட்டு சங்க அகஇலக்கியத்தில் நான்கிடங்களில்[58] இடம்பெற்றுள்ளது.

**“செலவுழிச் செல்வுழி மெய்ந்நிழல் போல**

**கோதை ஆயமொடு ஓரை தழீஇ**

**தோடுஅமை அரிச்சிலம்பு ஒலிப்ப அவள்**

**ஆடுவழி ஆடுவழி அகலோன் மண்ணே” (அகநா.49:15-18)**

எனத் தலைவி காலில் அணிந்துள்ள சிலம்பு ஒலிக்க, ஆயமொடு சேர்ந்து விளையாடினாள் என்று கூறப்படுகின்றது.

**கடல் விளையாட்டு**

கடல் விளையாட்டு மகளிர்க்கு மிகவும் விருப்பமான விளையாட்டுகளுள் ஒன்றாகும். நெய்தல் நிலத்தைச் சார்ந்த மகளிர் திரையை உடைய கடலில் விளையாடினர் என்பதனை,

**“மண்ணா முத்தம் அரும்பிய புன்னைத்**

**தண்நறுங் கானல்” (அகநா.30:13-14)**

**“திரை உழந்து அசைஇய நிரைவளை ஆயமொடு (அகநா.190:10)**

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன.

**சிற்றில் இழைத்தல்**

சிற்றில் இழைத்தல் என்பது பெண்கள் விளையாடும் பத்துப்பருவங்களில் ஒன்றாகும். கடற்கரை ஓரங்களில் மணலால் சிறுவீடு கட்டி விளையாடுவதாகும் இதனை கடலிழைத்தல் என்றும் கூறுவர். தலைவி தோழியுடனும் மற்றும் தலைவனுடனும் சேர்ந்து சிற்றில் இழைத்தமையினை

**“கோதை ஆயமொடு வண்டல் தைஇ” (அகநா.60:10)**

**“மூத்தோர் அன்ன வெண்தலைப் புணரி**

**இளையோர் ஆடும் வரிமனை சிதைக்கும்” (அகநா.90:1-2)**

என்னும் பாடலடிகள் சிறப்பிக்கின்றன.

**நாரை ஓட்டி விளையாடுதல்**

**“குறுந்தொடி மகளிர் கரூஉப் புனல் முனையின்**

**பழனப் பைஞ்சாய் கொழுதி கழனிக் கரந்தை**

**அம்செறுவின் வெண்குரு ஓம்பும்” (அகநா.226:4-6)**

என்ற பாடல் தலைவி பொய்கையிலுள்ள கோரையால் வெண்குருகை ஓட்டி விளையாடினமையினைச் சுட்டுகின்றது.

**நீர்விளையாட்டு**

நீரில் நீராடும் போது விளையாடும் விளையாட்டு நீர் விளையாட்டாகும். குளம், அருவி, பொய்கை, சுனை, கடல் ஆகிய நீர்த்துறைகளில் விளையாடினமையினை,

**“யாறும் குளனும் காவும் ஆடிப்**

**பதியிகந்து நுகர்தலும் உரிய என்ப”[59]**

என்ற நூற்பாவழி அறியமுடிகின்றது. தலைவி தலைவனுடனோ, அல்லது தோழியுடனோ சேர்ந்து நீராடுவாள். தலைவனை, காண்பதற்கு முன்பாகத் தலைவி தோழியுடன் நீராடி மகிழ்ச்சியுடன் இருந்ததை,

**“குறுந்தொடர் அடைச்சிய நறும்பல் கூழை**

**நீடுநீர் நெடுஞ்சுனை ஆயமொடு ஆடாய்” (அகநா.358:6-7)**

என்ற பாடலடி புலப்படுத்துகின்றது. நீர் விளையாட்டில் மற்றொரு வகைப் புதுப்புனல் ஆடுதலாகும். பருவமழைப் பொழிந்து ஆற்றில் வெள்ளம் பெருகி வரும்போது புதுப்புனல் ஆடுவர். இதனை நீரணி விழா என்பர். தலைவன் பரத்தையுடன் நீராடினான் என்பதை (அகநா.296:1-5) எடுத்துரைக்கின்றது.

**பாவை விளையாட்டு**

பாவை விளையாட்டை வண்டற்பாவை என்றும் அழைப்பர். கடற்கரையோரங்களில் மண்ணால் உருவப்பொம்மை செய்து அவற்றிற்கு மலர் சூட்டி விளையாடினமையினை,

**“வண்டற் பாவை உண்துறைத் தரீஇ” (அகநா.269:19)**

என்ற பாடலடி உணர்த்தும்.

**குரவைக் கூத்தாடுதல்**

கூத்து வகைகளில் ஒன்று குரவைக்கூத்தாகும். குரவைக்கூத்து அகவாழ்க்கையிலும் புறவாழ்க்கையிலும் நடைபெறுகிறது. அகவாழ்க்கையில் நீர்நிலை அருகில் பெண்கள் குரவைக்கூத்தாடினார்கள். மழைபெய்து ஓய்ந்து போன தைத் திங்களின் இறுதி நாட்களில் இக்கூத்து நடைபெற்றது. நீர்நிலை

எங்கும் நிரம்பி இருக்கும் போது பெண்கள் வண்டல் பாவைச் செய்து எடுத்துவந்து நீர் உண்ணும் துறையில் கொண்டு வந்து வைத்து குரவைக் கூத்தாடியதை,

**“வண்டற் பாவை உண்துறைத் தரீஇத்**

**திருநுதல் மகளிர் குரவை அயரும்” (அகநா.269:19-20)**

என்ற பாடல் விளக்கும். மேலும் நீர் உண்ணும் துறையில் நீர் எடுக்க வந்த மகளிர் காஞ்சி மரத்தின் நிழலில் குரவைக் கூத்தாடினமைக்கு காரணம் கணவரது பண்பற்ற பரத்தமை ஒழுக்கத்தை வெளிப்படுத்துவதற்கே என அகஇலக்கியங்கள் விளக்குகின்றன. இவ்வாறு சங்க கால மக்கள் பொழுதுபோக்கிற்காகவே விளையாடினர். பெரும்பாலும் மகளிர் ஆடவருடனும் தோழியருடனும் ஆடிய குழுவிளையாட்டையே அகஇலக்கியங்கள் பதிவு செய்கின்றன. காதாசப்தசதியில் விளையாட்டுகளோ பொழுதுபோக்கோ சுட்டப்பெறவில்லை.

**மகளிர்தம் ஆடை அணிகலன்**

மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் ஒன்று உடையாகும். மக்களின் இயற்கையழகை மேன்மேலும் அழகுபடுத்துவதற்கு ஆடையும் அணிகலன்களும் துணைபுரிகின்றன. இவை அழகுணர்வை வெளிப்படுத்துவதுடன் வளமை நிலையையும் புலப்படுத்துவனவாகக் காணப்படுகின்றன. “ஒருவன் தன்னுடைய செல்வாக்கை மற்றும் ரசனையைச் சமூகத்தின் நாகரிகமாற்றத்துடன் தன்னை இணைத்துக் கொள்வதன் வழியே புலப்படுத்துகின்றான்”[60] என்பர் கிங்ஸ்ஸி டேவிஸ்.

**ஆடை பற்றிய சொல்**

“ஆடை பற்றி 37 சொற்கள் திகழ்கின்றன. இவற்றில் சங்க இலக்கியத்தில் 20 வகையான ஆடைகள் காணப்படுகின்றன”[61] என்பர் கே.பி.அழகம்மை. அகஇலக்கியத்தில் ஆண்களும் பெண்களும் அணியக்கூடிய ஆடையாகக் காழகம், துகில், கலிங்கம் என்னும் ஆடைகள் விளங்குகின்றன. அதுபோல் தழை, பூங்கரை நீலம், போன்ற ஆடைகளை பெண்கள் மட்டும் அணியக்கூடியதாகப் பதிவாகியுள்ளது. எனினும் நற்றிணை 204-ம் பாடலின் ஒரே ஒரு இடத்தில் மட்டும் தலைவன் தழை உடுத்த விரும்பும் செய்தி காணப்படுகின்றது.

**தழையாடை**

தழையாடை மலர்களால் மட்டும் ஆனதாகவும் தளிர்களால் தனித்து அமைக்கப்பட்டதாகவும் இலையும் மலரும் விரவி நெருக்குற்று அமையும்படியும்

புனையப்பட்டுள்ளன. இது அன்றைய மகளிரின் அழகுணர்ச்சியைக் கலையுணர்வுப்படப் புனையும் தன்மையைப் புலப்படுத்துவதாக உள்ளது. இத்தழையாடை பற்றி ''புறவிதழ்களை ஒழித்துப் பாம்பின் படம் போலப் பரந்திருக்கின்ற அடிவயிற்றினிடத்தே கத்திரிகையால் மட்டம் செய்யப்பெற்ற தழையுடை என மார்க்கபந்து சர்மா குறிப்பிடுகின்றார்''[62].

மேலும் இவ்வாடையானது மகளிர் ஓடலுக்கும் நீராடலுக்கும் ஏற்ப மூட்டுவாய் உடையதாக இருந்தது. ''அன்றை நாளைய ஆடையுனையும் தொழில் நுணுக்கத்தைக் காட்டுவதாகவும் இன்றைய முன்னேற்றத்தின் அடிப்படையாகவும் உள்ளது. ஆனால் இவ்வமைப்பின் வேலைப்பாட்டிற்கு எப்பொருள் உதவியது என்பது கூறப்படவில்லை''[63] என்பர்.

**''கண்அகன் இருவிசும்பில் கதழ்பெயல் கலந்து ஏற்ற**
**தண் நறும் பிடவமும், தவழ்கொடித் தளவமும்**
**வண்ண வண்தோன்றியும், வயங்குஇணர்க் கொன்றையும்**
**அன்னவை பிறவும், பல்மலர் துதைய,**
**தழையும் கோதையும் இழையம் என்று இவை**
**தைஇயனர் மகிழ்ந்து, திளைஇ விளையாடும்**
**மடமொழி ஆயத்தவருள்'' (கலித்.102:1-7)**

என்ற பாடலில் ஆயமகளிர் தழை ஆடையினை உடுத்தி விளையாடினமை சுட்டப்பெற்றுள்ளது. தழையாடை அல்குலில் உடுத்தியதாக பதின்மூன்று[64] இடங்களிலும் இடையில் துடையின்கண் அசையக் கூடியதாக (குறுந்.293:5-7) ஒரு இடத்திலும் கூறப்படுவதன் மூலம் தழையாடையினை மகளிர் இடையில் உடுத்திருக்கலாம் என்ற செய்தி புலனாகிறது. ஏனெனில் மேலாடைப் பற்றிய குறிப்பு சங்க இலக்கியத்தில் காணப்படாமையினால் அக்காலத்தில் ஓராடைப் பழக்கம் இருந்தமையும் எடுத்துரைக்கப்படுகின்றது.

**துகில்**

துகில் தழைக்கு அடுத்தப்படியாக மகளிர் உடுத்திய ஆடையாக அக இலக்கியங்கள் சுட்டுகின்றன. இதனை ஆடவரும் உடுத்தினர். துகில் ஒதுங்குதல் தன்மையுடையது (நற்.366:2-8) அடியைத் தடுக்கக் கூடியது (கலித்.81:5-6) சுழலும் தன்மையுடையது. (கலித்.85:3-5) அதுமட்டுமின்றி இவ்வாடை பூந்தொழிலால் ஆனது (ஐங்.147) மேலும்

**''பசைவிரல் புலைத்தி நெடிது பிசைந்து ஊட்டிய**
**பூங்துகில் இழைக்கும்'' (அகநா.387:5-6)**

எனத் துகில் கஞ்சியில் நனைத்து உடுத்தியதாகக் கூறப்படுகின்றன. மேற்கூறியவற்றால் துகில் தழையாடை போன்று எளிதில் அழியக்கூடியதன்று என்பதும் விரும்பியபடி உடுத்தக்கூடிய ஆடை என்பதும் அகஇலக்கிய பாடலில் மூலம் அறியப்படுகின்றது.

**கலிங்கம்**

''கலிங்கம் பற்றிய செய்தி சங்க இலக்கியத்தில் 27 இடங்களில் காணப்படுகிறது. அதில் 10 இடங்களில் பெண்களது ஆடையாகவும் 16 இடங்களில் ஆடவர் உடுத்தும் ஆடையாகவும் ஒன்று பொதுவாகவும் பதிவாகியுள்ளது''[65] ஆனால் அகஇலக்கியத்தில் எட்டிடங்களில்[66] பெண்கள் உடுத்தும் உடையாகச் சுட்டப்பெற்றுள்ளது. கலிங்க நாட்டிலிருந்து வந்த ஒருவகையான ஆடை கலிங்கமாகும். இது நூலாலும் பட்டாலும் செய்யப்படும். பெண்கள் வீட்டில் உடுத்தும் உடையாகக் கலிங்கம் விளங்கியமையினை,

**“முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**

**கழுவுறு கலிங்க, கழாஅது உடீஇ” (குறுந்.167:1-2)**

என்ற பாடல் சுட்டும். அதுமட்டுமின்றி, இது அடியிலே தாழும் தன்மையுடையது (கலித்.92:42) பூந்தொழில் உடையது (கலித்.56:11) வதுவை நாளில் அணியப்பெறுவது (கலித்.69:3) (அகநா.86:20-22,136:20-21) என்பதன் மூலம் கலிங்கம் வதுவைநாளில் பட்டால் ஆன செய்தி அறியப்படுகின்றது. இவற்றின் மூலம் இல்லத்தில் உடுத்துவதற்கென்று ஒருவகை ஆடையும் சிறப்பு நிகழ்ச்சிக்கென்று ஒருவகை ஆடையும் பெண்டிர் உடுத்தினமை சங்க இலக்கிய சமுதாயத்தின் தொல்லெச்சமாகும்.

**காழகம்**

காழகம் என்னும் ஆடை குறித்து கலித்தொகையில் இரு[67] இடங்களில் காணப்படுகின்றது. இதனை நீல ஆடை என்பர்.

**“நிரைதொடி நல்லவர் துணங்கையுள் தலைக்கொள்ள**

**குரையிடைக் கிழிந்த நின் காழகம் வந்து உரையாக்கால்?**

**(கலித்.73:16-17)**

எனப் பரத்தையர் சிலம்பு தொடக்கிக் கரையிடத்தே கிழிந்த காழகம் தலைவனுக்குப் பகையாய், அவன் பரத்தமையைத் தலைவிக்குரைத்தது என்பதன் மூலம் இவ்வாடையை ஆடவர் உடுத்தினமை விளக்கப்பட்டுள்ளது. அதுபோல்

**''ஒருத்தி வரி ஆர் அகல் அல்குல் காழகம்**

**ஒருத்தி அரி ஆர் நெகிழத்து அணி சுறாத் தட்ப''**

**(கலித்.92:36-37)**

என்று ஒருத்தியின் அல்குலில் கிடந்த காழகத்தை வேறொருத்தியின் சிலம்பில் கிடந்த சுறாவடிவாகிய மூட்டுவாயரும்புகள் தளைத்துக் கொண்டன என்று கூறுவதன் மூலம் காழகமானது, பெண்களுக்குரிய ஆடை என்பதும் அது அல்குலிம் கால்வரை தளர்ந்த அமைப்பினையும் உடையது என்ற செய்தி புலனாகிறது.

**பூங்கரை நீலம்**

முல்லைக் கலியில் இரு பாடல்கள் தலைவி உடுத்தி ஆடையாக 'பூங்கரை நீலத்தைக் குறிப்பிடுகிறது. இவ்வாடை பூவாலாகிய கரையினையும் நிலம்தாழ உடுத்தப்படுவதுமாகும்.

**"........................................... யாய் தந்த**

**பூங்கரை நீலும் புடைதாழ மெய்ஆசைஇ" (கலித்.111:2-3)**

என்ற பாடலில் பூங்கரைநீலம் என்னும் ஆடை சுட்டப்படுகிறது. அதுபோல் புறங்கடைப்பக்கம் போகிய தலைவி தனது தாழ உடுத்திய நீல ஆடையைக் கையால் பற்றிக் கொண்டு அச்சத்தால் தளர்ந்து சென்றவிடத்தும் பூங்கரைநீலம் விளக்கப்பட்டுள்ளது. (கலித்.115:12-15)

**ஆடை**

ஆடை என்ற சொல் பெண்ணிற்கு உரியதாக கலித்தொகையில் இருபாடல்கள்[68] இடம்பெற்றுள்ளன.

**"கோடு வாய் கூடாப் பிறையை, பிறிது ஒன்று**

**நாடுவேன், கண்டெனன், சிற்றிலுள் கண்டு ஆங்கே**

**ஆடையான் மூஉய் அகப்படுப்பேன்" (கலித்.142:24-26)**

எனத் தலைவி கூடலைத்தன் ஆடையில் மூடிமறைத்தலும் ஓராடையை இருகூறாக்கி உடுத்தும் வறிய நிலைமையிலும் காதலர் பிரியாது வாழும் வாழ்க்கையினையும் (கலித்.18:10-11) எடுத்துரைக்கின்றது. காதாசப்தசதியில் ஆடை பற்றிய குறிப்பில்லை.

**அணிகலன்கள்**

சங்க காலப் பெண்கள் தம்மை இயற்கைப் பொருட்களால் அழகு செய்தது தவிர அணிகலன்களாலும் அழகு செய்து கொண்டிருந்தனர். இதனை, ''டோரேன் ஜாக்கப்சன் இந்தியப் பெண்டிர் அளவு கடந்து தம்மை ஒப்பனை

செய்து கொள்வது செல்வப் பெருக்கையும் சமுதாய உயர்வையும் காட்டுகிறது''[69] என்று உரைக்கின்றார்.

**''வண்டே இழையே வள்ளி பூவே''[70]**

என்று தொல்காப்பியர் தலைவனின் ஐயம் களையும் கருவிகளில் ஒன்றாகத் தலைவியின் அணிகலன்களைச் சுட்டியுள்ளார்.

**இழையணி**

இழை என்பது எல்லா அணிகலன்களையும் குறிக்கும் பொதுச்சொல்லாகும். இழை என்னும் சொல்லைப் பலவிதமான அடைகொடுத்துச் சங்கப் புலவர்கள் கையாண்டுள்ளனர். அவற்றை வெ.வரதராசன் ''அணிஇழை, அவிர் இழை, ஆயிழை, இலங்கிழை, உருள்இழை, எல்லிழை, ஏந்திழை, ஒள்ளிழை, கிளிர்இழை, சீருடைஇழை, சுடரிழை, சேயிழை, திருந்திழை, தெரியிழை, நுணங்கிழை, நேரிழை, பாசிழை, புனையிழை, மாணிழை, மின்னிழை, முற்றிழை, வயங்கிழை, வாலிழை, விளங்கிழை, விறலிழை[71] என்று உரைக்கின்றார்.

சங்க அகஇலக்கியத்தில் அழகிய அணிகலனை ''அணியிழை'' (அகநா.172:16) ஆய்ந்தெடுத்த அணிகலன் ''ஆயிழை'' (குறுந்.143:1, 366:7, நற்.344:4, 128:6, கலித்60:15) இழக்கமான அணிகலன் ''இழங்குழை'' (நற்.332:10) ஒளிபொருந்திய அணிகலன் ''ஒள்ளிழை'' (ஐங்.281:2, நற்.253:5,188:3) சுடர்விடும் அணிகலன் ''சுடரிழை'' (கலித்.47:8,51:7-8) திருத்தமாக செய்யப்பட்ட அணிகலன் ''திருந்திழை'' (ஐங்.231:2, குறுந்.214:4, நற்.93:7,225:6-7) ஆராய்ந்து அணிந்த அணிகலன் ''தெரியிழை'' (ஐங்.235:3, கலித்.39:26, அகநா.316:8) பொன்னால் புனைந்து செய்யப்பட்ட ஒருவகையான அணிகலன்களை மகளிர் கூந்தலில் புனைந்தமையினால் ''புனையிழை'' (கலித்.60:7), மின்னல் போல் ஒளிரும் அணிகலன் ''மின்னிழை'' (குறுந்.246:6, ஐங்.234:1) தோளில் அணியும் ஒருவகையான அணிகலன் ''விறலிழை'' (நற்.85:2) மாண்புடைய அணிகலன் ''மாணிழை'' (கலித்.102:14) ஒத்த இழையினால் ஆன நேர்த்தியான அணிகலன் ''நேரிழை'' (கலித்.104:73) தேர்ந்த அணிகலன் ''முற்றிழை'' (கலித்.111:9) மின்னல்போல் ஒளிரும் பசிய பென்னாலாகிய அணிகலன் ''அவிர்இழை'' (நற்.22:1-9) தூய அணிகலன் ''வாழ்இழை'' (அகநா.86:12) ஒளிபொருந்திய மாட்சிமைப்பட்ட அணிகலன்கள் ''மான்இழை'' (அகநா.176:16) விளங்குகின்ற அணிகலன் ''வயங்குஇழை'' (அகநா.306:10) எனப் பல்வேறு பெயர்களால் அடைக்கொடுத்து அழைத்தமை சுட்டப்பெற்றுளது.

காதாசப்தசதியில் மகளிர் அணிந்த நேர்த்தயான அணிகலன் ‘‘நேரிழை’’ (காதா.29:2, 32:3, 249:1, 280:3, 312:4, 385:4, 388:3, 422:1, 430:3) மாண்புடை அணிகலன் ‘‘மாணிழை’’ (காதா.42:4, 51:2, 73:2, 464:3) ஒளிரும் அணிகலன் ‘‘ஏந்திழை’’ (காதா.70:1, 158:3, 189:4, 230:1) ஆய்ந்தெடுத்த அணிகலன் ‘‘ஆயிழை’’ (காதா.119:3) செந்நிறமுடைய அணிகலன் ‘‘சேயிழை’’ (காதா.173:1, 184:3, 261:1, 365:1)இறுகச் செறிந்த அணிகலன் ‘‘செறியிழை’’ (காதா.500:3) என்று அடைக்கொடுத்து அழைக்கப்பட்டுள்ளது.

**காதணிகள்**

காதணிகள் குழை என்றும் அழைக்கப்படும். அவை, ‘‘அரிக்குழை, அவிர்குழை, ஒண்குழை, கனங்குழை, கொடுங்குழை, சிறுகுழை, சோர்குழை, பூங்குழை, பொலங்குழை, வடிவார்குழை, வரிக்குழை’’[72] எனப் பல்வேறு அடைமொழிகளை உடையது என்பர் வெ.வரதராசன். சங்க அகஇலக்கியத்தில் பூத்தொழில் உடை குழையினை ‘‘பூங்குழை’’ (குறுந்.159:5) என்றும் பொன்னால் ஆன ஒளிவீசும் மகர குழையினை ‘‘கனங்குழை’’ (கலித்.57:15,103:8) என்றும் குறிப்பிடப்படுகின்றது.

இக்கனங்குழை குறித்து ‘‘பண்டைக் காலத் காதணிகளில் கனங்குழையும் ஒன்று. பெண்டிர் முதலில் ‘கடிப்பு’ என்னும் அணியை இட்டுக் காதைப் பெரிதாக்கிய பின் கனங்குழையை அணிந்து கொண்டனர் என்பர்’’[73] வெ.வரதராசன்.

அகஇலக்கியத்தில் சிவந்த மணிகள் பதிக்கப்பெற்ற ஒளி பொருந்திய குழை ‘‘செஞ்சூட்டு ஒண்குழை’’ (அகநா.86:27) வளைந்த குழை ‘‘கொடுங்குழை’’ (அகநா.196:11, 236:12) நெரிப்பு அடைந்த குழை ‘‘சோர்குழை’’ (நற்.20:9) பொன்னால் செய்த வரிகள் பொருந்திய குழை ‘‘வரிக்குழை’’ (கலித்104:23-24) என விளக்கப்பட்டுள்ளது. காதாசப்தசதியில் குழை பற்றி மூன்று பாடல்கள் இடம்பெற்றுள்ளது. இதனை

**‘‘முன்னர் ஆடிக் கன்னம் மின்னும்**
**பொன்குழை யணிந்தன பொலந்தொடி செவிகள்**
**கரும்பனை ஓலைச் சுருளின் றணிந்தன**
**காலம் செயுமிக் கோலமென் னென்பாம்’’ (காதா.322:1-4)**

என்ற பாடல் விளக்கும். அதாவது செல்வநிலையில் மகளின் காதுகளில் பொன்குழைகளும் வறுமை நிலையில் பனைஓலைச்சுருள்களும் அணிந்தமை புலனாகிறது

**“தென்ற லசைப்பச் செவியார் குவளைப்**

**பூந்தா துகவும்”** (காதா.147:1-2)

**“அவள்செவி களிலுள குவளை மலர்களை**

**யாரோ கண்டிங் காதரித்திடுவார்”** (காதா.269:3-4)

என்ற பாடல்கள் மகளிர் காதில் குவளை மலரைச் சூடியமையினை எடுத்துரைக்கின்றது. அதுபோல் தலைவன் காதில் நாவல்மரச் செந்தளிர் செருகிக் கொண்டு தலைவிக்கு குறியிடம் காட்டியதை (காதா.151:1-4) சுட்டுகின்றது.

**கழுத்தணிகள்**

கழுத்தில் அணிப்படும் விலையுயர்ந்த அணிகலன்கள் கழுத்தணி எனப்படும்.

**“அழலவிர் மணிப்பூண் அனைய”** (ஐங்.232:3)

என்ற அடி மணிகளால் ஆன கழுத்தணியைச் சுட்டுகின்றது. காதாசப்தசதியில் மதயானையின் கும்பத்தில் இருக்கும் முத்துகளைக் கொண்டு மாலைக்கட்டி கழுத்தில் அணிந்திருந்தனர். (காதா.144:2)

**மார்பணிகலன்**

மார்பில் அணியும் அணிகலன் “மார்பணி” என்றழைக்கப்படும். குறிஞ்சிநில மகளிர் பூணாரம் என்னும் மார்பில் ஒருவகையான அணிகலனை அணிந்து ஒப்பனை செய்துக்கொண்டமையினை

**“பூண் ஆகம் உறத் தழீஇப் போத்தந்தான் அகன் அகலன்”**

**(கலித்.39:4)**

**“பூண்தாழ் அகம் நாண்டர வந்த”** (நற்.93:9)

என்ற அடிகள் சுட்டும். காதாசப்தசதியில் மார்பணிப்பற்றிய குறிப்பில்லை.

**இடையணி மேகலை**

இடையில் அணியும் அணிகலன் இடையணி அல்லது மேகலை என்றழைக்கப்படும் - தலைவி சிலவாகிய பொறி அமைந்து பல மணிகள் கோத்த மேகலை அணிந்தமையினை,

**“சில்பொறி அணிந்த பல்காழ் அல்குல்” (நற்.133:4)**

என்ற அடியும் பசிய மணிகள் கோத்த அணிகலன்களை அணிந்தமையினை,

**“பசுங்காழ் அல்குல் பற்றுவனென் ஊக்கி”** (நற்.222:5)

என்ற அடியும் விளக்கும். மேலும்

**“கடிது இவளைக் காவார் விடுதல் கொடி இயல்**

**பல்கலை சில் பூங் கலிங்கத்தன்”** **(கலித்.56:10-11)**

என்ற பாடலடிகள் மூலம் எட்டுக்கோவையான மேகலையினை அணிந்தமைப் புலனாகிறது. அதுபோல் காதாசப்பதசதியில்

**“பொன்மணி மேகலை பொருந்திய தெல்லாம்**

**நீர்நெருப் பிடைத்தவம் நேர்ந்ததா லன்றே?” (காதா.176:3-4)**

எனத் தலைவியின் பொன்னாலான மேகலை அவள் இடையில் பொருந்த நீரிலும் நெருப்பிலும் மூழ்கித் தவம் செய்துவிட்டு வந்துள்ளது என்று தலைவன் கூறுவதன் மூலம் ஆந்திர மக்களிடம் இடையணிகலன் அணியும் வழக்கம் இருந்தமை புலனாகிறது.

**வளை**

மகளிர் விரும்பி அணியும் அணிகலன்களில் வளையல் ஒன்றாகும். வளையமாக இருப்பதால் வளை என்று பெயர் பெற்றது. இவற்றில் சங்குகளை அறுத்துச் செய்யபட்ட வளை ‘‘இலங்குவளை’’ (குறுந்.11:1-3,365:1-2,அகநா.292:7,328:9,நற்.282:1) அரத்தால் அருத்துச் செய்த வளை ‘‘எல்வளை’’ (அகநா.242:13-14,நற்.306:10,77:9,136:1, 236:7,கலித்.46:27) வெளிய கோல் தொழிலமைந்த வளையல் ‘‘கோள்வளை’’ (அகநா.42:16-17) தோள்வளை (குறுந்.252:1-2), கைவளை (குறுந்.371:1,377:2) மகளிர் முன்கையில் வரிசையாக அணிந்த வளையல் நிரைவளை (குறுந்.335:1, கலித்.50:8) தோள்பகுதியில் அணிந்தவளை ‘‘இறைவளை’’ (கலித்.53:8-9,41:26-27,60:4,குறுந்.289:2) எனச் சுட்டப்பெற்றுள்ளது. மேலும் முன் கைவளை (குறுந்.218:2) வீங்குவளை (ஐங்.285:4)இறுகச் செறிந்த வளைகள் ‘‘செறிவளை’’ (குறுந்.190:2) என்றும் அழைக்கப்பட்டன. காதாசப்தசதியில் வளையல் குறித்து ஆறு[74] பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அம்மகளிரின் வளையல் துளைகளிட்ட வேலைப்பாடுகளை உடையது. தலைவி நீராடியபின் அப்பிய மஞ்சளை முள்கருவிக்கொண்டு குத்தி அழுக்கு நீக்குவது உண்டு (காதா.72:1-4) என வளையல் பற்றி சுட்டப்படுகின்றது.

**தொடி**

கைகளில் தொடுத்துக் கொள்வதைத் தொடி என்பர். ‘‘தாமரையினது தோற்றத்தினை ஒத்து இடையே முத்தினை அழுத்திச் செய்த தொடி வேலைப்பாடுமிக்கதாய் மகளிர்க்கு உவப்பும் எழிலுமூட்டியது’’[75] என்பர். இத்தொடியினைத் தலைவி அணிந்திருந்தமையினை,

**“நெடுமென் பணைத்தோள் சாஅய்த் தொடி நெகிழ்ந்து” (குறுந்.185:2)**

என்னும் அடி சுட்டும். மேலும் அகன்ற தொடி ‘‘அகன்தொடி’’ (நற்.77:10) என்றும் தாமரை வளையம் போல் முத்துப் பதித்து விளங்கும் தொடி ‘‘முத்துக்கோல் அவிர்தொடி’’ (கலித்.59:1-2) ஆய்ந்தெடுத்த தொடி ‘‘ஆய்தொடி’’ (ஐங்.409:3, நற்.134:7, கலித்.59:19) ஒளிவீசும் தொடி ‘‘ஒண்தொடி’’ (கலித்.60:18, அகநா.204:14) கழன்றோடும் தொடி ‘‘கழல்தொடி’’ (நற்.25:11) சுடர்விடும் தொடி ‘‘சுடர்த் தொடீஇ’’ (கலித்.51:1) செறிந்த தொடி ‘‘செறிதொடி’’ (ஐங்.487:2-3) (குறுந்.379:4, நற்.136:9) கோற்றொழிலமைந்த சிறந்த தொடியினை ‘‘விழுந்தொடி’’ (அகநா.162:14) பல்வேறு பெயர்களில் அடைகொடுத்துக் கூறப்படுகின்றது. அதுபோல் காதாசப்தசதியில் பெண்கள் அணிந்த அணிகலன்களுள் ஒன்றாகத் தொடி விளங்கினமையினை ஐந்து பாடல்கள் சுட்டுகின்றது. அவற்றுள் பொன்னால் ஆன தொடி ‘‘பொலந்தொடி’’ (காதா.14:2,229:1,317:4) ஒளிவீசும் தொடி ‘‘ஒண்டொடி’’ (காதா.223:3) சுடர்போல் ஒளிவீசும் தொடி ‘‘சுடர்த்தொடி’’ (காதா.470:4) என்றும் சிறப்பிக்கப்பெறுகின்றது.

**வயந்தகம்**

மகளிர் நெற்றியில் சூடும் ஆபரணமாகிய நெற்றிச்சுட்டி வயந்தகம் என்றழைக்கப்படும். இதனை,

**‘‘அவை புகழ் அரங்கின் மேல் ஆடுவாள் அணிநுதல்**
**வகைபெறச் செரீஇய ‘வயந்தகம்’ போல் தோன்றும்**
**தகை பெறு கழனி’’ (கலித்.79:4-9)**

என்ற பாடல் சுட்டும். அதாவது ஆடல் மகளிரின் அழகிய நெற்றியில் தவழும் வயந்தகம் போல தாமரை இதழிலே கிடந்த நெற்கதிர் விளங்கிற்று என நெற்கதிருக்கு உவமையாக வயந்தகம் கூறப்பட்டுள்ளது. நெற்கதிர் போன்ற அமைப்பினை உடையதாக நெற்றியில் அணியும் அணிகலன் விளங்கிற்று என்பதை இவ்வடிகளின் மூலம் அறிய முடிகின்றது காதாசப்தசதியில் இவ்வணிகலன் குறித்த குறிப்பில்லை.

**வீரலணி**

ஒள்ளிய அணிகலன்களையுடைய பெண்களின் வளையோடு பிணிக்கப்பட்ட மெல்லிய விரலில் அணிந்த விரலணியினை,

**‘‘ஒள்ளிழை மகளிர் இலங்குவளைத் தொடூஉம்**
**மெல்விரல் மோசை’’ (நற்.188:3-4)**

என்ற பாடல் விளக்கும். அதுபோல் நறாம் பூவைக் கண்டாற் போன்ற சிவந்த விரலுக்குப் பொருந்தச் சுறாவின் ஒற்றைக் குழித்த மோதிரத்தை மோசை என்பர் (கலித்.84:23-24) இவ்வணிகலன் குறித்து காதாசப்தசதியில் இடம்பெறவில்லை

**காலணிகலன்கள்**

காலணிகலன் என்பது காலின் அடியில் அதாவது பாதத்தின் மீது பொருந்துமாறு அணியும் அணிகலனான சிலம்பாகும். தலைவி வளைந்து சூலுற்ற சிலம்பினை அணிந்திருந்ததை,

**“வில்வகுப்புற்ற நல்வாங்கு குடச்சூலல்**
**அஞ்சிலம் பொடுக்கிஅ ஞ்சினள் வந்து**
**சூஞ்சூர் யாமத்து முயங்கினள் பெயர்வோள்” (அகநா.198:9-11)**

என்ற அடி விளக்கும். அதுமட்டுமின்றி இடையிடையே மணி வைத்த சிலம்பு (கலித்.58:5) பரல்கற்கள் ஒலி செய்யும் சிலம்பு (அகநா.57:3, 321:15) பருக்கைக் கல் போட்டு நிரப்பப்பெற்ற சிலம்பு (நற்.12:5) முத்துக்கள் இடப்பட்ட பொற்சிலம்புகள் (நற்.110:5) உள்ளீடு மணியிட்ட அழமைந்த புனைந்த சிலம்பு (கலித்.59:7) தெளிந்த உள்ளிடு மணியை உடைய சிலம்பு (கலித்.69:8) என பலவகையான சிலம்பினை அணிந்தமை சங்க அகஇலக்கியங்கள் புனைந்துரைக்கின்றன. அதுபோல் காதாசப்தசதியில்

**“சேவடி விழுங்கால் சிலம்பிற் சிக்கிய**
**காதலன் கூந்தல் கார்குழல் எடுத்தல்**
**சினந்தணிந் தனளெனச் செப்பிய தன்றே” (காதா.159:1-3)**

என்ற பாடல் திருமணத்திற்கு பின்னும் தலைவி காலில் சிலம்பு அணிந்தருந்தமை புலப்படுத்துகின்றது.

**மகளிர்தம் கூந்தல் ஒப்பனைகள்**

மகளிரின் அழகுக்கு அழகு சேர்ப்பது கூந்தல். இது பேணப்பெறுவதால் பொலிவுபெறுகிறது. விரலை நகம் காப்பதுபோல், உடற்பகுதிகளைக் காக்க முடி அமையப்பெற்றுள்ளது. இந்த கூந்தல் அமைப்பு குறித்து “ஒருவருக்கு இயற்கையான கூந்தல் அமைப்பு அழகாக இருப்பின் அதுவே அவரது முகத்துக்கு எழிலூட்டுவதாக அமையும். இயற்கையான இக்கூந்தலை ஒப்பனை செய்வது ஒருவரைத் தனியாக அடையாளம் கண்டுகொள்ளச் செய்யும்”[76] என்பர் மேரிவால்ஷா. “கூழை விரித்தல்”[77] எனக் கூந்தலை விரித்தல் இரண்டாம் அவத்தைக்குரிய மெய்ப்பாடாக தொல்காப்பியம் சுட்டுகின்றது.

**ஐம்பால் தன்மை**

சங்க அகஇலக்கியம் மகளிா் தம் கூந்தலை ஐம்பால், கூழை, கதுப்பு, குழல், எனப் பல பெயர்களால் சுட்டும். இக்கூந்தலின் தன்மையினை கார்மேகம் போன்ற (கலித்.35:1-5) இருண்டது (கலித்.7-9) களிமயில் கலாவம் போன்றது (அகநா.152:3,12-14) முதுகிலே தாழ்ந்து கிடப்பது (அகநா.126:19-21) கடைகுழன்று தழைக்கின்றது (கலித்.140:23) நீலமணிபோலும் தன்மை உடையது. (நற்.133:5, 245:2-3, 337:7, 366:4) என்றும் விளக்குகின்றது.

**ஐம்பால் ஒப்பனை முறை**

முதுகிலே தாழ்ந்து கிடக்கும் குழலினை கத்திரிகையால் மட்டம் செய்யப்பட்டு (கலித்.32:1-5) பின்னி முடித்தல் உண்டு. (கலித்.125:16-17) இது தற்காலத்தில் முடியைப் பின்னுதல், தளர்ச்சியாக விடுதல், கத்திரிகையால் குறைத்து அழகுப்படுத்துதல் ஆகிய ஒப்பனை முறைகளுக்கு அடிப்படையானது என்பது புலனாகிறது.

மேலும் மகளிா் சந்தன மரத்தின் மணமிக்க துகளுடன் பல நறுமணப் பொருள்களையும் சோ்த்தரைத்த குழம்பினைப்பூசி அழகுபெற வாரியதும் அது காய்ந்த வழி சந்தனத்துகள்கள் உதிர ஐவகையாக வகுக்கப்பட்ட கூந்தலை வாரி முடித்துள்ளனா். என்பதை,

**“........................ பெருந்தன் சாந்தம்**
**வகைசோ் ஐம்பால் தகை பெறவாரி,**
**புலர்விடத்து உதிர்த்த துகள் படு கூழை” (நற்.140:2-4)**

என்ற பாடல் விளக்கும். அதுபோல்,

**“சாந்தம் நாறும் நிறியோள்**
**கூந்தல் நாறும் நின் மார்பே” (ஐங்.240:3-4)**

எனப் பரத்தையா் கூந்தலில் சந்தனம் அணிந்திருந்தமை அறியமுடிகின்றது.

மேலும், வாசனை ஊட்டப்பட்ட கூந்தலைக் குழல், அளகம், கொண்டை, பனிச்சை, துஞ்சை என்று ஒப்பனை செய்து புனைந்தமையினை

**‘‘பொன்கை தகைவகிா் வகைநெறி வயங்கிட்டுப்**
**போழிடையிட்ட கமழ் நறும் பூங்கோதை,’’ (கலித்.55:2-3)**

என்னும் பாடலடிகள் சுட்டும். மேலும் ஐந்து பகுதியை உடைய பின்னால் வகிா்ந்து தாழம்பூ இடையிலே இட்டு முடிக்கப்பெற்றுள்ளமையினையும் அகஇலக்கியங்கள் எடுத்துரைக்கின்றது. அதனோடு கூந்தல் வளா்ச்சிக்கு,

**“கூந்தல் வேய்ந்த விரவுமலர் உதிர்த்து**

**சாந்து உளர் நறுங்கதுப்பு எண்ணெய் நீவி” (குறுந்.312:2-3)**

என விடியற்காலையில் நீராடி நறுமண எண்ணெய்யெத் தடவுதலும் மாசு நீங்கத் தூய்மை செய்தலும் (நற்.366:4) உலர்த்தலும் (கலித்.105:53-56) கோதுதலும் (கலித்.58:1) உண்டு என பலவகையான முறையில் மகளிர் கூந்தல் பேணிய முறையினை அக இலக்கியங்கள் சிறப்பிக்கின்றன. இத்தகைய ஐம்பால் புனைவு மகளிர்க்குரியது என்பது புலனாகிறது. ஆடவர் பற்றிய செய்திகளில் ஐம்பால் புனைவு காணப்படவில்லை.

காதாசப்தசதியில் ஐந்து[78] இடங்களில் கூந்தல் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளன. ஆனால் சங்க அகஇலக்கியம் போன்று விரிவாக சுட்டப்படவில்லை. எனினும் மகளிரின் சுருண்ட குழல் சுரிகுழல் என்றும் கழுத்தின் கீழ் தொங்கும் குழல் சரிந்த குழல் என்றும் தோகை மயில் போன்ற கூந்தல் எனவும் சிறப்பிக்கப்படுகின்றன. அதுமட்டுமின்றி மகளிர் கூந்தலில் மயிற்பீலியை செருகியதனை

**“மயிற்பீ லிதனை மணிக்குழற் செருகி**

**செருக்குடன் புதுமகள் செல்வதைக் காணாய்” (காதா.144:3-4)**

என்னும் பாடல் சுட்டும்.

**வண்ணநெய் பூசுதல்**

மகளிர் தம்மை அழகுபடுத்திக் கொள்வதில் எப்பொழுதும் பேரார்வம் கொள்வர் அவ்விதத்தில் நெய்பயன்படுத்தும் முறை சங்க அகஇலக்கியத்தில் காணப்படுகின்றது.

**“தேம் மறப்பு அறியாக் கமழ் கூந்தலளே” (நற்.309:1)**

என்ற அடியின் மூலம் மகளிர் கூந்தலில் நெய்தடவினமை புலனாகிறது. அதுபோல் காதாசப்தசதியில் மகளிர் முகத்தில் நெய் பூசி ஒப்பனை செய்தமையினை,

**‘‘வண்ணநெய் பூசிய முகத்தினள்” (காதா.398:1)**

சுட்டுகின்றது. இவ்வாறு வண்ணநெய் பயன்படுத்தும் வழக்கம் இரு நாட்டாரிடமும் காணப்பட்டாலும் பயன்படுத்தும் முறையில் வேறுபட்டு காணப்பட்டமையினை இவ்விலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது.

**வெறியாடல்**

பண்டைத் தமிழர்களின் திணைசார் சமய மரபில் வெறியாட்டு எனும் சடங்கு நிகழ்த்தப்பட்டது. இது வேலனுக்கு மட்டும் நிகழ்த்தக்கூடியது என்பதால் இம்முறை வேலன் வெறியாட்டு என்றழைக்கப்பட்டது. இதனை,

**“வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்**

**வெறியாட் டயர்ந்த காந்தளும்”**[79]

எனத் தொல்காப்பியம் சுட்டும். இத்தகைய வேலன் வெறியாடல் தலைவி முற்றத்தில் நிகழ்ந்ததனை,

**“பெய்ம் மணல் முற்றங் கடி கொண்டு**

**மெய்ம் மலி கழங்கின் வேலற் தந்தே” (நற்.268:8-9)**

என்ற பாடல் விளக்கும். மேலும் முருகனுக்குக் கடம்ப மாலையை சூட்டி பலிகொடுப்பதும் தலைவியின் கூந்தலின் உள்ள மலரை வழிபாட்டுக் காணிக்கையாகக் கொடுப்பதையும்

**“மின்னு நிமிர்ந்தன்ன வேலன் வந்தெனப்,**

**பின்னுவிடு முச்சி அளிப்பா னாதே” (நற்.51:6-7 )**

என்ற பாடல் மூலம் அறிய முடிகின்றது. இத்தகைய வெறியாடல் சங்க அக இலக்கியத்தில் உள்ளது போன்று காதாசப்தசதியில் குறிப்பிடப்படவில்லை.

**“ஆதரித்திடுவீர்! அஞ்சுதல் வேண்டா**

**நோய்கிர கம்முதற் பேய்பிடித் திடவிலை!**

**திடுமென முகில்கள் இடிமுழக்கிடவே**

**நெஞ்சங் கலங்கிய நேரிழை இவளே” (காதா.312:1-4)**

எனத் தலைவன் வரவை எண்ணி ஏக்கமுற்ற தலைவியின் மனநிலை மாறுபாடு குறித்துக் கூறுகின்றது. பித்துப் பிடித்தாற்போல் ஆகிவிட்டாள். கிரகமோ, பேயோ, நோயோ பற்றிக் கொண்டதால் தலைவியை எண்ணி பெற்றோர் மருத்துவம் பார்க்க முயன்றனர். ஆனால் தலைவியின் நிலை அறிந்த தோழி உண்மையினைப் புரிய வைத்து உள்ளம் உணர்ந்து நடக்குமாறு கூறுகிறாள். சங்கத் தலைவியைப் போன்றே காதாசப்தசதி காட்டும் தலைவியின் நிலையும் ஒன்றாக உள்ளது. வெறியாடல் என்று கூறப்படவில்லையே தவிர ஒரே நிகழ்வு என்று எண்ணுவதற்கு இடமளிக்கின்றது.

## தொகுப்புரை

ஒரு இனத்தாரின் பழக்கவழக்கங்கள் நாகரிகமுடையதாக மாறி அது பண்பட்டு முழுமையுறும் போது அவ்வினம் பண்பாடுடைய இனமாகப் போற்றப்படும். மனிதனுக்கு மனிதனால் நடத்தப்படும் ஒருவகை சடங்கு திருமணமாகும். சங்க கால மக்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்தவர் எனினும் அவர்கள் வாழ்ந்த சூழலுக்கு ஏற்ப திருமண முறைகளைக் களவு கற்பு என்ற இருபிரிவுகளில் அடக்கினர்.

சங்க அகஇலக்கியத்தில் உடன்போக்கு மணம், களவுமணம், மடலேறி மணமுடித்தல், தொன்றியல் மரபின் மன்றல், பரிசங்கொடுத்து மணத்தல், சேவைமணம், ஏறுதழுவி மணமுடித்தல், போர்நிகழ்த்தி மணம்முடித்தல் துணங்கையாடி மணத்தல், பலதாரமணம் எனப்பத்துவகையான மணமுறை காணப்படுகின்றது. காதாசப்தசதியில் பலதாரமணம், மறுமணம் பற்றிய குறிப்புகள் இடம்பெற்றுள்ளன.

திருமணத்தின் போது மணமக்களின் வீட்டை அலங்கரித்தல், நல்லகாலம் குறித்து மணம் செய்தல், மணமகள் மனையில் திருமணம் நடைபெறுதல் எனப் பலசடங்கு முறைகளை அகஇலக்கியம் சுட்டுகின்றது. காதாசப்தசதியும் திருமணம் மணமகள் இல்லத்தில் நடைபெறுதலையும் மணமக்கள் தனிக்குடித்தனம் மேற்கொண்டதையும் எடுத்துரைக்கின்றது.

திருமண உறுதிவிழா, திருமணத்தை முன்னிட்டு இல்லுறைத் தெய்வத்தை வணங்குதல், வாத்தியங்களை முழக்குதல், காப்புநூல் அணிவித்தல், ஓமம் வளர்த்தல் என எந்த ஒரு சடங்கு முறையும் காதாசப்தசதியில் இடம்பெறவில்லை.

அகஇலக்கியத்தில் தனிக்குடும்ப அமைப்பு காணப்படுகின்றது. கூட்டுக் குடும்பத்திற்கான சான்று இலைமறை காயாக இடம்பெற்றுள்ளது. காதாசப்தசதியில் தனிக்குடும்ப அமைப்பும் கூட்டுக்குடும்ப அமைப்பும் காணப்படுகின்றது. மேலும் குடும்ப வறுமைநிலை அதிகமாக இடம்பெற்றுளது.

சங்க அகஇலக்கியத்தில் தலைமக்கள் விருந்துபேணும் விருப்பமுடையவராக விளங்குவதுபோல், காதாசப்தசதியிலும் விருந்தோம்பலின் இன்றியமையாமை எடுத்துரைக்கப்பட்டுளது. எனினும் விருந்தினர் ஊடல்தீர்க்கும் வாயிலாகச் சுட்டப்பெறவில்லை. மாலையில் விளக்கேற்றி இல்லுறை தெய்வத்தை வணங்கும் பண்பாடு இருநாட்டாரிடமும் இருந்தமை இவ்விலக்கியங்களின் வழி புலனாகின்றது.

அகஇலக்கியத்தில் சிவ வழிபாடு, முருக வழிபாடு, கண்ணன் வழிபாடு, மன்மதன் வழிபாடு, திருமால், திருமகள் வழிபாடு, வாமனன் வழிபாடு, பலராமன் வழிபாடு, அருந்ததி வழிபாடு, கொற்றவை வழிபாடு போன்றவை காணப்படுவது போல் காதாசப்தசதியில் திருமால் திருமகள், கண்ணன், மன்மதன், தேவர், கதிரவன் எனத் தெய்வங்களின் காதல்நிகழ்ச்சிகளும் இதிகாசமாந்தர் குறித்த மனவுணர்வுகளும் இடம்பெற்றுள்ளன. மானிடக்காதல் உணர்வுகளுடனும் ஊடல் உணர்வுகளுடனும் தெய்வங்களைப் போற்றி வழிப்பட்டமை புலனாகிறது.

தமிழக மக்களிடம் தெய்வ நம்பிக்கை இருந்தது போன்று ஆந்திர மக்களிடம் தெய்வநம்பிக்கை பற்றிய குறிப்பில்லை. கார்த்திகை திருவிழா, பங்குனித் திருவிழா, நீர்விழா, பொங்கல்விழா, உள்ளிவிழா, இந்திரவிழா, காமன்விழா போன்ற விழாக்களுள் காமன் விழா, வசந்த விழா மட்டும் ஆந்திரர்களிடம் காணப்படுகின்றது.

விரிச்சி கேட்டல், நிமித்தம் பார்த்தல், குறிகேட்டல், கண்துடித்தல், சூளுரைத்தல், கனவு நம்பிக்கை, பேய்நம்பிக்கை, காக்கைக்குப் பலிச்சோறு இடுதல் போன்றவை எட்டுத்தொகை அகஇலக்கியத்தில் காணக்கூடிய பழந்தமிழரின் நம்பிக்கைகளாகும். காதாசப்தசதி நிமித்தம் பார்த்தல், பல்லி ஒலித்தல், கண்துடித்தல், சூளுரைத்தல், பேய்நம்பிக்கை, காக்கைக்குப் பலிச்சோறு இடுதல் போன்ற நம்பிக்கைகள் இடம்பெற்றுள.

அகஇலக்கியத்தில் மகளிர்தம் விளையாட்டாக பந்தாடுதல், செம்மூதாடல், அலவனாட்டம், கழங்காடுதல், ஊஞ்சல் ஆடுதல், ஓரைவிளையாட்டு, கடல் விளையாட்டு, சிற்றில் இழைத்தல், நாரை ஓட்டி விளையாடுதல், நீர்விளையாட்டு, பாவை விளையாட்டு, குரவைக்கூத்தாடுதல் போன்றவை சுட்டப்பட்டுள. காதாசப்தசதியில் இவ்வகைப் பொழுதுபோக்கு குறித்த செய்தி இடம்பெறவில்லை.

தமிழக மகளிர்தம் ஆடையாகத் தழையாடை, துகில், கலிங்கம், காழகம், பூங்கரை நீலம் போன்றவை பற்றிய குறிப்பு உள்ளன. காதாசப்தசதியில் ஆடைபற்றிய குறிப்பில்லை. அணிகலன்களாகக் காதணி, கழுத்தணி, மார்பணி, இடையணி, வளை, தொடி, வயந்தகம், காலணி, விரலணி, போன்ற மகளிர் அணிகலன்கள் அகஇலக்கியத்தில் சுட்டப்பட்டுள்ளது. காதாசப்தசதியில் காதணி, கழுத்தணி, இடையணி, வளை, தொடி, காலணி போன்ற அணிகலன்கள் காணப்படுகின்றன. கூந்தல் ஒப்பனை இரு தொகை இலக்கியங்களிலும் கூறப்பட்டுள்ளது.

வெறியாடல் அக இலக்கியத்தில் இருந்து முற்றிலும் மாறாக வேறுநிலையில் சித்திரிக்கப்பட்டுள்ளது. இவ்விரு தொகை இலக்கியங்களிலும் பண்பாடு, பழக்கவழக்கங்கள் சில இடங்களில் ஒன்றுபட்டும் பல இடங்களில் வேறுபட்டும் காணப்பெறுகிறது.

**சான்றெண்விளக்கம்**

1. பக்தவச்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், பக். 149-150
2. ஞா.தேவநேயப்பாவாணர், பண்டைத் தமிழரின் நாகரிகமும் பண்பாடும், ப.6
3. மாருதிதாசன், நர்மதாவின் தமிழ் அகராதி, ப.570
4. சு.சத்திவேல், நாட்டுப்புறவியல் ஆய்வு, ப.188
5. அ.தட்சிணாமூர்த்தி, பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.3
6. இளம் (உரை), தொல்.பொருள்.அகத். நூ. 969
7. வி.சி.சசிவல்லி, தமிழர் திருமணம், ப.7
8. மேலது ப.8
9. மேலது ப.8
10. க.காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் பண்பாடும், பக்.37-38
11. இளம் (உரை), தொல்.பொருள்.கள. நூ. 1086
12. கு.இராசரெத்தினம், சங்க இலக்கியத்தில் பொதுமக்கள், ப.23
13. வி.சி.சசிவல்லி, தமிழர் திருமணம், ப.38
14. நக்கீரர் (உரை), இறையனார் களவியல், ப.24
15. மேலது ப.24
16. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.21
17. நக்கீரர் (உரை), இறையனார் களவியல், ப. 23
18. இளம் (உரை), தொல்.பொருள்.கள. நூ. 1087
19. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.22
20. இளம் (உரை), தொல்.பொருள்.கள. நூ. 1089
21. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.22
22. மேலது ப.22
23. வி.சி.சசிவல்லி,தமிழர் திருமணம், ப.56
24. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.23
25. ந.சுப்புரெட்டியர், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.164
26. வே.முனுசாமி, வாழ்வும் இலக்கியமும், பக்.65-66
27. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.24
28. க.வெள்ளைவாரணன் (உரை), தொல்காப்பியம், பக் 135-136
29. அ.கி.நாயுடு, தொல்காப்பியர் கண்ட தமிழ்ச் சமுதாயம், ப.43
30. சிலம்பு.நா.செல்வராசு, பண்டைத் தமிழர் திருமணவாழ்க்கை, பக்174-175
31. அ.ஆறுமுகம், சங்க இலக்கியத்தில் குடும்பம், உடைமை, அரசு, ப.9
32. பெ.மாதையன், சங்க இலக்கியத்தில் குடும்பம், ப.62

33. மேலது ப.62
34. க.த.திருநாவுக்கரசு, தமிழ்ப்பண்பாடு, ப.15
35. திருக்குறள் .45
36. அ.தட்சிணாமூர்த்தி, பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும், ப.72
37. இளம்(உரை), தொல்.பொருள்.கற். நூ. 1098
38. திருக்குறள் .81
39. மேலது பா.88
40. இளம் (உரை), தொல்.பொருள்.செய். நூ. 231
41. இளம்(உரை), தொல்.பொருள்.செய். நூ. 1495
42. திருக்குறள் .322
43. க.காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.14
44. மேலது ப.14
45. சாமி.சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப.14
46. இளம்(உரை),தொல்.சொல். நூ. 487:3
47. மேலது
48. சாமி.சிதம்பரனார், பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும், ப.17
49. க.த.திருநாவுக்கரசு, தமிழ்ப்பண்பாடு, ப.43
50. க.காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.1
51. அ.செகதீசன், சங்க இலக்கிய மதிப்பீடுகள், ப.53
52. இளம் (உரை), தொல்.பொருள். கள. நூ. 1081
53. ஞா.தேவநேயன், தமிழர்நாட்டு விளையாட்டு (முகவுரை), ப.1
54. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.90
55. நற்.68:1-5 140:1-7,143:3 குறுந் 48:3,396:1 ஐங்.295:5 அகநா.275:3
56. நற்.123:9-12,115:2,363:7-10 குறுந்.316:4-7 அகநா.20:4
57. அகநா.17:2,66:24,195:5
58. நற்.90:7 அகநா.20:5-6,368:4-6
59. நற்.68:1-3,143:3 குறுந்.48:3 அகநா 49:15-18
60. இளம் (உரை), தொல்.பொருள். கற். நூ. 1137
61. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.123
62. மேலது ப.126
63. மார்க்க பந்துசர்மா, குறிஞ்சிப்பாட்டு விளக்கம், ப.64
64. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.126

65. நற்.320:3-4,368:1-4 குறுந்.125:3,159:1,214:3-5,294:5-8,345:4 ஐங்.291:3-4 அகநா.220:2-5,383:6-8,201:6-7,275:16-19,320:3
66. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.128
67. கலித்.19:36-37, 73:16-17
68. கலித்.18:10-11, 142:24-26
69. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.131
70. இளம்(உரை), தொல்.பொருள்.கள. நூ. 1041
71. வெ.வரதராசன், தமிழரின் ஒப்பனைக் கலைத்திறன்,ப.43
72. மேலது ப.47
73. மேலது ப.52
74. காதா.72:2, 115:3, 170:2, 351:1, 378:3, 411:1
75. இராம.குருநாதன், குறிஞ்சிவளம், ப.148
76. கே.பி.அழகம்மை, சமூகநோக்கில் சங்க மகளிர், ப.132
77. காதா.49:1, 436:4, 144:3, 232:3, 243:1

# முடிவுரை

எட்டுத்தொகையும் காதாசப்தசதியும் தமிழிலும் பிராகிருதத்திலும் தோன்றிய தொன்மை இலக்கியங்களாகும். தொகை இலக்கியங்களாகிய இந்நூல்கள் தனித்தனிப் பாடல்களின் தொகுப்புகளாகும். மன்னர்களின் ஆதரவால் தொகுக்கப்பட்ட இவை சமயச்சார்பற்ற நூல்களாகத் திகழ்கின்றன. எட்டுத்தொகை அகஇலக்கியங்களும் காதாசப்தசதியும் ஏறத்தாழ ஒரே கால கட்டத்தைச் சேர்ந்தவையாகக் கருதப்பெறுகிறது. இதனை மாந்தர்களின் பெயர்சுட்டா மரபு இருபால் புலவர்களின் பாடல்கள், பாடலடியால் புலவர் பெயர் சுட்டப்பெறுதல் போன்ற ஒத்த கூறுகளும் நன்கு விளக்கும்.

முதல்,கரு, உரிப்பொருள் என்னும் அடிப்படையில் பாடல் புனைதல் எட்டுத்தொகை அகஇலக்கியத்தின் இன்றியமையாத கூறாகும். காதாசப்தசதிப் பாடல்களில் திணை அமைவு இல்லை எனினும் காதற் பாடல்கள் உரிப்பொருள் அமைவு உடையனவாகும். எழுதிணைப் பாகுபாட்டில் கைக்கிளை, பெருந்திணைப் பாடல்கள் கலித்தொகை தவிர மற்ற அகஇலக்கியத்தில் காணப்படவில்லை. காதாசப்தசதியிலும் கைக்கிளை, பெருந்திணைப் பாடல்கள் காணப்படுகின்றன. துறை அமைவு காதாசப்தசதிப் பாடல்களில் இல்லையெனினும் மொழிபெயர்ப்பில் கங்காதரர், மதிவாணன் போன்றோர் திணை, கூற்று அமைத்து உரையெழுதியுள்ளனர். எட்டுத்தொகை அகஇலக்கியத்தில் தலைவன், தலைவியரின் காதல் நிகழ்ச்சிகளைக் குறிப்பிட்டுப் பேசும் கவிக்கூற்று இல்லை. காதாசப்தசதியில் உண்டு.

காதாசப்தசதியில் தலைவனும் தலைவியும் அகஇலக்கியத்தில் வருவது போல் தலைமைப் பாத்திரம் அல்ல. நடப்பியல் சார்புடையவர்கள். இவ்விரு இலக்கியங்களிலும் தந்தை பற்றிய குறிப்பில்லை. காதாசப்தசதியில் நற்றாய் சுட்டப்பெறவில்லை; தலைவனின் தாய் பற்றிய குறிப்பும் தலைவன், தலைவியரின் உடன்பிறந்தோரைப் பற்றிய குறிப்புகளும் அத்தை சிற்றன்னை, மாமா, மாமி, போன்ற உறவினர்களைப் பற்றிய கூற்றுகளும் தமிழ் அக மரபுப் பண்பாட்டில் இல்லாத ஒரு கூறாக கள்ளக்காதலர்கள் பற்றியும் காதாசப்தசதி பேசுகின்றது.

எட்டுத்தொகை அகஇலக்கியம் காதாசப்தசதி முதற்பொருள் ஒப்பீட்டில் அகஇலக்கியத்தில் ஐந்திணைகளுக்குரிய நிலமும் பொழுதும் விரிவாகப் பாடப்பெற்றுள்ளன. பாலைக்கு நிலம் சுட்டப்பெறவில்லையெனினும் பாலை

நிலத்தை வெளிப்படையாக உணர்த்த வல்ல அத்தம், அழுவம், அருஞ்சுரம், சுரன், வேனிற்குன்றம் பெருங்காடு, கடத்திடை, அழல்அவிர்நீளிடை, அதர்ச்சிறுநெறி, வெந்துக்கல், பரல்முரம்பு போன்றவை அகஇலக்கியத்தில் பயின்று வந்துள்ளன. அதுமட்டுமின்றி குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நான்கு நிலங்களின் பெயர்களும் பாலையில் விரவி வந்துள்ளன. எனினும் இந்நிலப்பெயர்கள் பல இடங்களில் பாலைநிலத்தைக் குறித்தும் சில இடங்களில் அவ்வந்நிலத்தைக் குறித்தும் நின்றன. அவற்றை பாடலின் பொருள் கொண்டு உய்த்துணர முடிகின்றது. காதாசப்தசதியில் பாலைநிலம் பற்றிய குறிப்பில்லை.

எட்டுத்தொகை அகஇலக்கியத்தில் முல்லைக்குரிய பெரும்பொழுது பெயல், மழை, முளி என்ற பெயராலும் சிறுபொழுது மாலை, அந்தி, என்ற சொற்களாலும் குறிஞ்சிக்குரிய பெரும் பொழுதுகள் கூதிர், குளிர் (அ) வாடை என்ற பெயராலும் சிறுபொழுது யாமம், நடுநாள், கங்குல் இரவு (இருள்), எல்லி, அரைநாள், பானாள், அல்கல் எனப் பல்வேறு பெயர்களாலும் வழங்கப்பட்டுள்ளன. மருதத்திற்கும் நெய்தலுக்கும் பெரும்பொழுதினைத் தொல்காப்பியர் சுட்டிக்கூறாமையால் அறுவகைப் பெரும்பொழுதும் இவற்றிற்கு உரியதாகும். அகஇலக்கியத்தில் மருதத்திற்குரிய சிறுபொழுது வைகறை, விடியல், நாள், காலை என்ற பெயராலும் நெய்தலுக்குரிய சிறுபொழுது எற்பாடு என்றும் பாடப்பட்டுள்ளது.

பாலைக்குரிய பொழுது முதுவேனில், என்றூழ், கோடை, வெயில் என சுட்டப்படுவதோடு இளவேனில், முதிராவேனில், முற்றாவேனில், இன்பவேனில் என்றும் அழைக்கப்பட்டுள்ளது. மேலும் முன்பனிப்பருவத்தையும் பின்பனிப்பருவத்தையும் தனித்தனியே பிரித்துணர முடியாதெனினும் வாடை, மழை முன்பனிக்காலத்தையும் கடும்பனி பின்பனிக்காலத்தையும் குறித்து வந்துள்ளது. பாலைக்குரிய சிறுபொழுதாகிய நண்பகல், பகல், எல் போன்றவை அகப்பாடல்களில் சிறப்புறப் பயின்றுவந்துள்ளது.

காதாசப்தசதியில் பெரும்பொழுதாகிய கார்காலம், மழைக்காலம், முன்பனிக்காலம், இளவேனிற்காலம் முதுவேனிற்காலம் போன்றவையும் சிறுபொழுதாகிய மாலை, வைகறை, விடியல் ஆகியனவும் சிற்சில இடங்களில் மட்டும் சுட்டப்பெற்றுள.

